முருகா

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள்
அருளிச் செய்த

# திருப்புகழ்

(விரிவுரையுடன்)

இரண்டாம் தொகுதி
திருச்செந்தூர்
(இரண்டாம் பதிப்பு)

உரையாசிரியர்
கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
சென்னை-2

உ

முருகா

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள்
அருளிச்செய்த

# திருப்புகழ்

(விரிவுரையுடன்)

## இரண்டாம் தொகுதி

## திருச்செந்தூர்

(இரண்டாம் படைவீடு)

உரையாசிரியர் :

## கிருபானந்தவாரி

வெளியிடுவோர் :

**திருப்புகழமிர்தம் காரியாலயம்**
89, சிங்கண்ணசெட்டித் தெரு
சிந்தாதிரிப்பேட்டை —(o)— சென்னை

 1966

முதற் பதிப்பு : பிப்ரவரி, 1965
இரண்டாவது பதிப்பு : டிசம்பர், 1966.

உ

## சமர்ப்பணம்

இத் திருப்புகழ் உரைவள நூலினை, எம் பரமகுருநாதர் அருணகிரிநாதப் பெருந் தகைக்கு அர்ப்பணிக் கின்றேன். அவர் இதனை இன்னும் இனிதாக்கி ஆறுமுகப் பெருமானது அடி மலர்கட்கு அணிவிப்பாராக.

கிருபானந்தவாரி.

அச்சிட்டோர் :
. . . ர பிரஸ், சென்னை-5. (1102)

# முன்னுரை

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச் செய்த திருப்புகழ்ப் பாடல்களுக்கு சென்ற 30 ஆண்டுகளாகத் திருப்புகழமிர்தம் என்ற மாத வெளியீட்டில் உரை எழுதி வருகின்றேன்.

மேற்படி திருப்புகழமிர்தத்தில் வெளிவந்த திருப்புகழ் உரையில் விநாயகர் துதி, நூல், முதற்படை வீடாகிய திருப்பரங்குன்றம் பாடல்கள் ஆகிய திருப்புகழ்ப் பாடல்கள் 20-க்கும் விரிவுரைகள் முதல் தொகுதியாக 3-8-64-ல் வெளிவந்தது.

20-2-65-ல் இரண்டாவது படை வீடாகிய திருச்செந்தூர்த் திருப்புகழ்ப் பாடல்கள் 83-க்கும் விரிவுரைகள் இரண்டாம் தொகுதியாக வெளிவந்தது. அவைகள் முழுவதும் செலவாகிவிட்டதால் இப்போது அதன் இரண்டாவது பதிப்பு வெளிவருகின்றது.

30-4-65-ல் மூன்றாவது படை வீடாகிய பழநித் திருப்புகழ்ப் பாடல்கள் 97-க்கும் விரிவுரைகள் 3ஆம் தொகுதியாகவும், 11-65-ல் நான்காவது படை வீடாகிய சுவாமிமலைத் திருப்புகழ்ப் பாடல்கள் 38-க்கும் விரிவுரைகள் நான்காம் தொகுதியாகவும் வெளிவந்துள்ளது.

ஐந்தாவது படை வீடாகிய குன்றுதோறாடல் (முற் பகுதி) 4 பாடல்கள் விரிவுரைகளுடன் ஐந்தாம் தொகுதியாக அச்சாகி வெளிவந்துள்ளது.

திருவருள் துணையினால் மற்றத் தொகுதிகளும் விரிவுரைகளுடன் விரைவில் வெளிவரும்.

திருச்செந்தூர் என்னும் திருத்தலம் திருநெல்வேலிக்குக் கிழக்கே ... மைல் தூரத்தில் உள்ளது. திருநெல்வேலியிலிருந்து ரெயில் மூலமாயும், கார் (Bus) மூலமாயும் செல்லலாம். எல்லா வசதிகளுடனும் கூடிய நகரம்.

முருகக் கடவுள் மூவர் தேவாதிகளுடனும் துணைவர்களுடனும் சூரபன்மனை வெல்லும் பொருட்டுத் திருச்செந்தூருக்கு எழுந்தருளிய போது தேவ தச்சன் அமைத்த திருக்கோயிலில் வீற்றிருந்தருளினார். சூரபன்மனை வென்ற பின்னரும் அங்கு வந்து எழுந்தருளியிருந்தார். அப்போது மூவரும் தேவரும் முருகவேளைப் பூசித்தார்கள். பின்னர் முருகவேள் சிவலிங்கம் ஸ்தாபித்து சிறப்பாகப் பூசித்த ஸ்தலம்.

மூலஸ்தானத்தில் உள்ள திருவுருவம் கையில் மலர் ஏந்தி சிவலிங்கத்தைப் பூசிக்கும் திருக்கோலத்தில் உள்ளது. இன்றும் மூலஸ்தானத்தில் பூஜை நடக்கும்பொழுது பக்கத்திலுள்ள சிவலிங்கத்துக்கும் பூஜை நடந்து வருகின்றது.

இத்தலத்தில் ஷண்முகர் சந்நிதியும் விசேடமானது. உற்சவமூர்த்தியாக எழுந்தருளியுள்ளார். ஆவணியிலும் மாசியிலும் நடக்கும் திருவிழாக்களில் ஏழாவது திருநாளன்று ... ஷண்முகர் தங்கச் சப்பரத்தில் திருவீதியுலாவுக்கு எழுந்தருளும் சமயம் முன்புறம் ஷண்முகர் திருக்கோல... நடராஜர் திருக்கோலமுமாகக் காட்சியளிப்பார்.

பிரதி மாதமும், இரு ஷஷ்டி, இரு பிரதோஷம், கிருத்திகை, விசாகம், கடைசி சுக்கிரவாரம் ஆகிய தினங்களில், மூலவரும், ஷண்முகரும் தங்க முழுக் கவசம் அணிவது, வைரவேல், வைர ஹஸ்தம், இரத்தின (வைர) கிரீடம் முதலிய ஆபரணங்களுடன் மிக்க அழகாகக் காட்சி தருவர்.

ஊருக்கு நடுவே சிவக்கொழுந்தீசுவரர் கோயில் (சிவன் கோயில்) உள்ளது. இந்தக் கோயிலிலிருந்தே ஆவணி, மாசி மாதங்களில் குமரவிடங்கர் திருவீதியுலா தொடங்கி நடைபெறும்.

இங்கு 24 தீர்த்தங்கள் உள்ளன. அவற்றுள் சுவாமி சந்நிதியின் எதிரில் உள்ளது வதனாரம்பதீர்த்தம். பாண்டியன் மகளாகிய அங்கசுந்தரி அத்தீர்த்தத்தில் முழுகி தன்னுடைய குதிரை முகம் நீங்கி மனித முகம் பெற்றாள்.

திருச்செந்தூரின் பெருமையைப் பற்றி இப்புத்தகம் 32, 54, 60, 85, 91, 103, 107, 114, 124, 135, 154, 172, 191, 199, 210, 214, 222, 251, 261, 277, 283, 293, 296, 319, 323, 332, 354, 360, 420, 438 ஆகிய பக்கங்களில் வந்துள்ளது.

நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் திருச்செந்தூரைப் பற்றி 48 வரிகளில் அழகாக வியந்தோதியிருக்கிறார். இன்னும் திருச்செந்தூரைப் பற்றி பிள்ளைத் தமிழ், கலம்பகம், திருச்செந்தூர் அகவல், அந்தாதி முதலியவைகளைப் பல அருளாளர்கள் பாடியுள்ளார்கள்.

இது சுவாதிட்டான க்ஷேத்திரம். பிறவிப் பெருங்கடலுக்குத் துறைமுகம். கயிலை மலையனைய செந்தில் (13) மகா புனிதம் தங்கும் செந்தில் (55), சுந்தரமான செந்தில் (59) என்று திருப்புகழில் கூறப்பட்டுள்ளது. பரம பதமாய செந்தில் (அவனிதனில்) என்று பழநித் திருப்புகழிலும் வருகின்றது. 73 முதல் 78 வரையுள்ள 6 பாடல்களின் சந்தங்களும், நடை முதலிய அழகுகளும் ஐம்புலன்களுக்கும் விருந்தாக அமைந்துள்ளது.

இப்பதிப்பில் மேற்கோள் பாட்டுக்களை அன்பர்கள் விரைவில் தெரிந்து கொள்ளும் பொருட்டு, திருவகுப்பு, அந்தாதி அலங்காரம், அநுபூதி முதலிய பாடல்களின் எண்களை ( ) இக்குறிக்குள் குறிப்பிட்டிருக்கிறது.

வெளியூரிலிருந்து தரிசனத்திற்கு வருபவர்கள் தங்குவதற்கு தேவஸ்தானத்தார் செந்திலாண்டவன் விடுதி போன்ற சில இடங்களில் வாடகைக்கு ரூம்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

இத்தகு வித்தகம் நிறைந்த செந்திலம்பதியின் திருப்புகழ் விரிவுரையை ஓதி உணர்ந்து அன்பர்கள் நலம் பெறுக.

அன்பன்,

கிருபானந்தவாரி.

# திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்

## சில பாடல்கள் மட்டும்

ஏர்கொண்ட பொய்கைதனில் நிற்குமொரு பேரரசின்
இலைகீழ் விழிற்பறவையாம்
இதுநிற்க நீர்விழிற் கயலாம்இ தன்றியோர்
இலைஅங்கும் இங்கும்ஆகப்

பார்கொண்ட பாதியும் பறவைதான் ஆகஅப்
பாதியும் சேலதாகப்
பார்கொண் டிழுக்கஅது நீர்கொண் டிழுக்கஇப்
படிகண்ட ததிசயம்என

நீர்கொண்ட வாவிதனில் நிற்குமொரு பேழ்வாய்
நெடும்பூத மதுகொண்டுபோய்
நீள்வரை எடுத்ததன் கீழ்வைக்கும் அதுகண்டு
நீதிநூல் மங்காமலே

சீர்கொண்ட நக்கீர னைச்சிறை விடுத்தவா
செங்கீரை ஆடியருளே
திரையெறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை ஆடியருளே.

கத்தும் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்தில்
கான்ற மணிக்கு விலையுண்டு

தத்தும்கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளம் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்துமணிக்

கொத்தும் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலம்தனக்குக்
கூறும் தரம்உண் டுன்கனிவாய்

முத்தம் தனக்கு விலையில்லை
முருகா முத்தம் தருகவே
முத்தம் சொரியும் கடல்அலைவாய்
முதல்வா முத்தம் தருகவே.

பேர்ஆ தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறும் கொடுக்க வரும் பிள்ளைப்
பெருமான் என்னும் பேராளா

சேரா நிருதர் குலகலகா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா என்றுன் திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடன்அப்
பாவா வாவென் றுனைப்போற்றிப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

துன்று திரைக்குண் டகழ்மடுவில்
சூரன் ஒளிக்கப் பகைநிருதர்
தொல்லைப் பதியும் அவர்இருந்து
துய்த்த வளமும் தூளாக்கி
வென்று செருவில் பொருதளித்தாய்
வேதா விதித்த விதிப்படியை
விலக்கி வெகுண்டு மீண்டளித்தாய்
வேண்டும் அடியார் வினைஒழித்தாய்
கன்றும் அமணர் கழுவேறக்
காழிப் பதியில் வந்துதித்துக்
கள்ளப் பரசம யக்குறும்பர்
கலகம் ஒழித்துக் கட்டழித்தாய்
அன்று தொடுத்துன் வழியடிமை
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியும் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே.

ஆதிநூல் மரபாகி அதனுறும் பொருளாகி
அல்லவை அனைத்தும்ஆகி
அளவினுக் களவாகி அணுவினுக் கணுவாய்
அனைத்துயிரும் ஆகி அதனின்
சாதியின் பிரிவாகி வெவ்வேறு சமயங்கள்
தாமாகி நான்ஆகிமெய்ச்
சாலோக சாமீப சாரூப சாயுஜ்ய
தன்ஒளியி லீலையாகி
ஓதியதனைத்தினும் அடங்காமல் வேருகி
உள்ளும் புறம்பும்ஆகி
ஒளியில் ஒளிஆகிமற் றிரவுபகல் அற்றஇடம்
ஒப்புவித் தெனைஇருத்தித்
தீதினை அகற்றிநின் திருவருள் புரிந்தவா
சிறுதேர் உருட்டியருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டியருளே.

—பகழிக்கூத்தர்.

# பாட்டு முதற் குறிப்பு அகராதி

# வரலாறுகள்



அறுமுகப்பரமன் கொலுவிருக்குங்காட்சி

(இத்திருவுருவ ஓவியம், உறையூர், திரு. ரா. ப. மாணிக்கண்ணு பிள்ளையவர்கள் நன்கொடை.)



திருச்செந்தூர் — கடற்கரையும், கோயிலும்.

உ

ஓம் குஹாய நம

# திருப்புகழ் விரிவுரை

## திருச்செந்தூர்

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே
முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே
திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு நடமாடுஞ்
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்க அநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே
அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே
அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான
சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரணசூர சூறைக் கார
செந்தில்நகர் வாழு மாண்மைக்கார பெருமாளே.



திருச்செந்தூர் — கடற்கரையும், கோயிலும்.

ஓம் குஹாய நம

# திருப்புகழ் விரிவுரை

## திருச்செந்தூர்

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே
முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே
திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு நடமாடுஞ்
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்க அநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே
அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே
அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான
சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரணசூர சூறைக் கார
செந்தில்நகர் வாழு மாண்மைக்கார பெருமாளே.

## பதவுரை

அந்தண் = அழகிய குளிர்ந்த சிந்தையுடையவர்களால், மறை வேள்வி = வேதவிதிப்படி செய்யும் யாகங்களுக்கு, காவல்கார = இடையூறு நேராவண்ணம் காவல்புரியும் காவல்காரரே!, செந்தமிழ் = செவ்வையான தமிழ்மொழியாலாகிய, சொல்பாவின் = புகழ்ப் பாக்களாலாகிய பிரபந்தங்களை, மாலைக்கார = மாலையாகத் தரித்துக்கொள்பவரே! அண்டர் உபகார = தேவர்களுக்கு (சூரபன்மனுலேற்பட்ட சிறையை நீக்கி) உபகரித்தவரே! சேவல்கார = சேவற்கொடியைக் கரத்தில் தாங்கியவரே!, முடிமேல் அஞ்சலி செய்வோர்கள் = சென்னியின்மேல் கரங்களைக் குவித்து வணங்குகிற அடியார்களுக்கு, நேயக்கார = சிநேகராக விளங்குபவரே!, குன்று உருவ ஏவும் = கிரௌஞ்சமலையை ஊடுருவிச் சென்று பிளக்குமாறு செலுத்திய, வேலைக்கார = ஞானசக்தியாகிய வேலாயுதத்தையுடையவரே!, அந்தம் வெகுவான = மிகுந்த அழகுடைய, ரூபக்கார = திருமேனியைக் கொண்டவரே!. எழில் ஆன = அழகு மிகுந்த, சிந்துர மின் மேவு = தேவயானையின் மகளாகிய தேவகுஞ்சரியம்மையார் விரும்புகின்ற, போகக்கார = சிவபோகத்தையுடையவரே!, விந்தை குற மாது = அற்புதமடையத் தக்க அரிய குணங்களையுடைய குறமகளாகிய வள்ளிநாயகியாருடன், வேளைக்கார = பொழுதைப் போக்குபவரே!. செஞ்சொல் = செவ்வையான சொற்களையுடைய, அடியார்கள் = அடியவர்களிடத்து, வாரக்கார = அன்புடையவரே!, எதிர் ஆன = போர்க்களத்தில் எதிர்த்து வந்த, செஞ்சமரை = உதிரப்பெருக்கத்தால் சிவந்த அசுரர்களின் யுத்தத்தை, மாயும் மாயக்கார = இமைப் பொழுதில் மாயக்காரன்போல் மாய்த்தவரே!, துங்க ரண சூர = பரிசுத்தமான போர்வீரனுகிய சூரசபன்மனை, சூறைக்கார = சண்டமாருதம்போல் அழித்தவரே!, செந்தில் நகர் வாழும் = திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில் வசிக்கின்ற, ஆண்மைக்கார = ஆண்மை (திடம்)யை உடையவரே!, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே!, முந்து தமிழ் மாலை = பழமையான தமிழ்மொழியால், கோடி கோடி = கோடிக்கணக்கான கவிகளை, சந்தமொடு = சந்தத்தோடு, நீடு பாடி பாடி = நீளமாகப் பாடிப்பாடி, முஞ்சர் = இறந்துபோகின்ற கீழ்மக்களுடைய, மனைவாசல் தேடி தேடி = வீட்டு வாசலைத் தேடித் தேடி, உழலாது-(ஏ-அசை) பொருள் விருப்பத்தால் உழன்று அலையாவண்ணமும், முந்தைவினை = (ஏ-பிரிநிலை) பிறவிகள் தோறும் புரிந்து பக்குவத்திற்கு வராத சஞ்சித வினைகள், வராமல் போக = அடியேனைத் தொடர்ந்துவந்து துன்புறுத்தாமல் விலகிப் போகவும், மங்கையர்கள் காதல் = பெண்கள்மீதுள்ள ஆசையானது, தூரத்து ஏக = அடியேனைவிட்டு மிகுந்த தூரத்தில் ஓடிப்போகவும், முந்து அடிமையேனை = வழிவழி அடிமைப்பட்ட பழமையான தொண்டனுகிய அடியேனை, ஆள (தான், உம்-அசைகள்) =

ஆட்கொள்வதற்காக, முனை மீது (ஏ-அசை)=போர்க்களத்தினிடம், திந்திதிமி தோதி......செஞ்செ ணகு சேகு (என்ற) தாளத்தோடு=தாளவரிசையுடன், நடமாடும்=நடனம் செய்கின்றதும், செம் சிறிய கால்=செவ்வையான சிறிய கால்களையுடையதும், விசாலதோகை=விசாலமான தோகையை யுடையதும், துங்க அநுகூல பார்வை=விக்கினமில்லாமையை யுண்டுபண்ணுகின்ற பரிசுத்தமான அருட்பார்வையையுடையதும், தீர=தைரியமுடையதும், செம்பொன்=சிவந்த பொன்னைப் போல் ஒளி செய்வதுமாகிய, மயில்மீதில் (ஏ=அசை)=மயில்வாகனத்தின்மீது ஊர்ந்து, எப்போது வருவாய் (ஏ=அசை)=எந்தச் சமயத்தில் வந்தருள்வீர் ?

## பொழிப்புரை

அந்தணர்களால் வேதவிதிப்படி புரியும் வேள்விகளுக்கு இன்னல் நேராவண்ணம் காவல் புரிபவரே! செந்தமிழாலாகிய புகழ்ப்பாவினங்களை மாலையாகத் தரித்துக் கொள்பவரே! தேவர்களுக்கு அசுரரா லேற்பட்ட சிறைத்துன்பத்தை நீக்கி உதவி செய்தவரே! சேவற் கொடியைக் கரத்திலேந்தியவரே! சென்னிமேற் கரங்களைக் கூப்பி நின்று அன்புடன் வந்தனஞ் செய்வோர்களது சிநேகிதரே! (தாரகனுக்குத் துணை செய்து மாயைக்கிருப்பிடமாயிருந்த) கிரௌஞ்சமலையை ஊடுருவிச் சென்று பிளந்தழிக்குமாறு செலுத்திய வேற்படையை யுடையவரே! சிறந்த எழிலுடைய இன்ப வடிவினரே! அழகு மிகுந்த தேவயானையம்மையார் விரும்புகின்ற சிவபோகத்தை யுடையவரே! அதிசயமுறத்தக்க அருங்குணங்களையுடைய குறவர் குலக்கொழுந்தாகிய வள்ளி நாயகியாருடன் பொழுது போக்குபவரே! செவ்வையான சொற்களையுடைய அடியார்களிடத்தில் அன்புடையவரே! எதிர்த்து வந்த உதிரத்தால் சிவந்த அசுரர்களை ஒரு கணப் பொழுதிற்குள் மாயக்காரன்போல் மாய்த்தவரே! பரிசுத்தமான போர் வீரனாகிய சூரபன்மனை சுழல்மாருதம் போல் அழித்தவரே! திருச்செந்திலம்பதியில் வாழ்கின்ற ஆண்மையை யுடையவரே! பெருமையிற் சிறந்தவரே! பழமையான தமிழ் மொழியால் கவிமாலைகளைச் சந்தத்தோடு நீளமாகக் கோடி கோடியாக எந்நேரமும் பாடிக் கொண்டு, அழிந்து போகின்ற மனிதர்களின் வீட்டு வாசல் தோறும் அவர்களைத் தேடிக்கொண்டு உழன்று அவமே அலையா வண்ணமும், பிறவிகள் தோறும் புரிந்த பழைய வினைகளாகிய சஞ்சிதவினை என்னை வந்து தொடராமல் விலகிப் போகவும், பெண்கள் மீதுள்ள ஆசைப் பெருக்கமானது அடியேனைவிட்டு நெடுந்தூரத்தில் ஓடிப் போகவும், வழிவழியாக அடிமைப்பட்ட பழைய தொண்டனாகிய அடியேனை ஆட்கொள்ளுமாறு, போர்க்களத்தில் திந்திதிமிதோதி தீதித்தீதி தந்ததன தானதானத் தான செஞ்

செணகு சேகு என்ற தாள வரிசைகளுடன் நடனமிடுவதும், செவ்வையான சிறிய பாதமும் விசாலமான தோகையும், அநுகூலத்தைச் செய்யும் தூய்மையான பார்வையும் தைரியமும் உடையதும், செம்பொன்போன்ற பிரகாசத்தையுடையதுமாகிய மயில்வாகனத்தின்மீது எக்காலத்தில் வந்து திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**முந்து தமிழ் :—**

வடமொழிக்கும் தென்மொழிக்கும் ஆசிரியர் சிவபெருமானேயாவர். வடமொழியைப் பாணினிக்கும், தென்மொழியை அகத்தியருக்கும் சிவபெருமான் உபதேசித்தனர். சிவபெருமான் இந்த இரு மொழிகளின் வடிவமாக விளங்குகிருர்.

"ஆரியமுஞ் செந்தமிழும் ஆனுன்கண்டாய்"

—(அப்பர்) தேவாரம்

செந்தமிழ் மொழி பல்லாயிரம் ஆண்டுகளாக இளமையாகவே செழித்தோங்கியுளது. முச்சங்கத்திலும் நின்று நிலவியது. சிவபெருமான் மதுரையில் புலவர் குழாங்களில் தாமும் ஒருவராக இருந்து ஆராய்ந்த தனிச் சிறப்புடையது. நேற்று தோன்றி இன்று மறையும் ஏனைய மொழிகள்போலல்லாது எக்காலத்தும் எழில் குன்ருமல் இனிமை பயப்பது இத்தமிழ் மொழியே யாகும். சிவபெருமானே இதற்கு ஆசிரியராதலால் தொன்மையுடையது. எல்லா மொழிகளுக்கும் முதன்மையுடையது எனினும் அமையும்.

**முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி உழலாதே :—**

இத்தகைய அரிய தமிழைப் பயின்று அம்மொழிக்குத் தலைவனுகிய இறைவனைப் பாடி அதன் பயனைப் பெருது, பொருள் விருப்பத்தால் இன்றிருந்து நாளை இறக்கும் மனிதர்கள் வீடுதோறும் சென்று கொடாதவனைப் பாரி காரி என்றும், குணமில்லாத கீழ்மகனை தருமபுத்திரனுக்கு நிகரானவனென்றும், சிறிதும் வலியற்றவனை விஜயனென்றும், வறிதே புகழ்ந்து வாழ்நாளையும் கல்வியறிவையும் கமரிற் கவிழ்த்த காமதேனுவின் பாலாக வீணுக்குகின்றனர்.

மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே
வில்லுக் கிவனென்று
கொடுக்கிலா தானைப் பாரியே யென்று
கூறினுங் கொடுப்பாரிலை

பொடிக்கொள் மேனியெம் புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அடுக்குமேல் அமருலகம் ஆள்வதற் கியாது
மையுற வில்லையே. —சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

"வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரிகாரி என்றிசை வாது கூறி
வந்தியர்போல வீணி லழியாதே"
—திருப்புகழ்.

முந்தை வினை :—

பிறவிகள்தோறும் மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் புரிந்த வினைகளானது மலைபோற் குவிந்து அனுபவித்தற்குரிய பக்குவப்படாது குவிந்துள. அவைகட்கு சஞ்சிதமெனப் பெயர். அவற்றை இறைவன் திருவருளாலேயே ஒழித்தல் வேண்டும். அந்த வினைகள் அழிந்துபோகும் வண்ணம் குமார நாயகனை விரும்பி அழைக்கின்றார். வேலாயுதத்தையுடைய வீரன் அப்பெருமானே யாவர். வினைகளை அழிக்கவல்லது வேற்படை யொன்றேயாம். வினைகளழிய வேண்டுமாயின் வேற்படையைத் தாங்கிய விமலனை வழிபட வேண்டும். வினைகளை அழிக்க வல்லது வேற்படையென்பதை அடியில் வரும் வாக்குகள் வலியுறுத்துமாறு காண்க.

"நீசர்கள்த மோடெனது தீவினையெலா மடிய
நீடுதனி வேல்விடு மடங்கல் வேலா"
—(ஆறுமுகம்) திருப்புகழ்.

"வினையோட விடுங் கதிர் வேல்" —கந்தரநுபூதி. (40)

மங்கையர்கள் காதல் தூரத்தேக :—

பொன்னாசையும் மண்ணாசையும் மனிதப் பிறவிக்கேயுள. பெண்ணாசை ஒன்றே எல்லாப் பிறவிகளுக்கும் உண்டு. எனவே, பிறவிகள்தோறும் தொடர்ந்து வருவதாகிய பெண்ணாசையை இறைவன் திருவருளாலன்றி ஒழிக்க முடியாது. இதுவேயுமன்றி அவ்வாசை மிகவும் வலியுடையதாதலால் சிறிது அருகிலிருந்தாலும் உயிரை வந்து பற்றி மயக்கத்தைச் செய்யும். ஆதலால் இம் மாதராசை மிகமிகத் தூரத்திலே யகல வேண்டும்.

கள்ளானது குடித்தாலன்றி மயக்கத்தை யுண்டு பண்ணாது. காமமோ கண்டாலும் நினைத்தாலும் மயக்கத்தை யுண்டுபண்ணும். ஆதலால் இப்பெண்ணாசையைப்போல்

மயக்கத்தைத் தரும் வலியுடைய பொருள் வேறொன்றும் இல்லை. இதனை அடியில் வரும் வடமொழி தென்மொழி மறைகளாற் கண்டு தெளிக.

மாத்யதீ ப்ரமதாம் த்ருஷ்ட்வா ஸுராம் பீத்வாச மாத்யதி |
தஸ்மாத் த்ருஷ்டி விஷாம்நாரீம் தூரத : பரிவர்ஜயேத் ||

—நாரதபரிவ்ராஜகம்.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. —திருக்குறள்.

தீயைக் காட்டிலும் காமத் தீ கொடியது; தீயில் விழுந்தாலும் உய்வு பெறலாம்; காமத்தீயில் விழுந்தார்க்கு உய்வு இல்லை; தீயானது உடம்பை மட்டும் சுடும்; காமத்தீ உடம்பையும் உயிரையும் உள்ளத்தையும் சுடும். அன்றியும் அணுக முடியாத வெப்பமுடைய அக்கினி வந்து சூழ்ந்துகொண்டால் நீருள் மூழ்கி அத் தீயினாலுண்டாகும் துன்பத்தை நீக்கிக்கொள்ளலாம். காமத் தீயானது நீருள் மூழ்கினாலும் சுடும்; மலைமேல் ஏறி ஒளித்துக்கொண்டாலும் சுடும்.

ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகும்—நீருள்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும். —நாலடியார்.

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. —திருக்குறள்.

தீயானதுதொட்டால்தான் சுடும்; காமத்தீயானது நினைத்தாலும் சுடும்; கேட்டாலும் சுடும்; இது வேண்டாமென்று தள்ளினாலும் ஓடிவந்து சுடும்; இதுவேயுமன்றி நஞ்சை யருந்தினால்தான் கொல்லும். இக்காமமாகிய விஷம் பார்த்தாலும் நினைத்தாலும் கொல்லுந்தகையது. ஆதலால் காமமானது விஷத்தைக்காட்டிலும், கள்ளைக்காட்டிலும், தீயைக்காட்டிலும், ஏனைய கொல்லும் பொருள்களைக் காட்டிலும் மிகவும் கொடியது.

உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே.

நெஞ்சினு நினைப்பரோ நினைந்து ளார்தமை
எஞ்சிய துயரிடை யீண்டை யுய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்து மாதலால்
நஞ்சினுந் தீயது நலமில் காமமே. —கந்தபுராணம்.

**முந்தடிமை யேனை :—**

அருணகிரிநாத சுவாமிகள் வழிவழியாக முருகனிடத்தில் அடிமைத்திறம் பூண்டவர். இதனை அடியில் வரும் திருப்புகழ் வாக்குகள் வலியுறுத்துமாறு காண்க.

''பழையநினது வழியடிமையும் விளங்கும் படிக்கினி துணர்த்தி யருள்வாயே''
—(அகரமுதலென) திருப்புகழ்.

" விராலி மலையில் விளங்கிய கந்த என்றனை
மகிழ்வொடு வந்திசெய் மைந்த னென்றனை
வழிவழி யன்புசெய் தொண்டு கொண்டருள் பெருமாளே''
—(கரதலமு) திருப்புகழ்.

''தஞ்ச மாகியெ வழிவழி யருள்பெறும்
அன்பினு லுன தடிபுக ழடிமை'' —(பஞ்சபாதக) திருப்புகழ்.

**திந்தி திமிதோதி...நடமாடும் :—**

மயிலினது நடனத்தின் சிறப்பை வர்ணிக்கின்றனர். குமாரக் கடவுள் ஊர்ந்துவரும் பசும்பொன் மயில், சக்ரவாளகிரி கிழிபடவும், கிரௌஞ்சசைலம் பிளக்கவும், மகாமேருகிரியும் அஷ்டகுலாசலங்களும் உலகங்களும் குலுங்கவும், ஆதிசேடனது ஆயிரம் பணுமகுடங்களும் அதிரவும், சூரபன்மன் முதலிய அவுணர்கள் திடுக்கிட்டு நடுநடுங்கவும், நடிக்கின்ற திறத்தை அருணகிரியாரேயன்றி மற்று யாரே புகழவல்லார்.

''சக்ரப்ரசண்டகிரி முட்டக்கிழிந்துவெளி
பட்டுக்ரவுஞ்ச சயிலந்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு
தனிவெற்பு மம்புவியுமெண்
டிக்குத் தடங்குவடு மொக்கக் குலுங்கவரு
சித்ரப்பதம் பெயரவே
சேடன்முடி திண்டாட ஆடல்புரிவெஞ்சூரர்
திடுக்கிடநடிக்கு மயிலாம்.''
—மயில்விருத்தம்.

**அந்தண்மறை வேள்வி காவற்கார :—**

அந்தண் என்பதை யாகத்திற்கு அடைமொழியாகக் கொண்டு அழகியதும் குளிர்ந்ததுமாகிய யாகமென்பாரும் உளர்.

வேதவிதிப்படி அந்தணர்களால் நியமத்துடன் புரியும் யாகத்திற்கு முருகப்பெருமான் காவல்காரராக இருந்து இடையூறுகளை நீக்கி இன்பத்தை நல்குகின்றனர்.

## யாக ரக்ஷக வரலாறு

காசிப முனிவர்க்கு அதிதி யென்னும் பத்தினியிடந் தோன்றியவர்கள் ஆதித்யர் என்னும் தேவர்கள். திதி யென்னும் பத்தினியிடம் தோன்றியவர்கள் தைத்தியர்கள். திதி மைந்தர்களாகிய அசுரர்களுக்கும் சுரர்களுக்கும் போர் தொடங்கி இருதிறத்திலும் பலர் மடிந்தனர். தேவர்கள் வேண்டுகோளுக் கிணங்கி திருமால் பாற்கடல் கடைந்து அமிர்தத்தைத் தேவர்களுக்கீந்து, அசுர குலத்தை அடியோடு அழித்தனர். அஃதறிந்த திதியென்பாள் மிகவும் மனம்வருந்தி, காசிபரிடம் வந்து தன் குலநாசத்தைக் கூறி, "நாயக! என் சந்ததி வளருமாறு ஓர் புதல்வனைத் தந்தருள்வீர்" என்று முறையிட்டனள். காசிபமுனிவர் "அன்புள்ளவளே! அஞ்சற்க; நின் அவாவின்படி குலவிருத்தி செய்ய ஓர் புதல்வனைத் தருகின்றோம்" என்று அருளுரை கூறி, குமாரக்கடவுள் வீற்றிருந்தருள்கின்ற திருத்தலங்கள் அறுபத்துநான்கனுள் ஒன்றாய புத்திர காமம் என்னும் புனித க்ஷேத்திரத்தையடைந்து, ஆங்கோர் தூய இடத்தில் சால்யோத்தாரணம், தாரைசுத்தி முதலியவைகளுஞ் செய்து யாகசாலை வகுக்கத் தொடங்கினார். மனு சூத்திரம், இரவி சூத்திரம், முனி சூத்திரம், மானவ சூத்திரம், திரபாக மண்டபம் என்னும் ஐவகைப்படும் யாக சாலைகளுக்குள் தங் கருமத்துக்குரிய யாகசாலை மானவ சூத்திர மாதலின் அதனை வகுத்து, வேதிகை, ஊர்த்வபட்டி, அதோ பட்டி, துவாரம், குண்டங்கள் இவை கற்பித்து வேதியின் நடுவிலே பிரமபதமெனவும், நாற்புறத்திலும் தெய்வபதம், மானுடபதம், பைசாச பதம், இராக்கதபதம் என்னும் பதங் களும், அவைகளில் ஊர்த்துவமேகலை, அதோமேகலை மத்திய மேகலை முதலியவைகளும் கற்பித்துக் குண்டயோனி முதலி யவையும் வகுத்தார். மேலும் யாகசாலைக்குரியனவெல்லாம் செய்து, மறை முறைப்படி சிவாகம மந்திரங்களைக் கூறிச் செய்வாராயினர்.

அந்த யாக முற்றுமேல் திதியென்பாள் வயிற்றில் கருப்ப முண்டாகும்; அங்ஙனமுண்டாயின் நமக்கும் நம் குலத்தார்க் கும் அழிவு நேரிடும் என்று தேவர்கோமானும் திருமாலும் இடையூறுகளை இயற்றத் தொடங்கினர்.

காசிபர் அஃதுணர்ந்து வேள்விப்பதியாகிய வேற்கரத் தண்ணலை வேண்டுவாராயினர்.

**யாவனங்கி வடிவானோன் யாவனயத்தை யூர்ந்திடுவான்**
**யாவனங்கி பூவெனமா மறைகளியம்பு மகபலத்தை**
**யாவன் கொடுக்கும் பொறியாகத் தோன்று மெழிலோன் முக்கண்ணன்**
**யாவனவன்றன் பதமலர்க்கிங் கடியேன் சரணம் புகுகின்றேன்.**

"யாவன் அக்கினி வடிவாயிருப்போன். எவன் மேடவாகனத்தை யூர்வோன், அம்மூர்த்தி அடியேனையும் யாகத்தையும் காத்தருள்க. 'சிவாக்கினிபூ' என்று வேதங்கள் முழங்கும் பொருளாயிருப்பவன் எவன்? யாக பல ப்ரதான மூர்த்தி யாவன்? ஊர்த்வரேதசனும் அறுதிசைகளைக் காப்பவனும் யாவன்? குமாரன் திரியம்பகன் யாவன்? அக் கடவுள் அடியேனையும் யாகத்தையும் காத்தருளும்படி அடைக்கலம் புகுகின்றேன். யாகத்திலே "சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!! சுப்ரமண்யோம்!!! என்று மும்முறை வேதங்களால் அழைக்கப்பெறும் ஆறுமுகப் பரம்பொருளுக்கு அடைக்கலம்" என்று துதித்தார்.

இவ்வொலி கேட்டதும் சேய்குரல் கேட்ட தாய்போல் தண்ணருள் சுரந்து தனிவேற்பரமன் பாலவடிவத்துடன் வேலாயுதமும் பல்லவமுந்தரித்த திருக்கரத்தினராய்த்தோன்றி "அருந்தவத்தோய்! அஞ்சற்க, யாங் காத்தருள் புரிகின்றோம்; யாகத்தை முடிக்குதி" என்றருளினார். காசிப முனிபவர் கந்த சகத்திரநாமத்தால் அர்ச்சித்துச் சோடசரூப தியானஞ்செய்து யாகம் புரிவாராயினார்.

தேவர்கள் புரியும் அபிசார வேள்வியினின்றுந் தோன்றி மலையன், மாரன் என்னும் அசுரர் இருவரனுப்பப்பட்டனர். அவ்வசுரர்கள் முனிவரையும் யாகப் பொருள்களையும் விழுங்க வேண்டுமென்று ஆரவாரித்து நெருங்கினார்கள். காசிபர் பயந்து, "ஞானசத்திதரா! பால ரூபா! பரஞ்சுடரே! ஓலம் ஓலம்" என்று துதித்தனர். அதுகேட்ட என்றுமகலாத இளமைக்கார எந்தையார் தம் கரத்திருந்த பல்லவத்தால் அவ்வசுரர் இருவரையும் கொன்று யாகத்தைக் காத்தருளினார். முனிவர் யாகத்தை நிறைவேற்றி, ஆங்கு முருகவேளைப் பிரதிட்டை செய்தனர். அதுவே புத்திரப்பேற்றை யளித்ததால் புத்திரகாமம் என்னும் பெயர் பெற்றது.

வரனயன் சுதன்றன் மனையருட் டிதிதன் வமிசத்தை யழித்த மாயவனை
எரிசதக் கிருதை யழிசுதற் றருகென் றிரக்கவோர் வேள்வியை யியற்ற
வரியிருவருஞ் செயல்லவை தீர வந்தடர் மாரனார் மலையார்
பரிவுற வழித்துக் காத்தனன் வேள்விப் பதிபுத்ர காமநற் றலமே.

இன்னணம் எம்பெருமான் அந்தணர்கள் மறைமுறை வழாது புரியும் யாகங்களைக் காத்தருள் புரிவதை நக்கீர தேவரும் கூறுமாறு காண்க.

"மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒருமுகம்"

—திருமுருகாற்றுப்படை.

**செந்தமிழ் சொல்பாவின் மாலைக்கார :—**

செந்தமிழ்ப் பரமாசிரியனும் செவ்வேட்பரமன் அடியார்களால் அணியப்படும் செந்தமிழ்ப் பாமாலைகளை அன்புடன் தரித்துக் கொள்ளுகிறார்.

"விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபலமுடனோத மகிழ்வோனே"
—(வரிக்கலை) திருப்புகழ்.

**அண்டருபகார :—**

அண்டர்—தேவர். உபகாரன்—உபகரித்தவன். சூரபன்மனால் சிறைபட்டு 108 யுகங்களாக மிகவும் வருந்தி இனி உய்வு பெறுவோமோ என்று ஏங்கி இருந்த தேவர்களுடைய சிறையை மீட்டு, பொன்னாடு தந்து இன்பவாழ்வில் இருக்க வைத்தவர் நம் குமாரமூர்த்தியே யாதலால் தேவசகாயனானார்.

**சேவற்கார :—**

பக்தர்கள் இடையூறுற்று முறையிட்டகாலத்தில் முருகப் பெருமான் தான்வரும் குறிப்பை முன்னரே ஒலியால் புலப்படுத்தும் சேவற்கொடியைக் கரத்தில் தாங்கிக்கொண்டு வருவார். இதனை நம் அருணகிரியார் பிறிதோரிடத்தில் "முருகா! நான் கந்தா என்று அழைக்கும்போது தாங்கள் சிவந்த சேவற்கொடியைக் கரத்திலேந்திய வண்ணம் வர வேணும்" என்பதை உற்றுநோக்கி உள்ளம் மகிழ்க.

"சென்றே யிடங்கள் கந்தா எனும்பொ
செஞ்சேவல்கொண்டு வரவேணும்"
—(அன்பாக) திருப்புகழ்.

சிறைப்பட்டிருந்த இந்திர குமாரனாகிய சயந்தனுடைய கனவில் அறுமுகனார் அருள்புரிந்தபோது கோழிக்கொடியுடன் சென்றார் என்ற அச்சரிதையை விரித்தோதும் முதல்வன் புராணத்துள் கண்டு தெளிக.

"ஆரணம் பயில் ஞான புங்கவ
சேவலங் கொடி யான பைங்கர
ஆவினன்குடி வாழ்வுகொண்டருள் பெருமாளே."
—(மூலமந்திர) திருப்புகழ்.

**முடிமேலே அஞ்சலி செய்வோர்கள் நேயக்கார :—**

இறைவனை வழிபாடு செய்யுங்கால் கரங்களை சிரங்களுக்கு மேல் பன்னிரண்டங்குலம் உயரக்கூப்பி வணங்க வேண்டும்.

அங்ஙனம் அன்புடன் அஞ்சலியஸ்தராக நின்று வழிபாடு செய்வோர்களுக்கு தேவர்களுங் காணவொண்ணாத தேவ தேவனும் திருமுருகேசன் நேயக்காரனாக எளிதில் இரங்கி இன்னருள் புரிகிறான்.

**சிந்துரமின் மேவு போகக்கார :—**

உயிர்களுக்கு இன்பத்தை நல்குவதற்காக இறைவன் கிரியா சக்தியாகிய தேவகுஞ்சரியுடன் போக மூர்த்தியாக விளங்குகின்றனன்.

**செஞ்சொலடியார்கள் வாரக்கார:—**

இனிய சொற்களையுடைய அடியார்களுக்கு அன்புடையவராக ஆண்டவன் விளங்குகின்றனர்.

"அடிபோற்றி யல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே."
—(குடிவாழ்க்கை) திருப்புகழ்.

**துங்கரணசூர சூறைக்கார:—**

"துரித மிடு நிருதர்புர சூறைக்காரப் பெருமாளே."
—(ஒருபொழுது) திருப்புகழ்.

**ஆண்மைக்கார :—**

"ஆரியபரம ஞானமு மழகும்
ஆண்மையு முடைய பெருமாளே"
—(தோரண) திருப்புகழ்.

## கருத்துரை

யாகரக்ஷகரே! தமிழ் மாலையை யணிபவரே! தேவசகாயரே! சேவற்கொடி யுடையவரே! வணக்கம் புரிவாரது நேயரே! குன்றெறிந்த குமாரமூர்த்தியே! வல்லீ தேவசேனா சமேதரே! அடியார்க்கு அன்பரே! அசுரகுலகாலரே! செந்திலதிப! தமிழ்ப்பாக்களைப் பாடி அழிகின்ற மனிதர்கள் வாசல் தோறும் அலையாமலும், பண்டைவினை நீங்கவும், பெண்ணாசையறவும், செம்பொன் மயில்மீது வந்தருள்வீர்.

## 2

தண்டே னுண்டே வண்டார் வஞ்சேர்
தண்டார் மஞ்சுக் குழல்மாஞர
தம்பா லன்பார் நெஞ்சே கொண்டே
சம்பா வஞ்சொற் றடிநாயேன்
மண்டோ யந்தீ மென்கால் விண்டோய்
வண்கா யம்பொய்க் குடில்வேருய்
வன்கா னம்போ யண்டா முன்பே
வந்தே நின்பொற் கழல்தாராய்
கொண்டா டும்பேர் கொண்டா டுஞ்சூர்
கொன்ருய் வென்றிக் குமரேசா
கொங்கார் வண்டார் பண்பா டுஞ்சீர்
குன்ரு மன்றற் கிரியோனே
கண்டா கும்பா லுண்டா யண்டார்
கண்டா கந்தப் புயவேளே
கந்தா மைந்தா ரந்தோள் மைந்தா
கந்தா செந்திற் பெருமாளே.

### பதவுரை

கொண்டாடும் பேர் = தன்னைக் கொண்டாடிப் புகழ்கின்றவர்களை, கொண்டாடும் சூர் கொன்ருய் = மகிழ்ந்து கொண்டாடுகின்ற சூரபன்மனைக் கொன்றவரே! வென்றி குமர ஈசா = வெற்றியையுடைய குமாரக் கடவுளாகிய தலைவரே! கொங்கு ஆர் வண்டு = பூந்தாதுகளில் நிறைந்துள்ள வண்டுகள், ஆர்பண்பாடும் = அரிய பண்களைப் பாடுகின்ற, சீர் குன்ரு = சிறப்பு குறையாத, மன்றல் கிரியோனே = திருமணஞ் செய்துகொண்ட மலையாகிய வள்ளி மலையில் வாழ்பவரே! கண்டு ஆகும் பால் உண்டாய் = கற்கண்டு போன்ற (உமையம்மையின்) திருமுலைப்பால் உண்டவரே! அண்டார் கண்டா = பகைவரைக் கண்டித்தவரே! கந்த புயவேளே = நறுமணம் நிறைந்த புயாசலத்தை யுடையவரே! கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் மைந்தா = கம்பத்துக்கு நிகரான வலிமை நிறைந்த அழகிய தோளையுடைய வீரரே! கந்தா = கந்தக் கடவுளே! செந்தில் = திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும், பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! தண்தேன் உண்டே = குளிர்ந்த தேனைப்பருகி, வண்டு ஆர்வம் சேர் = வண்டுகள் அன்புடன் மொய்க்கின்ற, தண்தார் மஞ்சு குழல் மாஞர் தம்பால் = குளிர்ந்த பூமாலை சூடிய மேகம் போன்ற கூந்தலை

யுடைய மாதர்களிடம், அன்பு ஆர் நெஞ்சே கொண்டே = அன்பு நிறைந்த மனத்தைக் கொண்டு, சம்பாவம் சொற்று = நிகழ்ச்சிகளை யெல்லாம் பேசுகின்ற, அடிநாயேன் = அடிமையாகிய நாயினேன், மண் = மண்ணும், தோயம் = தண்ணீரும், தீ = நெருப்பும், மென்கால் = மெல்லிய காற்றும், விண் = வெளியும், தோய் வண் காயம் = தோய்ந் துள்ள வளங்கொண்ட உடம்பாகிய, பொய் குடில் வேறுய் = பொய் யாகிய சரீரத்தினின்றும் உயிர் நீங்கி, வன்கானம் போய் = கொடுங் கானகம் போய், அண்டா முன்பே = நெருங்கா முன்னர், வந்தே நின் பொன் கழல் தாராய் = அடியேன் முன் வந்தருளி தேவரீருடைய அழகிய திருவடி மலரைத் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

தன்னைப் புகழ்கின்றவர்களை ஆதரித்து மகிழ்கின்ற சூர பன்மனைக் கொன்றவரே! வெற்றி நிறைந்த குமாரக்கட வுளே! பூ மலர்களில் நிறைந்த வண்டுகள் அருமையான பண்களைப் பாடுகின்ற சிறப்பு குறையாத வள்ளிமலையில் எழுந்தருளியிருப்பவரே! கற்கண்டுபோல் இனிமை நிறைந்த அம்பிகையின் திருமுலைப்பாலை உண்டவரே! பகைவரைக் கண்டித்தவரே! வாசனை தங்கிய புயத்தையுடைய உபகாரியே! தூண்போன்ற வலிமை நிறைந்த அழகிய தோள்களையுடைய இளம்பூரணரே! கந்தக் கடவுளே! திருச்செந்தூரில் எழுந் தருளி யிருக்கும் பெருமிதமுடையவரே! குளிர்ந்த தேனை யுண்டு வண்டுகள் அன்பு செய்கின்ற குளிர்ந்த மலர்மாலை சூடி மேகம்போல இருக்குங் கூந்தலையுடைய பொது மாதர்களிடம் ஆசை வைத்த மனத்தை யுடையவனும் அவர்களுடைய செய லைப் பாராட்டிப் பேசுகின்ற நாயேனுகிய அடியேன், மண், நீர், நெருப்பு, காற்று, வெளி என்ற ஐம்பூத சேர்க்கையாலாகிய இப் பொய்யாகிய உடம்பிலிருந்து உயிர் நீங்கி, சுடுகாடு சென்று சேரா முன்னம் தேவரீர் எளியேன்முன் எழுந்தருளி அழகிய அடிமலரைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**தண்டேனுண்டே வண்டு :—**

தண் தேன் என்று பிரித்துக் கொள்க; குளிர்ந்த தேன், குளிர்ந்த மலர்களிலிருந்து வண்டுகள் தமது திறமையால் மிகவும் பாடுபட்டு சிறிது சிறிதாக எடுத்துக்கொண்டு வந்து சேகரிப்பது தேன். வண்டு இல்லையேல் தேன் இல்லை.

தாங்கள் உண்ணமலும் ஒய்ந்து சிறிது நேரங்கூட இருக் காமலும், உழைத்து உழைத்துத் தேனைக் கொணர்ந்து சேர்க் கின்றன தேனீக்கள். அதனைப் பிறர் அபகரித்துக் கொள்ளு கின்றனர்.

உண்ணுமலும் உடுக்காமலும் பிறருக்குக் கொடுக்காமலும், சேர்த்து வைக்கின்ற லோபியினுடைய பொருளும் பிறரால் கவரப்படும்.

"வைத்தீட்டி னாரிழப்பர் வான்தோய் மலைநாட
உய்த்தீட்டுந் தேனீக் கரி." —நாலடியார்.

**தண்டார் மஞ்சுக் குழல் மானார் :—**

வண்டுகள் மகிழ்ந்து மொய்க்கின்ற குளிர்ந்த மலர்மாலைகளை வகை வகையாகக் கட்டித் தமது கூந்தலில் பொதுமகளிர் சூடிக் கொள்வார்கள்.

அந்தக் கூந்தல் கருமை நிறமாக இருப்பதனால் மேகம் போல் அழகாக இருக்கும்.

மஞ்சு—மேகம். மானார்—மான்போன்றவர்கள். தண்டார்—தண் தார் எனப் பதம் பிரித்துக் கொள்க.

**தன்பாலார் நெஞ்சே கொண்டே :—**

மனிதர்களாகிய நாம் இந்த மனித உடம்பை நமக்குத் தந்த இறைவனிடம் அன்பு வைக்க வேண்டும். இடையறாத இன்பத்தை வழங்குபவன் இறைவன். அத்தகைய எம்பெருமானிடம் அன்பு வைக்காது, இன்பம் போல் தோன்றும் துன்பத்தைத் தரும் பொதுமகளிர் பால் அன்பு வைக்கின்றனர். அதனால் எத்தனை எத்தனைக் கேடுகளை யடைகின்றனர்.

**சம்பாவஞ் சொற்றடி நாயேன் :—**

சம்பவம்—என்பது சம்பாவம் என வந்தது. சம்பவம்—நிகழ்ச்சி. பொதுமகளிருடைய செயல்களைக் குறித்து அவர் பால் மயல் கொண்டோர் வியந்து நயந்து பேசி இன்புறுவர். அதிலே அவர்கட்கு ஒரு மகிழ்ச்சி.

இறைவனுடைய திருநாமங்களைச் சொல்வதற்காகவே இந்த நா அமைந்துள்ளது.

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடையானுளன் யாமுளம்
எற்றுக்கோ நமனால் முனி வுண்பதே. —அப்பர்.

**மண்டோயந்தீ மென்கால் விண்டோய் வண்காயம் பொய்க் குடில்:—**

இந்த உடம்பு மண் முதலிய ஐம்பெரும் பூதங்களினுலாகியது. பஞ்ச பூத பரிணாம சரீரம். ஐம்பெரும் பூதங்களின்

சேர்க்கையால் இது வந்துளது. நிலை பேறில்லாதது. நீர்மேற் குமிழிக்கு நிகரானது.

‘ஐந்துவிதமாகின்ற பூத பேதத்தினால்
ஆகின்ற யாக்கை நீர்மேல்
அமிழ்கின்ற குமிழி’ —(தாயுமானவர்)

‘ககனமு மநிலமும் அனல்புனல் நிலமமை
கள்ளப் புலால் ·க்ருமிவீடு’—(திருப்புகழ்)

பொய்யான உடம்பை மெய் என்று நம்பி, தவநெறி சேராது அவநெறி சேர்ந்து, காமதேனுவின் பாலைக் கமரில் கொட்டியது போல், தமது நேரத்தை வீணுக்கி மாநுடர் வறிதே கெடுகின்றனர்; அந்தோ! பரிதாபம்.

பொய் விளக்கப் புகுகின்றீர் போது கழிக்கின்றீர்
புலைகொலைகள் புரிகின்றீர் கலகல என்கின்றீர்
ஐவிளக்கு மூப்பு மரணாதிகளை நினைத்தால்
அடிவயிற்றை முறுக்காதோ கொடிய முயற்றுலகீர்
கைவிளக்குப் பிடித்தொருபாழ்ங் கிணற்றில் விழுகின்ற
களியரெனக் களிக்கின்றீர் கருத்திருந்துங் கருதீர்
மெய்விளக்கும் எனது தந்தை வருகின்ற தருணம்
மேவியதிங் கடைவீரேல் ஆவிபெறுவீரே.

என்று உலகினரை நோக்கி அருளால் பாடுகின்றார் இராமலிங்க அடிகளார்.

பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ எம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே.

—தாயுமானவர்.

**வன்கானம் போயண்டா முன்பே :—**

இந்த உடம்பு இறைவனை யடைவதற்காக வந்தது. தானே வரவில்லை; முன் செய்த மாதவத்தின் பயனாய் இறைவன் தர வந்தது. இந்த உடம்பாலாய பயன் இருவினைகளின் வேரறுத்து மும்மலத் தொடர்பையும் அகற்றி அருளின் தொடர்பு கொண்டு இறைவனுடன் இரண்டறக் கலத்தலேயாம்.

அந்த முயற்சியில் ஈடுபடாதார் செத்து செத்துப் பிறப்பதே தொழிலாகியுழல்வர். “மண்ணுண்டு போகுது ஐயோ! கெடுவீர் இந்த மானுடமே” என்று வருந்துகின்றார் பட்டினத்து சுவாமிகள்.

ஆகவே இந்த உடம்பு அழியுமுன் நற்கதிக்குரிய நலத்தைத் தேடிவிட வேண்டும். அதிலே அயராத முயற்சியிருக்க வேண்டும்.

"கைவைத்த வீடு குலையுமுன்னே வந்து காத்தருளே."

என்ற அருணகிரிநாதரது கந்தரலங்காரத்தை நினைந்த எந்தக் கல் மனந்தான் கரையாது?

"காதலார் மைந்தருந் தாயராருஞ் சுடும்
கானமே பின்தொடர்ந் தலறுமுன்
சூலம்வாள் தண்டு செஞ் சேவல் கோதண்டமும்
சூடு தோளுந் தடந் திருமார்பும்
தூயதாள் தண்டையுங் காண ஆர்வஞ் செயுந்
தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்"
—(காலனார்) திருப்புகழ்.

**வந்தே நின்பொற் கழல்தாராய் :—**

"முருகா! அடியேனுடைய உடம்பை விட்டு உயிர் போகுமுன் சிறியேன்முன் தேவரீர் எழுந்தருளி வந்து எளியேனுக்கு உமது பொன்னார் திருவடியைத் தந்து காத்தருள வேண்டும்" என்று அருணகிரிநாதர் உள்ளம் உருகி முறையிடுமாறு நம்மைத் தூண்டுகின்றார். அந்த வழியைக் காட்டுகின்றார். அவர் பரகதிக்குச் சிறந்த வழிகாட்டி.

**கொண்டாடும்பேர் கொண்டாடுஞ் சூர் கொன்றாய் :—**

தன்னை யார் யார் கொண்டாடுகின்றார்களோ அவர்களையெல்லாம் மகிழ்ந்து ஆதரிப்பான் சூரபன்மன். தன்னைக் கொண்டாடுவதற்கென்றே பலரை வைத்திருப்பர் சிலர். அதனை இன்றுங் காணலாம்! சிலருக்குத் தன்னைக் கொண்டாடினால் அதில் ஒரு பெருமகிழ்ச்சி. அறிஞர்கள் தன்னை யாராவது புகழ்ந்தால் வருந்துவர்; நாணுவர்.

மாலை நேரத்தில் மரத்தின் இலைகள் தலைகவிழ்ந்திருந்தன. அதனைக்கண்டு கூறவந்தார் புலவர். "தன்னைப் புகழக்கேட்ட மதிநலம் படைத்த மாண்புடைய ஒருவன் தலை கவிழ்ந்திருப்பது போல் இருக்கின்றன" என்கின்றார்.

"தம்புகழ் கேட்டார் போல் தலை சாய்ந்து மரந் துஞ்ச"
—கலித்தொகை.

சூர்—துன்பம். துன்பத்தைத் செய்கின்றவன் சூரபன்மன்; அதனால் சூர் எனப்பட்டனன். இவன் 108 யுகங்கள் அமரர்கட்கு அலக்கண் புரிந்தான். அதனால் அவனை மாய்த்தனர்

குமாரக் கடவுள். இது மறக்கருணையெனவுணர்க. குற்றஞ் செய்கின்ற மகனைத் தாய் அல்லது தந்தை அடிக்கின்றனர். மகன் மீது பகை காரணமாகவா அடிக்கின்றனர்? இல்லை. அவன் திருந்தி உய்யவேண்டும் என்ற கருணையினாலேயே தண்டிக்கின்றனர். அதுபோல் உயிருக்குத் தந்தையாகிய இறைவன் குற்றம் புரிந்தோரை உய்யும்பொருட்டுத் தண்டிக் கின்றனன். போற்றுபவர்க்கு அறக் கருணையும், அல்லார்க்கு மறக்கருணையும் புரிந்து ஆட்கொள்வது இறைவனுடைய இயல்பு.

**கொங்கார் வண்டார் பண்பாடும் :—**

கொங்கு ஆர் வண்டு ஆர் பண் பாடும் எனப் பதப் பிரிவு செய்க.

கொங்கு—வாசனை. அது தானியாகு பெயராக இங்கே மலரைக் குறிக்கின்றது. "கொங்கு தேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி" என இறைவன் தருமிக்குப் பாடித்தந்த பாடலாலும் அறிக.

ஆர்—நிறைதல்.

வண்டு—ஆர்—இங்கே ஆர் என்ற சொல்லுக்கு அருமை யென்பது பொருள்.

மலர்களில் நிறைந்த வண்டுகள் தேனையுண்ணும் பொருட்டு அரிய பண்களைப் பாடும். ஏன்? மலர் விரியும் பொருட்டு. நல்ல பண்ணைக் கேட்டவுடன் அரும்பு மலர்கின் றது. இசைக்கு அத்துணை வலிமையுள்ளது. இன்றும் பிச்சை கேட்க வருகின்ற யாசகர்கள் ஏதாவது ஒரு பாடலைப் பாடிக் கொண்டே வருவது கண்கூடு. பாடல் கேட்டவர் பரிசில் தருவர். அதுபோல் வண்டு பாடும் பண்ணுக்குப் பரிசிலாக மலர் தேன் தருகின்றது.

**சீர்குன்று மன்றல் கிரியோனே :—**

மன்றல் கிரி என்பது வள்ளிமலை. வள்ளியைப் பெருமான் மணந்து கொண்டதனால் இப்பெயர் பெற்றது. வள்ளிமலை மிகுந்த மகிமை வாய்ந்தது. உலக மாதா இங்கு அவதரித்து வளர்ந்தனர்; வேதங்களும், முனிவரும் மூவருந் தேவருந் தேடிக் காணாத திருமுருகன் இம்மலையைத் தேடிவந்து, மறை கமழும் மலரடி நோவ இம்மலையில் நடந்தான் எனில் இம்மலையின் பெருமை நம்மால் இத்தன்மைத்து என்று நினைக்கவும், சொல் லவும் தரமோ?

"வீடும் சுரர்மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே."

—அநுபூதி. (44)

## வள்ளிமலை

இம்மலை தொண்டைநாட்டில்(வடஆர்க்காடு மாவட்டத்தில்) திருவல்லம் (புகைவண்டி நிலையம் உண்டு) என்ற திருத்தலத்தின் வடக்கே 5 கல் தொலையில் விளங்குகின்றது. முருகன் அடியார்கள் அனைவரும் வாழ்நாளில் ஒரு முறையாவது அவசியம் சென்று தரிசிக்க வேண்டும். இல்லையேல் வள்ளியம்மையின் திருவருளை எங்ஙனம் பெற முடியும்? தங்கள் குருநாதர் பிறந்த தலத்தைக் காண இஸ்லாமிய அன்பர்கள் பல்லாயிரம் மைல் கடந்து பாலைவனம் வழியே பொருள் நிரம்பச் செலவழித்துப் போகின்றார்கள். முருகன் அடியார்கள் நம் நாட்டில் எளிதாகப் போகக்கூடிய வள்ளிமலை சென்று இயற்கையாகக் குகைக் கோயிலில் வற்றாத கருணாமூர்த்தியாக எழுந்தருளியுள்ள வள்ளி கல்யாண வரதனைச் சேவிக்க வேண்டாமா?

திருவல்லம் சென்னையிலிருந்து பெங்களூர் போகும் இருப்புப் பாதையில் காட்பாடிக்கு அருகில் உள்ளது. திருவல்லம் தேவார, திருப்புகழ், பெரியபுராணப் பாடல்கள் பெற்ற அரிய தலம். அதன் அருகில் வள்ளிமலை இருப்பதனால் போகும் வழியில் திருவல்லத்தையும் தரிசிக்கலாம். ஒரு கல்லில் இரு மாங்காய்களை வீழ்த்தியது போல், ஒரு முயற்சியில் இரு தலங்களைத் தரிசித்த நன்மை கிடைக்கும். நீவா நதிக்கரையில் திருவல்லம் என்னும் தலம் இருக்கின்றது. வில்வவன நாதர் என்பது சுவாமி பேர். அருமையான ஆலயம். அன்பர்கள் அனைவரும் திருவல்லம் தரிசித்து, அதனைக் கடந்து அம்மை அவதரித்த அரிய தலமாகிய வள்ளிமலையைச் சேவித்து அருள் நலத்தைப் பெறுவார்களாக.

**கண்டாகும் பாலுண்டாய் :—**

கண்டு—கற்கண்டு. கற்கண்டுபோல் இனிமையாகவுள்ள அம்மை திருமுலைப்பாலுண்டதைத் தெரிவிக்கின்றது.

> " திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப்பால்
> அருந்தி " —கந்தரலங்காரம். (5)

**கந்தா மைந்தாரந்தோள் மைந்தா :—**

கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் எனப் பதப்பிரிவு செய்க.

| | | |
|---|---|---|
| கந்து | — | தூண். தூண்போன்ற |
| மைந்து | — | வலிமை. வலிமை நிறைந்த |
| ஆர் | — | அருமை. அரிய |
| அம் | — | அழகு. அழகிய |
| தோள்மைந்தா | — | தோளையுடைய வீரரே ! |

**கந்தா செந்திற் பெருமாளே :—**

கந்தன் என்பது முருகனுடைய நாமங்களில் உயர்வுடையது.

செந்தில்—இரண்டாவது படை வீடு; சுவாதிட்டானத் தலம்.

## கருத்துரை

சூரசங்காரரே! வள்ளிமலை வேலவரே! செந்திலாண்டவரே! மாதராசையிற்பட்டு மாண்டு சுடலை ஏகாமுன் வந்தருளி பாதமலரைத் தந்து ஆட்கொள்ள வேண்டும்.

3

வெங்கா ளம்பா ணஞ்சேல் கண்பால்
மென்பா கஞ்சொற் குயில்மாலை
மென்கே சந்தா னென்றே கொண்டார்
மென்றே ளொன்றப் பொருள்தேடி

வங்கா ளஞ்சோ னஞ்சீ னம்போய்
வன்பே துன்பப் படலாமோ
மைந்தா ருந்தோள் மைந்தா அந்தா
வந்தே யிந்தப் பொழுதாள்வாய்

கொங்கார் பைந்தே னுண்டே வண்டார்
குன்றுள் கொங்கைக் கினியோனே
குன்றே டுஞ்சூ ழம்பே ழுஞ்சூ
ரும்போய் மங்கப் பொருகோபா

கங்கா ளஞ்சேர் மொய்ம்பா ரன்பார்
கன்றே வும்பர்க் கொருநாதா
கம்பூர் சிந்தார் தென்பால் வந்தாய்
கந்தா செந்திற் பெருமாளே.

## பதவுரை

கொங்கு ஆர்=பூந்தாதுகளில் உள்ள, பை தேன் உண்டே=பசுமையான தேனை உண்டு, வண்டு ஆர்=வண்டுகள் நிறைந்துள்ள, குன்றுள் கொங்கைக்கு இனியோனே=வள்ளிமலையில் வாழுகின்ற வள்ளியம்மையாருடைய தனங்களுக்கு இனிமையானவரே! குன்றே

டும்=ஏழுமலைகளும், சூழ் அம்பு ஏழும்=சூழ்ந்துள்ள ஏழு கடல்களும், சூரும் போய் மங்க=சூரபன்மனும் வலிமை குன்றியழியுமாறு, பொரு கோபா=போர் செய்து சினந்தவரே! கங்காளம் சேர் மொய்ம்பார்= எலும்புக் கூட்டை யணிந்த தோளையுடையவராகிய சிவபெருமானு டைய, அன்பு ஆர் கன்றே=அன்பு நிறைந்த பாலகரே! உம்பர்க்கு ஒரு நாதா=தேவர்கட்கு ஒப்பற்ற தலைவரே! கம்பு ஊர் சிந்து ஆர் தென்பால் வந்தாய்=சங்குகள் தவழும் கடலுடன் கூடிய தென்திசை யில் வந்து அமர்ந்தவரே! கந்தா = கந்தக் கடவுளே! செந்தில் பெரு மாளே=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவரே! பெருமையிற் சிறந் தவரே! வெங்காளம்=வெப்பமான நஞ்சு, பாணம்=அம்பு, சேல்= மீன் என்ற இவைகளைப் போன்ற, கண்=விழிகளையும், பால்=பால், மெல்பாகு=மென்மையான சர்க்கரைப் பாகு என்ற இவை போன்ற, அம் சொல்=அழகிய சொற்களையும், குயில்=குயில் போலவும், மாலை= மாலையிருள் போலவும் கருமையுடைய, மென் கேசம்=மென்மையான கூந்தலையும், என்றே கொண்டார்=ஆகிய இவைகளைக் கொண்டவர் களாகிய பொதுமாதர்களது, மென் தோள் ஒன்ற=மெல்லிய தோள் களில் பொருந்தும் பொருட்டு, பொருள் தேடி=பொருளைத் தேடிக் கொண்டு, வங்காளம்=வங்காள தேசத்திற்கும், சோனம்=சோனக தேசத்திற்கும், சீன=சீனதேசத்திற்கும், போய்=சென்று, வன்பே துன்பப்படலாமோ=கொடிய துன்பங்களை யநுபவிக்கலாமோ? மைந்து ஆருந் தோள்=வலிமை நிறைந்த தோள்களையுடைய, மைந்தா=குமாரக் கடவுளே! அந்தா=அழகனே! வந்தே இந்தப் பொழுது ஆள்வாய்=அடியேன் முன் வந்து இப்போதே ஆட்கொண் டருளுவீர்.

## பொழிப்புரை

மணம் பொருந்திய மலர்களிலேயுள்ள பசுந்தேனை யுண்டு வண்டுகள் நிறைந்த மலையில் வசிக்கின்ற வள்ளியம்மை தனங் கட்கு இனியவரே! ஏழுமலைகளும், ஏழுகடல்களும், சூரபன் மனும் வலி குன்றிக் கதறுமாறு சினந்து போர் புரிந்தவரே! எலும்புக் கூட்டை யணிந்த தோள்களையுடைய சிவபெரு மானுக்கு அன்புடைய புதல்வரே! தேவர்கட்கு ஒப்பற்ற தலை வரே! சங்குகள் உலாவுகின்ற கடலுடன் கூடிய தென்திசைக்கு வந்தவரே! கந்தப்பெருமானே! செந்தில் மேவிய பெருமிதம் உடையவரே! வெப்பமான நஞ்சையும் அம்பையும் மீனையும் ஒத்த கண்களையும், பாலையும், இனிய கற்கண்டின் பாகையும் ஒத்த அழகிய சொற்களையும், குயில் போலவும் இருள் போல வும் கருமை நிறமுடைய மெல்லிய கூந்தலையும் கொண்ட பொதுமாதர்களுடைய மென்மையான தோள்களைச் சேரும் பொருட்டு, பொருளை நாடி, வங்கநாடு, சோனகம், சீனம்

முதலிய தேசங்களுக்குச் சென்று மிகுந்த துன்பத்தை அடியேன் அடையலாமோ? ஆற்றல் அமைந்த திருப்புயங்களையுடைய குமார மூர்த்தியே! அழகரே! அடியேன்முன் இப்போதே வந்து ஆட்கொண்டருளுவீர்.

## விரிவுரை

**வெங்காளம் பாணஞ் சேல் கண் :—**

மகளிருடைய கண்களுக்குப் பல உவமைகள் உண்டு. அவற்றுள் இங்கு நஞ்சு, கணை, மீன் என்ற மூன்றையும் எடுத்து அடிகள் உரைக்கின்றனர்.

வெப்பமான நஞ்சுபோல் தமது மயலில் வீழ்ந்தாரைக் கொல்லுந் தன்மையுடையது விலைமகளிருடைய கண்கள்.

பாணம் போல பாயுந் தன்மையுடையது;

மீன் போல பிறழுந் தன்மையுடையது.

**பால் மென்பாகஞ் சொல் :—**

அவ்விலைமகளிருடைய மொழி பாலையும், மென்மையான சர்க்கரைப் பாகையும் ஒத்து காமுகர்க்கு இனிக்கும். அம் மொழியில் உருகி மயல் பெருகி மதிமயங்கி கதி விலகிக் கலங்குவர்.

**பாலென்பது மொழி பஞ்சென்பது பதம் பாவையர்கண்**
**சேலென்பதாகத் திரிகின்ற நீ செந்திலோன் திருக்கை**
**வேலென்கிலை கொற்றமயூர மென்கிலை வெட்சித் தண்டைக்**
**காலென்கிலை நெஞ்சமே எங்ஙனே முத்தி காண்பதுவே.**

—கந்தரலங்காரம். (30)

**குயில் மாலை மென்கேசம் :—**

மெல்லிய கேசம் (கூந்தல்) மிகுந்த கருமையுடன் இருக்கும். அதற்கு உவமை குயிலும் இருளும். குயில் போன்ற கருமை; இருள் பூசியது போன்ற கருமை.

இருள்போன்ற கூந்தல் மேலும் மையல் இருளைத் தந்து ஆணவ இருளுக்கு அனுகூலம் புரியும். இருள் நிறைந்த இடத்தில் பொருள் இன்னது என்று விளங்காததுபோல் கூந்தலின் இருளில் மதிமயங்கியோர்க்கு செய்வன எவை, தவிர்வன எவை என்று விளங்காது. நான் யார்? எங்கிருந்து வந்தேன்? எதற்காக வந்தேன்? இந்த உடம்பு எவ்வாறு வந்தது? உடம்பு தானே வராதன்றோ? ஒருவன் தந்து வந்ததாயிற்றே? தந்தவன் எதன் பொருட்டுத் தந்தான்? தன் பொருட்டுத்

தந்தானு? என் பொருட்டுத் தந்தானு? உடம்பு பெற்றதன் பயன் எது? உடம்பைத் தந்தவன் யாவன்? அவன் தன்மைகள் எவை? அவனுக்கும் எனக்கும் என்ன தொடர்பு? அவனையறிந்தவர் யார்? அறியும் நெறிகள் எவை? என்பன வாதி நற் சிந்தனைகள் தோன்ற, அங்கே ஒரு ஞான ஒளி தோன்றும். அந்த ஞானவொளியில் உண்மைப் பொருள் தோன்றும்.

அந்த ஒளியைப் பெறுவதற்கு ஒவ்வொருவரும் முயலுதல் வேண்டும். அந்த ஒளி ஒரு மலைபோல் தோன்றி, அவ்வொளி மலைமேல் அன்புக் கூட்டிலிருந்து வெளிப்பட்டு ஆனந்த ஆறு பாய்ந்தது. அங்கு எல்லாம் அற்ற இனிய தனி நிலையைத் தெளிய அருணகிரிநாதருக்கு ஐயன்—பன்னிரு கையன் உபதேசித்து விட்டான். ஆ! ஆ! அந்த ஆனந்தம் எத்தன்மையதோ?

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததோ ரானந்தத் தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விள்ம்பியவா ! முகமாறுடைத் தேசிகனே.

—கந்தரலங்காரம். (8)

அந்த ஒளியைப் பெருதார் பொதுமகளிருடைய கூந்தலாகிய இருளில் மருளுற்று அல்லற் படுவர்.

**மென்றோ ளொன்றப் பொருள்தேடி :—**

மென் தோள் ஒன்ற—ஒன்றுதல்—பொருந்துதல்; பொது மகளிருடைய மெல்லிய தோளைப் பொருந்தும்பொருட்டு அவர்களுக்கு அள்ளிக் கொடுக்கப் பொருள் வேண்டுமன்றோ? ஆகவே அருளை மறந்து பொருளை நினைந்து அப்பொருளைத் தேடும் பொருட்டு மாந்தர் பலர் அலைகின்றனர்.

தூய வழியில் பொருள் தேடினலும் குற்றமில்லை; தீய வழியில் பொருளையீட்டுகின்றார்கள். பலரை இம்சித்தும் பொய்யும் புனை சுருட்டும் புகன்றும், களவு செய்தும், பிறருடைய வயிற்றிலடித்தும் அழிகின்ற பொருளைத் தேடுகின்றனர். அதனுல் இம்மையில் பழியும் மறுமையில் பாவமும் எய்துகின்றன. இங்ஙனம் பாவ வழியில் தேடிய பொருள் மிகுதியைக் காட்டிலும் வறுமையே நல்லது 'என்கிறார் வள்ளுவர்.

"பழிமலைந் தெய்திய ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை."

—திருக்குறள்.

தீய வழியில் ஈட்டிய பொருளை மாதர்க்கும் மனைவி மக்கட்கும் ஈந்து இவன் பாவ மூட்டையைச் சுமந்து கொண்டு நரக உலகிற்சென்று பன்னெடுங்காலம் பரதவிக்கின்ருன். என்னே மதியீனம்? தேடிய பொருளைத் தான் கொண்டு போகின்றுனுமில்லை. பிறர் பொருட்டுப் பொருள்தேடி தான் பாவத்தைச் சுமந்து செல்கின்ருன். இவனைக் காட்டிலும் பேதையுளனே? மிக்க பொருளுடையவர்களும் மேலும் பழிபாவங்கட்கு அஞ்சாது, வறியவர்கட்கு ஈயாது தீயவழிகளில் பெரும் பொருள் ஈட்டவே முயன்று கொண்டிருக்கிருர்கள். அதனுல் பிறவிப் பயனைப் பெருது அவமே மாண்டு ஒழிகின்றனர்; பாவம்!

**வங்காளம் சோனம் சீனம் போய் :—**

அதிக பொருளை ஈட்டவேண்டுமென்ற பேராசையால் தன் தேசத்தை விடுத்து அயல் தேசத்தையடுத்துப் போகின்ருன். வங்கம் சோனகம் சீனம் முதலிய தேசங்கட்கெல்லாம் போகின்ருன். அயல்தேசஞ் சென்று பஞ்சு படாதபாடு படுகின்ருன்.

" பல திக்கோடு திக்குவரை மட்டோடி மிக்கபொருள்
தேடிச் சுகந்த அணைமீதிற்று யின்று சுக
மிட்டாத ரத்துருகி வட்டார் முலைக்குளிடை
மூழ்கிக் கிடந்து மய லாகித்துளைந்து சில பிணியதுமூடி "
—(இத்தாரணிக்குள்) திருப்புகழ்.

**வன்பே துன்பப்பட லாமோ :—**

நிதிநாட்டம் உடையானுக்குக் கதி நாட்டம் ஏற்படாது. "நிதியை நினைந்து உனை மறந்த மதியை நினைந்து அழுவேனே? நிமலானந்தக் கதியை மறந்து இருள் விழைந்த விதியை நினைந்து அழுவேனே?" என்கின்ருர் இராமலிங்க அடிகளார்.

பொருளாசையால் பெருந்துன்பம் எய்தும். இரவு பகலாக அலையச் செய்யும் பொருளாசை; செய்யாத ஈனச் செயல்களைச் செய்யச் செய்யும்.

அருணகிரிநாதசுவாமிகள் ஆண்டவனை நோக்கி "பெருமானே! இப் பொருளாசையால் அடியேன் பெருந்துன்பத்தை யடையலாமோ! அவ்வாறு அடைதல் கூடாது. ஆசையினின்றும் விலகி உய்யுமாறு தேவரீர் அருள் செய்யும்" என்று வேண்டுகின்ருர்.

ஆனுல் அருணகிரிநாதர் உள்ளபடியே பொருளாசையுடையவர் என்று அன்பர்கள் கருதிவிடக்கூடாது. அவர் ஆசா

நிகளந் துகளாகப் பெற்றவர்; ஆசாபயோதியைக் கடந்து நின்ற அரும்பெருந் தவஞானி; உலகவர்க்குள்ள ஆசைப்பாட்டைக் குறித்து வருந்தி இப்பாடலைப் பாடுகின்றார். மாணவர் குற்றத்தை ஆசிரியனும், மக்கள் குற்றத்தை மாதாபிதாவும் ஏற்றுக்கொள்வதுபோல், உலகவர் குற்றத்தைத் தாம் ஏற்று இப்பாடலைப் பாடுகின்றார் என அறிக.

**மைந்தாருந் தோள் மைந்தா :—**

உலகைப் புரக்கும் வீர அரசனுக்கு வலிமை நிறைந்திருக்க வேண்டும். வலிமை தங்குமிடம் தோள். அதனால்தான் இராமரை முதல் முதலாகக் கண்ட மிதிலை மாதர்கள் இது வீரம் உள்ள தோள்தானா? என்று எடுத்த உடனே முதலில் தோளை உற்று நோக்கினார்களாம்.

"தோள்கண்டார் தோளேகண்டார்."

அதனாலேயே "அவருடைய தோள்வலி கூறுவோர்க்கே" என்கின்றார் கம்பநாடர்.

ஒரு நாட்டைக் காக்கின்ற மன்னவனுக்கு இத்தகைய தோள்வலி வேண்டும் என்றால் அகில உலகங்களை யாளும் எந்தை கந்தவேளுக்கு எத்தகைய தோள்வலி யமைய வேண்டும்? அளவிலாற்றல் அத்தோளில் அமைந்துளது. அது அலகில் அவுணரைக் கொன்ற பேராற்றல் படைத்தது.

"அலகிலவுணரைக் கொன்ற தோளென" —திருப்புகழ்.

"முற்றியபனிரு தோளும்" —(பக்கரை) திருப்புகழ்.

அதனாலேயே வாழ்த்த வந்த கச்சியப்பர் முதலில் அத் திருத்தோள்களை வாழ்த்துகின்றார், 'ஆறிரு தடந்தோள் வாழ்க' என்று.

அத்தோள் அனைவரும் துதி செய்யும் அருமையுடையது என்கின்றார். "ஏவருந் துதிக்க நின்ற ஈராறு தோள் போற்றி."

மைந்து—வலிமை. ஆர்—நிறைதல்.

வலிமை முழுவதும் நிறைந்த மைந்தன் முருகன். இனிய அடியவர்களின் வினைப் பகைகளையும் ஆணவாதி பகைகளையும் அழிக்கும் ஆற்றல் படைத்தவன்.

அவனை வழிபடுவோர்க்குப் பகையினால் வரும் அச்சம் இராது. கோள் நாள் கூற்று முதலிய இடர்கள் எய்தமாட்டா.

**வந்தே இந்தப் பொழுதாள்வாய் :—**

"பெருமானே! நாளை, மறுநாள் என்று தவணை போடாமல் இப்பொழுதே என்முன் வந்து ஆட்கொள்வீர்" என்று சுவாமிகள் வேண்டுகின்றனர்.

ஆண்டவனைக்காண வேண்டும் என்ற ஆவல் உள்ளத்தில் துடிதுடித்துக்கொண்டிருக்க வேண்டும். தண்ணீரிலே அழுந்திய ஒருவன் மூச்சுவிட முடியாமல் திணறுவதுபோல் எவன் ஒருவன் இறைவனைக் காணவேண்டும் என்று துடிப்பானோ அவனுக்கு அத் துடிப்புள் இறைவன் தோன்றியருள் புரிவான்.

இன்றிருப்பார் நாளையில்லை; வருகணத்து வாழ்ந்திடுமோ விழுமோ இந்த மலக்கூடு; "சாநாளும் வாழ்நாளும் யாரறிவார்? நெருநல் உளனொருவன் இன்றில்லை. ஆனபடியால் எத்தனைக்கு எத்தனை விரைவில் முருகனுடைய காட்சியைக் காணலாம் என்ற ஆவலும் அளவுக்கு மேற்பட்ட காதலும் அமைதல் வேண்டும். அங்ஙனம் அமைந்த பாம்பன் அடிகளார்க்கு ஆண்டவன் கனவிலும் நனவிலும் காட்சி தந்தனர்.

அளவிறந்த காதல் பூண்ட ராமகிருஷ்ணர் தேவியை நேருக்கு நேராகத் தெரிசித்தனர்.

**கொங்கார் பைந்தே னுண்டே வண்டார் குன்றாள் :—**

குன்றாள்—குன்றில் பிறந்து குன்றில் வாழ்கின்ற வள்ளியம்மையார். மலைமகள் மகளாகிய மலைக்கு நாயகன் மலைமங்கையாகிய வள்ளியை மணந்து மலையில் எழுந்தருளியிருக்கின்றான்.

**குன்றோடும் :—**

சூரபன்மனுக்குத் துணையாக நின்ற ஏழுமலைகளையும் பெருமான் அழித்தனர்.

**சூழும்பேழும் :—**

உலகைச் சூழ்ந்துள்ள ஏழு கடல்களையும் வேலால் சுவற வைத்தனர்.

அம்பு—கடல்.

> "எழுகடலும் எண் சிலம்பும் நிசிரரும் அஞ்ச அஞ்சும்
> இமையவரை அஞ்சலென்ற பெருமாளே"
>
> —(அனைவரு) திருப்புகழ்.

**சூரும் போய் மங்கப் பொருகோபா :—**

சூர்—சூரபன்மன்.

போய்மங்க—வலிமையழிந்து குன்றுமாறு முருகன் மறக் கருணையால் கோபிப்பார் போல் கோபித்துப் போர் புரிந் தார்.

குற்றம் புரியும் குழந்தைகளை அன்னை சினமுகங் காட்டித் தண்டித்துத் திருத்துவதுபோல் முருகவேள் சூராதியவுண ரைத் தண்டித்து ஆண்டருளினார்.

**கங்காளஞ்சேர் மொய்ம்பார் : —**

கங்காளம்—எலும்புக் கூடு. மொய்ம்பு—தோள். சர்வ சம்மார காலத்தில் மாண்ட மாலயனாதி வானவர்கள் தமது அடியார்கள் ஆதலின் அவர்களுடைய எலும்புக் கூடுகளைச் சிவபெருமான் தோளில் தரித்துக்கொண்டு அருளினார்.

**அன்பார் கன்றே :—**

சிவமூர்த்திக்கு அன்புடைய இளங்குமாரர். கன்று என்ற சொல் மிக்க அழகாக அமைந்துளது.

**கம்பூர் சிந்தார் :—**

கம்பு—சங்கு. சிந்து—கடல். சங்குகள் ஊர்ந்து தவழ்கின்ற கடல்.

**கந்தா :—**

கந்தன்—பகைவர்களுடைய பராக்கிரமங்களை வற்றச் செய்பவன்; அகப்பகை புறப்பகை என்ற இரு பகைகளையும் போக்கி அருள் புரிபவன்.

## கருத்துரை

வள்ளிமணவாளா ! சிவகுமாரா ! செந்தில் மேவிய கந்தவேளே ! மாதர் பொருட்டு பொருள் தேடி யலைந்து அடியேன் துன்புறமாட்டேன். இப்பொழுதே வந்து அருள் புரிவீர்.

## 4

விதிபோலு முந்த விழியாலு மிந்து
நுதலாலு மொன்றி இளைஞோர்தம்
விரிவான சிந்தை உருவாகி நொந்து
விறல் வேறு சிந்தை வினையாலே
இதமாகி யின்ப மதுபோத வுண்டு
இனிதாளு மென்று மொழிமாதர்
இருளாய துன்ப மருள்மாயை வந்து
எனையூர்வ தென்றும் ஒழியாதோ
மதிசூடி யண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு விடையேறி
மறவாத சிந்தை அடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு தருபாலா
அதிமாய மொன்றி வருசூரர் பொன்ற
அயில்வேல் கொடன்று பொரும்வீரா
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே.

### பதவுரை

மதிசூடி = பிறைச்சந்திரனைத் தரித்தவரும், அண்டர் பதி வாழ = தேவர்களுடைய நகரம் வாழும் பொருட்டு, மண்டி வரும் ஆலம் உண்டு = நெருங்கிவந்த ஆலகாலவிடத்தை உண்டவரும், விடையேறி = இடபத்தை வாகனமாகக் கொண்டவரும், மறவாத சிந்தை அடியார்கள் பங்கில் வரும் = திருவடியை மறவாமல் நினைந்து உருகும் அடியார்களது பக்கத்தில் வருபவரும், தேவ = ஒளிமயமானவரும், சம்பு = சுக காரணரும் ஆகிய சிவபெருமான், தரு பாலா = தந்த புதல்வரே! அதி மாயம் ஒன்றி வரு சூரர் பொன்ற = மிகுந்த மாயங்களுடன் பொருந்தி வந்த சூராதியவுணர்கள் அழியுமாறு, அயில்வேல் கொடு = கூரிய வேலாயுதத்தைக் கொண்டு, அன்று பொரும் வீரா = அந்நாளில் போர் புரிந்த வீரரே! அழகான செம்பொன் மயில்மேல் அமர்ந்து = அழகிய சிவந்த பொன்னிறத்துடன் கூடிய மயில் வாகனத்தின்மீது எழுந்தருளி, அலைவாய் உகந்த = திருச்செந்தூரில் மகிழ்ந்து வாழும், பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! விதி போலும் = விதியைப் போலே, உந்து அ விழியாலும் = முற்பட்டு தொழில் புரியும் அந்த கண்களாலும், இந்து நுதலாலும் = சந்திரனைப் போன்ற நெற்றியினாலும், ஒன்றி = ஒன்று பட்டு, இளைஞோர்தம் விரிவு ஆன சிந்தை உரு ஆகி = விரிந்த சிந்தை

யில் உருவமாகி நின்று, நொந்து=மனம் நொந்து, விறல் வேறு சிந்தை வினையாலே=தங்கள் சாகசத்திறலால் மனம் வேறு செயல் வேறாகப் புரிந்து, இதம் ஆகி இன்ப மது போத உண்டு=இனிமையாக இன்பத் தேனை நிரம்பவும் உண்டு, இனிது ஆளும் என்று மொழி மாதர்= இனிது என்னை ஆட்கொள்ளும் என்று கூறுகின்ற பொது மகளிருடைய, இருள் ஆய துன்பம்=இருள் நிறைந்த துன்பமும், மருள் மாயை வந்து=மயக்கத்தைத் தரும் மாயையும் வந்து, எனை ஈர்வது=அடியேனை இழுக்கின்ற தன்மை, என்றும் ஒழியாதோ=எக்காலத்தும் நீங்காதோ?

## பொழிப்புரை

பிறைச் சந்திரனை யணிந்தவரும், தேவர்களுடைய நகரம் வாழும் பொருட்டு நெருங்கி வந்த ஆலால விடத்தை உண்டவரும், இடபவாகனத்தின் மீது எழுந்தருளி வருபவரும், திருவடியை மறவாத அடியார்களது அருகில் வருகின்றவரும், ஒளிமயம் ஆனவரும், சுககாரணரும் ஆகிய சிவமூர்த்தி தந்தருளிய புதல்வரே! மிகுந்த மாயச் செயல்களுடன் கூடி வந்த சூராதி யவுணர்கள் அழியுமாறு, கூரிய வேற்படையைக் கொண்டு போர் புரிந்த வீரரே! அழகிய சிவந்த பொன்னிற மாகிய மயிலின்மீது அமர்ந்து, திருச்செந்தூரில் மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கின்ற பெருமிதம் உடையவரே! விதியைப்போல் முற்பட்டுத் தொழில் புரிகின்ற அந்தக் கண்களாலும், சந்திரனைப் போன்ற நெற்றியினாலும் ஒன்றுபட்டு, இளைஞர்களுடைய விரிந்த சிந்தையில் உருவமாகித் தோன்றி நின்று, மனம் நொந்து, தமது சாகசத் திறலால் மனம் வேறு செயல் வேறாக இருந்து, இனிமையான இன்பத்தேனை மிகவும் அருந்தி என்னையாளும் என்று கூறுகின்ற விலைமகளிருடைய இருள் மயமான துன்பமும், மதியை மயக்கும் மாயையும் வந்து எளியேனை ஈர்க்கின்ற தன்மை எக்காலத்தும் நீங்க மாட்டாதோ?

## விரிவுரை

**விதி போலு முந்த விழியாலும் :—**

விதி போலும் உந்து அ விழியாலும் எனப் பதப் பிரிவு செய்து கொள்க. முன் செய்த ஊழ்வினை எவ்வாறு தவிராது தொழில் புரியுமோ அவ்வாறு விலைமகளிரது கண்களும் முற்பட்டு மாய வினைகளைப் புரியும்.

**இந்து நுதலாலும் :—**

இந்து—சந்திரன். நுதல்—நெற்றி. எட்டாந் திதியன்று தோன்றும் பாதி மதியைப் போல் நெற்றி வட்டமாகவும் வடி

வாகவும் இருக்கும். அதனால் மகளிருடைய நெற்றியை மதி நுதல் என்று புலவர்கள் புகழ்ந்து புகலுவர்.

**இளையோர் தம் விரிவான சிந்தை உருவாகி :—**

தம்மை விரும்பி வருகின்ற இளைஞர்களுடைய உள்ளத்தில் மனோசக்தியால் உருவமாகி நின்று விலைமகளிர் காட்சி தருவர்.

அவா மிகுதியினால் தாம் விரும்பிய உருவத்தை மிகுதியாக அழுந்திய நினைவுடன் எண்ணுவதனால் அவ்வுருவம் அவர்களுடைய மனதில் தோன்றுவதுடன், சிலசமயம் புறக்கண்ணுக்கும் தோன்றும்.

இராவணன் சீதையை மிகுதியாக நினைந்து நின்றனன். அதனால் அவன் கண்முன் சீதையின் உருவம் வந்து நின்றது.

சூர்ப்பனகை இராமர்மீது காதல் கொண்டு இராமரையே நினைந்து நின்றாள். அவள் முன் இராமர் திருவுருவம் வந்து நின்றது.

இராவணன் சூர்ப்பனகையை அழைத்து, "தங்காய்! இதோ பார்! வாள்போன்ற கண்களும் மயில்போன்ற மேனியும் உடையவளாக வந்து நிற்கின்ற இவள்தானே சீதை?" என்று வினவினான்.

பொய்ந்நின்ற நெஞ்சிற்கொடியாள் புகுந்தாளை நோக்கி
நெய்ந்நின்ற கூர்வாளவன் நேருற நோக்கு நங்காய்
பைந்நின்ற வாட்கண் மயில்நின்றென வந்தென்முன்னர்
இந்நின்றவ ளாங்கொல் இயம்பிய சீதை என்றான்.

**சூர்ப்பனகை கூறுவாள் :** "அண்ணே! இது சீதையன்று. அதோ பார்; தாமரைக் கண்கள்; செங்கனிவாய்; சந்தனம் பூசிய அகன்ற திருத்தோள்கள்; முழந்தாளைக் கடந்த திருக்கரங்கள்; அழகிய அகன்ற திருமார்பு; அஞ்சன மைக் குன்றம் போன்ற திருமேனி; ஆ! இதோ நிற்கின்றவன் அந்த இராமன்; வல் வில்லுடன் நிற்கின்றான். என்ன அழகு?" என்றாள்.

செந்தாமரைக் கண்ணொடும் செங்கனி வாயினோடும்
சந்தார் தடந்தோளொடும் தாழ்தடக் கைகளோடும்
அந்தார் அகலத்தொடும் அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவனாகும் அவ்வல்வில் இராமன் என்றாள்.

அங்கே இராமரும் இல்லை; சீதையுமில்லை; அவர்களுடைய அழுந்திய நினைவின் முதிர்ச்சியால் இராவணனுக்கு சீதையுருவமும், சூர்ப்பனகைக்கு இராமர் உருவமும் தோன்றிக் காட்சியளித்தன. அதுபோல் காமுகர்க்குத் தாம் விரும்பிய பெண்ணுருவந் தோன்றும்.

**விறல் வேறு சிந்தை வினையாலே :—**

சிந்தை வேறு வினை வேறு எனப் பொதுமகளிர்பால் நிகழும். அதாவது மனம்வேறு செயல்வேருக நிற்பர். அதனுல் அவர்கள் இருமனப் பெண்டிர் எனப் படுவர்.

'இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு' —திருக்குறள்.

மனதைப் பிறிதோரிடத்தில் வைத்துக்கொண்டு மிக்க அன்புள்ளார் போல் நடிக்கும் விறல் படைத்தவர்கள்.

**இதமாகி இன்பமது போதவுண்டு இனிதாளுமென்று மொழிமாதர் :—**

அம்மகளிர் தம்மை விரும்பிய ஆடவரிடம் புன்னகை புரிந்து, "இனிமையாக இன்பத் தேனைப் பருகி என்னை இனிது ஆட்கொள்ளும்" என்று மிகவும் சுவைபடக் கூறிக் கொஞ்சுவர். அவர் உரை கரும்புபோல் இருப்பினும் உள்ளம் இரும்பு போல் கடினமாக இருக்கும்.

மாரீசனுகிய மான் இராமரை அலக்கழித்துச் சென்ற இடத்தில் கம்பநாடர், அம்மான் சென்றது பொதுமகளிர் மனம் போல் என்று கூறுகின்றனர்.

"............நிதிவழி நேயநீட்டும்
மன்றலங் கோதைமாதர் மனமெனப் போயிற்றம்மா"

**இருளாய துன்பம் :—**

பொருளை இன்னதென்று அறியவிடாது மயக்கி இடர்ப்படுத்துவது இருள். இருளில் கிடந்தார் ஒரு செயலுஞ் செய்ய முடியாது பெரும் வேதனையுறுவர். அதுபோல் ஆசையால் வரும் மயக்க இருளும் நல்வினை தீவினை என்ற விளக்கத்தை மறைக்கும். நல்லவை செய்ய விடாது அல்லவை செய்விக்கும். புண்ணியச் செயல் கசக்குமாறும், பாவச் செயல் இனிக்குமாறுஞ் செய்யும். அதனுல் பெருந்துன்பம் நேரும்.

**மருள் மாயை வந்து :—**

மயக்கத்தைப் புரியும் மாயையும் வந்து சூழும்; மாயையில் நின்று மயங்குவோர் பரகதி காணுர்.

**எனை யீர்வதென்றும் ஒழியாதோ :—**

ஈர்வது—ஈர்த்தல்—இழுத்தல்.

"ஈர்த்தென்னையாட் கொண்ட எந்தை பெருமானே" —திருவாசகம்

"மகளிரது மாய மயக்கம் வந்து அடியேனை ஈர்த்துத் தன் வசமாக்கித் துன்பம் புரியும். இந்த இடர்ப்பாடு என்னை விட்டு என்று நீங்குமோ? இறைவனே! இந்த இடரினின்றும் சிறியேன் விடுபட்டு உய்ய அருள்புரிவீர்" என்று அடிகளார் மகமாயை களைந்திட வல்ல பிரானுகிய முருகனை வேண்டுகின்றனர்.

ஈர்வது என்ற சொல்லுக்குப் பிளத்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.

**மதிசூடி :—**

தட்சனுடைய சாபத்திஞல் தேய்ந்த சந்திரன் எங்கும் அடைக்கலம் இன்றி அரனுர்பால் வந்து அடைக்கலம் புகுந்தனன்; கருணை நிறைந்த கண்ணுதற் கடவுள் தேய்ந்த மதியை எடுத்துத் தமது சென்னியிற் சூடி யருள்பாலித்தனர்.

**அண்டர் பதிவாழ மண்டி வருமால முண்டு :—**

பாற்கடலில் பிறந்து அமரலோகத்தை யழிக்கவந்த ஆலாகலவிடத்தை இறைவன் உண்டு அமரர்கட்கு அமிர்தம் வழங்கி அருள் பாலித்தனர். இல்லையேல் அமரர் அனைவர்களும் அன்றே பொன்றி அந்நாடு அழிந்திருக்கும்.

**மறவாத சிந்தை அடியார்கள் :—**

அடியவர்கள் எப்போதும் இறைவன் திருவடியை மறவாதிருக்கும் பெற்றியுடையவர்கள். இந்த நிலையை அவர்கள் ஆண்டவனிடமும் வேண்டிப் பெறுவார்கள். "மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும்" என்று வேண்டுகின்ருர் காரைக்காலம்மையார். "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்" என்கின்ருர் அப்பர்.

பெருமானே! தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்ற இந்த எழுவகைப் பிறவிகளில் எந்தப் பிறவியிலேனும் அடியேன் பிறக்கத் தயார். அதுபற்றிச் சிறியேனுக்குக் கவலையில்லை. ஒருவேளை பிறவாமை வந்தாலும் வரட்டும். இம்மையிலும் மறுமையிலும் இன்பமே வருவதேனும் வரட்டும். அல்லது துன்பமே வருவதாயினும் சரி; அதுபற்றியும் அடியேனுக்குக் கவலையில்லை. சிறந்த வாழ்வு வந்தாலும் வரட்டும்; பொல்லாத வறுமை வருவதாயினும் நன்றே; எல்லோரும் என்னை நன்கு மதிப்பதாயினும் மதிக்கட்டும்; அல்லது சென்ற சென்ற இடமெல்லாம் கல்லை விட்டு எறிந்து கருப்புக்கொடி காட்டி "வராதே! திரும்பிப் போ" என்று அவமதி புரிந்தாலும் புரியட்டும். உயர்வும் தாழ்வும் கலந்துள்ள இந்தவுலகிலே மற்று எது வந்தாலும் வரட்டும்; எதுபோனாலும் போகட்டும். இறைவனே! எனக்கு இவைகளால் யாதும் கவலையில்லை. ஒரே ஒரு வரம் உன்பால் யாசிக்கின்றேன். உனது இரண்டு சரணாரவிந்தங்களையும் சிறியேன் மறவாமல் இருக்கின்ற மனம் ஒன்றுமட்டும் வேண்டும். அந்த வரத்தை வழங்கியருளும்" என்று வடலூர் வள்ளல் வேண்டுகின்றார். என்ன அழகிய வரம்?

நாரதர் ஒரு சமயம் முருகனை வேண்டித் தவம் புரிந்தனர். முருகவேள் தோன்றி, "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டருளினார். நாரதர், "ஐயனே! உன் திருவடியை மறவாத மனம் வேண்டும்" என்றார். முருகன் அந்த வரத்தை நல்கிவிட்டு, "இன்னும் ஏதாவது வரங் கேள் தருகின்றேன்" என்றார். நாரதர் "பெருமானே! இன்னொரு வரத்தைக் கேட்கின்ற கெட்டபுத்தி வராமல் இருக்க வேண்டும்" என்று கேட்டனர்.

**அடியார்கள் பங்கில் வரு தேவ சம்பு :—**

அடியார்களுடைய அருகில் இறைவன் வந்து அவர்கள் சிந்தையில் நினைந்த திறங்களை யெல்லாம் வழங்கி ஆட்கொள்ளுவான்.

தேவன்—ஒளியுருவினன்.

சம்பு—சுககாரணன்.

**அதிமாய மொன்றி வருசூரர் :—**

சூராதியவுணர்கள் பலப்பல மாயவடிவங்களைக் கொண்டு போர் புரிந்தார்கள். மலையாகவும் கடலாகவும் இருளாகவும் கனலாகவும் இன்னும் பல்வேறு வடிவங்களைத் தாங்கிப் போர்

புரிந்த அவர்களைக் கந்தவேள் வேற்படையால் அழித்தருளினார்.

**அழகான செம்பொன் மயில்மீது :—**

பறவைகளில் மயில் மிகுந்த அழகியது. பொன் வண்ணமான நிறத்துடன் விளங்குவது.

"செம்பொன்மயில் மீதிலே எப்போது வருவாயே"
—(முந்துதமிழ்) திருப்புகழ்.

**அலைவாய் :—**

கடல் அலைவீசும் இடத்தில் விளங்குவதனால் திருச்செந்தூருக்கு "அலைவாய்" என்ற பேர் அமைந்தது. அது இரண்டாவது படைவீடு. சுவாதிஷ்டானத் தலம்.

## கருத்துரை

சிவகுமாரரே! சூரசங்காரரே! செந்திலாண்டவரே! மாதர் மயக்கிலிருந்து விடுபட்டு உய்யுமாறு அருள் புரிவீர்.

## 5

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ
மறிமா னுகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா
மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த அதிதீரா
அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சும்
அடியா ரிடைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த பெருமாளே.

## பதவுரை

மறிமான் உகந்த = மான்குட்டியைக் கருணையுடன் கரத்திலேந்தியுள்ள, இறையோன் = எப்பொருட்கும் இறைவராகிய சிவபெருமான், மகிழ்ந்து = பிரணவோபதேசம் பெறுவதற்காக மனமகிழ்ச்சியுடன், வழிபாடு தந்த = சிஷ்யபாவ மூர்த்தியாக நின்று வழிபட்ட, மதியாளா = ஞானவடிவினரே!, மலை = கிரவுஞ்ச மலையும், மாவு சிந்த = மா மரமாக நின்ற சூரபன்மனும் அழியுமாறும், அலை வேலை அஞ்ச = அலைகளுடைய கடல் அஞ்சவும், வடிவேல் எறிந்த = கூர்மை பொருந்திய வேலாயுதத்தைப் பிரயோகம் புரிந்த, அதி தீரா = மிகவுந் தைரியத்தை யுடையவரே!, அறிவாலறிந்து = பாச அறிவும் பசு அறிவும் நீங்கிய மெய்யறிவினால் உணர்ந்து, உன் இருதாள் இறைஞ்சும் = தேவரீரது திருவடித் தாமரைகள் இரண்டையும் வணங்குகின்ற, அடியார் இடைஞ்சல் = அடியார்களுக்கு நேரும் இடையூறுகளை, களைவோனே = நீக்குபவரே! அழகான செம்பொன் மயில்மேல் = அழகியதும் செம்பொற் சாயலையுடையதுமாகிய மயிலின்மிசை, அமர்ந்து = ஏறிக்கொண்டு, அலைவாய் உகந்த = திருச்சீரலைவாய் என்னும் புனித க்ஷேத்திரத்தில் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! விறல்மாரன் = யாவரையும் மயக்குகின்ற சக்தியுடைய மன்மதன், ஐந்து மலர்வாளி சிந்த = ஐந்து மலர்க்கணைகளை வீசவும், வானில் = ஆகாயத்தில், மிக இந்து வெயில் காய = சந்திரன் மிகவும் குளிர்ந்த கிரணங்களைப் பொழியவும், மிதவாடை வந்து = மெல்லிய தென்றல் காற்று வந்து, தழல்போல ஒன்ற = அக்கினிபோல் நெருங்கவும், வினை மாதர் தம்தம் = வினைவசப்பட்ட மாதர்கள் தங்கள் தங்கள் மனம் போன வண்ணம், வசைகூற = வசைமொழிகளைக் கூறவும், குறவாணர் குன்றில் உறை = ஐம்புலன்களாகிய குறவர்களுடைய மலையில் வசிக்கின்ற, பேதைகொண்ட = அறியாமையையுடைய பெண்ணாகிய ஜீவான்மாவடைந்த, கொடிது ஆன துன்ப = கொடிய துன்பத்தைப் புரியும், மயல்தீர = மயக்கம் நீங்க, குளிர் மாலையின்கண் = குளிர்ச்சி பொருந்திய மாலை நேரத்தில், அணிமாலை தந்து = தேவரீரது திருமார்பிலணிந்துள்ள மாலையைத் தந்து, குறைதீரவந்து = இந்த ஜீவான்மாவினது குறை நீங்குமாறு வந்து, குறுகாயோ = அணுகமாட்டீரோ?

## பொழிப்புரை

தாருகவனத்து இருடிகளாலனுப்பப்பட்ட மான்குட்டியைக் கருணையினால் கரத்திலேந்தியுள்ள, எவ்வுயிர்க்கும் எப்பொருட்கும் இறைவராகிய சிவபெருமான், குடிலை மந்திரோபதேசம் பெறும் பொருட்டு மகிழ்ச்சியுடன் வழிபாடு செய்த ஞான சொரூபியே! கிரவுஞ்ச மலையும், மா மரமாகிநின்ற சூரபன்மனும் அழியும்படியும்; அலைகளையுடைத்தான சமுத்

திரம் அஞ்சவும், வடிவேலாயுதத்தை எறிந்த மிகுந்த தைரியத்தை யுடையவரே! பதிஞானத்தால் மெய்ப்பொருளை யறிந்து தேவரீரது அருணசரணாரவிந்தங்கள் இரண்டையும் வணங்குகின்ற அடியார்களது இன்னல்களை யகற்றுகின்றவரே! அழகிய செம்பொன்னனைய மயில்மேல் அமர்ந்து திருச்சீரலைவாய் என்னுந் திருத்தலத்தில் மகிழ்ச்சியுடன் உறைகின்ற பெருமையிற் சிறந்தவரே! (எத்திறப்பட்டாரையும் மயக்குகிற) சக்தியையுடைய மன்மதன் ஐந்து மலர்க் கணைகளைச் சிந்தவும்; ஆகாயத்தில் சந்திரன் மிகவும் குளிர்ந்த கிரணங்களைப் பொழியவும், மெல்லிய தென்றற் காற்று அக்கினிபோல் வந்து வெப்பத்தைச் செய்யவும், வினைகளைப்புரியும் பெண்கள் தங்கள் தங்களுக்குத் தோன்றிய வண்ணமெல்லாம் நிந்தை மொழிகளைச் சொல்லவும், ஐம்புலன்களாகிய வேடுவர்களது கன்மங்களாகிய மலைமேலுறைகின்ற ஜீவான்மாவாகிய பெண்மங்கை கொண்ட கொடிய துன்பத்தை விளைக்கின்ற மயக்கம் நீங்குமாறு குளிர்ந்த மாலை நேரத்தில் தேவரீர் அணிந்துகொண்டுள்ள மலர் மாலையைத் தந்து இந்த ஜீவான்மாவினது குறை தீருமாறு வந்து அணுகமாட்டீரோ?

## விரிவுரை

**விறல்மாரன் :—**

யயாதி, நகுஷன், புரூரவன், சர்யாதி முதலிய ராஜ ரிஷிகளையும், காசிபர், சியவனர், கௌதமர், பராசரர், விசுவாமித்திரர் முதலிய பிரம்ம ரிஷிகளையும், இந்திரன், அக்கினி, பிரமன், திருமால் முதலிய இமையவர்களையும் தனது மலர்க் கணைகளால் மயக்கி வாகைசூடியோன் ஆதலால் மதனனை விறல்மாரன் என்றனர்.

**ஐந்து மலர்வாளி :—**

மன்மதன் கணைகள் ஐந்து. அவையாவன: தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பன. இவற்றின் பெயர் முறையே :— உன்மத்தம், மதனம், சம்யோகம், சந்தாபம், வசீகரணம் என்பனவாம். இவை செய்யும் அவத்தை :—சுப்ரயோகம், விப்ரயோகம், சோகம், மோகம், மரணம். இதன் விவரம்: சுப்ரயோகம் :—சொல்லும் நினைவும்; விப்ரயோகம் :—வெய்துயிர்த்திரங்கல்; சோகம் :—வெதுப்புந் துய்யன தெவிட்டலும்; மோகம் :—அழுங்கலும், மொழி பல பிதற்றலும்; மரணம் :—அயர்ப்பும், மயக்கமுமாம்.

**பேதைகொண்ட கொடிதான துன்பமயல் :—**

தலைவன்மீது காதல்கொண்ட தலைவிக்கு குளிர்ந்த சந்திரனது தண்ணொளி வெப்பத்தையும், தென்றல் காற்று அனல்

போன்ற வெம்மையையும் செய்யும். ஈண்டு ஜீவான்மாவை நாயகியாகவும், பரமான்மாவை நாயகனுகவும் வைத்து; பரமான்மாவாகிய நாயகன்மீது காதல் கொண்ட நாயகியாகிய ஜீவான்மா மிகுந்த தாபத்தையடைந்து வருந்துகின்றது. இங்ஙனம் நாயகி நாயக பாவத்தில் எழுந்த பாடல்கள் பல.

"துள்ளுமத வேள் கைக் கணையாலே
தொல்லை நெடுநீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே" —திருப்புகழ்

தென்றலையம்பு புனைவார் குமார திமிரமுந்நீர்த்
தென்றலையம்புய மின்கோ மருக செழுமறைதேர்
தென்றலையம்பு சகபூ த்ரவெரி சிந்திமன்றல்
தென்றலையம்பு படுநெறி போயுயிர் தீர்க்கின்றதே.—கந்தரந்தாதி.(82)

இங்ஙனம் பரமான்மாவின்மீது வேட்கை கொண்ட ஜீவான்மா அவ்வேட்கை தீர மலர்மாலையை விரும்புகின்றது.

"நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே" —திருப்புகழ்.

மறிமான்......வழிபாடுதந்த மதியாளா :—

## அறுமுகச் சிவனரை ஐம்முகச் சிவனர் வழிபட்ட வரலாறு

கயிலைமலையின்கண் குமாரக்கடவுள் வீற்றிருந்தனுான்று சிவ வழிபாட்டின்பொருட்டு வந்த அமரர்கள் அனைவரும் குகக் கடவுளை வணங்கிச் சென்றனர். அங்ஙனம் வணங்காது சென்ற பிரமனையழைத்து பிரணவப்பொருளை வினவி, அதனையுரைக்காது விழித்த அம்புயனை அறுமுகனர் சிறைப் படுத்தி, முத்தொழிலும் புரிந்து தாமே மூவாக்கும் முதல்வன் என்பதை மலையிடை வைத்த மணிவிளக்கென வெளிப் படுத்தினர்.

பின்னர் ஒருகால் கந்தாசலத் திருக்கோயிலின்கணிருந்த கந்தக் கடவுள் தந்தையாராகிய தழல்மேனியாரைத் தெரிசிக்க்ச் சென்றனர். பொன்னூர் மேனிப் புரிசடை யண்ணல் "புதல்வ! இங்ஙனம் வருக" என்று எடுத்து அணைத்து உச்சி மோந்து முதுகு தைவந்து "குமார! நின் பெருமையை உலக மெவ்வாறு அறியும். மறைகளால் மனத்தால் வாக்கால் அளக்கவொண்ணுத மாப்பெருந்தகைமையுடைய நின்னை உள்ளபடி உணரவல்லார் யாவர்?" என்று புகழ்ந்து அதனை

விளக்குவான் உன்னி எத்திறப்பட்டோர்க்கும் குருநாதனின்றி மெய்ப்பொருளை யுணரமுடியாதென்பதையும், குரு அவசியம் இருத்தல் வேண்டுமென்பதையும் உலகற்கு உணர்த்துமாறு திருவுளங்கொண்டு, புன்முறுவல் பூத்த முகத்தினராய் வரைபகவெறிந்த வள்ளலை நோக்கி,

"அமரர் வணங்குங் குமரநாயக! அறியாமையானுதல், உரிமை குறித்தாதல் நட்பினர் மாட்டும் பிழைகள் தோன்றல் இயற்கை. அறிவின்மிக்க ஆன்றோர் அறிந்து ஒரு பிழையும் செய்கிலர். அறிவிற் குறைந்த சிறியோர் அறிந்தும், அறியாமையானும் பெரும் பிழைகளையும் செய்வர். அவ்வத்திறங்களின் உண்மைகளை யறிந்த பெரியோர் அதுபற்றிச் சினந்து வைரங்கொள்ளார். ஆதலால் அப்புயனும் அறிவின்மையால் நின்னைக் கண்டு வணக்கம் புரியாது சென்றனன். அவனைக் குட்டி பல நாளாகச் சிறையிலிருத்தி, எல்லார் தொழிலையும் நீயே யியற்றினை. எல்லார்க்குஞ் செய்யும் வணக்கமும் நினக்கே யெய்துந் தகையது; அறு சமயத்தார்க்கும் நீயே தலைவன்" என்று எம்பிரானுர் இனிது கூறினர். எந்தை கந்தவேள் இளநகை கொண்டு "தந்தையே! ஓமெழுத்தின் உட்பொருளை யுணராப் பிரமன் உலகங்களைச் சிருட்டி செய்யும் வல்லவனுதல் எவ்வாறு? அங்ஙனம் அறியாதவனுக்குச் சிருட்டித் தொழிலை யெவ்வாறு கொடுக்கலாம்?" என்றனர்.

சிவபெருமான் "மைந்த! நீ அதன் பொருளைக் கூறுவாய்" என்ன, குன்றெறிந்த குமாரக்கடவுள் "அண்ணலே! எந்தப் பொருளையும் உபதேசமுறையினலன்றி உரைத்தல் தகாது. காலம் இடம் என்பன அறிந்து, முறையினுற் கழறவல்லேம்" என்றனர். அரனுர் கேட்டு "செல்வக் குமர! உண்மையே உரைத்தனை; ஞானபோத உபதேசப் பொருள் கேட்பதற்குச் சிறந்ததென்னும் மாசிமாதத்து மகநாள் இதோ வருகிறது; நீ எஞ்ஞான்றும் நீங்காது விருப்புடன மருந் தணிகைவெற்பை யடைகின்றேம்" என்று கணங்களுடன் புறப்பட்டு ஏறூர்ந்து தணிகைமாமலையைச் சார்ந்தனர். குமாரக்கடவுள் தோன்றுமை கண்டு, பிரணவப்பொருள் முதலிய உண்மையுபதேசமெல்லாம் தவத்தானும் வழிபாட்டானுமே கிடைக்கற்பாலவென்று உலகங்கண்டு தெளிந்துய்யுமாறு தவம்புரிய ஆரம்பித்தனர். ஞானசத்திதரக் கடவுளாரின் அத்தாணி மண்டபம் எனப்படூஉம் திருத்தணிமலைச் சாரலின் வடகீழ்ப்பாற் சென்று, தம் புரிசடை தூங்க, வேற்படை விமலனை உளநிறுவி ஓர் கணப்பொழுது தவம்புரிந்தனர். எல்லாம்வல்ல இறைவன் அங்ஙனம் ஒரு கணப்பொழுது தவமுஞற்றலானன்றே அத்தணிகைமலை **கணிக** வெற்பு எனப் பெயர்பெற்றதென்ப.

கண்ணுதற்கடவுள் இங்ஙனம் ஒரு கணம் தவமியற்றக் கதிர்வேலண்ணல் தோன்றலும், ஆலமுண்ட அண்ணல் எழுந்து குமரனை வணங்கி வடதிசை நோக்கி நின்று பிரணவ உபதேசம் பெறும்பொருட்டு சீடனது இலக்கணத்தை உலகிற்கு உணர்த்தும்பொருட்டு சிஷ்யபாவமாக நின்று வந்தனை வழிபாடு செய்து பிரணவோபதேசம் பெற்றனர்.

எதிருறுங் குமரனை யிருந்தவி சேற்றியங்
கதிர்கழல் வந்தனை யதனொடுங் தாழ்வயிற்
சதுர்பட வைகுபு தாவரும் பிரணவ
முதுபொருட் செறிவெலா மொழிதரக் கேட்டனன்.

—*தணிகைப் புராணம்.*

"நாத போற்றி யெனமுது தாதை கேட்க அநுபவ
ஞான வார்த்தை யருளிய பெருமாளே"

—*(ஆலமேற்ற) திருப்புகழ்.*

"நாதா குமரா நமவென் றரனார்
ஓதா வென ஓதிய தெப் பொருள்தான்" —*அநுபூதி(36)*

"தமிழ்விரக உயர்பரம சங்கரன் கும்பிடுந் தம்பிரானே."

—*(கொடியனைய) திருப்புகழ்.*

**மலைமாவு சிந்த வடிவேலெறிந்த :—**

*மலை :—கிரவுஞ்சமலை.*

## மா எறிந்த வரலாறு

மாயையின் மகனாகிய சூரபன்மன் சிவமூர்த்தியின்பால் பற்பல வரம் பெற்று உளந்தருக்கி அறநெறி பிறழ்ந்து அமரர்க்கு அலக்கண் விளைத்த ஞான்று, குமாரக்கடவுள் தேவர் சிறைதீர்ப்பான் அமர் தொடங்கி அசுரர் அனைவரையும் அட்டனர். முடிவில் சூரபன்மன் போர்க்கோலங்கொண்டு ஆயிரத்தெட்டு அண்டங்களிலுமுள்ள சேனைகளைத் திரட்டிக் கொண்டுபோர்க்களமுற்றனன். அப்பெருந்தானையைக் கண்ட பூதவெள்ளங்களும் சேனாபதிகளும் வீரபாகு ஒழிந்த ஏனைய வீரர்களும் உளநடுங்கினர், தேவர்கள் அளக்கவொணா அலக்கணையடைந்தனர். குகப்பெருமானார் அப்பெருஞ் சேனைகளையெல்லாம் அழித்தனர். முருகவேளும் சூரபன்மனும் நெடுநேரம் போர் புரிந்தனர். சூரபன்மனுடைய பற்பல ஆயுதங்களும் மாயைத் திறங்களும் ஒழிந்தன; அவுணர்கோன் முடிவில் "இக்குமரனைக் கொணர்ந்து யுத்தத்தை விளைவித்த தேவர்களை முதலில் கொன்று சிறிது சினந்தணிந்தபின் இக்குமரனோடு போர் புரிவேன்" என்று நினைத்து ஓர் மாயமங்

திரத்தைச் செபித்து உலகமுழுவதும் பெரிய இருள் சூழுமாறு செய்து, அவ்விருளில் வாளையேந்தி தேவர்களைக் கொல்லுதற் பொருட்டு விண்ணிடைப் பாய்ந்தனன். அதனைக் குறிப்பா லுணர்ந்த அரியயனுதியமரர்கள்,

"தேவர்கள் தேவே யோலம் சிறந்தசிற் பரனே யோலம்
மேவலர்க் கிடியே யோலம் வேற்படை விமலா வோலம்
பாவலர்க் கெளியா யோலம் பன்னிரு புயத்தா யோலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்"

என்று முறையிட்டனர். அம்முறையைக் கேட்டு மூவிரு முகங் கொண்டுள்ள முழுமுதற்கடவுள், சேயழுகை கேட்ட தாயைப் போல் தண்ணருள் சுரந்து, தமது திருக்கரத்தில் வைகுஞ் செங்கதிர் வேலாயுதத்தை நோக்கி, "நீ விரைந்து சென்று சூரபன்மனுடைய மாயைகளையும் ஆற்றலையும் அழித்து அவனது உடலைப்பிளந்து வருதி" என்று ஆணை தந்தனர். உடனே வேற்படையானது ஆயிரங்கோடி சூரியர்கள் ஒருங்கு கூடினுற்போலத் திகழ்ந்து அக்கினி மழையைப் பொழிந்து கொண்டு சூரன் கொண்ட இருளுருவத்தை இமைப்பொழுதி லழித்தது.

"அரியு மயனோ டபய மெனவே
அயிலை யிருள் மேல் விடுவோனே."

—(இருவர்)திருப்புகழ்.

சூரபன்மன் "முடிவில்லாத வரத்தையுடைய என்னை இவ் வேற் படை யாதுசெய்ய வல்லது? இதன் திறத்தைக் காண் கின்றனன்" என்று அண்ட முகடுகள் நடுங்கச் சிரித்து, மிகுந்த சீற்றங்கொண்டு, "சமுத்திரம், பூதலம், பிரமாதி தேவர்களது உலகங்கள் உயிர்கள் முதலிய அனைத்தையும் இப்பொழுதே யழிப்பன்" என்று விரைந்து சென்று கடல் நடுவில், நெருப்புப்போலுந் தளிர்களும், புகைபோன்ற இலை களும், மேகக்கூட்டங்கள் போன்ற கிளைகளும், மரகதக் கற் கள் போன்ற பிஞ்சுகளும், மாணிக்கத்தையொத்த பழங்களுங் கொண்டு பிரமாண்டச் சுவர்வரையிலும் வேரோடி, இலக்க யோசனை தூர மளவும் விசாலித்த தலைகீழான மாமரவடிவங் கொண்டு, சகல லோகங்களையும் நடுநடுங்க மோதினன்.

வன்னியி னலங்கல் கான்று வான்றழை புகையினல்கிப்
பொன்னென விணர்க ளீன்று மரகதம் புரையக் காய்த்துச்
செந்நிற மணிகளென்னத் தீம்பழங் கொண்டு கார்போற்
றுன்னுபல் கவடுபோக்கிச் சூதமா யவுண னின்றான்.

அஷ்டநாகங்களும் திக்கஜங்களும் சந்திர சூரியரும் எல் லாவுயிர்களும் அஞ்சி ஓலமிட்டன. அந்த மாமரம் சிறிது

அசைந்தபொழுது எல்லா வுலகங்களும் அசைந்தன; குலகிரிகள் பொடிபட்டன; உலகத்தைத் தாங்கும் கூர்மமும் ஆதிசேடனும் புரண்டனர். நட்சத்திரங்கள் உதிர்ந்தன. அண்டங்களெல்லாந் தகர்ந்தன நாரணனுலகும் நான்முகனுலகும் அழிந்தன. தேவர்களெல்லாம் வெருவி கயிலையை நாடி இரிந்தனர். அக்கால் அறுமுகப் பெருமான் விடுத்த அயிற்படை, ஆயிரங்கோடி யண்டத்து அக்கினியும் ஒன்று சேர்ந்தாற் போல் பேரனல் வடிவு தாங்கிச் சென்று,

தேயுவி னெடுத்த வண்டத் திறங்களும் பிறங்கு ஞாலத்
தாயிரகோடி யண்டத் தங்கியு மொன்றிற் றென்ன
மீயுயர்ந் தொழுகி யான்றோர் வெருவருந் தோற்றங் கொண்டு
நாயகன் றனது தெய்வப் படைக்கல நடந்த தன்றே.

மூதண்ட முகடுவரை வளர்ந்தோங்கி கிளைகளையசைத்து உலகங்களை யெல்லாம் அசைத்தழிக்கின்ற மாமரத்தை இரு கூறுகப் பிளந்தது.

விடம்பிடித் தமலன் செங்கண் வெங்கன லுறுத்திப் பாணி
யிடம்பிடித் திட்ட தீயிற் றோய்த்துமுன் னியற்றி யன்ன
வுடம்பிடித் தெய்வ மிவ்வா றுருகெழு செலவி னேகி
மடம்பிடித் திட்ட வெஞ்சூர் மாமுதல் தடிந்த தன்றே.

"கவடு கோத் தெழும் உவரி மாத்திறல்
காய் வேல் பாடேன்" —திருப்புகழ்.

## கருத்துரை

இறைவராகிய சிவபெருமான் வழிபாடு செய்த ஞான சொரூபியே! கிரவுஞ்ச மலையும் மாமரமும் அழியும்படி வேலாயுதத்தை விடுத்த அதிதீரரே! அடியார்களது இன்னல்களை அகற்றுபவரே! செந்திலாண்டவனே! ஜீவான்மாவின் துன்பம் நீங்குமாறு பரமான்மாவாகிய தேவரீரது திருமார்பிலணிந்துள்ள மலர்மாலையைத் தந்து ரக்ஷித்தருள வரமாட்டீரோ?

## 6

அங்கை மென்குழ லாய்வார் போலே
சந்தி நின்றய லோடே போவா
ரன்பு கொண்டிட நீரோ போறீ ரறியீரோ
அன்று வந்தொரு நாள்நீர் போனீர்
பின்பு கண்டறி யோநா மீதே
அன்று மின்றுமொர் போதோ போகா துயில்வாரா

எங்க ளந்தரம் வேறு ரோர்வார்
பண்டு தந்தது போதா தோமே
லின்று தந்துற வோதா னிதே    னிதுபோதா
திங்கு நின்றதென் வீடே வாரீ
ரென்றி ணங்கிகள் மாயா லீலா
இன்ப சிங்கியில் வீணே வீழா    தருள்வாயே
மங்கு லின்புறு வானாய் வானூ
டன்ற ரும்பிய காலாய் நீள்கால்
மண்டு றும்புகை நீறு வீறு    எரிதீயாய்
வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்
அம்ப ரம்புனை பாராய் பாரேழ்
மண்ட லம்புகழ் நீயாய் நானாய்    மலரோனாய்
உங்கள் சங்கரர் தாமாய் நாமார்
அண்ட பந்திகள் தாமாய் வானாய்
ஒன் றி னுங்கடை தோயா மாயோன் மருகோனே
ஒண்த டம்பொழில் நீடூர் கோடூர்
**செந்தி லமபதி** வாழ்வே வாழ்வோர்
உண்ட நெஞ்சறி தேனே வானோர்    பெருமாளே.

## பதவுரை

மங்குல் இன்புறு வானாய்=மேகமானது இன்புற்று சஞ்சரிக்கும் ஆகாய பூதமாகியும், வானூடு அன்று அரும்பிய காலாய்=அவ்வாகாயத்தில் அந்நாளில் தோன்றிய வாயுபூதமாகியும், நீள்கால் மண்டுறும் புகை நீறு வீறு எரிதீயாய்=பெருங்காற்றுடன் நெருங்கி புகையுடனெழுந்து யாவற்றையும் நீறுக்கும் வன்மையுடைய அக்கினி பூதமாகியும், வந்து இரைந்து எழும் நீராய்=ஒலித்து எழுந்துவரும் அப்பு பூதமாகியும், நீர் சூழ் அம்பரம் புனை பாராய்=தண்ணீரைத் தனக்கு ஆடையாகப் புனைந்துள்ள பிருதிவி பூதமாகியும், பார் ஏழ் மண்டலம் புகழ் நீயாய்=நிலம் முதலிய ஏழுலகங்களும் புகழும் குகக்கடவுளாகிய தாங்களாகவும், நானாய்=அடியேனாகவும், மலரோனாய்=பிரம்மதேவராகியும், உங்கள் சங்கரர் தாமாய்=உமது பிதாவாகிய சிவபெருமானாகவும், நாம் ஆர் அண்ட பந்திகள் தாம் ஆய்வானாய்=எத்துணையவோ என்று அச்சத்தை விளைவிக்கக்கூடியஎண்ணில்லாத அண்ட கோடிகளை ஆராய்பவராகியும், ஒன்றிலும் கடை தோயா=முடிவில் ஒன்றிலும் கலப்பில்லாதவருமாகிய, மாயோன்=மாயவன் என்னும் திருமா

லினது, மருகோனே = மருகரே! ஒண்தடம் பொழில் நீடு ஊர் = ஒளிபெற்றதும் விசாலமுடையதுமாகியும் மலர்ச்சோலைகள் சூழ்ந்த புராதன தலமாகிய, கோடு ஊர் = சங்குகள் தவழும், செந்திலம்பதி வாழ்வே = திருச்செந்தூர் என்னும் க்ஷேத்திரத்தின் வாழ்வையுடைய வரே!, வாழ்வோர் உண்ட நெஞ்சு அறி தேனே = அத்தலத்தில் வாழ்ப வர்கள் பருகிய உள்ளத்தில் தித்தித்தறிந்து கொள்ளும் ஆனந்தத் தேனே!, வானோர் பெருமாளே = தேவர்களுக்கெல்லாம் பெருமானாக வீற்றிருப்பவரே!, அம் கை மென்குழல் ஆய்வார் போலே = அழகிய கரத்தால் மென்மையாகிய அளகபாரக் கூந்தலை சிக்கெடுப்பவர்களைப் போல், சந்தி நின்று = பல தெருக்கூடுமிடத்தில் நின்று, அயலோடே போவார் = அயலிடத்திற்கெனச் செல்லுவோர்கள், அன்புகொண்டிட = தங்கள்மீது அன்புகொள்ளும்படி, நீரோ போறீர் = நீங்களா போகின்றீர்கள்?, அறியீரோ = நான் நிற்பதை அறியவில்லைபோலும்?, அன்று வந்து ஒருநாள் போனீர் = அன்றைத் தினம்ஒருநாள் இவ்விடம் வந்து போனீர், நாம் பின்புகண்டு அறியோம் = நாம் பின்னர் ஒருவரை யொருவர் பார்த்து அறியவேயில்லை, ஈதே = உம்முடைய அன்பு இதுவோ? அன்றும் இன்றும் ஓர் போதோ போகா = தாங்கள் என்னிடம் வந்துபோன அன்று தொடங்கி இன்றுவரை ஒரு பொழுதே போகிற தில்லை, துயில் வாரா = இரவில் தூக்கமே வருவதில்லை, எங்கள் அந்தரம் வேறு ஆர் ஓர்வார் = எமது இரகசியத்தைத்தாங்களைத்தவிரவேறுயார் தான் ஆராயவல்லவர்? பண்டு தந்தது போதாதோ = முன்பு கொடுத்தீரே அதுவே போதாதோ? மேல் இன்று தந்து உறவோ தான் = இனி மேல் இன்றைக்கு வேறு பொருள் கொடுத்துத்தான் உறவாட வேண்டு மென்பதில்லை, ஈதேன் இது போதாது = இது என்ன தாங்கள் இப்படி வந்து தெரிசனம் கொடுத்தீரே இது போதாதோ? இங்கு நின்றது என் = நடுவீதியாகிய இங்கு நின்றிருப்பது எதற்கு? வீடே வாரீர் = வீட்டிற்கு வாருங்கள், என்று இணங்கிகள் மாயா லீலா = என்று இவ்வாறு இணக்கமாகப்பேசி (பொருள் பறிக்கும்) மாயா லீலையுடைய, இன்ப சிங்கியில் = விலைமகளிரது இன்பமாகிய குளிர்ந்து கொல்லும் விஷக்குழியில், வீணே வீழாது = வீணே விழுந்து உழலாவண்ணம், அருள்வாயே = அருள் புரிந்து காப்பாற்றவேண்டும்.

## பொழிப்புரை

மேகங்கள் இன்புற்றுலவும் ஆகாய பூதமாகியும், அவ்வாகாயத்தில் அந்நாளில் தோன்றிய வாயுபூதமாகியும், பெருங் காற்றுடன் நெருங்கியெழும் புகையுடன் கூடி யாவற்றையும் நீறுக்கும் வலியுடைய அக்கினி பூதமாகியும், ஒலித்தெழுந்துவரும் அப்பு பூதமாகியும், நீரை ஆடையாகவுடைய பிருதிவி பூதமாகியும், நிலம் முதலாக (சத்திய உலகம் ஈறாகவுள்ள) ஏழுலகங்களும் புகழும் தேவரீராகியும், அடியேனாகி

யும், பிரமதேவராகியும், உமது பிதாவாகிய சிவமூர்த்தியாகியும், எத்துணையவோ என அச்சத்தை விளைவிக்கும் அண்டகோடிகளை ஆராய்பவராகியும், முடிவில் ஒன்றிலும் தோயாத மாயவஞ்கிய திருமாலினது மருகரே! ஒளி பெற்றதும் விசாலமுடையதுமாகிய சோலைகளால் சூழப்பெற்ற புராதனதலமும், சங்குகள் தவழப் பெற்றதுமாகிய திருச்செந்திலம்பதியில் வாழ்கின்றவரே! அத்தலத்தில் வாழ்வோர்கள் பருகிய நெஞ்சத்தில் தித்திக்கும் ஆனந்தத்தேனே! தேவர் பெருமாளே! அழகிய கரத்தினால் மெல்லிய கூந்தலை ஆராய்பவரைப் போல் பல தெருக்கூடுமிடத்தில் நின்று அயலில் செல்லும் ஆடவர் தம்மீது அன்பு கொள்ளுமாறு நீங்களா போகிறீர்? என்னைப் பார்க்கவில்லை போலும்? அன்று ஒரு நாள் வந்து போனீர். பின்பு உம்மைக் காணவேயில்லை. உமது அன்பு இதுவோ? நீர் வந்துபோன அன்று முதல் இன்றுவரை பொழுதே போகிறதில்லை. இரவில் தூக்கமும் வருவதில்லை. உம்மைத் தவிர எமது உள்ளக்கிடக்கையை ஆராயவல்லவர் யாவர்? முன்பு கொடுத்தது போதாதோ? இனிமேல் இன்று புதிதாகக் கொடுத்து உறவாட வேண்டுமோ? வேண்டியதில்லை. என்ன இது; நீர் இங்கு வந்து தெரிசனந் தந்தீரே இது போதாதோ? இங்கு நிற்பது எதற்கு? வீட்டிற்கு வாருங்கள் என்று இணக்கமாகப் பேசி (அழைத்துக்கொண்டு போய்) மாய லீலைகளைப் புரியும் இன்பம்போல் குளிர்ந்து கொல்லும் விலைமாதரது நச்சுக் குழியில் அவமே வீழ்ந்தழியாவண்ணம் அருள் புரிவீர்.

## விரிவுரை

**அங்கை மென்குழல்......என்றிணங்கிகள் :—**

நடு வீதியில் நின்று அவ்வீதிவழியே செல்லும் இளைஞர்களை வலிந்தழைத்து பல இனிய வார்த்தைகளைக் கூறி, கண் வலைவீசி, தமது நடையுடைகளால் மயக்கி, மனமுடனே பொருளையும் ஆவியையும் பறிமுதல் புரியும் விலைமகளிரது சாகசங்களை எடுத்துக்கூறி, அதனிடத்து மயங்காவண்ணம் விழிப்பையுண்டுபண்ணுகிறார். சிவஞானந் தலைப்படுமாறு பக்திநெறி சென்று முத்திநிலையடைய விழைவார்க்கு முதற்படி மாதராசையை நீக்குவதேயாம். முதலில் விலைமகளிரை வெறுத்து இல்லறத்திருந்து பின்னர் அதனையும் வெறுத்து நிராசையை மேற்கொள்ள வேண்டும்.

"எங்கேனு மொருவர்வர அங்கேக ணினிதுகொடு
இங்கேவ ருனதுமயல் தரியாரென்
றிந்தாவெ னினியஇதழ் தந்தேனை யுறமருவ
என்றுசை குழையவிழி யிணையாடி

தங்காம லவருடைய வுண்டான பொருளுயிர்கள்
சந்தேக மறவெபறி கொளுமானுர்
சங்கீத கலவிநல மென்ருேது முததிவிட
தண்பாரு முனதருளை யருள்வாயே."
—திருப்புகழ்.

சந்தி—என்பதற்கு மாலைநேரம் என்றும் பொருள்கொள்ளலாம்.
சிங்கி—குளிர்ந்து கொல்லும் நஞ்சு.

மங்குலின்புறு......மாயோன் :—

விஷ்ணு என்ருல் வியாபகன் என்று பொருளாதலின் பஞ்ச பூதங்களாகியும் விளங்குகின்றனர். சங்கரர் தாமாய், முருகனுய், என்பதன் பொருள்: நாராயணர் சிவனடியாரா தலால் சிவ சாருப்யமும் விஷ்ணுவுக்கு உளதாதலால் சிவ மூர்த்தியாகவும் விளங்குகிருர் என்றனர். நாராயணர் திரு நீறு தரித்து உருத்திராக்கமணிந்து சிவ வழிபாடு செய்கின்ற சிவனடியாரில் முதன்மையானவர். அங்ஙனஞ் சிவபெருமானை வழிபட்ட ஆலயங்கள் இன்றைக்கும் ஆங்காங்கு விளங்கு கின்றன.

உண்டநெஞ்சறி தேனே :—

பத்திநெறி சென்று தினந்தோறும் இறைவனை மன மொழி மெய் என்ற மூன்று கரணங்களாலும் வழிபட்டு, இறைவனது திருவருட் பெருமையை நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்து, கண்ணீர் மல்கி, உரை தடுமாறி உரோ மஞ் சிலிர்ப்ப ஒழியா ஆர்வத்துடன் அன்பு செய்வார்க்கே அப்பெருமானுடைய தியானனந்தம் இனிக்கும். அவ்வாறு வழிபடத்தெரியாத அபாக்கியவான்களுக்கு அம்மதுரம் இனிப் பது யாங்ஙனம்? அன்பு நெறி நின்று ஆண்டவனை வழிபடு வார்க்கு அவ்வானந்தத்தேன் நினைக்குந்தோறும் பேசுந்தோ றும் காணுந்தோறும் மற்று எக்காலத்தும் இன்பத்தை வழங் கும். இதனை மணிவாசகனுர் தமிழ்மறை தெரிவிக்குமாறு காண்க.

தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணுதே
நினைத்தொறுங் காண்தொறும் பேசுந்தோறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.

இறைவனைத் தேனே என்று பரிந்தழைக்கும் ஆன்ருேர் அமுத வாக்குகளையும் உற்று நோக்குக.

"திருவே என் செல்வமே தேனே வானோர் செழுஞ் சுடரே"—அப்பர்.

"சேவின் மேல்வருஞ் செல்வனைச் சிவனைத்
தேவதேவனைத் தித்திக்குந் தேனை" —சுந்தரர்.

## கருத்துரை

பஞ்சபூத சொரூபியாயும் யாவையுமாயும் விளங்கும் திருமாலினது மருகரே! செந்திலதிப! உண்ட நெஞ்சற்தேனே! தேவர் பெருமானே! விலைமகளிரது மாயாலீலையிற் சிக்கி வீணே அழியாமல் நின் திருவருளால் அடியேனைக் காத்தருளல் வேண்டும்.

## 7

சங்கைதா னொன்றுதா னின்றியே நெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்
சந்தொடே குங்குமா லங்க்ருதா டம்பரா
சம்ப்ரமா னந்தமாயன்
மங்கைமார் கொங்கைசே ரங்கமோ கங்களால்
வம்பிலே துன்புருமே
வண்குகா நின்சொரூ பம்ப்ரகா சங்கொடே
வந்துநீ அன்பிலாள்வாய்
கங்கைசூ டும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா
கம்பியா திந்த்ரலோ கங்கள்கா வென்றவா
கண்டலே சன்சொல்வீரா
செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர் பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா
செங்கண்மால் பங்கஜா னன்தொழா னந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே.

## பதவுரை

கங்கை சூடும் பிரான் = கங்கை நதியைச் சடையில் தரித்தருளிய சிவபெருமானுடைய, மைந்தனே = திருக்குமாரரே! அந்தனே = அழகின் மிக்கவரே!, கந்தனே = கந்தப் பெருமானே!, விஞ்சைஊரா = ஞான நூல்களையே உறைவிடமாகக் கொண்டவரே!, கம்பியாது = (சூராதி யவுணர்களது கொடுமையால்) நடுங்காவண்ணம், இந்த்ர லோகங்கள் = தேவர்கோமானுலகமாகிய அமராவதி முதலிய தேவ லோகங்களை, கா என்ற = காப்பாற்றவேண்டுமென்று முறையிட்ட,

ஆகண்டல ஈசன் சொல் வீரா = அமரர் கோமானுகிய இந்திரன் புகழ்கின்ற வீரரே!, செம் கை வேல் = சிவந்த கரத்தில் வீற்றிருப்பதும், வென்றி வேல்கொண்டு = வெற்றியை யுடையதுமாகிய வேலாயுதத்தைக்கொண்டு, சூர் பொன்ற = சூரபுன்மன் அழிய(ஏ = அசை),சென்று மோதும் = போர்க்களத்திற் சென்று தாக்கி யமர்புரிந்த, ப்ரதாபா = கீர்த்தியின் மிக்கவரே !, செங்கண்மால் = (தாமரை மலரையொத்த) சிவந்த கண்களையுடைய திருமாலும், பங்கஜானன் = தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவனும், தொழு ஆனந்த வேள் = (பக்தியுடன் பரவி) வணங்கும் ஆனந்த சொரூபியாகிய முருகவேளே !, செந்தில்வாழ் = திருச்செந்திலில் வாழுகின்ற,தம்பிரானே = எப்பொருட்கு மிறைவரே! சங்கைதான் ஒன்றுதான் இன்றியே = எண்ணல் அளவை ஒன்றுமின்றி அளவில்லாமலே, நெஞ்சிலே = மனத்திலே, சஞ்சல ஆரம்ப மாயன் = விலைமகளிரை யடையவேண்டுமென்ற கவலை ஆரம்பமாகி மாயையுடையவனும், சந்தொடு (ஏ = பிரிநிலை) குங்கும அலங்க்ருத ஆடம்பர சம்ப்ரம ஆனந்த மாயன் = சந்தனம் குங்குமப்பூ முதலிய வாசனைப் பொருள்களையணிந்து (இரத்தினுபரணங்களாலும், ஆடைகளாலும்) அலங்கரித்துக்கொண்டு இடம்பமாகவும் சம்ப்ரமாகவும் உலாவி இன்புறும் மாயையில் மூழ்கியவனுமாகிய அடியேன், மங்கைமார் கொங்கை சேர் அங்க மோகங்களால் = மகளிரது தனபாரங்களுடைய சரீரத்தின் மீதுள்ள ஆசைப்பெருக்கம், அதனிடத்துள்ள மயக்க முதலியவைகளால், வம்பிலே துன்புறுமே = வீணுக துன்பத்தையடையாமல், வண் குகா = வள்ளற்றன்மையுடைய குகப்பெருமானே !, நின் சொரூபம் ப்ரகாசங்கொடு = (ஏ = அசை) தேவரீரது அருட்பெருஞ் சோதி வீசும் திருக்கோலத்துடன், வந்து நீ அன்பில் ஆள்வாய் = தாங்கள் அடியேனிடம் வந்து அன்பினுல் ஆட்கொண்டருள வேண்டும்.

## பொழிப்புரை

உலகங்கள் அழிந்துபோகா வண்ணம் மிகப் பெருகிவந்த கங்கா நதியை தமது சடாமுடியிற் சூடிக்கொண்ட கருணைக் கடலாங் கண்ணுதற்பெருமானது திருக்குமாரரே! அழகிற் சிறந்தவரே! கந்தப்பெருமானே! ஞான நூல்களை உறைவிடமாகக் கொண்டவரே! இந்திரலோகங்கள் (சூரபன்மனுல்) நடுங்காவண்ணம் தந்தருள வேண்டுமென்று முறையிட்ட தேவர் கோமானுல் புகழப்பட்டவரே! சிவந்த (தாமரையனைய) கரத்தில் வீற்றிருக்கும் வெற்றியையுடைய வேலாயுதத்தைக் கொண்டு போர்க்களஞ் சென்று சூரபன்மன் அழியுமாறு தாக்கிய கீர்த்தியின் மிக்கவரே! தாமரை மலரையொத்த கண்களையுடைய நாராயணமூர்த்தியும், தாமரையில் வசிக்கும் நான்முகனும் பக்தியுடன் வழிபட்டு வணங்கும் ஆனந்த சொரூபி

யாகிய அறுமுகவேளே! செந்திமா நகரத்தில் எழுந்தருளியுள்ள தலைவரே! (விலைமகளிரது மோகத்தாலுண்டாகிய, அளவில்லாத பலவகையாகிய சஞ்சலமானது மனத்திலே முளைக்க ஆரம்பித்த மாயைக்குட்பட்டவனும், சந்தனம் குங்குமப்பூ முதலிய வாசனைகளையணிந்து, (ஆடை ஆபரணங்களால்) அலங்கரித்துக்கொண்டு ஆடம்பரமாகவும் சம்பிரமமாகவும் திரிகின்ற மாயையின் மிக்கவனுமாகிய அடியேன், மாதர்களது தனபாரங்களோடு கூடிய சரீரத்தின் மீதுள்ள ஆசைப் பெருக்கத்தால் வீணே துன்புற்று அழியா வண்ணம், வள்ளல் தன்மையுடைய குகமூர்த்தியே! தேவரீரது அருட்பிரகாசத்தோடு கூடிய திருவுருவத்துடன் வந்து அடியேனை அன்பினுல் தடுத்தாட்கொண்டருள வேண்டும்.

## விரிவுரை

**கங்கை சூடும்பிரான் :—**

### கங்கையைத் தரித்த வரலாறு

முன்னொரு காலத்தில் உமாதேவியார், திருக்கைலாச மலையிலுள்ள சோலையிலே ஒரு விளையாட்டாக ஒன்றும் பேசாதவராய்ச் சிவபெருமானுக்குப் பின்புறத்தில் வந்து, அவருடைய இருகண்களையும் தமது திருக்கரங்களாற் பொத்தினர். அதனுல் எல்லா உயிர்களும் வருத்தமடையும்படி புவனங்கள் எங்கும் இருள் பரந்தது. சிவபெருமானுடைய திருக்கண்களினுலேயே எல்லாச் சோதியுந்தழைத்த தன்மையினுல், சூரியன் சந்திரன் அக்கினி ஆகிய இவர்களின் சுடர்களும் மற்றைத் தேவர்களின் ஒளிகளும் பிற ஒளிகளும் அழிந்து எல்லாம் இருள்மயமாயின. அம்மையார் அரனரது திருக்கண்களைப் பொத்திய அக் கணமொன்றில், உயிர்கட்கெல்லாம் எல்லையில்லாத ஊழிகாலங்களாயின. அதனை நீலகண்டப்பெருமான் நோக்கி, ஆன்மாக்களுக்குத் திருவருள் செய்யத் திருவுளங்கொண்டு, தம்முடைய நெற்றியிலே ஒரு திருக்கண்ணையுண்டாக்கி, அதனுல் அருளொடு நோக்கி, எங்கும் வியாபித்த பேரிருளை மாற்றி, சூரியன் முதலாயினோர்க்கும் சிறந்த பேரொளியை யீந்தார். புவனங்களிலுள்ள பேரிருள் முழுதும் நீங்கினமையால் ஆன்மகோடிகள் உவகை மேற்கொண்டு சிறப்புற்றன. சிவபெருமானுடைய செய்கையை உமாதேவியார் நோக்கி அச்சமெய்தி அவருடைய திருக்கண் மலர்களை மூடிய இருகர மலர்களையும் துண்ணென்று எடுத்தார். எடுக்கும் பொழுது தமது பத்துத் திருவிரல்களிலும் அச்சத்தினுலே வியர்வை தோன்ற, அதனை உமாதேவியார் நோக்கி திருக்கரங்களை யுதறினர். அவ்வியர்வை பத்துக் கங்கைகளாய் ஆயிர நூறுகோடி முகங்களைப் பொருந்திச் சமுத்திரங்கள்போல

எங்கும் பரந்தன. அவற்றை அரியரி பிரமாதி தேவர்களும் பிறருங் கண்டு, திருக்கயிலையில் எழுந்தருளிய தேவதேவன் பால் சென்று, வணங்கித் துதித்து, "எம்பெருமானே! இஃதோர் நீர்ப்பெருக்கு எங்கும் கல்லென்று ஒலித்து யாவரும் அழியும் படி அண்டங்கள் முழுவதையும் கவர்ந்தது; முன்னுளில் விடத்தையுண்டு அடியேங்களைக் காத்தருளியதுபோல் இதனை யுந் தாங்கி எங்களைக் காத்தருளுவீர்" என்று வேண்டினார்கள். மறைகளுங்காணுக் கறைமிடற்றண்ணல் அந்நதியின் வர லாற்றை அவர்களுக்குச் சொல்லி, அதனை அங்கே அழைத்து, தமது திருச் சடையிலுள்ள ஓர் உரோமத்தின் மீது விடுத் தார்.

அதனைக் கண்டு மகிழ்ந்து நான்முகனும் நாரணனும் இந் திரனும் "எம்மையாட்கொண்ட எந்தையே! இவ்வண்டங் களை யெல்லாம் விழுங்கிய கங்கை உமது அருட்சத்தியாகிய அம்பிகையாரது திருக்கரத்திற்றோன்றினமையாலும், உமது திருச்சடையிற் சேர்த்தமையாலும் நிருமலமுடையதாகும். அதில் எமது நகரந்தோறும் இருக்கும்படி சிறிது தந்தருளல் வேண்டும்" என்று வேண்டினார்கள். சிவபெருமான் திருச் சடையிற் புகுந்திருந்த கங்கையிற் சிறிதை அள்ளி அம்மூவர் களுடைய கைகளிலுங் கொடுத்தார். அவர்கள் வாங்கி மெய் யன்போடு வணங்கி, விடைபெற்றுக் கொண்டு தத்தம் நகர் களை யடைந்து அங்கே அவற்றை விடுத்தார்கள். அந்த மூன்று நதிகளுள் பிரமலோகத்தை யடைந்த கங்கை பகீரத மன்னனுடைய தவத்தினுற் பூமியில் மீண்டும் வர, சிவபெரு மான் பின்னும் அதனைத் திருமுடிமேல் தாங்கி, பின் இந்த நிலவுலகிற் செல்லும்படி விடுத்தார். அந்நதி சகரர்கள் அனை வரும் மேற்கதி பெற்றுய்யும்படி அவர்கள் எலும்பிற் பாய்ந்து சமுத்திரத்திற் பெருகியது. இதனையொழிந்த மற்றை இரு நதிகளும் தாம் புகுந்த இடங்களில் இருந்தன. தமது அருட் சத்தியாகிய உமையம்மையாருடைய திருக்கரத்திற்றோன்றிய கங்காநதி உலகங்களை யழிக்காவண்ணம் திருவருண் மேலீட் டால் சிவபெருமான் அதனைத் திருமுடியில் தரித்த வரலாறு இதுவேயாம்.

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன்சடையிற் பாயுமது என்னேடீ
சலமுகத்தால் அவன்சடையிற் பாய்ந்திலளேல் தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ.

—திருவாசகம்.

பங்கஜானன்—பங்கஜாசனன், சகரங்குறைந்து இடைக் குறையாயிற்று.

**ஆனந்தவேள் :—**

முருகப்பெருமான் ஆனந்தமூர்த்தியாம். இதனை "ஆனந் தம் பரஹ்ம" எனும் யஜுர்வேத தைத்திரியோபநிடத ஆனந்த வல்லி வசனத்தாலும், "கந்தசுவாமி சிவபெருமானது தோளின் மீது ஏறியிருந்தனர்; அஞ்ஞான்று சிவபெருமான் அளவற்ற ஆனந்தசொரூபியாயினும் தம்முடைய உத்தம புத்திரராம் ஆனந்தசாகரத்தினது திருமேனி பரிசித்தலாய அளப்பறு மமிர்தநீரில் அமிழ்வாராயினர்" எனும் பொருளைத் தரும் முதல் வன் புராண சம்பவ காண்டத்து 34-ம் அத்தியாயத்து 4, 5ஆம் சுலோகங்களானுமறிக.

"ஆனந்த வத்துவின் கழல் வாழ்த்தி வணங்குவாம்"

என்ற ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் திருவாக்கையும் உய்த்துணர்க. இதனாலன்றோ முருகப்பெருமானது திருவருள் பெறுதார்க்கு ஆனந்தமில்லையென்பது ஆன்றோர் கொள்கை.

## கருத்துரை

கங்கையைத் தரித்த கண்ணுதற் கடவுளது திருக்குமாரரே! கந்தமூர்த்தியே! கலை விநோதரே! இந்திரனால் துதிக்கப் பெற்றவரே! வெற்றிவேலைக்கொண்டு சூரனையழித்த பெருங் கீர்த்தியையுடையவரே! அரியயனால் தொழப்பட்ட ஆனந்த மூர்த்தியே! செந்திலாதிப! சஞ்சலமனமுடையவனாகி வாசனைப் பொருள்களையணிந்து ஆடம்பரமாகத் திரிகின்ற மாயை யுடையவனாகிய அடியேன், விலைமகளிர் வலைப்பட்டு அழியா வண்ணம் தேவரீர் தமது திருவருட்பிரகாசத் திருமேனியுடன் வந்து காத்தருள்வீர்.

## 8

தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையுந்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்
தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்

கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களும்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்
கண்களுமு கங்களுஞ் சந்திரநி றங்களுங்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ

புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது
பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும்வ ளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூரக்
கொண்டநட னம்பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே
கொங்கைகுற மங்கையின் சந்தமண முண்டிடுங்
கும்பமுனி கும்பிடுந் தம்பிரானே.

## பதவுரை

புண்டரிகர் அண்டமும்=தாமரைமலர் மேல் வீற்றிருக்கும் பிரம தேவருடைய அண்டமும், கொண்ட பகிர் அண்டமும்=அப்பிரமாண்டத்தைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டுள்ள வெளியண்டமும், பொங்கி எழ=கொதிப்புற்று எழுமாறு, வெம்களம் கொண்ட போது=வெம்மையான போர்க்களத்தை யடைந்தபொழுது, பொன் கிரி என அம் சிறந்து=பொன்மலை போல் மிகவும் அழகிற் சிறந்து, எங்கினும் வளர்ந்து=அகிலாண்டங்களுந் திருமேனியில் அடங்குமாறு விசுவரூபமெடுத்துக்கொண்டு, புண்டரிகர் தந்தையும்=(மூவுலகங்களை ஈரடியாலளக்கும் பொருட்டு விசுவரூபமெடுத்த) பிரம்மதேவரது தந்தையாகிய திருமாலும், சிந்தைகூர=உள்ளம் உவகையுறுமாறு, முன்கொண்ட நடனம் பதம்=முன்னாளில் தேவரீர் நடித்தருளிய திருவடிகளினால், செந்திலிலும்=திருச்செந்தூரிலும், என்றன்முன்=அடியேன்முன், கொஞ்சி நடனங் கொளும்=கொஞ்சிப் பேசி நடனஞ் செய்து அருள் புரிந்த, கந்தவேளே=கந்தப் பெருமானே! கொங்கை குறமங்கையின்=ஞானமாகிய தனங்களையுடைய வள்ளியம்மையாரது திருமேனியில் திகழும், சந்த மணம் உண்டிடும்=சந்தனத்தின் வாசனையை முகப்பவரும், கும்பமுனி கும்பிடும்=அகத்திய முனிவரால் வணங்கப்படுபவருமாகிய, தம்பிரானே=தனிப்பெருந் தலைவரே!, தண்டை=தண்டையும், அணிவெண்டையம்=அழகிய வீரவெண்டையும், கிண்கிணி=கிண்கிணியும், சதங்கையும்=சதங்கையும், தண் கழல்=குளிர்ந்த ஒளியையுடைய வீரக்கழலும், சிலம்புடன்=சிலம்பும், கொஞ்ச=இனிது ஒலிக்க, நின் தந்தையினை முன்பரிந்து=தேவரீரது தந்தையாராகிய சிவபெருமானது திருமுன்பாக அன்புகொண்டு, இன்பவுரிகொண்டு=இனிய பவுரிக்கூத்தாடலையாடி, நன்சந்தொடஅணைந்து நின்ற=நல்ல மகிழ்ச்சியடைந்து நின்ற, அன்புபோல=அந்த சிறந்த அன்பினைப்போலே, கண்டுஉற=அடியேனுங் கண்டு மகிழ்ச்சியடையுமாறு, கடம்புடன்=கடப்பமலர்மாலையும், சந்த மகுடங்

களும்=அழகிய மணி முடிகளும், கஞ்சமலர் செம் கையும்=தாமரை மலர் போன்ற சிவந்த திருக்கரங்களும், சிந்துவேலும்=ஒளிவீசும் வேலாயுதமும், கண்களும்=கருணைபொழியுங் கண்களும், முகங்களும் =ஆறு திருமுகங்களும், சந்திர நிறங்களும்=சந்திரனை யொத்த ஒளி களும், கண்குளிர=அடியேனுடைய கண்கள் குளிருமாறு, என்றன் முன் சந்தியாவோ=அடியேன்முன் தோன்றி யருள் புரியாவோ?

## பொழிப்புரை

தாமரை மலர்மீது வாழும் பிரம தேவரது அண்டமும் அதனைச் சூழ்ந்துள்ள வெளியண்டமும் கொதிப்புற்று விலக வெம்மையான போர்க்களத்தை யடைந்தபோது, பொன்மேரு கிரிபோல்மிகவும்அழகாக எல்லா அண்டங்களுந்திருமேனியில் அடங்குமாறு விசுவரூபங் கொண்டு,பிரமதேவருடைய தந்தை யாகிய திருமால், தாம்முன் மூவுலகங்களை ஈரடியால் அளக்கும் பொருட்டு எடுத்த திரிவிக்ரம வடிவம் இதற்கு இணையாகா தென்று எண்ணி மகிழ்ச்சியடைய, முன்னாளில் தேவரீர்நடித் தருளிய திருவடிகளினால், திருச்செந்தூரிலும் அடியேன் முன் கொஞ்சிப்பேசி திருநடனஞ் செய்தருளிய கந்தக் கடவுளே! ஞானமாகிய தனங்களையுடைய வள்ளியம்மையாருடைய திரு மேனியிலணிந்துள்ளசந்தனமணத்தை முகப்பவரே! அகத்திய முனிவர் வணங்கும் தனிப் பெருந்தலைவரே! தண்டையும், அழ கிய வெண்டையமும், கிண்கிணியும், சதங்கையும், இனிய ஒலி யுடைய வீரக்கழலும், சிலம்பும் இனிது ஒலிக்க, தேவரீரது பிதாவாகிய சிவபெருமானது திருமுன் அன்பாக இனிய நட னம் புரிந்து மிக்க மகிழ்ச்சியடைந்து நின்ற அன்புபோலே, அடியேனும் அத்திருநடனத்தைக்கண்டு மகிழ்ச்சி யடையு மாறு, கடப்பமலர் மாலையும், அழகிய மணி மகுடங்களும், தாமரை மலர் போன்ற சிவந்த திருக்கரங்களும், ஒளிவீசும் வேலாயுதமும், கருணைபொழிகின்ற திருக்கண்களும், ஆறு திருமுகங்களும், சந்திர கிரணம் போன்ற குளிர்ந்த ஒளியும் அடியேனுடைய கண்கள் குளிரத்தோன்றி அருள்புரியாவோ!

## விரிவுரை

**தண்டை :—**

தண்டை யென்பது வீரர்கள் அணியும் ஒரு ஆபரணம். முருகப் பெருமானுடைய திருவடியில் சிறந்த இரத்தினத் தண்டை விளங்கும். அது மிக்க அழகாகத் திகழும். அத் தண்டை இனிய ஒலியை உண்டாக்கும். அத்தண்டையார்க் குந் திருவடியைத் தாரகன் அளப்பருந் தவம் புரிந்தோ னுதலின் கண்டான்.

முழுமதி யன்னஆறு முகங்களு முந்நான் காகும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின்சீரும்
அழகிய கரமீராறும் அணிமணித் தண்டையார்க்கும்
செழுமல ரடியுங் கண்டான் அவன்தவம் செப்பற்பாற்றே.

—*கந்தபுராணம்.*

"சிந்திக்கிலேன் நின்று சேவிக்கிலேன் தண்டைச் சிற்றடியை
வந்திக்கிலேன்" —*கந்தரலங்காரம். (60)*

**வெண்டையம் :—**

*வெண்டையம் என்பது, திருவடியில் அணியும் ஓர் ஆபரணம். அது இனிது ஒலிக்கும். பெருமான் திருநடனஞ் செய்யும்போது அத் திருவாபரணம் நன்கு முழங்கும்.*

"காலின்கழ லோசையு நூபுர
வார்வெண்டைய வோசையு மேயுக
காலங்களி னோசையதாநட மிடுவோனே"

—*(மூலங்கிள) திருப்புகழ்.*

**கிண்கிணி :—**

*கிண்கிணி என்பது இடையில் கட்டும் திருவாபரணம். அது முருகப் பெருமானுடைய திருவரையில் மிகவும் இனிய நாதத்தை யுண்டாக்கும். அவ்வோசை பதினாலு உலகமும் கேட்கும்.*

"மண்கமழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியும் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரிசிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதினா லுலகமுங் கேட்டதுவே.

—*கந்தரலங்காரம். (93)*

"குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீச"

—*(அந்தகன்) திருப்புகழ்.*

"செஞ்சர ணநதகீத கிண்கிணி நீபமாலை
திண்டிறல் வேல்மயூர முகமாறும்"

—*(வஞ்சக) திருப்புகழ்*

**சதங்கை :—**

*சதங்கை திருவடியிலும், இடையிலும் அணியும் பொன்னும் மணியும் சேர்ந்த ஆபரணம். முருகவேள் அணிந்திருக்கும் சதங்கை நான்கு வேதங்களின் கீதங்களை ஒலிக்கும்.*

"மறைசதுர் விதந்தெரிந்து வகைசிறு சதங்கைகொஞ்ச
மலரடி வணங்க என்று பெறுவேனோ"— (அனைவரு) திருப்புகழ்.

**தண்கழல் :—**

கழல் என்பது வீரர்கள் பாதத்தில் அணியுஞ் சிறந்த அணிகலமாகும். எந்தை கந்தவேளுடைய திருவடியில் விளங்கும் வீரக்கழலின் இனிய ஒலியைக்கேட்க இனிய யாழில் வல்லவளாகிய வாணிதேவி வந்து பொருந்துவள்.

"மதுரவாணியுற்ற கழலோனே" —(எதிரிலாத) திருப்புகழ்.

**சிலம்பு :—**

வீரர்களும், கற்புடைய மாதர்களும் அணியும் ஒரு நல்ல கலன். கண்ணகியின் காற்சிலம்பு காரணமாக விளைந்த விளைவு உலகறிந்தது. கற்புடைய மாதர் பாதத்தில் தண்டை சிலம்பு முதலிய ஆபரணங்களை யணிவதன் காரணம் யாதெனின் அவ்வாபரணங்களின் ஒலியைக் கேட்டு ஆடவர் விலகி நிற்கும் பொருட்டாகும்.

இங்கே முருகவேள் திருவடியில் விளங்கும் சிலம்பு ஞானமயமானது. அது பரவிந்து எனப்படும். எப்போதும் அடியார் அல்லல்கள் அகல அது இனிய நாதத்தைத் தரும்.

"இனியநாத சிலம்பு புலம்பிடும்
அருணஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்"
—(கமலமாதுட) திருப்புகழ்.

**தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டு நன் சந்தொட மணைந்து நின்றன்பு போல :—**

முருகவேள் தன் தந்தையாராகிய சிவபிரானது திருமுன் மிக்க அன்புடன் திருநடனம் புரிவர். அக்குழந்தையின் திருநடனத்தைக்கண்டு பிறைசூடிய பெருமான் பெரிதும் மகிழுவர். "அதுபோன்ற நடனத்தை அடியேனுக்கும் காட்டியருள்வாய்" என்று வேலவனை வேண்டுகின்றனர்.

உலகங்களெல்லாம் அசைந்து உய்வுபெறும் பொருட்டு ஞானப் பெருவெளியில் அநவரதத் தாண்டவஞ் செய்யும் "நடன சபாபதி களிக்க அவர்முன் குழந்தைக் குமரவேள் திருநடனம் புரிவர். "பாம்புக்கால் பாம்பறியும்" என்றபடி நடனத்தின் நுட்ப திட்பங்களை நடராஜர்தானே அறிவர்.

**சிந்து வேலும் :—**

வேல்-வெல் என்ற முதனிலை நீண்ட தொழிற்பெயர். எல்லாவற்றையும் வெல்லுவது அறிவேயாகும். அறிவு ஒளிமயமானது. ஆதலின் ஒளியை வீசும் வேலாயுதம் என்றனர்.

**கண்குளிர என்றன்முன் சந்தியாவோ :—**

"இறைவனே! தேவரீரது திருத்தந்தையார் திருமுன் நடித்தருளியதுபோல் அடியேனது கண்கள் குளிர உமது திரு நடன கோலந்தோன்றியருள வேண்டும்" என்று அடிகள் அறுமுகவள்ளலை வேண்டுகின்றனர்.

**புண்டரிக ரண்டமும் கொண்டபகிரண்டமும் பொங்கியெழ :—**

சூரபன்மனது போர்க்களத்தின்வெம்மையால் பிரமாண்டமும் அந்தச் சூழ்ந்துள்ள பகிரண்டமும் கொதிப்புற்று இடருற்றன.

**எங்கினும் வளர்ந்து :—**

சூரபன்மனுக்கு வேற்பெருமான் விசுவரூபம் காட்டியருளிய போது எல்லாம் தன்னுள் அடங்க எங்குமாய் நின்றனர்.

## முருகவேள் திருப்பெருவடிவம் (விஸ்வரூபம்)

சூரபன்மனது துணைவர்களும் சேனைகளும் அழிந்தனர். சூரபன்மன் மலையாகவும், கடலாகவும், நெருப்பாகவும், காற்றாகவும், இருளாகவும், தானவராகவும், வானவராகவும் இவ்வண்ணம் பல்வேறு வடிவங்களைத் தாங்கிப் பெரும்போர் புரிந்தனன். கந்தவேள் அவ்வடிவங்களை எல்லாம் கணைகளினுலழித்தனர். தன்மாய வடிவங்கள் மாய, சூரபன்மன் சிறிது தளர்வெய்தினன். தளர்வுற்றபொழுது ஞானத்தைப் போதிக்க வேண்டும். தனஞ்சயன் தளர்ந்தபோது கண்ணன் கீதையை உபதேசித்தனரன்றோ? அளவற்ற தவஞ்செய்த சூரபன்மனுக்குத் தனது திருப்பெரு வடிவத்தைக் காட்டியருள எம்பெருமான் திருவுளங்கொண்டனர்.

> கூறிமற் றினைய தன்மை குரைகட லுலகந் திக்கு
> மாறிலாப் புவன மண்டம் வானவ ருயிர்கள் யாவும்
> ஆறுமா முகத்து வள்ளல் மேனியில் அமைந்த தன்றி
> வேறிலை யென்ன ஆங்கோர் வியன்பெரு வடிவங் கொண்டான்.

## திருப்பெருவடிவில் எல்லாம் அடங்கின

உள்ளடியில் எல்லா மலைகளும் திருவடியின் முற்பாகத்தில் கடல்கள் யாவும் திருவடியின் விரல்களில் இடியும், நட்சத்திரங்களும், கிரகங்களும்; அழகிய பரடுகளில் வருணனும் குபேரனும் நிருதியும் இராக்கதரும் அடங்கினார்கள்.

கணைக்காலில் முனிவர்களும், தெய்வமணிகளும்; முழந்தாளில் வித்யாதரர் முதலியோரும்; தொடையில் இந்திரனும், இந்திரகுமாரன் சயந்தனும்; தொடைமூலத்தில் இயமனும், காலனும்; அரையின் முற்பக்கத்தில் அசுரர்களும்; விலாப்பக்கத்தில் தேவர்கள் யாவரும் அடங்கினார்கள்.

மூலாதாரத்தில்-நாகர்களும்; கோசத்தின் நுனியில்-அமிர்தமும்; உந்தியில்-உயிர்களும்; மார்பில்-எல்லாக் கலைகளும்; முப்புரிநூலில்-ஞானமும்; நுனிமயிரில்-அண்டங்களும்; உள்ளங்கையில் - சகல போகப் பொருள்களும்; தோள்களில்-திருமாலும் பிரமனும் அடங்கினார்கள்.

கைவிரல்களில்-தெய்வப் பெண்களும்; கண்டத்தில்-நாதமும் அக்கினியும்; வாயில்-வேதங்களும்; பல்லில்-எழுத்துக்களும்; நாவில்-ஆகமங்களும்; இதழில்-ஏழுகோடி மந்திரங்களும்; நாசியில்-வாயுவும் அடங்கினார்கள்.

திருக்கண்களில்-சந்திரனும் சூரியனும்; செவியில்-திசைகளில் உள்ள நூறு உருத்திரர்களும்; நெற்றியில்-குடிலையும் (ஓங்காரம்) சென்னியில் சிவபெருமானும் அடங்கினார்கள்.

இறுதியு முதலுமில்லா இப்பெரு வடிவந் தன்னை
கறைவிட முறழுஞ் சூரன் கண்டுவிம் மிதத்தில் நிற்ப
அறிவரும் உணர்தல் தேற்ற ஆறுமா முகத்து வள்ளல்
சிறிதுநல் லுணர்ச்சி நல்க இனையனசெப்ப லுற்றான்.

கோலமா மஞ்ஞைதன்னில் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாள் பரிசிவை உணர்ந்திலேன்யான்
மாலயன் றனக்குமேனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகாரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றோ?

அண்டர்கள் முனிவர் ஏனோர் அகிலமுங் காட்டி யண்ணல்
கொண்டிடு படிவமுற்றுங் குறித்தியார் தெரிதற்பாலார்
எண்டரு விழிகள் யாக்கை யெங்கணும் படைத்தோர்க் கேனும்
கண்டிட வநந்த கோடி கற்பமுங் கடக்குமன்றே.

சீர்க்கும ரேசன்கொண்ட திருப்பெரு வடிவந்தன்னில்
ஏர்க்குறும் ஒளியுஞ்சீரும் இளமையும் எழிலும் எல்லாம்
ஆர்க்குள உலகில் அம்மா! அற்புதத் தோடும் பல்கால்
பார்க்கினும் தெவிட்டிற் றில்லை இன்னுமென் பார்வை தானும்.

**புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூர:—**

மாவலிபால் மூவடிகேட்டு, திருவிக்ரமவடிவங்கொண்டு ஈரடியால் மூவுலகங்களையும் திருமால் அளந்தனர். அவர் இத்

திருப்பெரு வடிவத்தை நோக்கி, தான் கொண்ட பெருவடிவம் முருகவேள் திருப்பெருவடிவத்தில் ஒரு சிறு அணு போல் அடங்கியிருப்பதைக் கண்டு அற்புதமும் அன்புங் கொண்டனர்.

**கொண்ட நடனம் பதம் :—**

திருமுருகன் அத்திருப்பெருவடிவங் கொண்டு நடித்தருளினர்.

**செந்திலிலும் என்றன்முன் கொஞ்சி நடனங்கொளும் கந்தவேளே:—**

அருணகிரிநாத சுவாமிகள் திருச்செந்தூரைத் தெரிசிக்க விரும்பிச் சென்றனர் அவர்சென்ற சமயம் மாசிமாதம்; திருச்செந்தூரில் பிரம்மோத்சவம். ஏழாந்திருநாள். ஆறுமுக சுவாமி சிறந்த அணிகலன்களுடன் மலர்மாலைகள் புனைந்து நீலக்கடலில் சிவந்த ஞாயிறு உதயமாகும்போது, அருட் கடலிலிருந்து எழுந்து வருவதுபோல் விலாமிச்சம்வேர் விமானத்தில் எழுந்தருளிவருகின்றனர். கண்கொள்ளாக் காட்சி. பல்லாயிரம் அன்பர்கள் திரண்டு, விண்ணருவி யென்னக்கண்ணருவிபெய்து சேவிக்கின்றனர். "ஹரஹர சுப்ரமண்யோம்" "முருகா! முருகா! வேல்! வேல்!" என்ற ஒலிகள் விண்ணைப் பிளக்கின்றன. கள்ளமில்லாத அடியவர் உள்ளம் உருகி வள்ளல் பெருமானது புகழை கனியமுத மன்ன பாடல்களால் இனிய இசையுடன் பாடுகின்றனர். ஆடுகின்றனர். அன்று மாலையில் தங்கச்சப்பரத்தில் பெருமான் எழுந்தருளி பவனி வருகின்றனர்.

இந்த அற்புதக் காட்சிகளை அருணையடிகள் கண்டு தேனுண்ட வண்டுபோல் மகிழ்ந்தனர். "முருகா! என்னே உன் திருவோலக்கச் சிறப்பு? இரு கண்கள் போதுமா? எண்ணில்லாத கண்கள் இல்லையே! எந்தாய்! இத்துணைத் திருவாபரணங்களைப் புனைந்து காணக்காணத் தெவிட்டாத காட்சியுடன் விளங்குகின்றனையே. இப்படியே சிறிது நடித்தருளும். உமது திரு நடனங் காண விழைகின்றேன். கருணை புரியும்" என்று வேண்டினர். ஆறுமுகக் கடவுள் அருணகிரிநாதரைப் பின்புறம் வரச்செய்து, பின்புறத்தில் திரு நடனம் புரிந்து நடனக் காட்சியைத் தந்து அருள் புரிந்தனர். பெருமானின் நடன அலங்காரத்தை ஏழாம் திருவிழா தங்கச் சப்பரத்தில் எழுந்தருளும்போது பின்புறத்தில் இன்றும் தெரிசிக்கலாம்.

முன்னே சூரபன்மனுக்குத் திருப்பெருவடிவங்காட்டி நடித்த திருவடிகள் இப்போது திருச்செந்தூரிலும் நடித்தருளியது. "செந்திலிலும்" என்ற எச்சவும்மையால் சிதம்பரத்

திலும், கொடுங்குன்றத்திலும் தனக்குக் காட்டிய திருநடனத்தைக் குறித்தனர்.

**சந்தமண முண்டிடும் :—**

குறமகளாகிய வள்ளிபிராட்டியின் திருமேனியில் அணிந்துள்ள சந்தனத்தின் நறுமணத்தை முருகவேள் முகக்கின்றனர். ஏன்? சந்தனம் பிறப்பது பொதியமலையில். எனவே, சந்தனத்தில் தமிழின் இனிய குளிர்ந்த மணம் உண்டு. தமிழ்க் கடவுளாகிய முருகன் அத்தமிழ்ச் சந்தனத்தின் நறுமணத்தை நுகர்கின்றனர்.

**கும்பமுனி கும்பிடுந் தம்பிரானே :—**

தமிழ் முனியாகிய அகத்தியர் வணங்குந் தனிப்பெருந் தலைவர் முருகர்.

## கருத்துரை

திருப்பெருவடிவங்கொண்டு நடித்த திருவடிகளின் நடனத்தைச் செந்திலிலும் காட்டியருளிய கந்தவேளே! தேவரீரது அழகிய திருவுருவம் எனது கண்குளிரத் தோன்ற வேண்டும்.

## 9

அந்தகன் வருந்தினம் பிறகிடச்
சந்ததமும் வந்துகண் டரிவையர்க்
கன்புருகு சங்கதந் தவிரமுக் குணமாள

அந்திபக லென்றிரண் டையுமொழித்
திந்திரிய சஞ்சலங் களையறுத்
தம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடிச்

செந்திலை யுணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனை யறிந்தறிந் தறிவினிற்
சென்று செரு குந்தடந் தெளிதரத் தணியாத

சிந்தையு மவிழ்ந் தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ

கொந்தவிழ் சரண் சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெற அரக் கருமாளக்
குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்
தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான
சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந் தொழுஞ் சரவணப் பெருமாளே.

## பதவுரை

கொந்து அவிழ்சரண் = பூங்கொத்துக்கள் மலர்ந்துள்ள தேவரீரது திருவடிகளே, சரண் சரண் என = அடைக்கலம் அடைக்கலம் என்று சொல்லி அபயம் புகுந்து, கும்பிடு புரந்தரன் = வணக்கம் புரிந்த இந்திரன், பதிபெற = தனது பொன்னுலகத்தைப்பெற்று இன்புறவும், குஞ்சரி குயம் புயம் பெற = தேவயானையால் வளர்க்கப்பட்ட தேவயானையம்மையாரது தனங்கள் தேவரீரது புயாசலங்களைப் பெறவும், அரக்கர் (உம்-அசை) மாள = இராக்கதர்கள் அழிவெய்தவும், குன்று இடிய = கிரௌஞ்சமலை தூள்பட்டு இடியவும், அம் பொனின் திருவரை கிண்கிணி = அழகியதும் பொன்னுலாகியதுமாகிய திருவரையிலுள்ள சதங்கையானது, கிணின் கிணின் கிணின் என = கிணின் கிணின் என்று இனிமையாகச் சப்திக்கவும், இளம் குழைகளில் = இளமையான செவிகளில், குண்டலம் அசைந்து பிரபைவீச = குண்டலமாகிய காதணிகள் மெல்ல அசைந்து ஒளிசெய்யவும், செம் சிறு சதங்கை = பாதத்தில் அணிந்துள்ள அழகிய சிறு சதங்கைகள், தந்தனம் தனம் தனம் தன என கொஞ்சிட = தந்தனம் தனம் தனம் தன என்று மிகுந்த இனிமையாகக் கொஞ்சி ஓசையைச் செய்யவும், மணித்தண்டைகள் = இரத்னமணிகளால் செய்துள்ள தண்டைகளானது, கலின் கலின் கலின் என = கலின் கலின் கலின் என்று ஒலிக்கவும், திருவான = சர்வ மங்களங்களுக்கும் உறைவிடமான மகாலட்சுமியாகிய, சங்கரி = சுகத்தைக் கொடுப்பவளாகிய பார்வதியம்மையார், மனங் குழைந்து = அன்பின் மிகுதியால் மனங்குழைந்து, உருக முத்தந்தர = உள்ளம் உருகி முத்தங்கொடுக்கவும், வரும் செழுந்தளர்நடை =

மெல்ல அசைந்து அசைந்து வருகின்ற அழகிய தளர்நடையுடைய, சந்ததி=இளங்குமரனே, சகம் தொழும்=உலகமெல்லாம் கைகூப்பி வந்தனம் புரிகின்ற, சரவண=சரவண தடாகத்தில் உய்யும்பொருட்டு வெளிப்பட்ட, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே, அந்தகன் வரும் தினம் பிறகிட=அடியேனுடைய உயிர்ப்பற்ற கூற்றுவன் வருகின்ற நாளில் புறங்கொடுத்து ஓடவும், சந்ததமும் வந்து கண்டு= சதாகாலமும் விலைமகளிர் வீதியில்வந்து அவர்களது அழகைப்பார்த்து, அரிவையர்க்கு=அந்த பொது மாதர்களிடத்திலே, அன்பு உருக= அன்பு வைத்து மனம் உருகுகின்ற, சங்கதம் தவிர=நட்பானது நீங்கவும், முக்குணம் மாள=சத்துவம் இராசசம் தாமசம் என்ற மூன்று குணங்களும் மாண்டுபோகவும், அந்திபகல் என்ற இரண்டையும்ஒழித்து = மறப்பு நினைப்பு (கேவல சகலம்) என்கிற இரண்டு அவஸ்தைகளையும் அடியோடு ஒழித்து, இந்திரிய சஞ்சலங்களை அறுத்து=மெய் வாய் கண் நாசி செவி என்ற ஐம்பொறிகளால் உண்டாகிற துன்பங்களை அடியோடு நீக்கி, அம்புய பதங்களின் பெருமையை கவிபாடி=தாமரை மலரையொத்த தேவரீரது திருவடிகளின் பெருமைகளை அமைத்து பாமாலைகளைப்பாடி, செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வு உற=திருச்செந்திலம்பதியில் தேவரீர் எழுந்தருளியிருக்கின்ற தத்துவத்தையும் செந்திற்பதியின் உட்கருத்துக்களையும் ஓங்காரவடிவமாக ஆலயம் அமைந்திருக்கின்ற திறத்தையும் மெய்யறிவால் உணர்ந்து அம்மெய்யறிவு நிறைவடையவும், கந்தனை அறிந்து அறிந்து=கந்தனாகிய நினது சொரூபலக்ஷணத்தையும் தடஸ்த லட்சணத்தையும் அறிந்து, அறிவினில் சென்று செருகும் தடம் தெளிதர= அந்த அறிவின் வழியிலே சென்று உண்மைப் பொருளைச் சேருகின்ற முத்திநெறி இன்னதென்று தெளிவடையவும், தணியாத சிந்தையும் அவிழ்ந்து அவிழ்ந்து=சாந்தியையடையாத(கல்போன்ற) மனமானது நெகிழ்ந் தன்மையயடைந்து, உரையொழித்து=சொல்லற நின்று, என் செயல் அழிந்து அழிந்து அழிய=என் செயலால் எல்லாம் நடைபெறுகிறதென்ற தற்போதமானது அடியோடு அழியவும்,மெய்சிந்தை வர=உண்மையறிவானது உண்டாகவும், என்று=எந்த நாளில், நின் தெரிசனைப்படுவேனோ=தேவரீரது திவ்ய தெரிசனம் கிடைக்கப் பெறுவேனோ?

## பொழிப்புரை

பூங்கொத்துக்கள் மலர்கின்ற தேவரீரது திருவடியில் அடைக்கலம் அடைக்கலம் என்றுகூறி அபயம் புகுந்துவணங்கிய தேவேந்திரன் தனது பொன்னுலகத்தைப் பெற்று இன்பத்தை யடையவும் ஐராவதத்தால் வளர்க்கப்பெற்ற தேவயானையம்மையாரது தனங்கள் நினது புயாசலங்களைப் பெறவும், அரக்கர்கள் மாளவும், கிரௌஞ்ச வெற்பு தூள்பட்டு

இடியவும் அழகியதும் பொன்னுலாகியதுமாகிய நினது திருவரையிற் கட்டியுள்ள சதங்கைகள் கிணின் கிணின் கிணின் என்று இனிய ஒலியைச் செய்யவும், இளஞ் செவிகளில் குண்டலங்கள் மெல்ல அசைந்து ஒளி வீசவும், திருவடியில் அணிந்துள்ள அழகிய சிறு சதங்கைகள் தந்தனம் தனம் தனம் தன என்று இனிமையாகக் கொஞ்சி சப்திக்கவும், இரத்னமணிகளாகிய தண்டைகள் கலின் கலின் கலின் என்று ஒலிக்கவும், சர்வமங்களங்களுக்கும் உறைவிடமானவரும், சுகத்தைக் கொடுப்பவருமாகிய உமாதேவியார் அன்பின்மிகுதியால் மனமானது குழைந்து உருகி முத்தங் கொடுக்கவும் மெல்ல வருகின்ற அழகிய (இளம் பருவத்தின்) தளர்நடையுடைய புதல்வரே! உலகெலாம் வழிபட்டு வணங்குகின்ற சரவணேற்பவரே! பெருமையிற் சிறந்தவரே! அடியேனது ஆவியைப் பற்றுவதற்காக வருகின்ற நாளில் இயமன் பிறகிட்டு ஓடவும், தினந்தோறும் பொதுமகளிர் இடத்திற்சென்று அவர்களது புற அழகைக்கண்டு அதில் ஈடுபட்டு அன்புகொண்டு மனம் உருகி அவர்களிடத்திற் பொருந்துகின்ற சினேகமானது நீங்கவும், சத்துவம், இராஜஸம், தாமஸம் என்ற முக்குணங்களும் இறந்துபடவும், நினைப்பு மறப்பு என்ற இரண்டையும் ஒழித்து, ஐம்பொறிகளால் உண்டாகிற துன்பங்களை நீக்கி, தேவரீரது, திருவடிகளின் பெருமைகளை அமைத்து பாமாலைகளைப் பாடி தாம் எழுந்தருளியுள்ள திருச்செந்தூரின் தத்துவத்தையும் அது கடற்கரையில் அமைந்திருப்பதன் காரணத்தையும் பிரணவாகாரமாக ஆங்கு ஆலயம் அமைந்திருக்கின்ற நிலையையும் உணர்ந்து மெய்யுணர்வடையவும், கந்தனுகிய தேவரீரை உள்ளபடி அறிந்து அறிவு மார்க்கத்தில் சென்று உண்மைப் பொருளைச் சேருகின்ற முத்திநெறி இதுவே என்று தெளிவுறவும், தணிதலையடையாத எனது மனமாகிய கல்லானது உருகி நெகிழ்ச்சியடைந்து உரையற்று என் செயலால் எல்லாம் நிகழுகிறதென்ற தற்போதம் அறவே அழிந்து உண்மை ஞானம் வரவும் தேவரீரது அருள் வடிவின் திவ்ய தெரிசனையை அடியேன் என்று பெறுவேன்?

## விரிவுரை

**அந்தகன் வருந்தினம் பிறகிட :—**

குமாரக் கடவுளது தெரிசனைப்பட்டவர்களைக் கண்டால் இயமன் பிறகிட்டு ஓடுவன்; இதனை,

> "மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
> விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து
> மதலையொரு குதலையடி நாயேனையாள இனன் வந்திடாயோ"
> —(உறவின் முறை) திருப்புகழ்.

குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந் துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுகம் ஆறுங் கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென் செயுமே.

—கந்தரலங்காரம். (87)

இயமன் தனது தூதுவர்களைப் பார்த்து சிவமூர்த்தியை நினைந்து வணங்கி "தூதர்களே! சிவபெருமானுடைய அடியார்களைக் கண்டால் நீங்கள் பயபக்தியுடன் வணங்கி எவ்வளவு தூரமாகச் செல்ல முடியுமோ அவ்வளவு தூரம் அகன்று செல்லுங்கள்" என்று கூறுகின்றனன். மார்க்கண்டேயரைப் பற்றச் சென்று உதையுண்டதை மறப்பனோ?

தொழுது நமனுந்தன் தூதுவர்க்குச் சொல்லும்
வழுவில்சீர்க் காளத்தி மன்னன்—பழுதிலாப்
பத்தர்களைக் கண்டாற் பணிந்தகலப் போமின்கள்
எத்தனையுஞ் சேய்த்தாக என்று. —பதினோராந் திருமுறை.

**சந்ததமும் வந்து—...சங்கதந்தவிர:—**

தினந்தோறும் பெண்களுடைய அழகைக்கண்டு மனமுருகி அவர்களது நட்பில் ஈடுபடுகின்ற அவத் தொழிலை யறவே ஒழிக்கவேண்டும். இதனாலன்றோ இராமலிங்க அடிகள் "மருவுபெண்ணாசையை மறக்கவே வேண்டும்" என்று தேற்றேகாரத்தால் இறைவனைக் குறையிரந்தனர்.

**முக்குணம் மாள :—**

இறைவனுடைய அருட்குணத்தில் திளைத்து சிவயோகத்தில் வீற்றிருப்பார்க்கு முக்குணமும் நாசமடையும்.

"நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந்தேன் இறந்தே விட்ட திவ்வுடம்பே"

—அலங்காரம்.(19)

**அந்தி பகல் என்றிரண்டையு மொழித்து:—**

அந்தி—மறப்பு, பகல்—நினைப்பு, (கேவல சகலம்). நினைப்பும் மறப்பும் அற்றார்க்கே இறைவனது தெரிசனம் உண்டாகும். நினைப்பு மறப்பு நீங்கப்பெறுதல் அவசியம். இதனை அருணகிரிநாதர் பலவிடங்களில் கூறியுள்ளார்.

"அந்திபகலற்ற நினைவு அருள்வாயே"—(ஐங்கரனை) திருப்புகழ்.

"இதமகிதம் விட்டுருகி இரவுபகலற்ற விடம்
எனதென விருக்கைபுரி யோகப் புராதனனும்"—திருவகுப்பு.(12)

"பரமானந்தத்தே தேங்கார் நினைப்பு மறப்பு மறார்"—அலங்காரம். (55)
"இராப்பகலற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே"— " (74)
"கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசந் தரவென் றிசைவாய்" —அநுபூதி.(21)

பிற ஆன்றோர்கள் வாக்குகளையும் நோக்குக.

"நினைப்பு மறப்பு மிலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமல னிருக்கும்" —திருமந்திரம்.

"இரவுபக லில்லா இன்ப வெளியூடே
விரவி விரவிநின் றுந்தீபற" —திருவுந்தியார்.

"கங்குல்பக லறநின்ற எல்லையுள தெது" —தாயுமானூர்.

**இந்திரிய சஞ்சலங்களையறுத்து :—**

நினைப்பும் மறப்பும் அற்றவர்க்குப் பொறிபுலன்களாலுண்டாகும் துன்பங்கள் தானே நீங்கும். தூங்கியோன் கைப் பொருள் தானே வீழ்வதுபோல் என்றுணர்க.

"இந்த்ரிய தாப சபலமற வந்து நின்கழல் பெறுவேனோ"
—(ஓலமறைகள்) திருப்புகழ்.

**அம்புயப் பதங்களின் பெருமையைக் கவிபாடி:—**

இறைவனுடைய திருவடிக்கமலங்களின் பெருமையை அமைத்துக் கவி பாடுதல் நினைப்பும் மறப்பும் நீங்குதற்கு சாதனமாம். அத்திருவடியின் பெருமையை அருணகிரியார் பின்வருமாறு கூறியுள்ளார்.

"ஆலமுண்டகோன் அகண்டலோக முண்டமால் விரிஞ்சன்
ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்தாள்"
—(தோலெலும்பு) திருப்புகழ்.

"வீடுஞ் சுரர் மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே" —அநுபூதி. (44)

"வேதாமுதல் விண்ணவர் சூடுமலர்ப் பாதா" —அநுபூதி. (36)

**செந்திலை யுணர்ந்து உணர்ந்து:—**

அலைகள் வந்து ஒய்வடைகின்ற இடமாதலால் செந்திலுக்கு அலைவாய் என்று மற்றொரு பேருமுண்டு. நினைப்பு மறப்புகளாகிய அலைகள் வலியற்று அவனது திருவடியில் வந்து ஒடுங்க கடற்கரையில் எம்பெருமான் உறைகின்றனன்.

"பிறவிக் கடலில் வீழ்ந்தோரை எனது திருவடியாகிய ஓடத்தால் முத்திக்கரை சேர்ப்பதற்காகக் கடற்கரையில் யான் வசிக்கின்றனன்" என்ற குறிப்பைக் காட்டுதற்காகவே முருகன் திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளான்.

"யாதுநிலை யற்றலையும் ஏழுபிற விக்கடலை
ஏறவிடுநற் கருணை ஓடக்காரனும்" —திருவகுப்பு. (4)

"சுவர்க்கலோக மீகாம சமஸ்தலோக பூபால
தொடுத்தநீப வேல்வீர வயலூரா" —(அனித்த)திருப்புகழ்.

தூண்டுகை விநாயகர் ஆலயத்திலிருந்து புறப்பட்டு ஆனந்த விலாசஞ் சென்று வதனாரம்ப தீர்த்தஞ் சென்று ஷண்முக விலாசத்தின் வழியே சென்று சுவாமி தரிசனஞ் செய்து திரும்பினால் அப் பிராகாரம் பிரணவாகாரமாக அமைந்திருக்கும் தன்மை கண்கூடு. முருக தலங்களுள் செந்திலம்பதி தலைசிறந்தது. சுவாதிஷ்டான க்ஷேத்திரம். அளக்கற்கரும் பெருமையுடைத்து. இத் தெய்வீக தலத்தை அருணகிரியார் பிறபாடல்களில் கூறியவாறுங் காண்க.

"செந்திலென் றவிழவுள முருகிவரும் அன்பிலன்"
—கொடியனைய (திருப்புகழ்.)

"சங்கங் கஞ்சங் கயல் சூழ்தட
மெங்கெங்கும் பொங்க மகாபுநி
தந்தங்குஞ் செந்திலில் வாழ்வுயர் பெருமாளே"
—(வஞ்சங்கொண்) திருப்புகழ்.

"கயிலைமலையனைய செந்திற் பதிவாழ்வே"
—இயலிசை(திருப்புகழ்.

"திருச்செந்திலை யுரைத்துய்ந்திட அறியாரே"
—(தரிக்குங்கலை) திருப்புகழ்.

**கந்தனையறிந்து அறிந்து:—**

கந்தப்பெருமானுடைய சொரூப லட்சணத்தையும், தடஸ்த லட்சணத்தையும் அறிந்து.

**அறிவினிற் சென்று :—**

ஞானமார்க்கத்திற் செல்லுதல் வேண்டும். அங்ஙனம் சென்றால் உண்மைப் பொருளை நிச்சயமாக அடையலாம். தணியாத சிந்தை அப்போதுதான் சாந்தியை யடைந்து நெகிழும். சொல்லற்ற நிருவிகற்ப சமாதி கைகூடும்.

**என்செயல் அழிந்து :—**

எல்லாம் சிவன் செயலென உணர்ந்து, தன் செயலால் நடைபெறுகிறதென்ற தற்போதத்தை அறவே ஒழித்து தன் வசமற்று பரவசமுற்றுறைதல் வேண்டும்.

நஞ்செய லற்றிந்த நாமற் றபின் ஞுதன்
தன்செயல் தானே யென் றுந்தீபற
தன்னையே தந்தா னென் றுந்தீபற. —திருவுந்தியார்.

**தெரிசனைப் படுவேனோ ?:—**

முருகப்பெருமானுடைய தெரிசனையுண்டாயின் அந்தகன் பிறகிடுதலும், அரிவையர்க்கு அன்புருகு சங்கதந் தவிர்தலும், முக்குண மொழிதலும், அந்திபக லழிதலும், இந்திரிய சஞ்சலங்களறுதலும், அம்புயப்பதங்களின் பெருமையைக் கவிபாடுதலும், செந்திலையுணர்தலும், கந்தனையறிதலும், அறிவினிற்சென்று தெளிதலும், தணியாத சிந்தையவிழ்தலும் உரை யொழிதலும் தன் செயலழிதலும்.மெய்ச்சிந்தை யடைதலும் உண்டாகும்.

**சரண் சரண் சரணெனக் கும்பிடு புரந்தரன் பதிபெற :—**

சிவபெருமான்பால் வரம் பெற்றுத் தருக்கிய சூரபன்மனுடைய கொடுமைக்கு அஞ்சி இந்திரன் பத்தினியுடன் மேருகிரியின் ஓர்சார் குகைக்குள் ஒளிந்திருந்தனன். அக்கால் சூரபன்மன் பானுகோபனை ஏவி இந்திரலோகத்தை தீவாய்ப் படுத்தி இந்திரன் மகனாகிய சயந்தனையும் தேவர்களையும் தேவமாதர்களையும் சிறைப்படுத்தினன். இந்திரன் தனது உலகத்தையும் மகனையும் இழந்து பல யுகங்களாக வருந்தி இனி உய்வுபெறுங்காலமு முண்டோ? என ஏங்கி சிறகற்ற பறவைபோல் தளர்ந்த மனமுடையவனாய் எந்தைகந்தவேளிடமெய்தி "அமரர் பயந்தவிர்க்குங் குமரநாயக! மூவர் முதல்வ! வேற்படை விமல! நின் திருவடியே சரணம்; உன்னையொழிய ஒருவரையும் நம்புகிலேன்; புகலிடம் வேறில்லை; தஞ்சம் தஞ்சம்; எளியேனைக் காத்தல் நின்கடன்" என்று கதறி முறையிட்டனன். வேண்டுவோர் வினைப்பகையறுத்து வேண்டிய போகங்களை நல்கும் வேலாயுதக்கடவுள் சூராதியவுணர்களைச் செற்று, இந்திரன் மகனையும் தேவமாதர்களையும் சிறைமீட்டு இந்திரனுக்குப் பொன்னுலகளித்துப் பொன்றாவாழ்வில் இருத்தினர்.

"வால குமர குக கந்த குன்றெறி
வேல மயில என வந்து கும்பிடு
வான விபுதர்பதி யிந்த்ரன் வெந்துயர் களைவோனே"
—(ஓலமறை.) திருப்புகழ்.

**திருவரைக்கிண்கிணி கிணின் கிணின் கிணின் என :—**

என்றுமகலாத இளமைக்காரனாகிய குழந்தை வேலனது இடையிலணிந்துள்ள சதங்கையின் ஓசை பதினாலுலகங்களுங் கேட்டது. அதன் இன்னோசையால் உலகங்களெல்லாம் மகிழ்ந்தன. இதனை அருணகிரிநாதர் உரைக்குமாறு காண்க.

மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசை யந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதினாலுலகமுங் கேட்டதுவே.

—அலங்காரம். (93)

**மணித் தண்டைகள் கலின் கலின் கலினென :—**

இணையற்ற வீரர்களது பாதத்தில் வீரகண்டாமணி கட்டுவது மரபு, முருகவேள் அதிபராக்ரம வீரராதலால் இரத்தின மணிகள் பதித்த வீரகண்டாமணிகளும் தண்டைகளும் அவருடைய திருவடிகளில் மிளிர்கின்றன.

"………அணிமணித் தண்டையார்க்கும்
செழுமலரடியுங் கண்டான் அவன்தவம் செப்பற்பாற்றோ"

—கந்தபுராணம்.

"கழலொலி தண்டையுங் காலு மொக்கவந்து
வரமெனக் கருள்கூர்வாய்"— (தமரகுரங்களும்) திருப்புகழ்.

"இனியநாத சிலம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்"

—(கமலமாதுட) திருப்புகழ்.

"இசைத்திடுஞ் சந்தபேத மொலித்திடுந் தண்டை சூழும்
இணைப்பதம் புண்டரீகம் அருள்வாயே"

—(வரைத்தடங்) திருப்புகழ்.

**சகந்தொழுஞ் சரவணப பெருமாளே :—**

மொழியுஞ் சமயமனைத்துக்கும் முதல்வனாதலால் முருகப்பெருமானை உலகமெலாம் வணங்குகின்றன. யாவர் எத்தெய்வத்தை வணங்கினும் அவ் வணக்கம் முருகனையே சாரும்.

"நவலோகமுங் கைதொழு நிசதேவலங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே"— (சிவனார்) திருப்புகழ்.

**கருத்துரை**

சகமெல்லாம் தொழுகின்ற சரவணபவரே! பெருமையிற் சிறந்தவரே! கூற்றுவன் பிறகிட்டு ஓடவும், பொதுமகளிர் சிநேகம் நீங்கவும், முக்குணங்கள் ஒழியவும், செந்திலம்பதி யின் தத்துவத்தையுணர்ந்து மெய்ஞ்ஞானத்தை யடையவும், தேவரீரை யுள்ளபடி யறிந்து, முத்திநெறி இதுவே என்று தெளிவுறவும், என் மனமாகிய கல்லானது உருகி தற்போதம் அழிந்து உண்மையான அறிவு வரவும் தங்கள் தெரிசனையை அடியேன் பெறவேண்டும்.

## 10

அருணமணி மேவு பூஷித ம்ருகமத படீர லேபன
அபிநவ விசால பூரண அம்பொற் கும்பத்
தனமோதி
அளிகுலவு மாதர்லீலையின் முழுகியபி ஷேக மீதென
அறவுமுற வாடி நீடிய அங்கைக் கொங்கைக்
கிதமாகி

இருணிறைய மோதிமாலிகை சருவியுற வான வேளையி
லிழைகலைய மாத ரார்வழி யின்புற் றன்புற்
றழியாநீள்
இரவுபகல் மோக னாகியெ படியில்மடி யாமல்
யானுமுன்
இணையடிகள் பாடி வாழஎ னெஞ்சிற் செஞ்சொற்
றருவாயே

தருணமணியாட ராவணி குடிலசடி லாதி யோதிய
சதுர்மறையி னாதி யாகிய சங்கத் துங்கக்
குழையாளர்
தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரி யேயமு துண்டிட் டண்டர்க்
கருள்கூரும்

செருமுதலி மேவு மாவலி யதிமதக போல மாமலை
தெளிவினுடன் மூல மேயென முந்தச் சிந்தித்
தருள்மாயன்
திருமருக சூரன்மார்பொடு சிலையுருவவேலையேவிய
ஜெயசரவ ணாம னோகர செந்திற் கந்தப்
பெருமாளே.

## பதவுரை

தருண = இளமையையும், மணி = இரத்னமணிகளையும், ஆடு = ஆடலையும் உடைய, அரா அணி = பாம்பையணிந்துள்ள, குடில சடில ஆதி = வளைந்த சடையையுடைய ஆதிப் பொருளும், ஓதிய சதுர் மறையின் ஆதியாகிய = ஓதியுள்ள நான்கு வேதங்களின் முதற்பொருளும், சங்க துங்க குழையாளர் = தூய சங்கினாலாகிய குழையையணிந்தவருமாகிய சிவபெருமான், தரு முருக = தந்த முருகக்கடவுளே! மேக சாயலர் = நீலமேக நிறத்தினரும், தமர = ஒலியுடன் கூடிய, மகர ஆழி சூழ் புவிதனைமுழுதும் = மகரமீன்கள் வாழ்கின்ற கடல்சூழ்ந்த மண்ணுலகமெல்லாம், வாரியே அமுது உண்டிட்டு = எடுத்து அமுதம் போல் உண்டவரும், அண்டர்க்கு அருள்கூரும் = தேவர்கட்கு அருள்மிகுதியாகப் புரிபவரும், செருமுதலி = போருக்குத் தலைவரும், மேவு = விரும்பிய, மாவலி = பெரிய வலிமையையும், அதிமத கபோல = அதிக மதத்தைக் கொண்ட கன்னத்தையும் கொண்ட, மாமலை = பெரிய மலை போன்ற கஜேந்திர யானை, தெளிவினுடன் = தெளிந்த அறிவோடு, மூலமே என = ஆதிமூலப் பொருளே! என்று அழைக்க, முந்த சிந்தித்து அருள்மாயன் = முற்பட்டு கருணையுடன் நினைத்து அருள் புரிந்த திருமாலின், திருமருக = திருமருகனாரே! சூரன் மார்பொடு = சூரனுடைய மார்பும், சிலை உருவ = கிரவுஞ்ச மலையும் உருவுமாறு, வேலை ஏவிய = வேற்படையை ஏவிய, ஜெயசரவண = வெற்றியுடைய சரவணக் கடவுளே! மனோகர = மனத்திற்கு இன்பந்தருபவரே! செந்தில் கந்த = திருச்செந்தூரில் வாழுங் கடவுளே! பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! அருணமணி மேவுபூஷித = சிவந்த இரத்தினமணிகளால் அலங்கரிக்கப்பட்டதாய், ம்ருகமத = கஸ்தூரியும், படீர = சந்தனமும் சேர்ந்த, லேபன = கலவையணிந்ததாய், அபிநவ = புதுமை வாய்ந்ததாய், விசால = அகன்றதும், பூரண = நிறைந்ததும், அம்பொன்கும்ப = அழகிய பொற்குடம் போன்றதுமாகிய, தனம் மோதி = தனங்களில் மோதப்பட்டு, அளிகுலவு மாதர் லீலையின் = ஆசையுடன் குலாவுகின்ற பொதுமாதர்களின் விளையாட்டில், அபிஷேகம் ஈது என முழுகி = திருமஞ்சனம் இதுவே என்று முழுகி, அறவும்உறவு ஆடி = மிகவும் அவர்களுடன் உறவு கொண்டு, நீடிய அங்கை கொங்கைக்கு = நீண்ட அழகிய கைக்கும் தனத்துக்கும், இதம் ஆகி = இன்பம் பூண்டவனாய், இருள் நிறைஅம் ஓதி = இருள் நிறைந்த அழகியகூந்தலின், மாலிகை = பூமாலை, சருவி உறவான வேளையில் = கொஞ்சி உறவு கொள்ளும் வேளையில், இழை கலைய = ஆபரணங்களுடன் கலைய, மாதரார்வழி = பெண்களிடத்தே, இன்புற்று அன்புற்று அழியா = இன்பத்தை யடைந்தும் அன்புகொண்டும் அழிகின்றவனாகி, நீள் இரவு பகல் மோகன் ஆகியே = நீண்ட இரவு பகலும் மோகங் கொண்டவனாகி, படியில் மடியாமல் = இந்த உலகில் வீணே மாண்டு போகாமல், யானும் உன்

இணையடிகள் பாடி வாழ=அடியேனும் உமது இரு திருவடிகளைப் பாடி வாழுமாறு, என் நெஞ்சில் செஞ்சொல்=எனது உள்ளத்தில் செவ்விய சொற்களை, தருவாயே=தந்தருள்வீர்.

## பொழிப்புரை

இளமையையும் இரத்தினத்தையும் ஆடுகின்ற தன்மையையும் உடைய பாம்பையணிந்த வளைந்த சடையையுடைய முதல்வரும், ஓதிய நான்கு வேதங்களின் முதற்பொருளானவரும், சங்க வெண்குழை யணிந்தவருமாகிய சிவபெருமான் பெற்ற முருகக் கடவுளே! நீலமேக வண்ணரும் மகர மீன்கள் வாழ்கின்ற ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலக முழுவதும் வாரியுண்டவரும், அமரர்க்கு அருள்புரிகின்றவரும், போருக்கு முதல்வரும், விரும்பிய பெருவலிமையும் நிறைந்த மதம் பொழியுங் கன்னமும் உடைய மலைபோன்ற யானையாகிய கஜேந்திரன், தெளிந்த அறிவுடன் ஆதிமூலமே என்றழைத்தவுடன், முற்பட்டு கருணையுடன் நினைத்து வந்து அருள்புரிந்தவருமாகிய திருமாலின் திருமருகரே! சூரனுடைய மார்பும் கிரவுஞ்சமலையும் தொளைபடுமாறு வேலைவிடுத்தருளிய வெற்றிக் கடவுளே! சரவணபவரே! மனத்திற்கு மகிழ்ச்சியைத் தருபவரே! திருச்செந்தூரில் எழுந்தருளிய கந்த வேளே! பெருமிதம் உடையவரே! சிவந்த இரத்தின மணிகளால் அலங்கரிக்கப்பட்டதும், கஸ்தூரி சந்தனம் இவைகளின் கலவை பூசினதும், புதுமை வாய்ந்ததும், அகன்றதும், நிறைந்ததுமான அழகிய பொற்குடம் போன்ற தனங்களின் மீது மோதி, ஆசையோடு குலாவுகின்ற அம் மாதர்களது விளையாட்டில் இதுவே திருமஞ்சனம் என்று முழுகி, அவர்களுடன் மிகவும் கலந்து உறவாடி, அவர்களுடைய அங்கைக்கும் கொங்கைக்கும் இன்பம் பூண்டவனாய், இருள் நிறைந்த அழகிய கூந்தலில் உள்ள மாலை, கொஞ்சிக் குலவி உறவு கொள்ளும் வேளையில் ஆபரணங்களுடன் கலைய, மாதர்களின் வசப்பட்டும் இன்புற்று அன்புற்றும் நீண்ட இரவும் பகலும் மோகங்கொண்டவனாய் இப்பூமியில் வீணே இறந்து போகாமல், அடியேனும் தேவரீருடைய இரண்டு திருவடிகளைப் பாடி வாழுமாறு எளியேனுடைய உள்ளத்தில் இனிய சொற்களைத் தந்து ஆட்கொள்ளுவீர்.

## விரிவுரை

**அருணமணி மேவு பூஷித:—**

விலைமகளிர் தம்மை நாடிவரும் ஆடவரை மயக்கும் பொருட்டு சிவந்த இரத்தினமணிகள் பதித்த ஆபரணங்களை மார்பில் அணிந்திருப்பார்கள்.

**ம்ருகமத படீர லேபன :—**

கஸ்தூரி சந்தனம் முதலியவை கலந்துள்ள கலவைச் சாந்தினைப் பூசிக்கொண்டிருப்பர்.

**அபிநவ விசால பூரண அம்பொற் கும்பத் தனம் :—**

அப் பொதுமகளிரது தனங்கள் புதுமையும் விசாலமும் நிறைவும் உடையதாய் தங்கக் குடம் போன்று இலகி இளைஞரை மயக்கும்.

**அளிகுலவு மாதர் லீலையின்......அறவு முறவாடி :—**

ஆசையுடன் குலாவுகின்ற அப் பொதுமாதர்களின் சரச விளையாட்டில், இதுவே பெரிய அபிஷேகம் என்று கருதி அதிலேயே விடர்கள் முழுகி, இரவு பகலாக உறவாடி யுழலுவர்.

**இருணிறைய மோதி :—**

இருள் நிறை அம் ஓதி. ஓதி—பெண்களின் கூந்தல் இருண்ட கரிய குழல்.

**மோகனுகியே படியில் மடியாமல் :—**

மகளிர்மீது மோகமேற்கொண்டு சதா அந்த இருள் வழி யுழன்று அடியேன் இவ்வுலகில் இறந்து வீணுகக் கூடாது.

**இணையடிகள் பாடி வாழ :—**

முருகா ! உனது திருவடிகளைப் புகழ்ந்துபாடி இன்புற்று வாழவேண்டும். 'பாடும் பணியே பணியா அருள்வாய்'. நீ பாடுவோர்க்கு எல்லா நலன்களையும் அருளுகின்றவன். ஆதலின் உன்னையே பாடி உய்வு பெறுவேன்.

**என் நெஞ்சிற் செஞ்சொல் தருவாயே :—**

சொல் என்பது சிறந்த செல்வம். ஏனைய செல்வங்கள் எல்லாவற்றினுந் தலையாய செல்வம். அதனைச் சிலரே பெற்றனர். பொற் செல்வம் அழியும்; சொற்செல்வம் அழியாது. அநுமனைக் கண்டு இராமர் "யார்கொல் இச்சொல்லின் செல்வன்" என்று வியந்து கூறுகின்ருர். அதனைக் கூறிய கம்பரும் ஒரு சொல்லின் செல்வர்; சேக்கிழார் பெருமான் பெரிய சொற் செல்வர்.

சொல்லில் இனிமையும் தனிமையும் மிகுதியாய பொழுது அது செஞ்சொலாகின்றது. தமிழுக்கே உரிய தனிப் பெருமை

செஞ்சொல். அருணகிரியார் செந்தில் திருப்புகழில் நான்கு திசைகளைப் பற்றிக் கூற வருகின்றார். ஏனைய திசைகளை மேல் திசை கீழ்திசை வடதிசை என்று கூறினார். தென்திசையை மட்டும் பொதுவாகத் தென்திசை என்று கூறாமல் "செஞ் சொல் மாதிசை" என்று கூறினார். பெருமை மிகுந்த திசை என்றும் குறிப்பிடுவான் வேண்டி மா திசை என்றார். செஞ் சொல் என்றால் தமிழ் என்றேபொருள். "செஞ்சொல் புனை மாலை சிறந்திட" என்கின்றார் கந்தர்அநுபூதியில்.

இத்தகைய சிறந்த செஞ்சொற்றமிழை அடியேனுக்கு அருள்புரிவீர் என்று இப்பாடலில் சுவாமிகள் வேண்டுகின்றார். எல்லோரும் வெஞ்சொல்லை விடுத்து செஞ்சொல்லை யடுத்து நலம் பெறுதல் வேண்டும்.

**தருண மணி யாடராவணி:—**

சிவபெருமான் தலைமீதுள்ள நாகம் இளமையானது; இரத்தின மணியை உடையது; அழகியது. அது பெருமான் முடியில் இனிது படமெடுத்து ஆடுகின்றது. அவரும் ஆட, சடை மீது அரவமும் ஆடுகின்றது.

**குடில சடிலாதி :—**

இறைவன் ஆடுவதனால் சடையும் வளைவாக அசைந்து ஆடுகின்றது. அப்பரமபதியே எப்பொருட்குந் தலைவர் ஆதலால் ஆதி என்றனர். திருவள்ளுவரும் "ஆதிபகவன்" என்பார்.

**ஓதிய சதுர்மறையின் ஆதி :—**

அவரே வேத முதல்வருமாவார். வேதங்கள் நான்கும் அப்பரமனையே பரம்பொருள் என்று வழுத்துகின்றன.

> உமாபதயே பசுபதயே நமோ நம :
> ருதம் சத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்களம்
> ஊர்த்வ ரேதம் விருபாக்ஷம் விச்வரூபாய வைநம :
> ஸர்வோவை ருத்ரஸ் தஸ்மை ருத்ராய நமோ அஸ்து.
>
> —தைத்திரீயாருண சாகை நாராயணம்.

"உமாபதிக்கு, பசுபதிக்கு வணக்கம்; சத்தியவசனத்திற் சத்தியமாயுள்ள பரப்பிரமமும், கிருஷ்ணபிங்கல நிறமுடைய புருடனும், மேல் நோக்கிய ரேதசையுடையவனும், விசுவரூபனும் ஆகிய நெற்றிக் கண்ணனுக்கு வணக்கம்" என்பது இதன் பொருள்.

**சங்கத்துங்கக் குழையாளர் :—**

சிவபெருமான் தமது திருச் செவியில் பரிசுத்தமான சங்கிஞலாய குழையையணிந்திருக்கின்ருர். "சங்கவெண் குழையோர் காதிற் கோமாற்கே" என்று திருநாவுக்கரசு நாயஞர் கூறுகின்ருர்.

**மேகசாயலர் :—**

திருமால் மேகநிறமுடையவர். இது தட்பத்தின் சொரூபம் என்பதை உணர்த்துகின்றது. "மஞ்சு நிறம் புனைபவன்" என்று திருப்பரங்குன்றத் திருப்புகழிலும் கூறுகின்றனர். "மஞ்செனத்திரண்ட கோல மேனிய" என்கின்ருர் கம்ப நாடரும்.

**தமர மகராழி சூழ்புவிதனை முழுதும் வாரியே யமுதுண்டு :—**

ஒலியையும் மகர மீனையும் தன்னகத்தே கொண்டது கடல். அக்கடலால் சூழப்பட்டது உலகம். இவ்வுலகமுழுவதும் ஒரு கவளமாக எடுத்துத் திருமால் உண்டார். உலகமெல்லாம் பிரளய காலத்தில் அவர் திருவுதரத்துள் ஒடுங்குகின்றன.

**அண்டர்க் கருள்கூரும் :—**

நற்குண சீலர்களாகிய தேவர்கட்குத் திருமால் மிகுந்த அருள்புரிந்து ஆட்கொள்கின்றனர்; தேவசகாயர். இனி அண்டர் என்பதற்கு யாதவர் எனப் பொருள் கொண்டு யாதவர்க்கு அருள் புரிந்தார் எனினும் பொருந்தும்.

**மூலமே என...அருள்மாயன் :—**

நெடிய மடுவில் தனது காலை முதலை பற்றி இழுத்தபோது கஜேந்திரன் என்ற மதயானை தெளிந்த அறிவுடன் "ஆதி மூலம்" என்ற அழைத்தது. அக் குரலைக் கேட்ட அரவணைச் செல்வராம் அரிகேசன் ஓடிவந்து முதலையைக் கொன்று யானைக்கு அருள் புரிந்தனர்.

> "மதசிகரி கதறிமுது முதலைகவர் தர நெடிய
> மடு நடுவில் வெருவி ஒரு விசையாதி மூலமென
> வருகருணை வரதன்"
> — திருவகுப்பு(1)

**மனோகர :—**

மனதிற்கு இன்பத்தைத் தருபவர்.

> "என்று முளானே மனோகர வயலூரா"
> —(கொம்பனையார்) திருப்புகழ்.

**கந்தப் பெருமாளே :—**

"பார்வதி! நின் மைந்தன் மூவுலகினும் பராக்கிரமத்துடன் நிகரின்றி சஞ்சரிக்கின்றமையால் கந்தன் எனப்படுகின்றனன்" என்று உமாநாயகன் உமாதேவியிடம் உரைத்தருளினர் எனக் கந்தபுராணம் சம்பவகாண்டம், 35-ம் அத்யாயத்தில் 11வது சுலோகம் கூறுகிறது.

"சேயவன் வடிவமாறும் திரட்டி நீ ஒன்ருச் செய்தாய்
ஆயதனுலே கந்த னுமெனும் நாமம் பெற்ருன்"

என்பது தென்மொழிக் கந்தபுராணம்.

ஸ்கந்தம் என்னும் வடசொல் தோள் எனப் பொருள்படும். தோள் வரையிலும் உமாதேவியாரால் ஒருங்குறச் சேர்க்கப்பட்ட திருவுருவம் உடையான் கந்தன் என அறிக.

## கருத்துரை

சிவகுமாரரே! மால்மருகரே! செந்திற் கடவுளே! ஆசையிற்பட்டு அழியாமல் அடியேன் செந்தமிழால் பாடி உய்ய அருளுவீர்.

## 11

அறிவழிய மயல்பெருக வுரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே
அனையுமனை யருகிலுற வெருவியழ வுறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே

செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
திருவடியி லணுகவர மருள்வாயே
சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே

நெறிதவ்றி யலரிமதி நடுவன்மக பதிமுளரி
நிருதிநிதி பதிகரிய வனமாலி
நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே

மறிபரசு கரமிலகு பரமனுமை யிருவிழியு
மகிழமடி மிசைவளரு மிளையோனே
மதலைதவ ழுததியிடை வருதரள மணிபுளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே.

## பதவுரை

சிவனை நிகர் = சிவமூர்த்திக்குச் சமானமானவரும், பொதிய வரை = பொதிய மலையில் வசிப்பவருமாகிய, முனிவன் = அகத்திய முனிவர், அகமகிழ = உள்ளம் மகிழ்ச்சியடையவும், இரு செவி குளிர = அவருடைய இரண்டு செவிகளும் குளிர்ச்சியடையவும், இனிய தமிழ் = இனிமையான தமிழ் மொழியை அம்முனிபுங்கவருக்கு, பகர்வோனே = உபதேசித்தருளியவரே!, நெறி தவறி = அற நெறியினின்றும் வழுவி, அலரி = சூரியன், மதி = சந்திரன், நடுவன் = இயமன், மகபதி = நூறு அசுவமேதங்களுக்குத் தலைவனாகிய தேவேந்திரன், முளரி = அக்கினி, நிருதி = தென்மேற்றிசைக்கு அதிபனாகிய நிருதிதேவன், நிதிபதி = நிதிகளுக்கு அதிபதியாகிய குபேரன், கரிய வனமாலி = கருமை நிறம் பொருந்திய திருமேனியை யுடையவரும் துளபமாலையை யணிந்துள்ளவருமான நாராயணர், நிலவு மறையவன் = நிலைபெற்றவராகிய பிரமதேவர், இவர்கள்அலைய = இத்தேவர்களனைவரும் வருந்தி ஏவல்புரிந்து திரியுமாறு, அரசு உரிமைபுரி = அரசாட்சி செய்துகொண்டிருந்த, நிருதன் உரம் அற = அசுரனாகிய சூரபன்மனது மார்பு பிளக்குமாறு, அயிலை விடுவோனே = வேலாயுதத்தை விடுத்தவரே! மறி பரசு கரம் இலகு = மான்குட்டியையும் மழுவையும் கரத்தில் தாங்கிக் கொண்டருள்புரியும், பரமன் = பரமபதியாகிய சிவபெருமான், உமை = உமாதேவியார், இருவிழியும் = இரண்டு கண்மலர்களும், மகிழ = மகிழ்ச்சியடைய, மடிமிசை வளரும் = உமையம்மையாரது திருமடியின் மீது வளர்கின்ற, இளையோனே = என்று மகலாத இளங்குமாரரே! மதலை தவழ் = மரக்கலங்கள் தவழுகின்ற, உததியிடை வரும் = சமுத்திரத்தில் தோன்றும், தரளமணி = முத்துமணிகள், புளினம் மறைய உயர் = மணற்குன்றுகள் மறையுமாறு அதனினும் உயர்ந்துள்ள, கரையில் உறை = சமுத்திரக் கரையாகிய திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே!, அறிவு அழிய = (அடியேனுக்கு மரணாவஸ்தையுண்டாகிற காலத்தில்) அறிவு நிலை கலங்கி அழியவும், மயல் பெருக = மயக்கம் பெருகவும், உரையும் அற = (கைகால்களின் அசைவு நீங்குவதோடு) பேசுவதும் நீங்கவும், விழிசுழல = கண்கள் சுழலவும், அனல் அவிய = உடம்பிலுள்ள அக்கினி தணியவும், மலம் ஒழுக = மலம் தானாக நீர்போல் ஒழுகவும், அகலாதே = அடியேனைவிட்டு நீங்காமல், அனையும் = தாயாரும், மனை = மனைவியும், அருகில் உற = சமீபத்தில் அமர்ந்து, வெருவி அழ = பயந்து ஓவென்று கதறியழவும், உறவும் அழ = சுற்றத்தார்களும் அழவும், அழலின் நிகர் மறலி = அக்கினி போற் கொளுத்துகின்ற கூற்றுவன், எனை அழையாதே = அடியேனை தனது நரகலோகத்திற்கு வாவென்று அழையாவண்ணம், செறியும் இருவினை = அடியேனை நெருங்கியுள்ள நல்வினை தீவினைகளாகிய இரு வினைகளும், கரணம் = அந்தக்கரணங்

களும், மருவு புலன் ஒழிய=பொருந்தியுள்ள ஐம்புலன்களும் செயலற்று நீங்க, உயர் திருவடியில் அணுக=தேவரீரது சிறந்த திருவடித் தாமரைகளில் அடியேன் சேருமாறு, வரம் அருள்வாயே=அடியேனுக்கு வரத்தை வழங்கியருள்வீர்.

## பொழிப்புரை

சிவபெருமானுக்கு நிகர் என்று எல்லோராலும் கருதப் படுகின்றவரும், பொதியாசலத்தில் தவம் புரிந்துகொண்டு வீற்றிருப்பவருமாகிய அகத்தியமுனிவருக்கு, அவருடைய உள்ளம் மகிழவும், இருசெவிகளும் குளிரவும், இனிமையான தமிழ் மொழியை உபதேசித்தருளியவரே! அறநெறி தவறி சூரியன், சந்திரன், இயமன், இந்திரன், அக்கினி, நிருதி, குபேரன், துளபமாலையைத் தரித்துக்கொண்டுள்ள கரிய திருமேனியையுடைய திருமால், நிலைபெற்றுள்ள பிரமதேவர், இவர்கள் (சிறைப்பட்டு) நெடுநாளாக ஏவல்புரிந்துகொண்டு ஏங்கியலையுமாறு அரசாட்சி செய்த சூரபன்மனது மார்பு பிளந்தழியுமாறு வேலாயுதத்தை விடுத்தருளியவரே! மான் மழுவைக் கரத்தில் தாங்கிக்கொண்டுள்ள சிவபெருமானும் உமையம்மையாரும் கண்களிக்க உமாதேவியார் திருமடித்தலத்தின்கண் வளருகின்ற இளைய பிள்ளையாரே! மரக்கலங்கள் தவழுகின்ற சமுத்திரத்தில் தோன்றுகின்ற முத்துமணிகள் மணற்குன்றுகள் மறையுமாறு உயர்ந்துள்ள கடற்கரையாகிய திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள பெருமையின் மிக்கவரே! (மரணகாலத்தில் அடியேனுடைய) அறிவு அழியவும், மயக்கம் உண்டாகவும், (கை கால்கள் அசைவற்றதோடு) பேசுவதும் ஒழியவும், கண்கள் சுழலவும், உடம்பிலுள்ள உதராக்கினி தணியவும், தன்னாலே மலம் நீராகி ஒழுகவும், இந்நிலையிலும் என்னைவிட்டு நீங்காமற்படிக்கு தாயாரும் மனைவியும் அருகிலிருந்து பயந்து ஓவென்று கதறியழவும், சுற்றத்தார்களும் அழவும், நெருப்பைப்போல் கொதித்துக்கொண்டு வரும்படியான கூற்றுவன் என்னைத்தனது நரகலோகத்திற்கு அழைக்காவண்ணம், அடியேனை நெருங்கியுள்ள நல்வினை தீவினைகளாகிய இருவினைகளும், அந்தக்கரணங்களும், பொருந்தியுள்ள ஐம்புலன்களும் செயலற்று நீங்க தேவரீரது திருவடி மலர்களில் அடியேன் சேருமாறு வரமருள்புரிவீர்.

## விரிவுரை

**அறிவழிய......மலமொழுக :—**

ஆன்மா பிரியுங்காலத்தில் அறிவுகெட்டு மயக்கமுற்று நாகுழறி அவயவங்கள் அசைவற்று புலன்கள் கலங்கித் துன்புறுவார்கள்.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்மே லுந்தி
அலமந்த போதாக அஞ்சே லென் றருள்செய்வா னமருங் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவையாறே.
—சம்பந்தர் (தேவாரம்).

அனையுமனை......உறவுமழ :—

தாய் மனைவி மக்கள் முதலியோர் உயிர் பிரியும்போது கதறியழுவார்களேயன்றி உயிர்க்கு உறுதிபயக்குந் தன்மையைத் தேடமாட்டார்கள். இயமனுடைய பாசக்கயிற்றினின்று விடுவிக்கவும் ஆற்றலற்று வாளா வருந்துவார்கள். அம்மரணகாலத்தில் காப்பாற்ற வல்லவர் முருகவேள் ஒருவரேயாவர்.

"முதலவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட
முடுகுவதும் அருணெறியி லுதவுவதும்" —திருவகுப்பு (1)

"ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே"
—அலங்காரம் (84)

அழலினிகர் மறலியெனை யழையாதே :—

## இயமலோகம் செல்லும் வழி

தீவினையைச் செய்த பாவிகளை இயமதூதுவர்கள் வடவாமுகாக்கினிபோற் கொதித்துப் பாசக்கயிற்றால் இறுக்கிக் கட்டிக் கொண்டு தமது யமபுரம் கொண்டுபோய் துன்புறுத்துவார்கள். புண்ணியஞ் செய்தவர்களை இயமதூதர்கள் உபசரித்து சுகமான வழியில் கொண்டு போவார்கள்.

யமலோகத்திற்கும் மனிதலோகத்திற்கும் இடையிலுள்ள வழி எண்பத்தாறுயிரம் யோசனை தூரமாகும். அவ்வழியானது காடாகவும் கோரமாகவும் நாற்புறங்களிலும் தண்ணீரில்லாத வெளியாகவும் இருக்கிறது. அந்த வழியில் மரங்களின் நிழல் கிடையாது; தண்ணீருமில்லை; களைப்படைந்தவனும் இளைத்தவனுமான மனிதன் இளைப்பாறத்தக்க வீடுகளுமில்லை. யமனுடைய கட்டளையைச் செய்கின்ற யமதூதர்களால் ஆடவரும் மகளிரும் அப்படியே பூமியிலுள்ள மற்றவைகளும் அந்தவழியில் பலாத்காரமாகக் கொண்டுபோகப்படுகிறார்கள். எந்த மனிதர்கள் ஏழைகளுக்கு வண்டி குதிரை முதலிய வாகனங்களைக் கொடுத்து உதவிசெய்கின்றார்களோ அவர்கள் அந்த வாகனங்களின்மேல் அந்த வழியில் துன்பமில்லாமற் செல்லுகிறார்கள். குடையைத் தானஞ் செய்தவர்கள் குடை

யினாலே வெய்யிலைத் தடுத்துக்கொண்டு செல்லுகிறார்கள். அன்னதானஞ் செய்தவர்கள் அந்த வழியில் அன்னத்தைப் புசித்துக்கொண்டு பசியின்றி செல்லுகிறார்கள். வஸ்திரங்களைக் கொடுத்தவர்கள் வஸ்திரமுள்ளவர்களாகவும், வஸ்திரம் கொடாதவர்கள் ஆடையின்றி நிர்வாணராகவும் செல்லுகிறார்கள். பொன்னைக் கொடுத்தவர்கள் அலங்கரிக்கப்பட்டவர்களாக சுகமாகச் செல்லுகிறார்கள். பூதானஞ் செய்தவர்கள் விரும்பின எல்லாவற்றையும் அடைந்து இன்புற்று இனிது செல்லுகிறார்கள். தானியங்களைக் கொடுக்கிற மனிதர்கள் துன்பமின்றிச் செல்லுகிறார்கள். வீட்டைத் தானஞ் செய்கிற மனிதர்கள் விமானங்களில் மிக்க சுகமாகச் செல்லுகிறார்கள். தண்ணீரைத் தானஞ் செய்தவர்கள் தாகமில்லாதவர்களாகவும் மிக மகிழ்ந்த மனமுள்ளவர்களாகவும் செல்லுகிறார்கள்; விளக்கு தானஞ் செய்பவர்கள் பிரகாசமுள்ள வழியில் பிரகாசமுள்ள உருவத்துடன் செல்லுகிறார்கள்; கோதானஞ் செய்தவர்கள் எல்லாப் பாவங்களாலும் விடுபட்டு சுகமாகச் செல்லுகிறார்கள். ஒரு மாதம் உபவாச மிருப்பவர்கள் அன்னங்கட்டிய விமானத்தின்மீது செல்லுகிறார்கள். ஆறுநாளுக்கொருதரம் உபவாசமிருப்பவர்கள் மயில்கள் பூட்டின விமானங்களின் மேல் செல்லுவார்கள். எந்த மனிதன் ஒருவேளை சாப்பிட்டுக் கொண்டு மூன்று இரவுகளைக் கழிக்கிறானோ? இடைவேளைகளில் சாப்பிடுகிறதில்லையோ அவனுக்கு அழிவற்ற லோகங்கள் கிடைக்கின்றன. தண்ணீர்ப் பந்தல் வைத்து கோடைக் காலத்தில் தண்ணீரால் வாடும் மக்களுக்குத் தண்ணீரும் மோரும் கொடுத்து உதவிய உத்தமர்களுக்கு அந்த யமலோகத்தில் புஷ்போதகை என்ற நதியை யுண்டாக்கிக் கொடுப்பார்கள். அந்த நதியில் அவர்கள் அமிருதம் போன்ற குளிர்ந்த தண்ணீரைக் குடித்துக்கொண்டு சுகமே யிருப்பார்கள். எவர்கள் தீவினைகளைச் செய்தவர்களோ அவர்களுக்கு அந்த நதியில் சீயானது குடிப்பதற்கு ஏற்படுத்தப்படுகிறது. மாமிசங்களைத் தின்றவர்கள் யமலோகத்தில் தமது மாமிசத்தைத் தாமே யுண்டு தங்களுடம்பில் வடியும் உதிரத்தைக் குடித்துக்கொண்டு தீவாய் நரகத்தில் மல்லாக்கப்படுத்த வண்ணமாகப் பெருந் துன்பத்தை யனுபவித்துக் கொண்டிருப்பார்கள். இவற்றையெல்லாம் உணர்ந்து நாம் நல்வழிப்படுமாறு நமது பரமகுருமூர்த்தியாகிய அருணகிரிநாத சுவாமிகள் நம்மீதுள்ள பெருங் கருணையால் உபதேசிக்குமாறு காண்க.

**கிழியும் படியடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி**
**இழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரி வாய்நரகக்**
**குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ னூர்க்குச் செல்லும்**
**வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே.** —அலங்காரம் (56)

**செறியு மிருவினை கரண...... அணுகவரம் :—**

இருவினையொப்பு, மலபரிபாகமுற்று சத்திநிபாதமடைந்த பக்குவ ஆன்மாக்களே இறைவன் திருவடியில் இரண்டறக் கலந்து அத்துவித முத்தியின்பத்தை நுகர்ந்து பிறவாநிலையைப் பெறுவார்கள். அவ்வரத்தை ஆண்டவன்பால் வேண்டுகின்றனர்.

**சிவனை நிகர் பொதியவரை முனிவன் :—**

பருவத வேந்தனுக்கு அவன் செய்த தவங்காரணமாகத் திருமகளாகத் தோன்றி வளர்ந்த உமாதேவியாரைச் சிவபெருமான் திருமணஞ் செய்துகொள்ளும்பொருட்டு இமயமலையில் எழுந்தருளிய ஞான்று, திருக்கல்யாணத்தைச் சேவிக்கும்பொருட்டு எப்புவனத்திலுமுள்ள யாவரும் வந்து கூடினமையால் இமயமலை நடுங்கியது. அதனால் பூமியின் வடபால் தாழ, தென்பால் மிக உயர்ந்தது. உடனே தேவர்கள்முதல் அனைவரும் ஏங்கி, 'என் செய்வது' என்று துன்புற்று "சிவா சிவா" என்று ஓலமிட்டார்கள். சிவபெருமான் அது கண்டு திருமுறுவல்செய்து, அவர்களது குறையை நீக்கத் திருவுளங்கொண்டு, திருநந்திதேவரை நோக்கி "அகத்திய முனிவனை இங்கு அழைத்துவா" என்று பணித்தருளினார். நந்திதேவர் வணங்கிக்கொண்டுபோய், அகத்திய முனிவரைக் கூப்பிட அவர் அங்கு வந்தார். அவரை அழைத்துக்கொண்டுபோய்ச், சிவபெருமான் திரு முன்பு விடுப்ப, அகத்தியர் ஆலமுண்ட அண்ணலை வணங்கி அஞ்சலியத்தராய் நிற்ப, சிவபெருமான் திருமுனிவரை நோக்கி, "முனிவனே! இங்கே யாவரும் வந்து கூடினமையால், வடபால் தாழத் தென்பால் உயர்ந்துவிட்டது. இதனால், உயிர்கள் மிகவும் வருந்துகின்றன. ஆதலால் நீ இம் மலையினின்று நீங்கித் தென்னாட்டிற் சென்று பொதியை மலையின்மேல் இருக்கக்கடவாய்; நின்னைத் தவிர இதனைச் செய்யவல்லவர் வேறு யாருளர்? நீ ஒருவன் பொதியாசலஞ் சேர்ந்தால் பூமி சமனாகும்!" என்று பணித்தருளினார். அது கேட்ட அகத்திய முனிவர் அச்சமுற்று, "பரமகருணாநிதியாகிய பரமபதியே! அடியேன் யாது குற்றஞ் செய்தேன்? தேவரீரது திருமணக் கோலத்தைக் காணவொட்டாமல் கொடியேனை விலக்குகின்றீர்; எந்தையே! திருமாலிருக்க, திசைமுகன் முதலிய தேவர்களிருக்க, எளியேனை விலக்குவது யாது காரணம்?" என்று பணிந்து உரைத்தார். சிவபெருமான், "மாதவ! உனக்கு ஒப்பான முனிவர்கள் உலகத்தில் உண்டோ? இல்லை; பிரமனும் மாலும் நினக்கு நிகராகார்; ஆதலால் நினைந்தவை யாவையும், நீ தவறின்றி முடிக்கவல்லை; இவ்வரிய செய்கை மற்றைத் தேவர்களாலேனும் முனிவர்களாலேனும் முடியுமா?

யாவரினும் மேலாகிய உன்னுலே மாத்திரம் முடியும்; செல்லக் கடவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினுர். அகத்திய முனிவர், "எமது பரம பிதாவே! தங்களுடைய திருமணக் கோலத்தை வணங்காது பிரிவாற்ருமையால் என்மனம் மிகக் கவல்கின்றது" என்ன, கைலாசபதி, "குறுமுனிவ! நீ கவலாது பொதிய மலை செல்லுதி; நாம் அங்கு வந்து நமது கல்யாணக்கோலத்தைக் காட்டுவோம்; நீ மகிழ்ந்து தரிசிக்கக் கடவை; நீ நம்மைத் தியானித்துக்கொண்டு அங்கு சில நாள் தங்கியிருந்து, பின்பு முன்போல் நமது பக்கத்து வருவாயாக" என்று அருளிச்செய்தார்.

அகத்திய முனிவர் அதற்கியைந்து, அரனுரை வணங்கி விடைபெற்று, பெருமுச்செறிந்து அரிதினீங்கி, தென்றிசையை நோக்கிச் சென்று பொதிய மலையை யடைந்து, சிவமூர்த்தியைத் தியானித்துக்கொண்டு அப் பொதியமலையில் எழுந்தருளியிருந்தார்; பூமியுஞ் சமமாயிற்று. ஆன்மாக்கள் துன்பம் நீங்கி இன்பமுற்றன. என்னே! அம் முனிவரின் பெருமை? மாலயனுதி வானவராலும் முனிவர்களாலும் செய்தற்கரிய அரிய செயலைச் செய்ததனுல் இங்கே நம் அருணகிரியார் "சிவனை நிகர் பொதியவரை முனிவன்" என்று ஓதியருளினுர். வடபாகத்தில் கைலாயமலையில் சிவபெருமான் எழுந்தருளி யிருப்பதுபோல் தென்பாகத்தில் அகத்திய முனிவர் எழுந்தருளியிருப்பதால் "பொதியவரை முனிவன்" என்ற குறிப்பும் உணர்தற்கிடமா யமைத்துள்ளனர்.

**இனிய தமிழ் பகர்வோனே :—**

அகத்தியருக்கு முருகப்பெருமான் இனிய தமிழ்மொழியையும் அதன் இலக்கணத்தையும் உபதேசித்தருளினுர். இதனுல் தமிழ்மொழி ஏனைய மொழிகளினும் உயர்ந்த மொழியென்பதும், அதன் ஆசிரியர் முருகப்பெருமானே என்பதும், அதனை உலகிற்கு உபகரித்த சந்தானுசாரியர் அகத்தியர் என்பதும் நன்கு புலனுகின்றன.

**நெறிதவறி... அயிலை விடுவோனே :—**

சூரபன்மன் சிவமூர்த்தியிடம் மாளா வரம்பெற்று, உளந்தருக்கி இந்திரன் முதலிய இமையவர்கள் மீன்பிடிக்கவும், வருணன் தண்ணீர் தெளிக்கவும், பிரமன் நாள் கோள் முதலியவற்றைச் சொல்லவும், திருமால் கேட்ட வரங்களை நல்கவும், வாயு வீதிகளைக் கூட்டவும், சூரியன் தன் மண்டலத்திற் செல்லாது வீரமாமகேந்திரபுரியில் தேரைவிட்டிறங்கி குளிர்ந்த கிரணங்களை வீசிக்கொண்டு நடந்து செல்லவும், சந்திரன் எந்த நாளிலும் பூரணகலைகளுடன் பிரகாசித்துக்கொண்டிருக்கவும், எமன் எந்த உயிரையும் பற்ருமலிருக்கவும், அக்கினி

தன்ருலே எரியவும், பிறதேவர்கள் தத்தமக்குரிய வேலைகளைச் செய்யவும் ஆக்ஞாபித்து, அவர்கள் பலநாளாய் அலைந்து திரியுமாறு கொடுமை செய்ததால், குமாரக்கடவுள் தேவர்கள் துன்பத்தை நீக்குமாறு திருவுளங்கொண்டு, சூராதியவுணரை யழித்து ஆட்கொண்டனர்.

## கருத்துரை

அகத்தியமுனிவருக்கு இனிய தமிழை உபதேசித்தவரே! நெறி தவறிய சூராதியவுணரை யழித்தவரே! உமாதேவியாரது திருக்குமாரரே! திருச்செந்திலாதிப! மரணகாலத்தில் பொறி புலன்கள் கலங்கி அடியேன் செயலற்றுக் கிடக்குங் காலத்தில், என் மனைவி மக்கள் கதறியழ இயமன் என்னை அழைக்காவண்ணம் தேவரீரது திருவடியிற் சேர்த்தருள்வீர்.

## 12

அனைவரு மருண்ட ருண்டு கடிதென வெகுண்டி யம்ப
அமரஅடி பின்றொடர்ந்து பிணநாறு
அழுகுபிணி கொண்டுவிண்டு புழுவுடனெலும்பலம்பு
மவலவுட லஞ்சு மந்து தடுமாறி

மனைதொறு மிதம்ப கர்ந்து வரவர விருந்த ருந்தி
மனவழி திரிந்து மங்கும் வசைதீர
மறைசதுர் விதந்தெரிந்து வகைசிறு சதங்கை
கொஞ்ச
மலரடி வணங்க என்று பெறுவேனோ

தினைமிசை சுகங்க டிந்த புனமயி லிளங்கு ரும்பை
திகழிரு தனம்பு ணர்ந்த திருமார்பா
ஜெகமுழுது முன்பு தும்பி முகவனொடு தந்தை முன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா

இனியகனி மந்தி சிந்து மலைகிழவ செந்தில் வந்த
இறைவகுக கந்த என்று மிளையோனே
எழுகடலு மெண்சிலம்பு நிசிசரரும் அஞ்ச அஞ்சு
மிமையவரை யஞ்ச லென்ற பெருமாளே.

## பதவுரை

தினைமிசை சுகம் கடிந்த = தினைகளின்மீது இருந்த கிளிகளையோட்டிய, புனமயில் இளங்குரும்பை திகழ் = புனத்தின்கண் மயில் போல் விளங்

கிய வள்ளியம்மையாரது குரும்பைபோல் திகழ்கின்ற, இருதனம் புணர்ந்த = இரண்டு தனங்களுடன் புணர்கின்ற, திருமார்பா = அழகிய மார்பையுடையவரே! ஜெகமுழுதும் = உலகமுழுவதும், முன்பு = முன்னுளில், தும்பிமுகவனெடு = யானைமுகமுடைய விநாயகருடன்போட்டியிட்டு, தந்தை முன்பு = சிவபெருமானுடைய முன்னிலையில், திகிரி வலம் வந்த = வட்டமாக வலம் வந்த, செம்பொன் மயில் வீரா = செம்பொன் நிறமுடைய மயிலையுடைய வீரரே! மந்தி இனிய கனிசிந்து = குரங்குகள் இனிமையான பழங்களை உதிர்க்கின்ற, மலைகிழவ = மலைநிலமாகிய குறிஞ்சி நிலத்திற்கு உரியவரே! செந்தில் வந்த = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, இறைவ = இறைவரே! குக = குகப்பெருமானே! கந்த = கந்தக் கடவுளே! என்றும் இளையோனே = அகலாத இளமைப் பருவமுடையவரே! எழுகடலும் = ஏழு சமுத்திரங்களும், எண் சிலம்பும் = எட்டு குலமலைகளும், நிசிசரரும் அஞ்ச = இராக்கதர்களும் அஞ்சுமாறு, அஞ்சும் இமயவரை அஞ்சல் என்ற = பயந்து நின்ற தேவர்களை அஞ்சாதீர்கள் என்று அபயங் கொடுத்த, பெருமாளே = பெருமை மிகுந்தவரே! அனைவரும் மருண்டு அருண்டு = (எனக்குஉற்ற பெரு நோயைக் கண்டு) எல்லோரும் அச்சங்கொண்டு மனங் கலங்கியும், கடிது என வெகுண்டு இயம்ப = சீக்கிரம் விலகிப்போ என்று கோபித்துக் கூறவும், அமர அடி பின் தொடர்ந்து = (நான்) நெருங்கி அவர்களது அடிப்பின்னே தொடர்ந்து சென்று, பிணநாறும், அழுகு பிணி கொண்டு = பிணம்போல் நாறுகின்ற அழுகிய தசையுடன்கூடிய நோயைக் கொண்டு, விண்டு புழுவுடன் எலும்பு அலம்பும் = புழு வெளிப்பட்டு எலும்புகள் நிலை குலைந்துள்ள, அவல உடலம் சுமந்து = துன்பத்தையுடைய உடம்பைச் சுமந்து கொண்டு, தடுமாறி = தடுமாற்றமுற்று, மனைதொறும் இதம் பகர்ந்து = வீடுகள்தோறும் சென்று இனிய வசனங்களைக்கூறி, வர வர விருந்து அருந்தி = நாள் போகப் போகப் புதிய புதிய வீடுகளில் உணவு உண்டு, மன வழி திரிந்து மங்கும் வசை தீர = மனம் போன வழியில் சென்று திரிந்து கெடுகின்ற பழிப்பு நீங்குமாறு, மறை சதுர் விதம் தெரிந்து = நான்கு வேதங்களின் வகைகளை யறிந்து, வகை சிறு சதங்கை கொஞ்ச = முறைப்படி சிறிய சதங்கைகள் கொஞ்சிஒலிக்கின்ற, மலரடி வணங்க = மலர் போன்ற தேவரீருடைய திருவடியை வணங்குகின்ற பேற்றினை, என்று பெறுவேனே = அடியேன் எந்நாள் பெறுவேனோ?

## பொழிப்புரை

தினைப்பயிர்மீது அமர்ந்த கிளிகளையோட்டிட புனத்தில் வாழ்ந்த மயில் போன்ற வள்ளியம்மையாருடைய தென்னங் குரும்பையனைய இருதனபாரங்களுடன் கலந்த திருமார்பினையுடையவரே! சிவபெருமான் முன்னிலையில் யானைமுகப்

பெருமானுடன் போட்டியிட்டு, உலகமுழுவதும் வட்டாகாரமாக வலம்வந்த செம்பொன்னிறமுடைய மயில்வாகனத்தையுடைய வீரமூர்த்தியே! குரங்குகள் இனிய கனிகளை உதிர்க்கின்ற மலை நிலத்திற்கு உரியவரே! திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள இறைவரே! குகப்பெருமானே! கந்தநாயகனே! என்றும் அகலாத இளமையுடையவரே! ஏழு சமுத்திரங்களும், எட்டு குலமலைகளும் அசுரர்களும் அஞ்சுமாறு, அஞ்சி நின்ற அமரர்களை அஞ்சேல் என்று உரைத்தருளிய பெருமிதம் உடையவரே! எனக்கு உற்ற பெரும் நோயைக் கண்டு யாவரும் அச்சமும் கலக்கமும் அடைந்து "விரைவில் விலகிப் போ" என்று கோபித்துக் கூறியும், நான் அவரை விடாது அவர் அடிப்பின் தொடர்ந்து சென்று, பிணம்போல் நாறுகின்ற அழுகிய சதையுடன் கூடிய நோயுடன், புழுக்கள் வெளிப்படவும் எலும்புகள் நிலைகுலையவும் துன்பத்துடன் கூடிய உடம்பைக்கொண்டு தடுமாற்றமுற்று, வீடுகள் தோறுஞ் சென்று இனிய சொற்களைக் கூறி, நாள் செல்லச் செல்ல புதிய புதிய இடங்கட்குச் சென்று உணவு உண்டு, மனம்போன வழியில் திரிந்து அழிகின்ற பழி நீங்குமாறு, நான்கு வேதங்களின் வகைகளையறிந்து இனிமையாகக் கொஞ்சியொலிக்கின்ற சதங்கையுடன் கூடிய தேவரீருடைய திருவடிகளை வணங்கும் பெரும் பேற்றினை அடியேன் எந்நாள் பெறுவேனோ?

## விரிவுரை

**அனைவரு மருண்டு அருண்டு :—**

பெருநோய் என்பது ஒரு கொடிய நோய்; அதற்குத் தொழு நோய் என்று ஒரு பேரும் உண்டு; ஏனைய நோய்கள் இந்த அரச நோயைக் கண்டால் தொழும். அதனால் தொழு நோய் எனப்பட்டது. இந்த நோயினால் பீடிக்கப்பட்ட ஒருவனைக் கண்ட எல்லோரும் அருவருப்புறுவர். ஆ இந்த நோய் நமக்கு ஒட்டிவரக்கூடாதே என்று அகலுவர்; அஞ்சுவர். அதன் கொடுமையைக் கண்டு மனம் மயங்குவர். இந்த நோயின் கொடுமையை அடிகளார் இந்தப் பாடலில் இரண்டு அடிகளில் கூறுகின்றனர்.

இந்த நோய் மூன்று காரணங்களால் வரும்;

(1) சிவஞானிகளாகிய உத்தம பக்தர்கள் மனங் கலங்குமாறு அபாண்டமான பழிச்சொல் கூறி எவன் பழிப்பானோ அவனுக்கு இந் நோய் அணுகும்.

"அடியார் மனஞ் சலிக்க எவராகிலும் பழிக்க
அபராதம் வந்து கெட்ட பிணிமூடி

அனைவோரும் வந்து சிச்சி எனநால்வரும் பழிக்க
அனலோடழன்று செத்து விடுமாபோல்''—திருப்புகழ்.

(2) உத்தமமான பதிவிரதைகளின் மனம் கொதிக்கு மாறு எவன் நடப்பானே அவனுக்கு இக் கொடிய நோய் சாரும்.

(3) முன் சொன்ன இரண்டு பாவங்கள் இப் பிறப் பிலேயே வந்து சாரும். முற்பிறப்பில் பத்துக்கால்களை யுடைய நண்டைப் பிடித்து பத்துக்கால்களையும் ஒடித்து உண்டவனுக்கு கை கால்களில் உள்ள விரல்கள் அழுகி சங்கு போல் மழுமழு என்று இருக்கத் துக்கத்தைத் தரும் இத் தொழுநோய் வந்து இப் பிறப்பில் துன்புறுத்தும்.

அக்கேபோல் அங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கால்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால். —நாலடியார்.

**கடிதென வெகுண்டியம்ப :—**

பெரு நோயாளன் அருகில் வந்தபோது, அருவருத்து "அடேய்! கிட்டவராதே! சீக்கிரம் அப்பால் எட்டிப்போ" என்று வெகுண்டு உரைப்பார்கள். இயம்—மேளம். மேளம் போல் உரத்த குரலில் உரைப்பார்; அதனால் "இயம்ப" என்றனர்.

**அமர அடி பின் தொடர்ந்து :—**

கண்டவர்கள் கடிந்துரைத்தும் நோயாளன் குறிப்பறிந்து விலகிப் போகாமல் அவர்கள் பின்னர் சென்று வீண் தொந்தரவு தருவான்.

**பிணநாறும் அழுகு பிணிகொண்டு :—**

தொழுநோயினால் நிணங்கள் மிகுந்து, சதைகள் அழுகி உதிரமும் சீழும் வடிந்து, அதனால் பிணநாற்றம் வீசும். அந்த நாற்றத்தைக் கண்டு எல்லோரும் மிகவும் பழித்து விலகிப் போவார்கள். அது கண்டு பிணியாளன் பெரும் வேதனையுறுவான்.

**விண்டுபுழுவுடன் எலும்பலம்பு :—**

தொழுநோயினால் ஏற்பட்ட புண்களில் புழுக்கள் பல நெளிந்து வெளிப்படவும், ஆழமான குழிகள் விழுந்து எலும்பு கள் தெரிந்து, அந்த எலும்புகள் நிலைகுலைந்தும் நோயாளன் துன்பமுறுவான்.

**அவல வுடலஞ் சுமந்து தடுமாறி :—**

அவலம் - துன்பம்.

நோயால் துன்பமுற்ற இந்த உடம்பை மேலும் மேலும் சுமந்து நோயாளன் திரிவான். நோயுற்று, புண்பட்டுப் புழு நெளியப் பெருந்துன்பமுற்ருலும் "இந்த உடம்பு இனி வேண்டாம்; மாள்வது நலம்" என்று துணியமாட்டான். இன்னும் சிலகாலம் வாழவேண்டும் என்றே இப் பாரமான உடம்பைச் சுமந்துகொண்டு தடுமாறித் திரிவான்.

**மனைதொறுமிதம் பகர்ந்து வரவர விருந்தருந்தி :—**

வீடுகள் தோறும் சென்று, அவரவர்கட்கு ஏற்றவாறு இன்னுரை கூறி, பின்னர் வேறு வேறு புதிய புதிய வீடுகட்குச் சென்று உணவு அருந்தி அலைவர்.

"அசனமிடுவார்கள் தங்கள் மனைகள் தலைவாசல் நின்று
அநுதினமு நாணமின்றி அழிவேனோ"
—(கருவினுரு) திருப்புகழ்.

**மனவழி திரிந்துமங்கும் வசைதீர :—**

மனம்போன போக்கெல்லாம் போய் இங்கும் அங்குமாகத் திரிந்து அழிகின்றதனுல் வரும் பழிப்பு நீங்கவேண்டுமாயின் முருகன் பாதபங்கயங்களைப் பரவுதல்வேண்டும்.

**மறை சதுர் விதந் தெரிந்து வகை சிறுசதங்கை கொஞ்சு :—**

முருகப்பெருமானுடைய திருவடியில் விளங்கும் பொற் சதங்கைகள் நான்கு வேதங்களின் மந்திரங்களை ஒலித்துக் கொஞ்சுகின்றன.

**மலரடி வணங்க என்று பெறுவேனோ ? :—**

பெறுகின்ற பேற்றினுக்கெல்லாம் பெரும்பேறு முருகன் அடியைப் பணியப் பெறுதலேயாம். அதுவே மானிடப் பிறப்பைப் பெற்றதன் பயனும். இனிப் பிறவாத பெற்றியை அது தரும்.

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற்றிலேன் மதகும்ப கம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவும் கடகாசல பன்னிருபுயனே. —அலங்காரம்.(67)

**தினமிசை சுகம் கடிந்த புனமயில் :—**

மெய்ஞ்ஞானமாகிய பயிரில் முத்திக் கதிரைப் பாழ்படுத்த வந்த காமக்ரோதாதி கிளிகளை பக்தியாகிய கவணிலே

முருக நாமங்களாகிய கற்களை விட்டெறிந்து ஓட்டிய இச்சா சக்தியாகிய வள்ளியின் அபர பரஞானங்களாகிய இரு தனங்களால் தழுவப்பெற்ற தோள்களையுடையவன் முருகன்.

**செகமுழுது......வலம்வந்த :—**

கனிகாரணமாக எங்கும் தானே நிறைந்தவன்; தன்னையல்லால் உலகமில்லை என்ற தத்துவத்தை முருகப் பெருமான் காட்டியருளினார். இதன் விரிவை திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 3 ஆம் பக்கத்தில் பார்க்கவும்.

**இனியகனி மந்தி சிந்து மலைகிழவ :—**

முருகனுக்கே உரிய நிலம் குறிஞ்சி.

'சேயோன் மேய மைவரையுலகு.' —தொல்காப்பியம்.

அப் பெருமான் எழுந்தருளிய நிலம் மலை நிலம். அது தானே உயர்ந்தது. அவர் தேவ சிகாமணி. தெய்வ நாயகன்.

"விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ"

என்கின்றார் நக்கீரர்.

திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர் கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன் என்றேதும் குவலயமே.
—அலங்காரம் (5)

அப் பெருமான் எழுந்தருளியுள்ள மலைகள் எல்லாம் இனிய கனிகளுடன் கூடியவை. பூத்துப் பழுத்துக் குலை குலையாகக் குலுங்குகின்றன. மந்திகள் வந்து மரத்தைக் குலுக்கி உதிர்க்கின்றன. உதிர்ந்த கனிகளை உண்டு உவகையுறுகின்றன. எம்பெருமான் எழுந்தருளியுள்ள மலைகளில் உள்ள மந்திகளுக்குக் கூட பசி தாகமே கிடையா. அத்தனை வளமை.

**இறைவ :—**

எங்கும் எப்பொருட்கும் அப்பரமபதியே தலைவன். ஆறு சமயங்கட்கும் அதிபன்.

**குக :—**

மலைக் குகைகளில் முருகன் எழுந்தருளியிருப்பதன்றி, ஆன்மாக்களின் இதய குகைகளிலும் எழுந்தருளியிருக்கின்றான். அதனால் குகன் எனப் பெறுகின்றான்.

சத்யம் ஞான மநந்தம் ப்ரஹ்ம யோவேத
நிஹிதம் குஹாயாம் பரமேவ்யோமன்.

—தைத்திரீயோபநிஷத்ஆனந்தவல்லி.

**என்றுமிளையோனே :—**

முருகன் என்றும் அகலாத இளமைக்காரன். குழந்தை வடிவில் விளங்கும் குருநாதன். குமாரன் என்ற திருப் பெயருக்குரியவன்.

**எழுகடலும் எண் சிலம்பும் நிசிசரரும் அஞ்ச அஞ்சும்
இமையவரை அஞ்சல் என்ற பெருமாளே :—**

முருகன் வேலை எடுத்தவுடன் ஏழு கடல்களும் எட்டு மலை களும் சூராதியவுணரும் அஞ்சினார்கள். அப்போது இமைய வர்களை "அஞ்சல்" என்று அபயமருளி அருள்புரிந்தனர்.

## கருத்துரை

வள்ளி மணவாளரே! செந்திலாண்டவரே! குறிஞ்சிக் கிழவரே! தொழுநோய் தொடர்ந்து அழியாமல் உமது திரு வடியைத் தொழ அருள்புரிவீர்.

## 13

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே
மயில் தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.

## பதவுரை

மயில்=மயிலும், தகர்=ஆடும் நிறைந்த, கல் இடையர் அந்த தினைகாவல்=மலையினிடம் வாழ்கின்ற வேடர்கள் அமைத்த அழகிய தினைப்புனத்தைக் காவல் புரிந்த, வனச குறமகளை=இலக்குமியின் முகம் போன்ற வள்ளியம்மையாரை, வந்தித்து அணைவோனே= வணங்கி மணஞ் செய்து கொண்டவரே! கயிலை மலை அனைய=திருக் கயிலாய மலைக்கு நிகரான மகிமையுடைய, செந்தில் பதி வாழ்வே=

திருச்செந்தூரில் எழுந்தருளி வாழ்பவரே! கரிமுகவன் இளைய=யானை முகக் கடவுளாகிய விநாயகப் பெருமானுக்கு இளையவரே! கந்த=கந்தக்கடவுளே! பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! இயல் இசையில் உசித வஞ்சிக்கு அயர்வு ஆகி=உடற் சாயலிலும் இசைப் பயிற்சியிலும் மேன்மை பெற்றுள்ள, கொடிபோன்ற இடையையுடைய பெண்ணின்பால் மயக்கத்தை அடைந்து, இரவு பகல் மனது சிந்தித்து உழலாதே=இரவும் பகலும் என் மனமானது அப்பெண்ணையே நினைந்து அலையாமல், உயர் கருணை புரியும்=தேவரீருடைய உயர்ந்த திருக் கருணையால் விளையும், இன்பக் கடல் மூழ்கி=பேரின்பக் கடலில் முழுகி, உனை எனது உள் அறியும்=தேவரீரை அடியேனுடைய உள்ளத்தில் அறிகின்ற, அன்பை தருவாயே=அன்பினைத் தந்து அருள் புரிவீர்.

## பொழிப்புரை

மயில்களும் ஆடுகளும் நிறைந்து வாழகின்ற மலையினிடம் வசிக்கின்ற வேடர்களையுடைய தினைப்புனத்தைக் காவல் புரிந்த திருமகள் போன்ற அழகு மிகுந்த வள்ளியம்மையாரை விளையாட்டாக வணங்குவார் போல் வணங்கி மணந்து அருள் புரிந்தவரே! திருக்கயிலாயம்போல் மகிமையில் சிறந்த திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவரே! ஆனைமுகப் பெருமானுக்குத் தம்பியே! கந்தவேளே! பெருமிதம் உடையவரே! உடம்பின் சாயலினாலும் இயல் தமிழுடன் கூடி இசைப் பாடல்களிலும் வல்ல கொடி போன்ற இளம் பெண்ணை விரும்பி தளர்ச்சியுற்று, இரவு பகலாக அப்பெண்மணியையே நினைந்து அலையாமல், தேவரீருடைய உயர்ந்த திருக்கருணையினால் விளையும் பேரின்ப சாகரத்தில் முழுகி, தேவரீரை எனது உள்ளமாகிய கோயிலிலே உணர்ந்து உய்யும் அன்பை அருள்புரிவீர்.

## விரிவுரை

**இய்லிசையி லுசிதவஞ்சிக்கயர்வாகி :—**

வஞ்சி—கொடி. கொடிபோன்ற மென்மைத் தன்மையுடைய அம்மாதரை விரும்பி உள்ளம் வருந்துவர்.

பொது மகளிர் இனிய இயல் இசைப்பாடலை மிகவும் நன்றாகக் கற்றுக் கொள்வர். அந்த இசை ஆடவரை மயக்கி இசைவிக்கும். இசை பசுவையும் பாம்பையும் மயக்குமெனின் ஆடவரை மயக்குவதில் என்ன வியப்பு? "புலன்களை வென்று துறவு பூண்டவர்கள் பெண்களை வியந்து கூறக் கூடாது. பேரையும் தம் நாவினால் சொல்ல வொண்ணாது; கண்ணும் கருத்தும் ஒன்றிப் பெண்களை நோக்

கக் கூடாது. பண்ணமைந்த பாடல் கேட்கக் கூடாது" என்று அறநூல் கூறுகின்றது.

பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்கார்—பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி ஞர்;

**இரவு பகல் மனதுசிந்தித் துழலாதே :—**

அம்மாதரை இராப் பகலாக நினைந்து நினைந்து நெஞ்சு புண்ணாகி, அம்மாதரை யடையும் பொருட்டு இங்குமங்குமாக உழலுவர். இனி ஆசைக் கடலுள் முழுகி அதனால் பலப்பல பிறப்பு எடுத்தும் உழலுவர். சுவர்க்கத்திற்கும் நரகிற்குமாக வும் உழலுவர்.

**உயர் கருணை புரியும் இன்பக்கடல் மூழ்கி :—**

முருகப் பெருமானுடைய கருணை மிகவும் உயர்ந்தது. அதனால் விளைவது பேரின்பம். அது கடல் போல் பெருகி யுள்ளது. ஆதலின் அதில் பிறவிக் கோடையாலாய வெப்பந் தீரும் பொருட்டு முழுக, அதுவே முத்தியைத் தரும்.

ஆசை வெள்ளத்தில் முழுகியலைந்த ஆன்மா ஆண்ட வனுடைய கருணையால் எய்தும் பேரின்பவெள்ளத்தில் முழுகி மகிழும்.

**உனையெனது ளறியு மன்பைத் தருவாயே :—**

முருகப் பெருமான் ஆன்மாக்களின் இதய தாமரை யில் உறைகின்றனன். அப்பரமனை உள்நாடி யறிய வேண்டும்.

எண்ணாயிரத் தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணா ரமுதனைக் கண்டறி வாரில்லை
உண்ணாடி யுள்ளே ஒளிபெற நோக்கில்
கண்ணாடி போலக் கலந்திருந் தானே.

என்கின்றார் திருமூலர்.

"உடலுமுடல் உயிருநிலை பெறுதல் பொருளென உலக
மொருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
உணர்வுவிழி கொடுநியதி தமதூடுநாடுவதும்" ;—திருவகுப்பு(1)

தேடிக் கண்டு கொண்டேன்—திருமாலொடு நான்முகனும்
தேடித் தேடொண்ணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன். —அப்பர்.

முருகனிடத்தில் அருணகிரியார் கேட்கின்ற வரம் அன்பு ஒன்றே என்பதை உய்த்துணர்மின்கள். வீரவாகு தேவர் முருகவேளிடம் வேண்டிய வரமும் இதுவேயாகும்.

> **கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்**
> **மேலை யிந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்**
> **மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்**
> **சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்.**

**மயில் தகர்கலிடையர் :—**

தகர்—ஆடு. கல்—மலை. இடையர்—அதன் இடையே வாழ்பவர் ; வேடர்.

**தினைகாவல் வனசகுறமகளை வந்தித்தணைவோனே :—**

ஜீவான்மாவாகிய வள்ளி நாயகியார் ஐம்புலன்களாகிய வேடுவர் குலத்தில் தோன்றி, நெஞ்சமாகிய புனத்தில், ஞானப் பயிராகிய தினையை, மாயாமலமாகிய பறவைகள் அழிக்கா வண்ணம் காத்துக்கொண்டிருக்க அடியார்க்கு எளியவராகிய எந்தை கந்தவேள் விரைந்து வந்து, தன்னையுணராத வள்ளியை, "உன்னை நான் கும்பிடுகின்றேன் என்னை மணந்து கொள்" என்று இதவசனங் கூறி ஆட்கொண்டனர்.

வள்ளியை ஞான பண்டிதன் வந்தித்தான் என்பதன் உட் பொருள் ஆன்மாவின் மீதுள்ள கருணையால் தனது உயர்வை ஒரு பொருளாக எண்ணுமல் இரங்கி வந்து எளிதாக நின்ருன் என்பதாகும்.

**கயிலைமலை யனைய செந்தில் :—**

திருச்செந்தூர் திருக்கயிலாயம் போன்ற உயர்வுடையது. "பரமபதமாய செந்தில்" என்றும் பிறிதொரு திருப் புகழில் கூறியுள்ளார். முருகவேள் சூராதியவுணரை மாய்ப் பதற்கு முன்னும் பின்னும் தங்கி பக்தாபீஷ்டவரதராக எழுந்தருளி யிருப்பதால் இவ்வுயர்வு பெற்றது.

## கருத்துரை

வள்ளி நாயகரே! செந்திற் குமாரரே! தேவரீரை அடியேனுடைய உள்ளத்தில் அறிய அன்பைத் தருவீர்.

## 14

இருகுழை எறிந்த கெண்டைகள் ஒருகுமி ழடர்ந்து
வந்திட
இணைசிலை நெரிந்தெ ழுந்திட அணைமீதே
இருளளக பந்தி வஞ்சியி லிருகலை யுடன்கு லைந்திட
இதழமு தருந்து சிங்கியின் மனமாய

முருகொடு கலந்த சந்தன அளறுபடு குங்குமங்கமழ்
முலைமுகடு கொண்டெழுந் தொறு முருகார
முழுமதி புரிந்த சிந்துர அரிவைய ருடன் கலந்திடு
முகடியு நலம் பிறந்திட அருள்வாயே

எரிவிட நிமிர்ந்த குஞ்சியி னிலவொடு மெழுந்த கங்கையு
மிதழியொ டணிந்த சங்கரர் களிகூரும்
இமவரை தருங் கருங்குயில் மரகத நிறந் தருங்கிளி
எனதுயி ரெனுந் த்ரியம்பகி பெருவாழ்வே

அரைவட மலம்பு கிண்கிணி பரிபுர நெருங்கு தண்டைக
ளணிமணி சதங்கை கொஞ்சிட மயில்மேலே
அகமகிழ்வு கொண்டு சந்ததம் வருகுமர முன்றி
லின்புறம்
அலைபொருத **செந்தில்** தங்கிய பெருமாளே.

### பதவுரை

எரிவிடநிமிர்ந்த குஞ்சியில் = நெருப்பைப்போல் ஒளிவிட்டு நிமிர்ந்துள்ள சடையில், நிலவுடன் = சந்திரனுடன், எழுந்த கங்கையும் = திரண்டு எழுந்த கங்கா நதியையும், இதழியொடு அணிந்த = கொன்றை மலரையும் தரித்த, சங்கரர் களிகூரும் = சிவபெருமான் மகிழ்கின்ற, இமவரை தரும் கரும் குயில் = மலையரையன் பெற்ற கரிய குயில் போன்றவரும், மரகத நிறம் கிளி = பச்சை மணி போல் நிறம் படைத்த கிளியை யொத்தவரும், எனது உயிர் எனும் த்ரியம்பகி = அடியேனுடைய உயிர் போன்றவரும் மூன்று கண்களுடையவரும் ஆகிய உமாதேவியார், பெருவாழ்வே = பெற்ற பெரிய வாழ்வாக விளங்குபவரே! அரைவடம் = அரையில் கட்டிய சதங்கை, அலம்புகிண்கிணி = ஒலிக்கின்ற கிண்கிணி, பரிபுரம் = சிலம்பு, நெருங்கு தண்டைகள் = நெருங்கிய தண்டைகள், அணிமணி சதங்கை = அழகிய இரத்ன மணியாலாய பாதச் சதங்கை, கொஞ்சிட = ஆகிய இத் திருவாபரணங்

கள் இனிது ஒலி செய்ய, மயில் மேலே = மயில்வாகனத்தின் மீது, அக மகிழ்வு கொண்டு = திருவுள்ளம் மகிழ்ச்சி கொண்டு, சந்ததம் வரு குமர = எப்போதும் எழுந்தருளிவருகின்ற குமாரக் கடவுளே! முன்றி லின்புறம் = திருக்கோயிலின் திருமுன்னே, அலைபொருத செந்தில் தங்கிய = கடல் அலைகள் வந்து மோதுகின்ற திருச்செந்தூரில் எழுந் தருளியுள்ள, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! இருகுழை எறிந்த கெண்டைகள் = காதுகளில் விளங்கும் இரண்டு குழைகளையும் தாக்குகின்ற மீன்போன்ற கண்கள், ஒரு குமிழ் அடர்ந்து வந்திட = ஒப்பற்ற குமிழம் பூவைப் போன்ற நாசியை நெருங்கி வந்திடவும், இணை சிலை நெரிந்து எழுந்திட = இரண்டு வில் போன்ற புருவங்கள் நெரிந்து எழுந்திடவும், அணைமீதே = படுக்கையின் மீது, இருள் அளக பந்தி = இருண்ட கரிய கூந்தற் கற்றை, வஞ்சியில் இரு கலையுடன் குலைந்திட = கொடி போன்ற இடையிலுள்ள பெரிய ஆடையுடன் குலைந்திடவும், இதழ் அமுது அருந்து சிங்கியில் மனம் மாய = இதழ் அமுதமாகிய நஞ்சை யுண்டு எனது மனம் அழிய, முருகொடு கலந்த = நறுமணத்துடன் கலந்த, சந்தன அளறுபடு குங்குமம் கமழ் = சந்தனச் சேற்றுடன் குங்குமம் மணக்கும், முலைமுகடு கொண்டு எழுந்தொறும் முருகு ஆர = தனங்களின் உச்சி பூரித்து எழுந்தொறும் அழகு நிரம்ப, முழுமதி புரிந்த சிந்துர = முழு நிலாப் போன்ற திலகந் தரித்த, அரிவை யருடன் கலந்திடு = பொது மாதர்களுடன் சேருகின்ற, முகடியும் = மூதேவியாகிய அடியேனும், நலம் பிறந்திட = நன்மை பிறக்குமாறு, அருள்வாயே = திருவருள் புரிவீர்.

## பொழிப்புரை

அக்கினியைப்போல் ஒளிவிட்டு நிமிர்ந்த சடாமகுடத்தில் சந்திரனையும், சீறியெழுந்த கங்கா நதியையும், கொன்றை மலரையும் தரித்த சிவபெருமான் மகிழ்கின்ற தேவியும், மலையரையன் பெற்ற கரிய குயிலைப் போன்ற இனிய மொழியை யுடையவரும், மரகதமணி போன்ற நிறமுடைய கிளியை யொத்தவரும், எனது உயிர் போன்றவரும், மூன்று கண்களை யுடையவரும் ஆகிய அம்பிகையின் புதல்வராக விளங்கும் பெருவாழ்வினரே! திருவரையில் கட்டிய சதங்கை, இனிது ஒலிக்கின்ற கிண்கிணி, சிலம்பு, நெருங்கிய தண்டைகள், அழகிய மணிகள் பதித்த பாதச்சதங்கை என்பனவாய அணி கலன்கள் இனிமையாக ஒலிக்க, மயில்வாகனத்தின் மீது திரு வுள்ளம் மகிழ்ந்து எப்போதும் உலா வருகின்ற குமாரக் கட வுளே! திருக்கோயிலின்முன் கடலின் அலைகள் வந்து வந்து மோதுகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! காதுகளில் உள்ள இரு குழைகளையும் மோது கின்ற நீண்ட மீன்போன்ற கண்கள் ஒப்பற்ற குமிழமலர்

போன்ற நாசியை நெருங்கி வந்திடவும், இரண்டு வில் போன்ற புருவங்கள் நெரிந்து மேல் எழுந்திடவும், படுக்கையின்மீது இருண்ட கூந்தலின் சுருள், வஞ்சிக்கொடி போன்ற இடையில் உள்ள ஆடையுடன் குலையவும் இதழமுதமாகிய நஞ்சினையுண்டு மனம் அழிய, நறுமணங் கலந்த சந்தனச் சேற்றுடன் குங்குமம் மணஞ்செய்கின்ற தனங்களின் உச்சி பூரித்து எழுந்தொறும் அழகு நிறைய, பூரண சந்திரனைப் போன்ற திலகமணிந்த பொதுமகளிருடன் சேர்ந்த மூதேவியாகிய அடியேனுக்கு சிவஞானபோத நலம் பிறக்கத் திருவருள் புரிவீர்!

## விரிவுரை

**இருகுழை எறிந்த கெண்டைகள் :—**

பெண்களின் கண்கள் நீண்டிருக்க வேண்டும். அவ்வாறு நீண்ட கண்கள் காதுவரை சென்று மோதும். இது அக் கண்ணுக்கு அழகு.

> "மங்கையர் வதனசீத மதியிரு மருங்கும் ஓடி
> செங்கயல் குழைகள் நாடுந் திருமுனைப்பாடி நாடு"

என்று சேக்கிழார் பெருமானும் கூறுகின்றனர்.

கெண்டை—மீன். பெண்களுடைய கண்கள் பிறழுந் தன்மையால் மீனைப் போன்று இருக்கும். அதனால் கண்களைக் கெண்டைகள் என்றனர். இது உவம ஆகு பெயர்.

**ஒரு குமிழடர்ந்து வந்திட :—**

குமிழம் என்பது ஒரு மலர். அது பெண்மணிகளின் மூக்குக்கு உவமையானது. இங்கேயும் குமிழ் என்றது ஆகு பெயராக நாசியை யுணர்த்தியது. காதுவரை நீண்ட கண்கள் இப்புறம் நாசியையும் நெருங்கி யுள்ளன. அடர்ந்து—வந்திட. நெருங்கி அடர்ந்து உவந்திட எனப் பிரித்து நெருங்கி மகிழ்ந்திட எனவும் பொருள் படுத்திக் கொள்ளலாம்.

**இணைசிலை நெரிந்தெழுந்திட :—**

*சிலை*—வில். இங்கு இது புருவத்தைத் தெரிவிக்கின்றது. பொதுமகளிர் புருவத்தை நெரித்து நெரித்து ஆடவரை மயக்குவர்.

**இருளளக பந்தி :—**

கூந்தல் மிகவும் கருமையாகவும் அடர்ந்தும் இருக்கும்.

**வஞ்சியில்:—**

வஞ்சி—கொடி. இதுவும் ஆகுபெயராக இடையை யுணர்த்தியது. கொடி அசைவதுபோல் இடை அசைந் தசைந்து அழகு செய்யும்.

**இதழமு தருந்து சிங்கியின் மனமாய :—**

சிங்கி—குளிர்ந்து கொல்லும் பாஷாணம். இந்த நஞ்சு உண்டாரைக் கொல்லும்.அது இதழமுதமாகிய நஞ்சு. அதனை உண்டார் உய்யமாட்டார்.

'குமுத அமுத இதழ் பருகி யுருகிமயல்
கொண்டுற் றிடுநாயேன்' —(கொலமத) திருப்புகழ்.

**முழுமதி புரிந்த சிந்துர :—**

மகளிர் முழுச் சந்திரனைப்போல் வட்டமாகப் பொட்டு இட்டுக் கொள்வர். அப்பொட்டு பலரை மயக்கிப் பொட்டாகச் செய்யும்.

'பொட்டிலே அவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே அடியிலே ...
... ... ... ... ... ...
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே அலையாமல்' —தாயுமானூர்.

**முகடியும் நலம் பிறந்திட அருள்வாயே :—**

முகடி—மூதேவி. தூக்கம், மயக்கம், சோம்பல் முதலிய அசட்டுக் குணங்களுடையவள் மூதேவி. "முருகா! மூதேவி யாகிய அடியேனுக்கு நலம் விளைய அருள்வாய்" என்று சுவாமிகள் வேண்டுகின்றனர்.

நலம் என்றால் என்ன பொருள்? உண்பதுவா நலம்? உறங்குவதுவாநலம்? மனைவியுடன் மக்களுடன் வாழ்வதுவா நலம்? மாட மாளிகையுடன் வாழ்வதுவா? உண்பது நலம் என்றால், நம்மைவிடப் பன்மடங்கு அதிகமாக உண்ணுகின் றன ஆடு மாடுகள். உறங்கிக்கொண்டேயிருக்கும் எருமை. என்ன அருமை? விலங்குகள் கூட பெண் விலங்குகளுடன் கூடி இன்புறுகின்றன. மாடமாளிகையில் எலியும் பெருச் சாளியுங்கூட வாழ்கின்றன. மூட்டைப் பூச்சியும், எட்டுக் கால் பூச்சியும் வாழ்கின்றன. இதனால் அவைகள் நலமுடை யன அல்லவே.

இனி நலம் எது? தெய்வவுணர்ச்சி ஒன்றுதான் நலம்.

"கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேன்"

என்கின்றார் மணிவாசகர்.

"நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கார்"

என்பது சேக்கிழார் திருவாக்கு.

தனக்கென்று உரிய பொருள்கள் எல்லாவற்றையும், கருவி கரணங்களையும் இழப்பதுவே நலம் என்கின்றார் அறிவின் சிகரமாகிய அருணகிரிநாதர்.

"எல்லாமற என்னை இழந்த நலம்" —அநுபூதி.(2)

ஒன்றைப் பெற்றால் நலம் என்பது உலகியல்; எல்லா வற்றையும் இழப்பது நலம் என்பது அருளியல்.

"யாதனில் யாதனில் நீங்கியான் நோதல்
அதனில் அதனில் இலன்" —திருக்குறள்.

அனைத்தையும் விட்ட அருளாளர்க்கு உள்ளத்தில் சாந்தி நிலவும். கடைசி மூச்சு உள்ள வரை மறவாமல் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய திருக்குறள் ஒன்று. அதன் உயர்வு, இமயத்தினும் சிறந்தது. அதனை இங்கு கூறுகின்றேன்.

"அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு"

ஆ! ஆ! இத் தமிழ் அமிழ்தம் நம்மை உய்விக்கும். இதனை என்றும் மறந்துவிடக் கூடாது. ஆகவே எல்லாவற்றையும் விடுத்து இறைவன் திருவடியை யடுத்து உள்ளம் உருகும் நலம் பெற வேண்டும்.

**எரிவிட நிமிர்ந்த குஞ்சி :—**

குஞ்சி—ஆண் மயிர். இறைவனுடைய சடை தீப்பிழம்பு போல் சுடர் விட்டு நிமிர்ந்து ஒளி செய்யும். சடை என்பது இறைவனுடைய ஞானத்தின் அடையாளம். சிவமூர்த்தியின் சடை சிவந்திருக்கும். செம்மைப் பண்பையும் அது காட்டுகின்றது.

**நிலவொடு மெழுந்த கங்கையும் :—**

சிவபிரான் திங்களையும் கங்கையையும் சடை முடியில் தரித்திருக்கின்றார்.

சந்திரனைத் தரித்த வரலாற்றை திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 9 ஆம் பக்கத்திலும், கங்கையைத் தரித்த

வரலாற்றை இப்புத்தகம், 45 ஆம் பக்கத்திலும் பார்த்துக் கொள்ளுக.

சந்திரனை முடித்திருப்பது அருளின் அடையாளம். கங்கையை முடித்திருப்பது ஆற்றலின் அடையாளம்.

**சங்கரன் களி கூரும் :—**

சம்—சுகம்; கரன்—செய்பவன். சுகத்தைச் செய்பவன் சங்கரன். செய்கின்ற கைக்கும் கரம் எனப் பேர் அமைந்திருப்பதைக் காண்க. தினத்தைச் செய்வதனால் சூரியன் தினகரன் எனப் பெற்றான். ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்கின்ற சிவபெருமான் உமையம்மையாரின் உத்தம குணங்களைக் கண்டு மகிழ்கின்றார்.

**இமவரை தருங் கருங்குயில் :—**

இமவான் செய்த எல்லையில்லாத தவத்தினால் அகில லோக அன்னையாகிய பராசக்தி அவனுக்கு திருப்புதல்வியாக அவதரித்தனர்; குயிலனைய இனிய குரலுடையவர்.

**மரகத நிறந் தருங் கிளி :—**

மரகதமணி போன்ற நிறமும் கிளிபோன்ற மெல்லிய மொழியும் உடையவர்.

**எனதுயிரெனுந் த்ரியம்பகி :—**

அருணகிரிநாதருக்கு உயிர் போன்ற அருமையுடைய முக்கண்ணி. இந்த அடி அமுதம் போன்றது. கனியமுதம் அன்ன இனியது. பலமுறை கூறினும் தெவிட்டாதது.

> "இமவரை தருங் கருங்குயில் மரகத நிறந்தருங்கிளி
> எனதுயிரெனுந் த்ரியம்பகி பெருவாழ்வே"

என்று அநேக தடவை சொல்லிப்பாருங்கள். எத்துணைச் சுவையாக இருக்கின்றது என்பதை உணருங்கள்.

**மயிலேறி அகமகிழ்வுகொண்டு சந்ததம் வரு குமர :—**

திருச்செந்தூரில் உள்ள உற்சவ மூர்த்தி குமரவிடங்கர் என்ற பெயரையுடையவர். சகல அணிகலன்களையும் பூண்டு பெருமான் மயில்வாகனத்தில் செந்திலம் பதியில் திருவீதியில் உலா வருகின்றனன்.

**அலைபொருத செந்தில் தங்கிய :—**

கடலின் அலைகள் வந்து கோயில் வாயிலில் மோதுமாறு கடலுக்கு மிக அண்மையில் விளங்கும் திருத்தலம் செந்திலம்

பதி. பிறவிப் பெருங்கடலுக்குத் துறைமுக நகரம் திருச்செந்தூர். "எனது சரணமாகிய கப்பலில் ஊர்ந்தோரை நான் முத்திக்கரை சேர்ப்பேன்" என்று முருகப்பெருமான் கடற்கரையில் திருவடியாகிய ஓடத்துடன் இருக்கின்றான்.

## கருத்துரை

உமாசுதரே! செந்திற்குமாரக் கடவுளே! மாதர்மயக் குருவண்ணம் அருள் நலம் தந்து ஆட்கொள்வீர்.

## 15

இருள்விரி குழலை விரித்துத் தூற்றவு
மிறுகிய துகிலை நெகிழ்த்துக் காட்டவு
மிருகடை விழியு முறுக்கிப் பார்க்கவு
மைந்தரோடே

இலைபிள வதனை நடித்துக் கேட்கவு
மறுமொழி பலவு மிசைத்துச் சாற்றவு
மிடையிடை சிறிது நகைத்துக் காட்டவு
மெங்கள்வீடே

வருகென வொருசொ லுரைத்துப் பூட்டவும்
விரிமல ரமளி யணைத்துச் சேர்க்கவும்
வருபொரு ளளவி லுருக்கித் தேற்றவு
நிந்தையாலே

வனமனை புகுதி லடித்துப் போக்கவு
மொருதலை மருவு புணர்ச்சித் தூர்த்தர்கள்
வசைவிட நினது பதத்தைப் போற்றுவ
தெந்தநாளோ

குருமணி வயிர மிழித்துக் கோட்டிய
கழைமட வுருவு வெளுத்துத் தோற்றிய
குளிறிசை யருவி கொழித்துத் தூற்றிய
மண்டிநீரூர்

குழிபடு கலுழி வயிற்றைத் தூர்த்தெழு
திடர்மண லிறுகு துருத்திக் காப்பொதி
குளிர்நிழ லருவி கலக்கிப் பூப்புனை வண்டலாடா

முருகவிழ் துணர்க ளுகுத்துக் காய்த்தினை
விளைநடு விதணி லிருப்பைக் காட்டிய
முகிழ்முலை யிளைய குறத்திக் காட்படு
செந்தில் வாழ்வே

முளையிள மதியை யெடுத்துச் சாத்திய
சடைமுடி இறைவர் தமக்குச் சாத்திர
முறையருள் முருக தவத்தைக் காப்பவர்
தம்பிரானே.

## பதவுரை

குருமணி வயிரம் இழித்து=நல்ல நிறமுள்ள வயிர மணிகளை அடித்துத் தள்ளிக்கொண்டு, கோட்டிய கழை மட உருவும் வெளுத்து தோற்றிய=வளைந்த இள மூங்கிலின் உருவமும் வெளுத்துத் தோல்வியடையுமாறு வெண்மையும், குளிறு இசை=ஒலிக்கின்ற இசையையும் உடைய, அருவி கொழித்து தூற்றிய மண்டு நீர்=அருவியானது கொழித்துக்கொண்டு இறைக்கப் பெருகிய நீர், ஊர்=செல்லுகின்ற, குழிபடு கலுழி=ஆழ்ந்துள்ள கான்யாற்றின், வயிற்றை தூர்த்து=நடு இடத்தை அடைந்து, எழு திடர் மணல் இறுகு துருத்தி=உயர்ந்து எழுந்த மேட்டுமணலால் இறுகி நிற்கும் திட்டினிடத்தேயுள்ள, கா பொதி குளிர் நிழல் அருவி கலக்கி=சோலையில் அடர்ந்து குளிர்ந்தநிழலில் அருவியைக் கலக்கியும், பூ புனை=மலர் சூடியும், வண்டல் ஆடா=மகளிர் மணல் விளையாட்டு விளையாடியும், முருகு அவிழ் துணர்கள் உகுத்து=மணம் வீசுகின்ற பூங் கொத்துக்களை விட்டு, காய் தினை விளை நடு=கதிர்விடும் தினை விளைகின்ற கொல்லையின் நடுவில் உள்ள, இதணில் இருப்பை காட்டிய=பரண் மீது இருத்தலைத் தெரிவித்த, முகிழ்முலை=அரும்புகின்ற தனங்களையுடைய, இளைய குறத்திக்கு ஆட்படு=இளமை பொருந்திய வள்ளி நாயகிக்கு ஆட்பட்டு அருளிய, செந்தில் வாழ்வே=செந்திலில் வாழ்பவரே! முளை இளமதியைஎடுத்து சாத்திய=முளைக்கின்றஇளந்திங்களை எடுத்து அணிந்த, சடைமுடி=சடாம்குடத்தையுடைய, இறைவர் நமக்கு=சிவபெருமானுக்கு, சாத்திர முறையருள் முருக=சிவசாத்திரமுறையை உபதேசித்தருளிய முருகக் கடவுளே! தவத்தை காப்பவர் தம்பிரானே=தவத்தினைக் காக்கும் முனிவரர் போற்றும் தனிப்பெருந்தலைவரே! இருள் விரி குழலை விரித்து தூற்றவும்=இருண்டு விரிந்த கூந்தலை விரித்து சிக்கெடுத்து ஆற்றவும், இறுகிய துகிலைநெகிழ்த்து காட்டவும்=அழுத்தமாக உடுத்தியுள்ள ஆடையைச் சற்று தளர்த்திக் காட்டவும், இரு கடைவிழியும் முறுக்கி பார்க்கவும்=இரண்டு கடைக் கண்களால்சுழற்

றிப் பார்க்கவும், மைந்தரோடே = அங்கு செல்கின்ற ஆண் மைந்தருடன், இலை பிளவு அதனை நடித்து கேட்கவும் = வெற்றிலையையும் வெட்டுப் பாக்கையும் நடிப்புடன் கேட்கவும், மறுமொழி பலவும் இசைத்து சாற்றவும் = மறுமொழிகள் பலப்பல சொல்லிப் பேசவும், இடை இடை சிறிதுநகைத்து காட்டவும் = இடையிடையே சற்று புன்னகை புரியவும், எங்கள் வீடே வருக என ஒரு சொல் உரைத்து பூட்டவும் = "இது எங்கள் வீடு வாருங்கள்" என்று ஒரு சொல் சொல்லிப் பிணைத்தும்,விரிமலர் அமளி அணைத்துசேர்க்கவும் = விரிந்த மலர்ப்படுக்கையில் அணைத்துச் சேர்க்கவும், வரு பொருள் அளவில் உருக்கி தேற்றவும் = வந்த பொருள் அளவுக்குத் தக்கபடி உருக்கம் காட்டித் தெளிவித்தும், நிந்தையாலே வனைமனை புகுதில் அடித்து போக்கவும் = பின்னர் பொருள் கொடாவிடில் நிந்தனை பேசி அலங்கரித்துள்ள வீட்டில் புகுந்தால் அடித்து வெருட்டவும், ஒரு தலை மருவு புணர்ச்சி தூர்த்தர்கள் = ஒரு தலைக் காமத்தராய் புணரும் கொடியோர்களால் வரும், வசைவிட = பழிச்சொல் நீங்க, நினது பதத்தைப் போற்றுவது எந்த நாளோ = தேவரீருடைய திருவடியைப் போற்றி உய்வது எந்நாளோ?

## பொழிப்புரை

ஒலிக்கின்ற இசையையுடைய அருவியானது, நல்ல நிறமுள்ள வயிரமணிகளை அடித்துத் தள்ளியும், வளைந்த இளம் மூங்கிலின் நிறம் தோற்குமாறு வெண்மை நிறத்துடனும், வரவர நீர்ப்பெருக்கெடுத்து குழிபட்டுள்ள காட்டாறுகளின் நடு இடத்தைத் தூர்த்து உயரமாக்கிய மணல்கள் இறுகிய நடுத்திட்டில் சோலைகளின் அடர்ந்த குளிர்ந்த நிழலில், அருவியைக் கலக்கியும், மலர் சூடியும் இளமகளிர் மணல் விளையாட்டினை ஆடுகின்ற, மணம் வீசும் பூங்கொத்துக்களுடன் காய்த்த தினைப்புனத்தின் இடையில் உள்ள பரண்மீது விளங்குகின்ற அரும்பு போன்ற இளந் தன பாரங்களையுடைய வள்ளியம்மையாருக்கு ஆட்பட்டு அருள் புரிந்த செந்தில் ஆண்டவரே! இளம்பிறை மதியைச் சடை முடியில் தரித்த சிவபெருமானுக்குச் சிவ சாத்திர முறையை உபதேசித்தருளிய முருக மூர்த்தியே! தவத்தைக் காத்தருள்பவர் வணங்குகின்ற தனிப்பெருந் தலைவரே! இருண்டு விரிந்த கூந்தலை விரித்து ஆற்றவும், இறுக்கி யுடுத்த ஆடையைத் தளர்த்தி உடம்பைக் காட்டவும், இரண்டு கடைக் கண்களால் சுழற்றிப் பார்க்கவும், ஆண் மைந்தரோடு வெற்றிலைப் பாக்கை நடிப்புடன் கேட்கவும், மறுமொழிகள் பலப்பல சொல்லிப் பேசவும், இடையிடையே சிறிது புன்முறுவல் புரிந்தும், இதோ எங்கள் வீட்டிற்கு வாரும் என்று அழைத்து ஆசைக் கயிற்றால் கட்டியும், விரிந்த மலர்ப் படுக்கையில் தழுவி யணைத்தும், வந்த பொருளுக்குத் தக்கவாறு உருக்கம்

காட்டித் தெரிவித்தும், பணம் தீர்ந்தவுடன் வசை புகன்றும், அலங்கரித்த வீட்டில் புகுந்தவுடன் அடித்து விரட்டவும், ஒரு தலைக் காமத்துடன் புணர்கின்ற கொடிய விலைமாதர்களினால் வந்த பழிச்சொல் நீங்குமாறு தேவரீருடைய திருவடியைப் போற்றி உய்யும் நாள் என்றோ ?

## விரிவுரை

**இருள் விரி குழலை விரித்துத் தூற்றவும் :—**

பொதுமகளிர் மாலை நேரத்தில் தெருச் சந்தியில் நின்று அங்கு போவாரும் வருவாரும் தமது மயலில் சிக்கும்படி, இருள் போன்ற கூந்தலை விரித்து அதைச் சிக்கெடுப்பார் போல் அபிநயித்து அதில் கமழும் நறுமணம் வீசுமாறு கையால் கோதிக்கொண்டு நிற்பர்.

> "அங்கை மென்குழ லாய்வார் போலே
> சந்தி நின்றய லோடே போவார்
> அன்பு கொண்டிட நீரோ போறீர் அறியீரோ" —திருப்புகழ்.

**இறுகிய துகிலை நெகிழ்த்துக் காட்டவும் :—**

மேலும் அம்மகளிர் துறந்தவரும் துறவு நிலையை மறந்திடுமாறு நடுவீதி நின்று தமது ஆடை சிறிது சரிய நின்று சாகசம் புரிவர்.

> "முலையிலுறு துகில் சரிய நடுவீதி நிற்பர்"
> —(குமரகுருபர முருக குகனே) திருப்புகழ்.

**இருகடை விழியு முறுக்கிப் பார்க்கவும் :—**

அவ் விலைமகளிருக்குச் சிறந்த பாணம் இருகண்களே யாகும். அக்கணைகளினால் எத்துணை உறுதியுடைய வீர உள்ளத்தையும் பிளந்துவிடுவர். கணையின் முனையே அதிக கூர்மையுடன் பிளக்கவல்லது. அதுபோல் அக் கண்களின் கடைப் பகுதியே மிகுந்த வேகமுள்ளது. கடைக்கண் பார்வையை வேகமாகச் சுழற்றிப் பார்த்தால் ஆடவர் மந்திரத்தால் கட்டுண்ட நாகம்போல் வேகமடங்கி மயங்கி விழுவர்.

> "யமபடை யென அந்திக்குங்கட் கடையாலே"
> —(பரிமளகளப) திருப்புகழ்.

**மைந்தரோடே இலை பிளவதனை நடித்துக் கேட்கவும் :—**

"பால் சாப்பிடுங்கள் ; பழஞ் சாப்பிடுங்கள் ; பட்சணம் சாப்பிடுங்கள்" என்கின்றார்கள். "வெற்றிலை பாக்குப் போட்

டுக் கொள்ளுங்கள்" என்கின்றார்கள். உண்ணுகின்ற பொருளாகிய இதனைத் தாம்பூலம் சாப்பிடுங்கள் என்று கூறுவதில்லை. "தாம்பூலம் போட்டுக்கொள்ளுங்கள்" என்கின்றார்கள். என்ன காரணம்?

நன்றாக வயிறு நிறைய உண்டபின் வாய்க்கு அலங்காரப் பொருளாகவே தாம்பூலத்தை உபயோகப்படுத்துகின்றார்கள். காதுக்கு அணிகலம் கடுக்கன்; கண்ணுக்கு அணிகலம் மை. கைக்கு அணிகலம் தங்கச் சங்கிலி; விரலுக்கு அணிகலம் மோதிரம். அலங்காரப் பொருள்களைப் போட்டுக்கொள்ளுங்கள் என்பதே மரபு. கடுக்கன் போட்டுக் கொள்ளுங்கள்; மை போட்டுக்கொள்ளுங்கள்; அங்கவஸ்திரம் போட்டுக்கொள்ளுங்கள்; என்பது போல தாம்பூலம் அலங்காரப் பொருள் என்பதைத் தெரிவிக்கவே, "தாம்பூலம் போட்டுக்கொள்ளுங்கள்" என்கின்றார்கள். என்ன அழகான மரபு! நம் முன்னோர்கள் எந்த சொல்லையும் நன்கு சிந்தித்துச் சொன்னார்கள்.

விலைமகளிர் தம்பால் வரும் ஆடவரிடம் கொஞ்சுதலாக நடித்து 'வெற்றிலை பாக்குத் தாருங்கள்' என்று கேட்டுப் பெறுவர்.

**மறுமொழி பலவு மிசைத்துச் சாற்றவும் :—**

ஆடவர்கள் கேட்கும் வினாக்களுக்கெல்லாம் இனிமையாக மறுமொழி கூறி மகிழ்விப்பர்.

**இடையிடை சிறிது நகைத்துக் காட்டவும் :—**

பேச்சுக்கு இடையிடையே மெல்லச் சிறிது புன்சிரிப்பு சிரித்துக் கொள்வார்கள். இவைகள் அவர்கள் புரியும் சாகஸங்கள்.

**எங்கள் வீடே வருகென ஒரு சொலுரைத்துப் பூட்டவும் :—**

சந்தியில் நின்றுகொண்டு அப் பொதுமகளிர், வழியோடு போகும் இளைஞர்கள்மீது கண்வலை வீசி, "வணக்கம்; உங்கள் வரவு நல்வரவு. உங்களைப் பார்த்ததே பரம சந்தோஷம். ஏன் நடுத் தெருவில் நின்று பேசவேண்டும்? உங்கள் பாதம் பட்டால் போதும். இதோ என் வீடு. வாருங்கள். உள்ளே போவோம்" என்று அழைப்பர்.

> "இங்கு நின்றதென் வீடே வாரீர்
> என்றிணங்கிகள் மாயாலீலா
> இன்பசிங்கியில் வீணேவீழா தருள்வாயே"—(அங்கை) திருப்புகழ்.

பூட்டவும்—மோகமாகிய சங்கிலியால் கட்டிப்பிணித்துவிடுவர்.

**வருபொருளளவி லுருக்கித் தேற்றவும் :—**

விலைமகளிர், தமக்குத் தரும் பொருளுக்கு ஏற்ற அளவில் தமது நேயத்தை நீட்டி உபசரிப்பார்.

"களவி னெடுபொரு ளளவள வருளிய கலவி"

—(குமரகுருபர குணதர) திருப்புகழ்.

**நிந்தையாலே வனைமனை புகுதி லடித்துப் போக்கவும் :—**

பொருள் தீர்ந்து வறியவரான ஆடவரை நிந்தித்தும், அவர்கள் தமது அலங்கரித்த வீட்டிற்கு வந்தால் அடித்தும் புடைத்தும் அகற்றுவர்.

"* * * * * கைதான் வரண்டால்
போய்வாரு மென்று நடுத்தலைக்கே குட்டும் பூவையர்"

—பட்டினத்து சுவாமிகள்.

**ஒருதலை மருவு புணர்ச்சித் தூர்த்தர்கள் :—**

இருவரும் மனம் ஒத்து மகிழாமல், ஒருவர் மட்டும் விரும்பி மற்றொருவர் விரும்பாமல் சேர்வது கைக்கிளை எனப்படும்.

**வசைவிட நினது பதத்தைப் போற்றுவது எந்த நாளோ ? :—**

மேலே கூறியபடி பொதுமகளிர் வசம் சேர்ந்து அதனால் வந்த பழிமொழி அகலுமாறு முருகனுடைய திருவடியைப் போற்றிப் புகழ்தல் வேண்டும். முருகனை நினைந்தால் பிற நினைவுகள் தாமே அகலும். ஒளியுண்டானால் இருள் தானே நீங்குமாப்போல் எனவுணர்க.

**குருமணி......துருத்தி :—**

இந்த மூன்று அடிகளிலும் வள்ளியம்மையார் வாழும் தினைப்புனத்தின் சிறப்பையும், அவ்வனத்தில் ஓடும் காட்டாற்றின் அழகையும், அங்கு மகளிர் ஆடும் திறத்தையும் அழகாகக் கூறுகின்றனர்.

மூங்கிலின் வெண்மையினும் சிறந்த வெண்மை நிறத்துடன் காட்டாறு ஓடுகின்றது. அதில் சிறந்த நிறமுள்ள வயிரக் கூழாங்கற்கள் அடித்துச் செல்லப்படுகின்றன. அந்த நதியின் ஓசை நல்ல இசையுடையதாக உளது. ஆற்றின் நடு இடம் மணலால் நிரம்புகின்றது. ஆற்றுக்கு நடுவே சிறு திட்டுக்கள் உண்டாகின்றன. அவ்வாறு உண்டாகுந் திட்டுக்குத் துருத்தி என்று பெயர். அத் துருத்தியாகிய ஆற்றிடையில் நல்ல குளிர் மரங்கள் ; குளிர்ந்த நிழல் ; அங்கு சிற்றருவியும் ஓடுகின்றது. அதில் நீராடி மகளிர் மணல் விளையாட்டுக்

கள் ஆடுகின்றார்கள். இப்படி இயற்கை வளத்தைச் சுவாமிகள் இனிய தமிழ்ச் சொற்களால் இனிது எடுத்துக் கவி புனைகின்றார்கள்.

துருத்தி :—

ஆற்றுக்கு நடுவேயுள்ள திட்டுக்குத் துருத்தி என்று பெயர். திருத்துருத்தி; திருப்பூந்துருத்தி என்ற திருத்தலங்களை நோக்குக. இத் தலங்கள் ஆற்றுக்கு இடையே உள்ளவை என்ற கருத்தில் அப்பேரைத் தாங்கின. இன்றும் மலையாளத்தில் கழிகளுக்கு இடையில் உள்ள பகுதிகளைத் துருத்தியெனக் கூறுகின்றார்கள்.

## கருத்துரை

வள்ளி மணவாளரே! செந்திலாண்டவரே! மாதர் வசமுற்று மதியழியாது தேவரீரைப் போற்றி உய்ய அருள் புரிவீர்.

## 16

உததியறல் மொண்டு சூல்கொள்கரு
முகிலெனஇ ருண்ட நீலமிக
ஒளிதிகழு மன்ற லோதிநரை பஞ்சுபோலாய்
உதிரமெழு துங்க வேலவிழி
மிடைகடையொ துங்கு பீளைகளு
முடைதயிர்பி திர்ந்த தோஇதென வெம்புலாலாய்
மதகரட தந்தி வாயினிடை
சொருகுபிறை தந்த சூதுகளின்
வடிவுதரு கும்ப மோதிவளர் கொங்கைதோலாய்
வனமழியு மங்கை மாதர்களி
னிலைதனையு ணர்ந்து தாளிலுறு
வழியடிமை அன்பு கூருமது சிந்தியேனோ
இதழ்பொதிய விழ்ந்த தாமரையின்
மணவறைபு குந்த நான்முகனு
மெறிதிரைய லம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழிது யின்ற நாரணனு
முமைமருவு சந்த்ர சேகரனு
மிமையவர்வ ணங்கு வாசவனு நின்றுதாழும்

முதல்வசுக மைந்த பீடிகையி
னகிலசக அண்ட நாயகிதன்
முகிழ் முலைசு ரந்த பாலமுத முண்டவேளே

முளைமுருகு சங்கு வீசியலை
முடுகிமைத வழ்ந்த வாய்பெருகி
முதலிவரு **செந்தில்** வாழ்வுதரு தம்பிரானே.

## பதவுரை

இதழ்பொதி அவிழ்ந்த தாமரையில் = இதழின் கட்டு விரிந்த தாமரை மலரில், மண அறை புகுந்த நான்முகனும் = வாசனையுடைய வீடாக அமர்ந்திருக்கின்ற பிரமதேவரும், எறிதிரை அலம்பு பால் உததி = அலைகள் வீசும் திருப்பாற் கடலில், நஞ்சு அரா மேல் = நஞ்சுடன் கூடிய பாம்பின் மீது, இருவிழி துயின்ற நாரணனும் = இரு விழிகளும் துயில்புரிகின்ற திருமாலும், உமை மருவு சந்த்ர சேகரனும் = உமா தேவியாரை இடப் பாகத்தில் கொண்ட உருத்திர மூர்த்தியும், இமையவர் வணங்கு வாசவனும் = தேவர்கள் வணங்குகின்ற இந்திரனும், நின்று தாழும் முதல்வ = சந்நிதியின் முன்னே நின்று வணங்க அவர்கட்கு அருள் புரியும்முழு முதற் கடவுளே! சுகமைந்த = சுகத்தைத் தரும் குமார மூர்த்தியே! பீடிகையின் = சிறந்த பீடத்தில் விளங்கும், அகிலஜக அண்ட நாயகி தன் = எல்லா உலகங்களுக்கும் எல்லா அண்டங்களுக்குந் தலைவியாகிய உமாதேவியாருடைய, முகிழ்முலை சுரந்த பால் அமுதம் உண்ட = குவிந்த திருமுலையினின்றும் சுரந்த பால் அமுதத்தைப் பருகிய, வேளே = முருகவேளே! வளைமுருகு சங்குவீசி = மிக்க இளமையான சங்குகளை கரையில் வீசியெறிந்து, அலைமுடுகிமை தவழ்ந்த வாய்பெருகி = அலைகடல் வேகமாக வீசுகின்றதும் மைநிறம் பொருந்தியதுமாகிய கடலின் அருகில் வளம்பெருகி, முதல் இவரு = ஞானமுதல் உயர்கின்ற, செந்தில் வாழ்வு தரு = திருச்செந்தூரில் எழுந்தருளி அடியார்கட்கு வாழ்வைத் தருகின்ற, தம்பிரானே = தனிப்பெருந் தலைவரே! உததி அறல் மொண்டு சூள்கொல் = கடல் நீரை மொண்டு குடித்துக் கருக் கொண்ட, கருமுகில் என = கரிய மேகம் போல், இருண்ட நீல மிக ஒளி திகழும் = இருண்டுள்ள நீலநிற மிகுந்திருப்பதனால் ஒளி வீசுவதும், மன்றல் = வாசனையுடையதுமாகிய ஓதி = மயிரானது, நரை பஞ்சுபோல் ஆய் = நரைத்து பஞ்சுபோல் ஆகி, உதிரம் எழுதுங்க வேலவிழி = இரத்த ஓட்டம் நிறைந்து பரிசுத்தமாகிய வேல் போன்ற கண்கள், மிடைகடை ஒதுங்கு பீளைகளும் = செறிந்து ஓரங்களில் ஒதுங்குகின்ற பீளைகளும், முடை தயிர் பிதிர்ந்ததோ இது என = இது நாற்றமடிக்கின்ற தயிர் பிதிர்ந்ததுபோல், வெம்புலால்ஆய் = கொடிய தீய நாற்றத்துடன் கூடியதாகி, மதகரட

தந்தி வாயின் இடை=கரட மதம் பொழிகின்ற யானையின் வாயி னிடத்தே, சொருகு பிறை தந்த சூதுகளின் வடிவுதரு=சொருகியுள்ள பிறைச் சந்திரனைப் போன்ற வடிவத்துடன் கூடிய தந்தத்தினால் கடைந்த சூதுக் கருவியைப் போன்று, கும்பமோதி வளர் கொங்கை தோலாய்=குடத்தைத் தகர்த்து வளர்கின்ற தனங்கள் தோல் போலாகி, வனம் அழியு மங்கை மாதர்களின்=அழகு அழிகின்ற இளம் பெண்களின், நிலைதனை உணர்ந்து=நிலையாமையை உணர்ந்து, தாளில் உறு=தேவரீர் திருவடியில் பொருந்துகின்ற, வழி அடிமை= வழிவழியாக அடிமை பூண்ட நாயினேன், அன்பு கூரும் அது சிந்தி யேனோ?=அன்பு கூர்கின்ற நெறியினை எண்ண மாட்டேனோ?

## பொழிப்புரை

இதழ் விரிந்த தாமரையாகிய மணங்கமழும் கோயிலில் வாழுகின்ற நான்முகக் கடவுளும், அலை வீசுகின்ற திருப்பாற் கடலில் ஆதிசேடன்மீது அறிதுயில்புரிகின்ற நாராயண மூர்த்தியும், உமாதேவியாரை இடப் பாகத்திற் கொண்ட வரும் சந்திரனை முடித்தவரும் ஆகிய உருத்திர மூர்த்தியும், தேவர்கள் தொழுகின்ற இந்திரனும் திருமுன் நின்று தொழ அருள்புரிகின்ற முழுமுதற் கடவுளே! (ஆன்மாக்களுக்கு) இன்பத்தைத் தருகின்ற குமாரக் கடவுளே! சிறந்த பீடத்தில் விளங்கும் எல்லா உலகங்களுக்கும் அண்டங்களுக்கும் தலைவி யாகிய உமையம்மையாரின் குவிந்த தனங்களினின்றுஞ் சுரந்த பால் அமிர்தத்தைப் பருகிய குமாரவேளே! மிக்க இளமையான சங்குகளை வீசும் அலைகளுடன் கூடி கரிய நிறம் பொருந்திய கடற்கரையில் ஞான முதல் உயர்கின்ற திருச் செந்தூரில் எழுந்தருளி அடியார்க்கு வாழ்வு தருகின்ற தனிப் பெருந் தலைவரே! கடல் நீரை மொண்டு குடித்து கருக் கொண்ட மேகம்போல் இருண்ட நீல நிறம் மிகுந்து ஒளி வீசு கின்றதும் மணம் வீசுவதும் ஆகிய கூந்தல் நரைத்து பஞ்சு போலாகியும், உதிரம் நிறைந்து தூய வேல்போன்ற கண் களின் ஓரங்களில் நாறுகின்ற தயிர் பிதிர்ந்ததுபோல் பீளைகள் ஒதுங்கி மிகுந்த தீய வாசனை வீசவும், கரட மதம் பொழி கின்ற யானையின் வாயில் பிறைச் சந்திரனைப்போல் திகழ் கின்ற தந்தத்தினால் கடைந்த சூதுக் காய்கள்போல் குடத்தை மோதி வளர்கின்ற தனங்கள் தோல்போல் ஆகியும், அழகு அழிகின்ற இளம் பெண்களின் நிலைமையுணர்ந்து, தேவரீ ருடைய திருவடியில் பொருந்துகின்ற வழியடிமையாகிய நாயேன் அன்புகொண்டு உய்யும் நெறியைச் சிந்திக்க மாட்டேனோ?

## விரிவுரை

**உததியறல்மொண்டு......பஞ்சு போலாய் :—**

கல்வியின் பயன் கடவுளை யடைவதே. "உள்ள நிறைக் கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றல் தெள்ளி வடித் தறிந்த பொருள் சிவன் கழல் செறிவு" என்றார் சேக்கிழா ரடிகள். கல்வியையும், அறிவையும், இறைவனுக்கே உரிமை யாக்கவேண்டும். கற்புடைய பெண் தன் அழகையும் நலத்தை யும் தன் கணவனுக்கே பயன்படுத்துவாள்.

அங்ஙனமின்றி கல்வி கற்று, அக் கல்வி நலத்தை மாதர் களைப் புகழ்வதில் பயன்படுத்துவது பேதைமை. காமதேனு வின் பாலைக் கமரில் உகுப்பதற்கு நிகராகும்.

யாமோதிய கல்வியும் எம்மறிவும்
தாமேபெற வேலவர் தந்தது" —அநுபூதி. (17)

புலவர்கள் உய்யு நெறியுணராது பெண்களது குழலையும், விழியையும், மொழியையும், தனத்தையும் புகழ்ந்து பாழ்படு கின்றனர்.

கூந்தலை "மேகம்" என்றும், "கமுகின் பாளை" யென்றும், "சைவலம்" என்றும், "கருமணல்" என்றும் பற்பல புகழ்ந்து கவிபாடுவர். அத்தகைய கூந்தல் பின்னர் நரைத்து பஞ்சுபோலாகி விடுகின்றது.

**உதிரமெழு துங்க வேல விழி......வெம்புலாலாய் :—**

கண்கள் "சேல்" என்றும், "வேல்" என்றும், "கணை" என்றும் "மான்" என்றும் பலப்பலவாக விதந்தும் வியந்தும் பாராட்டிப் பேசுவர். அக் கண்கள் பெண்கள் மூப்புற்ற போது, பீளை யொதுங்கி மிகுந்த அருவருப்புக்கு இடனாக தீய நாற்றம் வீசுவதாக ஆகின்றது.

தெண்ணீர்க் குவளை பொருகயல் வேலென்று
கண்ணில்புன் மாக்கள் கவற்ற விடுவேனோ
உண்ணீர் களைந்தக்கால் நுங்குசூன் றிட்டன்ன
கண்ணீர்மை கண்டொழுகு வேன். —நாலடியார்.

கண்களில் உள்ள நீர் வற்றிவிட்டால் நுங்கைத் தோண்டி யதை யொத்து விகாரமாகின்றது.

ஆதலின் பெண்களின் கண்களை நயந்து வியந்து நலியா மல் இறைவனுடைய திருக்கண்களைப் புகழ்ந்து உய்தல் வேண்டும்.

**மதகரட தந்த......கொங்கை தோலாய் :—**

யானைத் தந்தத்தினால் கடைந்து செய்யப்பட்ட சூதுக் கருவியைப் போன்றது என்றும், 'தாமரைமுகை' என்றும், "இளநீர்க் குரும்பை" என்றும், 'பொற்குடம்' என்றும் புகழ்ந்து பேசப்பட்ட தனங்கள் தோலாகின்றன. அவைகளை நினைந்து மாலாகியழியற்க.

ஊறி யுவர்த்தக்க ஒன்பது வாய்ப் புலனுங்
கோதிக் குழம்பலைக்குங் கும்பத்தைப்—பேதை
பெருந்தோளி பெய்வளா யென்னுமீப் போர்த்த
கருந்தோலார் கண்விளக்கப் பட்டு. —நாலடியார்.

அன்றியும் பெண்களது பற்களை "முல்லையரும்பு" என்றும், "முத்து" என்றும், "மயிலிறகின் அடி" யென்றும் வர்ணனை செய்வர். அந்தப் பற்கள் சுடலையில் உதிர்ந்து கிடப்பதைக் காணும்போது எத்துணை அருவருப்பாக இருக்கிறது.

முல்லைமுகை முறுவல் முத்தென் றிவைபிதற்றுங்
கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவனோ
எல்லாருங் காணப் புறங்காட் டுதிர்த்துக்க
பல்லென்பு கண்டொழுகு வேன். —நாலடியார்.

**வனமழியுமங்கை மாதர்களின் நிலைதனையுணர்ந்து :—**

அழகுபோல் தோன்றி, பின் அழிந்து நிலைகுலையும் மாதர் களைக் கண்டு மயங்குதல் மதியின்மை.

குடருங் கொழுவுங் குருதியும் என்புந்
தொடரு நரம்பொடு தோலும்—இடையிடையே
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள்
எத்திறத்தாள் ஈர்ங்கோதை யாள். —நாலடியார்.

இங்ஙனம் நிலைகுலையும் மாதரழகை, அழகென்று கருதாது, என்றும் பொன்றாது அழகுடன் விளங்கும் இறைவனைப் பேணுதல் வேண்டும்.

**தாளிலுறு வழியடிமையன்புகூருமது சிந்தியேனோ? :—**

இறைவனுடைய திருவடிக்கு அருணகிரிநாதர் வழிவழியாக அடிமைப்பட்டவர். அடிகள் பல இடங்களில் தம்மைப் பற்றி இவ்வண்ணம் கூறுகின்றனர்.

"தஞ்சமாகியெ வழிவழி யருள்பெறும்
அன்பினாலுன தடிபுக ழடிமையெ னெதிரேநீ"
—(பஞ்சபாதக) திருப்புகழ்.

"எழுமையு மெனைத்தனது கழல்பரவு பத்தனென
இனியகவி யப்படிப்ர சாதித்த பாவலனும்" —திருவகுப்பு(12)

"முடியவழி வழியடிமை யெனுமுரிமை யடிமைமுழு
துலகறிய மழலைமொழி கொடுபாடு மாசுகவி" —திருவகுப்பு.(1)

அன்பு செய்வார்க்கு இறைவன் எளிதில் அருள்புரிவான். அன்புருவாய இறைவனை அன்பினாலேயே அடைதல் வேண்டும். "அன்பினில் விளைந்த ஆரமுது" ஆகிய இறைவன் பால் அன்பு செய்து இன்பமெய்துக.

ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுவான்
ஆரேனும் காணா அரன்.

**இதழ் பொதியவிழ்ந்த தாமரையின் மணவறை புகுந்த நான்முகனும் :—**

பிரமதேவர் தாமரைக் கமலத்தில் வீற்றிருப்பர். தாமரை மண்ணில் தோன்றுவது. மண்ணிலிருந்து எல்லாப் பொருள்களும் உண்டாகின்றன. பிரமதேவர் சிருஷ்டிக் கடவுள் ஆதலால் தாமரை மலரில் வாழ்கின்றனர். மலர்களில் உயர்ந்தது தாமரை. "பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை" என்பது தேவாரம்.

**எறிதிரையலம்பு பாலுததி நஞ்சராமேல் இரு விழி துயின்ற நாரணனும்:—**

திருமால் திருப்பாற் கடலில் துயில்புரிகின்றனர். ஏன்? அவர் காத்தற் கடவுள். உலகில் உள்ள உயிர்களை யெல்லாம் காப்பது நீர். "நீரின்றி அமையாது உலகம்" ஆதலின் நீரிடைத் துயில்கின்றனர். அன்றியும் ஆதிசேடன் வெள்ளை நிறமுடைய பாம்பு. அது சுழுமுனை என்ற வெள்ளைநாடி. அந்த சுழுமுனையில் திருமால் அறிதுயில் (யோக நித்திரை) செய்கின்றனர்.

**உமை மருவு சந்த்ரசேகரனும்:—**

உமையம்மையாரை இடப்பாகத்தில் கொண்ட சந்திர சூடியாகிய உருத்திரமூர்த்தி. இது பரமசிவத்தைக் குறிக்காது. உருத்திரர் வேறு. பரமசிவம் வேறு. உருத்திரர் மூவரில் ஒருவர். அவருக்குக் குணம் குறி செயல் வடிவு முதலியன உண்டு. அவர் சங்காரகர்த்தா. ஆதலின் சுடலையில் இருப்பர்.

பரமசிவம் மூவரும் அறியா முழுமுதல். "சதுர்த்தம்" என்று உபநிடதங்கள் கூறுகின்றன. "மூவரும் அறிகிலர் யாவர் மற்றறிவார்" என்பது திருவாசகம். இந்த நுணுக்கம் அறியாதவர் பரமசிவத்தை மூவரில் ஒருவராக எண்ணியும் கூறியும் இடர்ப்படுவர்.

தேவதேவன் மெய்ச் சேவகன் தென்பெருந்துறை நாயகன்
மூவராலு மறியொணு முதலாய ஆனந்த மூர்த்தியான்
யாவராயினும் அன்பரன்றி யறியொணு மலர்ச் சோதியான்
தூயமாமலர்ச் சேவடிக்கண் நஞ்சென்னி மன்னிச் சுடருமே.

சாவமுன் ஞன்தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவவெந் தாயென் றவிதா விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிராளுெடும் எண்ணிவிண் ணுண்டுமண்மேல்
தேவரென் றேஇறு மாந்தென்ன பாவந் திரிதவரே.

—திருவாசகம்.

**இமையவர் வணங்கு வாசவனும்:—**

வாசவன் - இந்திரன். தேவர்களுக்குத் தலைவன் ஆதலின் இந்திரனை இமையவர் வணங்குகின்றனர். இவன் மழைக்கு அதிகாரி; மேகநாதன். போகங்களை நுகர்பவன். அதனுல் போகியெனப்படுவான்.

**நின்று தாழும் முதல்வ :—**

மாலும் அயனும் உருத்திரனும் இந்திரனும், குமாரக் கடவுள் திருமுன் நின்று தத்தம் தொழில்கள் இனிது நிகழு மாறு இறைஞ்சுகின்றனர். முத்தொழிலுக்கும் மூவருக்கும் முதல்வர் முருகவேளே.

"படைத்தளித் தழிக்கும் த்ரிமூர்த்திகள் தம்பிரானே"

—(கனைத்ததிர்க்கு) திருப்புகழ்.

"மன்ருவயற்பதி மன்ருமுவர்க்கொரு தம்பிரானே"

—(என்ருல்) திருப்புகழ்.

**முனைமுருகு சங்குவீசி :—**

திருச்செந்தூர் கடற்கரையில் விளங்கும் ஒரு அருமை யான திருத்தலம். "திருச்சீரலைவாய்" எனப்படும். அந்தக் கடல் அலைகள் சங்குகளையும் முத்துக்களையும் கொழிக்கின் றன. இயற்கை வளஞ் செறிந்த இனிய தலம்.

"வாலுக மீதுவண்ட லோடிய காலில்வந்து
சூல்நிறை வானசங்கு மாமணி யீனவுந்து
வாரிதி நீர்ப ரந்த சீரலை வாயுகந்த பெருமாளே"

—(பூரணவார) திருப்புகழ்.

**வாழ்வுதரு தம்பிரானே:—**

முருகவேள் செந்திலில் வாழ்வதனுல் உயிர்கள் இன்புற்று வாழ்கின்றன.

## கருத்துரை

மூவர் முதல்வரே! உமைபாலரே! செந்திலாண்டவரே! மாதர்களது மயலில் மயங்காது உமது திருவடியில் அன்பு வைத்து உய்ய அருள்புரிவீர்.

## 17

ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணு
ஈனனை வீணனை ஏடெழு தாமுழு
ஏழையை மோழையை அகலாநீள்

மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மையி லாதனை இகழாதே
மாமணி நூபுர சீதள தாள்தனி
வாழ்வுற ஈவது மொருநாளே

நாவலர் பாடிய நூலிசை யால்வரு
நாரதனுர்புகல் குறமாதை
நாடியெ கானிடை கூடிய சேவக
நாயக மாமயி லுடையோனே

தேவி மனோமணி யாயிபராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே
சேணுயர் சோலையி னீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே.

## பதவுரை

நாவலர் பாடிய நூல்=புலவர்கள் பாடிய நூல்களை, இசையால் வரு=இசையால் பரப்பிவருகின்ற, நாரதனுர் புகல்=நாரத முனிவர் புகன்ற, குற மாதை=குறமகளாகிய வள்ளியம்மையாரை, நாடியெ= நாடிச்சென்று, கானிடை கூடிய சேவக=கானகத்திலே மருவிய வீரரே! நாயக=தலைவரே! மாமயில் உடையோனே=சிறந்த மயிலை வாகனமாக வுடையவரே! தேவி=ஒளிமயமானவரும், மனோமணி= மனத்திற்கு இசைந்த மணியும், ஆயி=அகில வுலகங்களுக்கும் அன்னை யும், பராபரை=பெரிய பொருளும், தேன் மொழியாள் தரு=தேன் போன்ற இனிய மொழியை யுடையவரும் ஆகிய பார்வதியம்மையார் தந்தருளிய, சிறியோனே=இளம் புதல்வரே! சேண் உயர் சோலையில்

நீழலிலே திகழ்=விண்ணளவாக உயர்ந்துள்ள சோலையின் நிழலிலே விளங்குகின்ற, சீரலைவாய் வரு=திருச்செந்தூரிலே எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! ஏவினை நேர்விழி=அம்பை நிகர்த்த கண்களையுடைய, மாதரை மேவிய=பெண்களை விரும்பிய, ஏதனை=குற்றமுடையவனை, மூடனை=அறிவில்லாதவனை, நெறிபேணு ஈனனை=நல்லவழியை விரும்பாத குறைபாடு உடையவனை, வீணனை=வீண்பொழுது போக்குபவனை, ஏடு எழுதா முழு ஏழையை=ஏடு எடுத்து எழுதாத முழு முட்டாளை, மோழையை=மடையனை, அகலா நீள் மாவினை மூடிய=நீங்காது நீண்டுள்ள பெருவினை மூடிய, நோய் பிணியாளனை=நோய்களால் கட்டுண்டவனை, வாய்மை இலாதனை=உண்மை யில்லாதவனை, இகழாதே=இகழ்ந்து தள்ளிவிடாமல், மாமணிநூபுர=சிறந்த இரத்தினமணிகள் பதித்த சிலம்புகள் தரித்தும், சீதள=குளிர்ச்சியுடையதும் ஆகிய, தாள்=தேவரீருடைய திருவடியை, தனிவாழ்வுஉற=ஒப்பற்ற வாழ்வைப் பெறுமாறு, ஈவதும்=அடியேனுக்குத் தந்து உதவுவதும், ஒருநாளே=ஒருநாள் உளதோ?

## பொழிப்புரை

புலவர்கள் பாடிய நூல்களை இசையினால் பாடிப் பரப்பி வருகின்ற நாரதமுனிவர் அறிவித்த வள்ளி பிராட்டியை நாடிக்கானகஞ் சென்று அவரை மருவிய வீரரே! தனிப்பெருந் தலைவரே! சிறந்த மயில் வாகனரே! ஒளியுருவமானவரும் மனத்தில் மணியாக இருப்பவரும், எல்லா வுலகங்கட்கும் அன்னையும், பெரும்பொருளும், தேன் போன்ற சொற்களையுடையவரும் ஆகிய உமையம்மையார் பெற்ற இளம் புதல்வரே! விண்ணளவாக வுயர்ந்த சோலையின் நிழலிலே விளங்குகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! கணைபோன்ற கூரிய கண்களையுடைய பெண்களை விரும்பி குற்றமுடையவனும், மூடனும், நன்னெறியை விரும்பாத குறைபாடுடையவனும், வீண் பொழுது போக்குபவனும், கல்வியறிவே யில்லாத பாமரனும், மடையனும், விட்டு நீங்காது நீண்டுள்ள பெருவினைகள் மூடிய நோய்களால் கட்டுண்டவனும் உண்மையில்லாதவனும் ஆகிய அடியேனை இகழ்ந்து தளளி விடாமல், உயர்ந்த இரத்தின மணிகள் பதித்த சிலம்பணிந்த குளிர்ந்த திருவடியை, அடியேன் ஒப்பில்லாத உயர்ந்த வாழ்வைப் பெறுமாறு தருகின்ற நாள் ஒன்று உண்டாகுமோ?

## விரிவுரை

**ஏவினை நேர்விழி மாதர்:—**

ஏ—கணை; பெண்களின் கண்கள் கணைபோன்று கூர்மையானவை. கணை நெஞ்சைப் பிளப்பதுபோல் அவர்கள் பார்வையும் மனதைப் பிளக்கும் வன்மையுள்ளது.

**ஏதனே :—**

ஏதம்—குற்றம். மன வாக்கு காயங்களால் குற்றம் உடையவன்.

**மூடனே :—**

அறிவில்லாதவன்; அறியவேண்டியதை யறியாதும், துன்பத்தை யின்பமாகவும், இன்பத்தைத் துன்பமாகவும் மயங்கி யறிந்தும் கெடுகின்றவன்.

**நெறிபேணு ஈனனே:—**

நெறி—வழி. உய்யும் வழி. ஆன்ம ஈடேற்றத்திற்கு உரிய நெறியை விரும்பாத குறைபாடு உடையவன். ஈனம்-குறைவு. அங்கவீனன், அறிவீனன் என்பவற்றைக் காண்க.

**வீணனே :—**

வீண் காரியங்களைச் செய்து வீண் பொழுது போக்குபவன். விலைமதிக்க முடியாத ரத்னம் நமது வாழ்நாள். ஒரு நிமிஷம் எத்தனையோ கோடி பொன் பெறும். இறைவன் தந்த இந்த அரிய வாழ்நாளை வீழ் நாளாகக் கழிப்பது எத்துணைப் பேதைமை.

"வாடிக் கிலேசித்து வாணளை வீணுக்கு மாய்ப்பவரே"

என்று அடிகளார் அலங்காரத்தில் கூறுகின்றனர்.

**ஏடெழுதா முழு ஏழை :—**

ஏழை—அறிவில்லாதவன். உலக வழக்கில் செல்வமில்லாதவனை ஏழை என்பர். நூல் வழக்கில் அறிவில்லாதவன் ஏழை எனப்படுகின்றான்.

"இங்கிவை பலவுஞ் சொல்லல் ஏழைமைப்பால தன்றோ"
—கந்தபுராணம்.

**மோழை :—**

மோழை—மடமை. அறிவின்மை யுடையவன் மோழை.

**அகலாநீள் மாவினை மூடிய நோய் பிணியாளன் :—**

அகலாது நீண்டு மூண்டு மூடிய பெரிய வினையால் எய்தும் நோயினால் கட்டுண்டவன். பிணி—பிணிப்பது.

**வாய்மையிலாதனே :—**

வாய்மை—மனமும் வாக்கும் ஒத்துப் பேசுவது. இதனால் அகந் தூய்மையுண்டாகும்.

புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும் —திருக்குறள்.

பொய்யிற் கொடியது யாதொன்றுமில்லை. சூர்ப்பணகை யைப் பற்றிக் கூறவந்தபோது "பொய் தங்கு நெஞ்சிற் கொடியாள் புகுந்தாள்" என்கின்றார் கம்பநாடர். "பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே" என்கின்றார் தாயுமானார்.

பொய்யாமை யன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமுந் தரும். —திருக்குறள்.

**இகழாதே :—**

"முருகா! தீவினை நிறைந்த சிறியேனை இகழ்ந்து ஒதுக்கி விடாதே. மாதாபிதாக்கள் தமது புதல்வன் எத்துணைத் தீயவனேனும் அவனை யடித்துத் துரத்த மாட்டார்கள்தானே.

"மாசானநா லெண்வகைதனை நீநானெனாத அறிவுளம்
வாயாத பாவி இவனென நினையாமல்
மாதாபிதாவி னருணலம் மாறாமகாரி லெனையினி
மாஞானபோத மருள்செய நினைவாயே"
—(ஆசாரவீனன்) திருப்புகழ்.

**நாவலர் பாடிய நூலிசையால் வரு நாரதனார் :—**

புலவர்கள் பாடிய பாடல்களை இசையினால் பாடி எங்கெங்கும் பரப்புகின்றவர் நாரத முனிவர். நாரதர் சிறந்த முருக பக்தர். திருப்பரங்குன்றத்தில் ஒருபுறம் தெய்வயானையம்மையாரும் மற்றொருபுறம் நாரத முனிவரும் முருகன் அருகில் வீற்றிருப்பது கண்கூடு. முருகவேள் அருகில் அமரும் பேறு பெற்றவர் நாரத முனிவர். உலகிற்கு உபகாரமே புரிபவர். கலகம் புரிபவர் என்று உலகம் கூறுவது பிழை. "சீலமுலாவிய நாரதர்" என்று திருப்புகழில் அருணகிரிநாதர் கூறியிருக்கின்றனர்.

"நாரதனன்று சகாய மொழிந்திட
நாயகி பைம்புன மதுதேடி" —(பாரநறுங்)—திருப்புகழ்.

**சேணுயர் சோலையி னீழலிலே திகழ் சீரலைவாய் :—**

சீரலைவாய்—திருச்செந்தூர். வானளாவிய சோலைகள் சூழ்ந்த அரியதலம் திருச்செந்தூர்.

"வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்
இடைவிடாது நெருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்தருள் பெருமாளே"
—(கமலமாது) திருப்புகழ்.

### கருத்துரை

வள்ளிமணவாளரே! உமை மைந்தரே! செந்திற் கந்த வேளே! உமது திருவடியில் வாழ்வுபெற அருள்புரிவீர்.

## 18

ஓரா தொன்றைப் பாரா தந்தத்
தோடே வந்திட் டுயிர்சோர
ஊடா நன்றற் றார்போல் நின்றெட்
டாமால் தந்திட் டுழல்மாதர்

கூரா வன்பிற் சோரா நின்றக்
கோயா நின்றுட் குலையாதே
கோடார் செம்பொற் றோளா நின்சொற்
கோடா தென்கைக் கருள்தாராய்

தோரா வென்றிப் போரா மன்றற்
றோளா குன்றைத் தொளையாடீ
சூதா யெண்டிக் கேயா வஞ்சச்
சூர்மா அஞ்சப் பொரும்வேலா

சீரார் கொன்றைத் தார்மார் பொன்றச்
சேவே றெந்தைக் கினியோனே
தேனே யன்பர்க் கேயா மின்சொற்
சேயே செந்திற் பெருமாளே.

### பதவுரை

தோரா வென்றி போரா = தோல்வியேயின்றி வெற்றிப் போர் புரிபவரே! மன்றல் தோளா = வாசனை வீசுந் தோள்களையுடையவரே! குன்றை தொளையாடீ = கிரவுஞ்சமலையைத் தொளைத்தவரே! சூதாய் எண் திக்கு ஏயா = சூதாக எட்டுத்திக்கிலும் பொருந்திச் சென்று, வஞ்ச = வஞ்சனையைச் செய்த, சூர்மா அஞ்ச = சூரனாகிய மாமரமானது அஞ்சும்படி, பொரும்வேலா = போர் செய்த வேலாயுதரே! சீர் ஆர் = சிறந்த ஆத்தி மலரையும், கொன்றை = கொன்றை மலரையும், தார்மார்பு ஒன்ற = மாலையாகத் திருமார்பில் திகழ, சேஏறு எந்தைக்கு இனியோனே-இடபத்தின்மீது ஆரோகணித்துவரும் எமதுபிதாவாகிய சிவபெருமானுக்கு இனியவரே! தேனே = தேன் போன்றவரே! அன்பர்க்கே ஆம் இன் சொல் = அன்பர்கட்கு என்றே இனிய சொற்களைப் பேசும், சேயே = செம்மைப் பண்புடையவரே! செந்தில் பெருமாளே =

திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமையிற் சிறந்தவரே! ஒன்றை ஓராது = ஒரு பொருளை ஆராயாமலும், பாராது = அதனை உன்னிப் பார்க்காமலும், அந்தத்தோடே வந்திட்டு = அழகுடனே வந்து, உயிர் சோர = ஆடவர்களின் உயிர் சோர்ந்து போகுமாறு, ஊடா = பிணங்கியும், நன்று அற்றார் போல் நின்று = நல்லதே கிடைக்காதவர்களைப் போல் நின்றும், எட்டா மால் தந்திட்டு = அளவில்லாத மயக்கத்தைத் தந்தும், உழல்மாதர் = இங்குமங்குமாகத் திரிகின்ற விலைமாதர்களது, கூரா அன்பில் சோரா நின்று = விருப்பமில்லாத (பொய்ம்மையான) அன்பில் சோர்வுற்று நின்று, அக்கு ஓயா நின்று = எலும்புடன் கூடிய இச் சரீரம் ஒய்ந்து நின்று, உட்குலையாதே = உள்ளம் நிலைகுலையாதவாறு, கோடு ஆர் செம்பொன் தோளா = மலைபோன்ற சிவந்த பொன் மயமான திருத்தோள்களையுடையவரே! நின்சொல் = தேவரீருடைய புகழ், கோடாது என்கைக்கு = ஒருபொழுதும் தாழாது நின்று அருளும் என்று கூறும்படி, அருள்தாராய் = திருவருளைத் தருவீராக.

## பொழிப்புரை

தோல்வியேயின்றி வெற்றிப் போர் புரிகின்றவரே! நறுமணம் வீசும் திருப்புயத்தை யுடையவரே! கிரவுஞ்ச மலையைத் தொளைத்தவரே! சூதாக எட்டுத் திசைகளிலும் சென்று வஞ்சனையைச் செய்து மாமரமாக முளைத்த சூரபன்மன் அஞ்சுமாறு போர் செய்த வேலாயுதரே! சிறந்த ஆத்தி மலரையும் கொன்றை மலரையும் மாலையாகத் திருமார்பில் அணிந்து விடையின்மீது ஏறி வருகின்ற எம் பிதாவாகிய சிவமூர்த்திக்கு இனிய புதல்வரே! தேனினும் இனியவரே! அன்பர்கட்கு இனிய சொற்களைச் சொல்பவரே! செம்பொருளே! செந்திலாண்டவரே! பெருமிதம் உடையவரே! ஒரு பொருளை ஆராயாமலும், அதனை உற்றுப் பாராமலும் அழகுடன் வந்து ஆடவர்களின் உயிர் சோரும்படிப் பிணங்கியும், நல்லதே கிடைக்காதவர் போல் நின்று, அளவில்லாத மயக்கத்தைக் கொடுத்து, இங்கும் அங்குமாகத் திரிகின்ற விலைமகளிரின் ஆழமில்லாத வெளியன்பில் சோர்வு அடைந்து எலும்புடன் கூடிய இவ்வுடம்பு ஒய்ந்து நின்று உள்ளம் குலையாதவாறு, மலைபோன்ற சிவந்த பொன்மயமான தோள்களையுடையவரே! தேவரீரது புகழ் எளியேனுக்கு நேர் நின்று உதவும் என்று உலகவர் உரைக்குமாறு அருள்புரிவீர்.

## விரிவுரை

**ஓராதொன்றை :—**

ஒன்று என்பது ஒரு மொழியாகிய பிரணவத்தைக் குறிக்கும். ஒரு மொழியை குரு மொழியாகக் கொண்டு ஓர்தல் வேண்டும். அதனை உன்னுதல் வேண்டும்.

"ஓரவொட்டார் ஒன்றை உன்ன வொட்டார்" —*கந்தரலங்காரம்: (4)*

**அந்தத்தோடே வந்திட்டு உயிர்சோர :—**

பொதுமகளிர் ஆடவர் உயிர் நெகிழுமாறு அலங்கரித்துக் கொண்டு அழகாக வீதியினில் வந்து நிற்பர்.

**ஊடா :—**

ஊடுதல்—பிணங்குதல். கூடுதல் பொருட்டு ஊடுவர். ஊடுவது கூடுவதற்கு இன்பம் பயக்கும்.

> **ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்**
> **கூடி முயங்கப் பெறின்.** —**திருக்குறள்.**

**நன்றற்றார் போல் நின்று :—**

சிலசமயம் அம்மகளிர் தம்பால் வரும் ஆடவரிடம் பொருள் பறிக்கும் பொருட்டு, ஆடையணிகள் இல்லாதவர்போல் நின்று அவற்றை யவர்பால் பெற்று மகிழ்வார்கள்.

**எட்டா மால் தந்து :—**

மால்—மயக்கம். தம்பால் வருபவர்க்கு அளவில்லாத மயக்கத்தைத் தந்து வருத்துவர்.

**கூரா அன்பில் சோரா நின்று :—**

அடிப்படையில் அன்பின்றி, வெளித் தோற்றத்தில் அன்புடையார்போல் நடிப்பர். அங்ஙனம் நடிக்கும் பொதுமகளிர் பால் சேர்ந்து சோர்ந்து உணர்வு உடைமை உள்ளம் யாவையும் பறிகொடுப்பர். கூர்தல்—மிகுதல்.

**அக்கோயா நின்று :—**

அக்கு—எலும்பு. எலும்பினால் ஆய இந்த உடம்பு ஓய்ந்து வாடுவர். உடம்பு ஏழு உறுப்புக்களால் ஆயது. அவற்றுள் எலும்பு சிறந்தது. சப்த தாதுக்கள் என்பது வடநூல் மரபு. எலும்பு, தோல், தசை, மூளை, சுக்கிலம், இரத்தம், இரதம் என்பவை.

**உட்குலையாதே :—**

உடம்பு குலைந்ததோடு உள்ளமும் குலைவர். விலைமகளிர் உறவால் உடம்பும் உள்ளமும் உணர்வும் நிலைகுலையும் என அடிகளார் உணர்த்துகின்றனர்.

**நின்சொல் :—**

சொல்—புகழ். முருகனுடைய திருப்புகழ். இதனையே திருவள்ளுவரும் "பொருள் சேர் புகழ்" என்றனர்.

**கோடாதென்கைக் கருள்வாயே :—**

கோடாது—சாய்தல்; தளர்தல் என்ற பொருளில் வந்தது. முருகனுடைய புகழ் ஒரு போதும் தளராது நேர்நின்று உதவும்.

**தேனே :—**

முருகன் தேன்போல் அடியார்களின் சித்தத்தில் தித்திக்கும் தெய்வம்.

**அன்பர்க்கேயாம் இன்சொற் சேயே :—**

அடியார்களிடம் இனிய சொற்களைக்கூறி அருள்புரிகின்ற அருள் கடல் முருகன். "இன்சொல் விசாகா" என்று வேறு ஒரு பாடலிலும் கூறுகின்றனர்.

## கருத்துரை

சூரனை அடர்த்த வேலவரே! சிவகுமாரரே! செந்திற் பதியே! மாதர் வயப்படாது உமது புகழைப் பாட அருள் புரியும்.

## 19

கட்டழகு விட்டுத் தளர்ந்தங் கிருந்துமுனம்
இட்டபொறி தப்பிப் பிணங்கொண்ட தின்சிலர்கள்
கட்டணமெ டுத்துச் சுமந்தும் பெரும்பறைகள்
முறையோடே
வெட்டவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சமென
மக்களொரு மிக்கத் தொடர்ந்தும் புரண்டும்வழி
விட்டுவரு மித்தைத் தவிர்ந்துன் பதங்களுற
வுணர்வேனோ

பட்டுருவி நெட்டைக் க்ரவுஞ்சம் பிளந்துகடல்
முற்றுமலை வற்றிக் குழம்புங் குழம்பமுனை
பட்டஅயில் தொட்டுத் திடங்கொண்
டெதிர்ந்தவுணர் முடிசாயத்
தட்டழிய வெட்டிக் கவந்தம் பெருங்கழுகு
நிர்த்தமிட ரத்தக் குளங்கண் டுமிழ்ந்துமணி
சற்சமய வித்தைப் பலன்கண்டு செந்திலுறை
பெருமாளே.

## பதவுரை

பட்டு உருவி=பட்டு உருவும்படி, நெட்டை க்ரவுஞ்சம் பிளந்து= நிமிர்ந்திருந்த கிரௌஞ்சமலை பிளக்குமாறும், கடல் முற்றும்=சமுத்திர முழுவதும், அலை வற்றி=தண்ணீர் அலைகள் வற்றி, குழம்பும் குழம்ப=குழம்பாகிக் குழம்புமாறும், முனைப்பட்ட அயில்தொட்டு= கூர்மையுடைய வேலை ஏவி, திடம் கொண்டு எதிர்ந்த அவுணர்= உறுதி கொண்டு எதிர்த்த அசுரர்கள், முடி சாய=தலைகள் சாயவும், தட்டு அழிய வெட்டி=தடையின்றி வெட்டி, கவந்தம்=தலையில்லாத உடம்புகளும், பெரும் கழுகு=பெரிய கழுகுகளும், நிர்த்தம் இட=நடனஞ் செய்யவும், ரத்த குளம் கண்டு=உதிரத்தினுல் குளங்களை உண்டாக்கி, உமிழ்ந்து மணி=முடிகளில் உள்ள இரத்தின மணிகள் சிந்தும் படிச் செய்து, சற்சமய வித்தைப் பலன் கண்டு=உத்தம சமயத்தின், சாத்திரத்தின் பயனைக் கண்டு,செந்தில் உறை=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! கட்டழகு விட்டு தளர்ந்து அங்கு இருந்து=திரண்ட அழகு நீங்கி அங்கே ஒடுங்கியிருந்து, முனம் இட்ட பொறி தப்பி=முன்னே நன்கு உதவி செய்த ஐம்பொறிகளும் கலங்கி, பிணம் கொண்டதின்=பிணம் என்ற நிலை அடைந்தவுடனே, சிலர்கள் கட்டணம் எடுத்து சுமந்தும்=சிலர்சேர்ந்து தமக்குரிய கூலியைப் பெற்றுக்கொண்டு சுமந்து சென்று, பெரும் பறைகள்=பெரியபறை வாத்தியங்கள்,முறையோடே=முறையாக,வெட்டவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சமென=வெட்டவிட வெட்டக்கிடஞ்சங் கிடஞ்சம் என்று ஒலிக்க, மக்கள் ஒருமிக்க தொடர்ந்தும்=உறவினர்கள் ஒருமித்துத் தொடர்ந்து வந்தும், புரண்டு=புரண்டு அழுதும், வழிவிட்டு வருமித்தை தவிர்ந்து=வழிவிட்டுத் திரும்புகின்ற பொய் வாழ்வை விடுத்து, உன் பதங்கள் உற=தேவரீருடைய திருவடிகளைப் பொருந்துமாறு, உணர்வேனோ=உணர்வையடைய மாட்டேனோ?

## பொழிப்புரை

நிமிர்ந்திருந்த கிரவுஞ்சமலையில் பட்டு அதனை ஊடுருவிப் பாய்ந்து பிளந்தும், கடல் முழுவதும் வற்றிக் குழம்பாகவும், கூர்மை மிகுந்த வேலாயுதத்தை விடுத்து உறுதியுடன் எதிர்த்த சூராதியசுரர்களின் தலை சாயவும் தடையற்று அவர்களை வெட்டியும் தலை போன குறையுடம்புகளும் பெரிய கழுகுகளும் கூத்தாடவும், உதிரத்தினுல் குளத்தை யுண்டாக்கியும், முடிமணிகள் சிந்தியும், உண்மைச் சமயத்தின் பயனைக் கண்டு செந்திமாநகரில் எழுந்தருளிய பெருமிதம் உடையவரே! திரண்ட அழகு நீங்கித் தளர்ச்சியுற்று ஒடுங்கி அங்கே யிருந்தும், முன் உதவி செய்த மெய், வாய், கண், நாசி, செவி என்ற ஐம்பொறிகளும் கலக்கமுறவும், பிணம் என்ற பேருடன் கிடந்த போது, கூலி கொண்டு சிலர் எடுத்துக்கொண்டு

போக, பெரிய பறை வாத்தியங்கள் முறையோடு, வெட்டவிட வெட்டக்கிடஞ்சங் கிடஞ்சம், என்ற ஒலியுடன் ஒலிக்கவும், உறவினர்கள் திரண்டு தொடர்ந்து வரவும் புரண்டு அழவும் வழிவிட்டுத் திரும்புகின்ற இந்த பொய் வாழ்வை விட்டு நீங்கி உமது திருவடிக்கமலத்தில் சேரும் உணர்வை அடியேன் பெற மாட்டேனோ ?

## விரிவுரை

கட்டழகு விட்டுத் தளர்ந்து :—

முதுமையால் உடம்பு தளர்ந்தவுடன் திரண்டு கட்டுக் கோப்பாக இருந்த அழகு நீங்கிவிடும், தாடை ஒடுக்கு விழும், கண் குழியும், இதழ் தொங்கும், பளபள என்றிருந்த மேனி வாழை சருகுபோல் திரைத்து விடும். நரையும் வந்து விகாரமாகி விடும். அக்காலத்தில் அங்கும் இங்கும் நடமாட்டம் இன்றி அடங்கி ஒடுங்கி இருக்கவேண்டி வரும்.

முனம் இட்ட பொறி தப்பி :—

பொறிகள் : மெய், வாய், கண், மூக்கு, காது இவைகளின் மூலம் உலக ஞானம் அறியப்படுகின்றது. இந்த ஐந்து பொறிகளும் எத்துணையோ நலன்கள் செய்கின்றன. ஆனால், இறுதிக் காலத்தில் இவைகள் தத்தம் செயல் இழந்து அடங்கி விடும்.

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந் திட்டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான் அமரும்கோயில்"
—திருஞானசம்பந்தர்.

"ஐவரும் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே"
—கந்தரலங்காரம்.(84)

பொறி புலன்கள் நெறி மயங்கா முன் இறைவனை வாழ்த்தியும், வணங்கியும் பாடியும் அவன் புகழ் கேட்டும் கண் குளிரத் தரிசித்தும் உய்வு பெறவேண்டும். பொறி புலன்கள் அவன் தந்தவை. அவைகளால் அப்பரம கருணாநிதியை வழிபட வேண்டும்.

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. —திருக்குறள்.

சிலர்கள் கட்டண மெடுத்துச் சுமந்தும் :—

உயிர் போன பின் உடம்பைச் சிலர் கூடி, கூலி கொண்டு சுமந்து மயானத்தை யடைவார்கள். அதுதான் நமது கடைசி யாத்திரை. மரண யாத்திரை என்றுபேர். அம் மரணம் நேரு முன், முருகன் சரணம் அடைதல் வேண்டும்.

**மக்களொருமிக்கத் தொடர்ந்தும் :—**

உயிர் நீங்கிய உடம்பை மயானத்திற்குக் கொண்டு போம் போது உறவினர்கள் ஒருங்குகூடி அழுது கொண்டு உடன் செல்லுவார். புரண்டு அழுவர்.

**வழிவிட்டு வருமித்தைத் தவிர்ந்து :—**

இவ்வாறு உடன் சென்ற சுற்றத்தார் சிறிது தூரம் போய் வழிவிட்டுத் திரும்பிவிடுவார்கள். மித்தை—பொய்.

ஆகவே இந்த வாழ்வு நிலையில்லாதது. தோன்றி நின்று மறைவது. இந்த மித்தையைத் தவிர்த்து பவித்ர வாழ்வு தருபவன் முருகன்.

> "மத்த மலத்ரய மித்தை தவிர்த்தருள்
> சுத்தபவித்ர நிவர்த்தி யளிப்பவன்" —திருவகுப்பு. (6)

வழிவிட்டு வருமித்தை: வரும் இத்தை எனப் பதப்பிரிவு செய்து, வரும் இதனை எனவும் பொருள் கொள்ளலாம்.

**பட்டுருவிநெட்டை க்ரவுஞ்சம் பிளந்து :—**

தாரகாசுரனுடைய மாயைக்குத் துணை புரிந்து நிமிர்ந்த மலை வடிவில் நின்றவன் கிரவுஞ்ச அசுரன். அம்மலையின் நிமிர்ந்த தன்மையைப் போக்கி வேலாயுதத்தால் பிளந்து அழித்தனர். மேலும் கடல் குழம்பியது. போர்க்களத்தில் தலைபோன கவந்தங்கள் நடனஞ் செய்தன; உதிரம் பெருகி குளம்போல் தேங்கியது. இவ்வண்ணம் எம்பெருமான் அசுரர்களை யழித்து உலகை உய்வித்தருளினார்.

**சற்சமய வித்தைப் பலன் கண்டு :—**

சற்சமயம்—சத்—உண்மை. உண்மைச் சமயமாக விளங்குவது சைவ சமயம். அதற்குச் சமமான சமயம் இல்லை.

> சைவ சமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருளைக்
> கைவந்திடவே மன்றுள் வெளிகாட்டும் இந்தக் கருத்தை விட்டுப்
> பொய்வந்துழலும் சமயநெறி புகுதவேண்டாம் முத்திதரும்
> தெய்வச் சபையைக் காண்பதற்குச் சேரவாரும் செகத்தீரே.
> —தாயுமானார்.

இச்சமய உண்மையைக் காட்ட முருகன் திருச்செந்தூரில் சிவலிங்கம் வைத்துப் பூசிக்கின்றார்.

## கருத்துரை

சூரசங்காரம் புரிந்த செந்திற் குமாரரே! பொய் வாழ்வு நீங்கி உமது திருவடிபெற அருள்புரிவீர்.

## 20

கண்டுமொழி கொம்பு கொங்கை வஞ்சியிடை அம்பு நஞ்சு
கண்கள் குழல் கொண்ட லென்று பலகாலும்
கண்டுளம்வ ருந்தி நொந்து மங்கையர்வ சம்பு ரிந்து
கங்குல்பக லென்று நின்று விதியாலே

பண்டைவினை கொண்டு மூன்று வெந்துவிழு கின்றல்
கண்டு
பங்கயப தங்கள் தந்து புகழ்ோதும்
பண்புடைய சிந்தை யன்பர் தங்களினு டன் கலந்து
பண்புபெற அஞ்சல் அஞ்ச லெனவாராய்

வண்டுபடு கின்ற தொங்கல் கொண்டறநெ ருங்கி யிண்டு
வம்பினைய டைந்து சந்தின் மிகமூழ்கி
வஞ்சியை முனிந்த கொங்கை மென்குறமடந்தை
செங்கை
வந்தழகு டன்க லந்த மணிமார்பா

திண்டிறல்பு னைந்த அண்டர் தங்களப யங்கள் கண்டு
செஞ்சமர்பு னைந்து துங்க மயில்மீதே
சென்றசுர ரஞ்ச வென்று குன்றிடைம ணம்பு ணர்ந்து
செந்தில்நகர் வந்த மர்ந்த பெருமாளே.

### பதவுரை

வண்டுபடுகின்ற தொங்கல்கொண்டு=வண்டுகள் இருந்து தேன் அருந்துகின்ற பூமாலையைத் தாங்கியும், அறநெருங்கி=மிகவும் நெருங்கியும், ஈண்டு வம்பினை அடைந்து=பெருகிய கச்சையைச் சேர்ந்தும், சந்தில் மிகமூழ்கி=சந்தனக் குழம்பில் மிகவும் முழுகியும், வஞ்சியை முனிந்த=கொடிபோன்ற இடையைச் சினந்து வருத்துகின்றதுமாகிய கொங்கை=தனங்களையுடைய, மென்குறமடந்தை=மென்மை தங்கிய வள்ளியம்மையாருடைய, செம்கை வந்து அழகுடன் கலந்த=செம்மையான திருக்கரங்களால் அழகுடன் தழுவப்பெற்ற, மணி மார்பா=இரத்தின மணிகள் பொருந்திய திருமார்பையுடையவரே! திண்திறல் புனைந்த அண்டர் தங்கள்=மிகுந்த வலிமையுடைய தேவர்களது, அபயங்கள் கண்டு=அபயம் என்ற சொல்லைக் கேட்டு, செம்சமர் புனைந்து=செவ்வையான போர்க்கோலங் கொண்டு, துங்க மயில் மீதே சென்று=தூய மயில்வாகன மீது ஏறிச் சென்று, அசுரர்

அஞ்ச வென்று=சூராதி யவுணர்கள் அஞ்சுமாறு அவரை வெற்றி கொண்டு, குன்றிடை மணம் புணர்ந்து=திருப்பரங்குன்றத்தில் தெய்வயானையம்மையாரை மணம் புரிந்து. செந்தில் நகர் வந்து அமர்ந்த=திருச்செந்தூரில் வந்து விரும்பி வாழ்கின்ற, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! மொழி கண்டு=சொற்கள் கற்கண்டு என்றும், கொங்கை கொம்பு=தனங்கள் யானைக் கொம்பு என்றும், இடை வஞ்சி=இடை கொடி என்றும், கண்கள் அம்பு நஞ்சு=கண்கள் அம்பு ஆலாலவிடம் என்றும், குழல் கொண்டல் என்று=கூந்தல் மேகம் என்றும், பலகாலும் கண்டு உளம் வருந்தி நொந்து=பலகாலும் பார்த்து உள்ளம் (அவைகளின் மீதுள்ள அவாவினால்) துன்புற்று மெலிந்து, மங்கையர் வசம் புரிந்து=பெண்களுடைய வசமாக இருந்து, கங்குல் பகல் என்று நின்று=இரவு பகலாகக் கழித்து, விதியாலே=விதிப்படியினால், பண்டை வினை கொண்டு உழன்று=பழைய வினைகளைக் கொண்டு அதன்படி உழன்று, வெந்து விழுகின்றல் கண்டு=அடியேன் மனம் வெந்து தளர்ந்து வீழ்வதைக் கண்டருளி, பங்கய பதங்கள் தந்து=தேவரீரது திருவடித் தாமரைகளைத் தந்தருளி, புகழ் ஓதும் பண்பு உடைய சிந்தை அன்பர் தங்களின் உடன் கலந்து பண்புபெற=திருப்புகழை ஓதுகின்ற அடியார்களுடன் அடியேனுங்கூடி நல்ல பண்பினைப் பெற்று உய்ய, அஞ்சல் அஞ்சல் என வாராய்="பயப்படாதே", "பயப்படாதே" என்று திருவாய் மலர்ந்து வந்தருளல் வேண்டும்.

## பொழிப்புரை

வண்டுகள் தங்கி தேனுண்டு மகிழ்கின்ற பூமாலையைக் கொண்டதும், மிகுதியாக நெருங்கியிருப்பதும், பெரிய கச்சு பூண்டிருப்பதும், சந்தனக் குழம்பில் மூழ்கியிருப்பதும், கொடி போன்ற இடையை முனிந்து வருத்துவதும் ஆகிய தனபாரமுடைய மெல்லிய வள்ளியம்மையார் திருக்கரங்களால் அழகாகத் தழுவுகின்ற மணிகளுடன் கூடிய திருமார்பினை யுடையவரே! மிகுந்த வலிமையுடைய தேவர்களின் அபயக் குரலைக் கேட்டு செவ்வையான போர்க் கோலங்கொண்டு, தூய மயிலின் மீதூர்ந்து சென்று சூராதியவுணர்கள் அஞ்சுமாறு வென்று, திருப்பரங்குன்றத்தில் தெய்வயானையம்மையாரை மணம் புரிந்து, திருச்செந்தூரில் விருப்பமுடன் வாழ்கின்ற பெருமிதமுடையவரே! பெண்களுடைய சொற்களைக் கற்கண்டு என்றும், தனங்களை யானைக் கொம்பு என்றும், இடையைக் கொடி யென்றும், கண்களை கணை, விடம் என்றும், கூந்தலை மேகம் என்றும் புகழ்ந்து, பலகாலும் அவைகளையே விரும்பிப் பார்த்து, அவாவினால் உள்ளம் வருந்தி நொந்து, பெண்களுடைய வசமாகி, இரவு பகலாக நின்று, விதியினால் பழைய வினைகளையனுபவித்து உழன்று, மனம் வெந்து வீணே அழிந்து வீழ்கின்ற அடியேனைக் கடைக்கணித்து தேவரீ

ருடைய திருவடித் தாமரைகளைத் தந்தருளி, உமது திருப்புகழை ஓதுகின்ற பண்புமிக்க அடியார்களுடன் கூடி நல்ல பண்பினைப் பெற்று உய்ய "அஞ்சேல்", "அஞ்சேல்" என்று கூறி வந்தருளல் வேண்டும்.

## விரிவுரை

**கண்டு மொழி :—**

பெண் மயல் கொண்டவர் அவர்களது அங்க அடையாளங்களையும், குணவிசேடங்களையும் மிகவும் உயர்வாக எண்ணி உவமை கூறிப் புகழ்ந்து அழிவர். பித்தங் கொண்டவனுக்கு வெய்யிலில் விருப்பமும், கற்கண்டில் வெறுப்பும் உண்டாவது போல் மாதர் மயக்கமுற்றானுக்குச் சிவநெறி கசந்து, அவநெறி இனிக்கும். கண்டு—கற்கண்டு. பெண்களது மொழியைக் கற்கண்டு என வியந்து கூறுவர்.

**கொம்பு கொங்கை :—**

தனங்கள் யானைக் கொம்புக்கு நிகர் என்று கூறுவர்.

**வஞ்சியிடை :—**

இடை கொடிக்குச் சமானம் என்பர்.

**அம்பு நஞ்சு கண்கள் :—**

கண்கள் கணைக்கும் விடத்திற்கும் சமானம் என்பர் கூர்மையால் கணை என்றும் கருமையால் விடம் என்றும் உவமை கூறுவர்.

**குழல் கொண்டல் :—**

இருண்ட மேகத்தைக் கூந்தலுக்கு உவமை கூறுவர். இறைவனுடைய திருமேனியைப் புகழ்ந்து கூறாமல், அழிவதற்கு ஏதுவாகிய புலால் உடம்பை இவ்வண்ணம் செஞ்சொற்களைத் தேடி வாடிப் பாடி அழிவர்.

> பாலென்பது மொழி பஞ்செனபது பதம் பாவையர்கண்
> சேலென்ப தாகத் திரிகின்றநீ செந்திலோன் திருக்கை
> வேலென்கிலை கொற்ற மயூரமென்கிலை வெட்சித் தண்டைக்
> காலென்கிலை நெஞ்ச மேஎங்ங னேமுத்தி காண்பதுவே.
>
> —அலங்காரம்(30)

**பலகாலும் கண்டுளம் வருந்தி நொந்து :—**

ஒருமுறை கண்டதுடன் திருப்தியுறாமல் பலகாலும் அவைகளையே பார்த்துப் பார்த்து, அவாவினால் உள்ளம் வருந்தி வாடுவர்.

**மங்கையர் வசம் புரிந்து :—**

பெண் மயலால் தன் வசம் அழிந்து மாதர் வசமாகி, அவர் ஏவலை ஆவலுடன் செய்து, கள்ளுண்ட வண்டுபோல் சுற்றுவர்.

"சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமாத ரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியே வழுத்தஅருள் புரிவாயே"
—(குமரகுருபர முருக குகனே)திருப்புகழ்.

**கங்குல் பகலென்று நின்று :—**

மோகவெறி கொண்டவர்க்கு இரவெல்லாம் பகலாகவும், பகல் எல்லாம் இரவாகவும் இருக்கும். உலகமெல்லாம் உறங்கும் சமயம் இவர்க்கு உறக்கமின்றி யொழியும். இயற்கைக்கு மாறுபடுவர்.

**பண்டைவினை கொண்டுழன்று வெந்து விழுகின்றல் கண்டு :—**

இப்பிறப்பில் இப்படி நல்வினை செய்யாது அலைவதுபோல் முற்பிறப்பிலும் நன்மை செய்யாது தீமையே செய்தபடியால் அவ்வினைக்கீடாக வெவ்வினைகளின் பயனை அனுபவித்து, அதனால் வெதும்பி வீணே அழிந்து விழுகின்ற அடியேனை அருட்பார்வையால் கடைக்கணித்து அருள்புரிதல் வேண்டும் என்று இறைவனை அடிகள் வேண்டுகின்றனர்.

**பங்கய பதங்கள் தந்து :—**

இறைவனுடைய திருவடிகள் தாமரைக்கு நிகர் என்பது மரபு. தாமரையில் தேன் துளிக்கும்; இறைவனுடைய திருவடியில் கருணை துளிக்கும்.

"கருணை கூர்ப்பன கழல்க ளார்ப்பன
கால்மேல் வீழேன் வீழ்வார் கால்மீ தினும் வீழேன்
—(கவடுகோத்தெழு) திருப்புகழ்.

தாமரையில் மணம் வீசும்; இறைவனுடைய திருவடியில் ஞான மணம் வீசும். தாமரையில் உள்ள தேனை வண்டுகள் வந்து பருகும்; இறைவனுடைய திருவடியில் துளிக்கும் கருணையை அடியார்கள் பருகிப் பவப்பசியை மாற்றுவர். தாமரை சிவந்திருக்கும்; இறைவனுடைய திருவடியும் செம்மைப் பண்புடன் விளங்கும். தாமரை குளிர்ந்திருக்கும்; இறைவனுடைய திருவடியும் பிறவி வெப்பத்தை மாற்றி பேரின்பந் தந்து குளிர்விக்கும்.

**புகழோதும் பண்புடைய சிந்தையன்பர் :—**

அடியார்கள் எப்போதும் இறைவனது திருப்புகழை ஓதிக் கொண்டேயிருப்பர். அதனால் அவர்கள் கரப்பண்பும், சிரப் பண்பும், மொழிப் பண்பும், விழிப்பண்பும், மனப்பண்பும் உடையவராவர். பண்பில்லாதவர் மனிதராக மாட்டார்.

> "அரம்போலுங் கூர்மையரேனும் மரம் போல்வர்
> மக்கட்பண் பில்லாதவர்"

> "பழிபிறங்காப் பண்புடைமக்கள்"

என்ற திருவள்ளுவதேவருடைய திருவாக்கைச் சிந்திக்க. கரப் பண்பு—அறஞ் செய்தல்; சிரப்பண்பு—ஈசனை வணங்குதல்; மொழிப்பண்பு—உண்மை பேசுதல்; விழிப்பண்பு—பிறன்மனை நோக்காதிருத்தல்; மனப்பண்பு—பிறருக்குத் தீங்கு நினையாது நன்மையை நினைத்தல்.

**அன்பர் தங்களினுடன் கலந்து பண்புபெற :—**

பண்பு பெற்ற அடியார்களுடன் கூடி, அவர்களது குறிப்பின் வழி ஒழுகினால் அப்பண்பு பெற்று உய்யலாம். ஆதலின் அரிதின் முயன்று நல்ல அடியாருடன் கலந்து ஒழுக வேண்டும்.

> "மனநல நன்குடைய ராயினும் சான்றோர்க்
> கினநல மேமாப் புடைத்து. —திருக்குறள்.

> "துரும்பனே னென்னினும் கைவிடுதல் நீதியோ
> தொண்டரொடு கூட்டு கண்டாய்" —தாயுமானர்.

**அஞ்சலஞ்ச லென வாராய் :—**

ஆபத்தில் அஞ்சேலென்ற பெருமாளும், எழுகடலும், எண் சிலம்பும், நிசிசரரும் அஞ்ச, அஞ்சும் இமையவரை அஞ்சல் என்ற பெருமாளும் ஆகிய முருகவேள், உயிர்கள் துன்புற்று முறையிட்டபோது, அச்சமகற்றும் பச்சை மயிலில் வந்து தோன்றி அருள் புரிவர்.

**தொங்கல் கொண்டற நெருங்கியிண்டு :—**

ஞானம்பிகையாகிய வள்ளிநாயகியின் தனங்கள் இரண் டும் பரஞானம் அபரஞானம் என்ற இருஞானங்களாம். அது நெருங்கியிருக்கும். பரஞானத்திற்கும் அபரஞானத்திற்கும் மிகுந்த நெருக்கம் உண்டல்லவா? ஈண்டு என்பது குறுகல் விகாரம் பெற்று இண்டு என வந்தது.

**வஞ்சியை முனிந்த :—**

வஞ்சி—கொடி. கொடி போன்ற இடையைத் தெரிவிக்கிறது. உவம ஆகுபெயர். இது அஞ்ஞானத்தைத் தெரிவிக்கின்றது. ஞானமாகிய தனம் அஞ்ஞானமாகிய இடையை முனிகின்றது.

## கருத்துரை

வள்ளிமணவாளா! திருச் செந்திலாண்டவா! அடியேன் அவநெறி சென்று அலையாமல் அடியாருடன் கலந்து சிவநெறி பெற அருள்புரிவாய்.

## 21

களப மொழுகிய புளகித முலையினர்
கடுவு மமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலினர் எவரோடும்
கலக மிடுகய லெறிகுழை விரகியர்
பொருளி லிளைஞரை வழிகொடு மொழிகொடு
தளர விடுபவர் தெருவினி லெவரையு நகையாடிப்

பிளவு பெறிலதி லளவள வொழுகியர்
நடையி லுடையினி லழகொடு திரிபவர்
பெருகு பொருள்பெறில் அமளியி லிதமொடு
குழைவோடே

பிணமு மணைபவர் வெறிதரு புனலுணு
மவச வனிதையர் முடுகொடு மணைபவர்
பெருமை யுடையவ ருறவினை விடஅருள் புரிவாயே

அலையி லுறைபுலி பெறுமக வயில்தரு
பசுவி னிரைமுலை யமுதுண நிரைமகள்
வசவ னெடுபுலி முலையுண மலையுடன் உருகாநீள்
அடவி தனிலுள உலவைகள் தளிர்விட
மருள மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளியுயர் பறவைகள் நிலம்வர
விரல்சேரேழ்

துளைகள் விடுகழை விரல்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்
சுருதி யுடையவன் நெடியவன் மனமகிழ்
மருகோனே

துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளர றுமுககுக
துறையி லலையெறி திருநகர் உறைதரு
பெருமாளே.

## பதவுரை

*அளையில் உறை புலிபெறுமகவு*=மலைக்குகையில் வாழுகின்ற புலி பெற்ற குட்டி. *அயில் தரு*=குடிக்கின்ற, பசுவின் *நிரை முலை அமுது உண*=பசுக்கூட்டத்திற் சென்று பசுவின் மடியில் வாய் வைத்து பாலை உண்ணவும், *நிரைமகள்*=பசுவின் பெண்கன்று, *வசவனொடு புலி முலை உண*=ஆண்கன்றுடன் புலியின் முலையில் வாய் வைத்துப் பால் குடிக்கவும், *மலை உடன் உருகா*=(மண், மரம் முதலிய பொருளும்) மலையும் அப்படியே உருகவும், *நீள் அடவிதனில் உள உலவைகள் தளிர்விட*=நீண்ட கானகத்திலேயுள்ள (உலர்ந்த) மரங்கள் தளிர்விடவும், *மருள*=உயிர்கள் எல்லாம் திகைக்கவும், *மதமொடு களிறுகள் பிடியுடன் அகல*=மதங்கொண்ட ஆண் யானைகள் பெண் யானையுடன் ஒரு புறம் போகவும், *வெளி உயர் பறவைகள் நிலம் வர*=ஆகாயத்தில் உயரத்தில் உள்ள பறவைகள் நிலத்தில் வந்து சேரவும், *விரல் சேர்*=விரல்களால் தடவுகின்ற, *ஏழ்தொளைகள் விடுகழை*=ஏழு தொளைகள் விட்டுள்ள புல்லாங்குழலில், *விரல் முறை தடவிய*=தமது திருவிரலால் தடவுவதால் எழுகின்ற, *இசைகள் பல பல தொனி தரு*=பல்வேறு இசைகளை இனிய நாதத்துடன் உண்டாக்குகின்ற, *கருமுகில்*=கரியமேகம் போன்ற கண்ணபிரான், *சுருதிஉடையவர்*=வேதப் பொருளாக உடையவர், *நெடியவன்*=நீண்டவராகிய திருவாசுதேவன், *மனம் மகிழ் மருகோனே*=திருவுள்ளம் மகிழ்கின்ற மருகரே! *துணைவ*=அடியேனுக்கு அரிய துணைவரே! *குணதர*=குணத்தை அணிகலமாகத் தரித்தவரே! *சரவணபவ*=சரவணபவா, *நம*=வணங்கத் தக்கவரே! *முருக*=முருகப் பெருமானே! *குருபர*=குருமூர்த்தியே! *வளர் அறுமுக*=புகழ் என்றும் வளர்கின்ற ஆறுமுகக் கடவுளே! *குக*=ஆன்மாக்களின் இதய குகையில் வசிக்கின்றவரே! *துறையில் அலை எறி திருநகர் உறை தரு*=கரையில் அலைகள் வீசுகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, *பெருமாளே*=பெருமையில் மிகுந்தவரே! *களபம் ஒழுகிய புளகித முலையினர்*=கஸ்தூரி சந்தனம் முதலிய கலவைச் சாந்து ஒழுகிய பூரித்த தனங்களையுடையவரும், *கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர்*=நஞ்சும் அமிர்தமும் கலந்த கண்களையுடையவர்களும், *கழுவு சரிபுழுகு ஒழுகிய குழலினர்*=கழுவி எடுத்த நல்ல வாசனைத் தைலம் ஒழுகும் கூந்தலையுடையவரும், *எவரோடும் கலகம் இடு*=எல்லாரோடும் கலகம் புரிகின்ற, *கயல்*=கயல்மீன் போன்ற கண்கள் நீண்டு, *எறிகுழை விரகியர்*=மோதுகின்ற குழைகளை அணிந்துள்ள

உபாயம் உடையவர்களும், பொருள் இல் இளைஞரை = பணம் இல்லாத இளைஞர்களை, வழிகொடு = தமது வழிப்படுத்தி, மொழிகொடு = இனிய மொழிகளால், தளரவிடுபவர் = தளர்ச்சியடையச் செய்பவரும், தெருவினில் எவரையும் நகையாடி = வீதியில் கண்டவர்களுடன் நகைத்துப் பேசி, பிளவு பெறில் அதில் அளவு அளவு ஒழுகியர் = பிரிவு ஏற்பட்டால் அதற்குத் தக்கவாறெல்லாம் ஒழுகுகின்றவரும், நடையில் உடையினில் அழகொடு திரிபவர் = நடையினாலும் உடையினாலும் அழகாகத் திரிபவர்களும், பெருகுபொருள் பெறில் = நிரம்பப் பணம் கிடைத்தால், அமளியில் இதமொடு குழைவோடே = படுக்கையில் இன்பத்துடனும் உருக்கத்துடனும், பிணமும் அணைபவர் = பிணம்போன்றவர்களையும் தழுவுபவர்களும், வெறிதரு புனல் உணும் = வெறியைக் கொடுக்கும் கள்ளை உண்ணும், அவச வநிதையர் = மயக்கமடையும் பெண்களும், முடுகொடும் அணைபவர் = வேகத்துடன் அணைபவர்களும், பெருமை உடையவர் = அகந்தையுடையவருமாகிய பொது மகளிரின், உறவினை விட = நட்பை விடுமாறு, அருள்புரிவாயே = திருவருள் புரிவீர்.

## பொழிப்புரை

மலைக் குகையில் வாழுகின்ற புலியின் குட்டி பசுக்களின் மடியில் பால் குடிக்கவும், பசுவினுடைய ஆண் பெண் கன்றுகள் புலியின் முலையில் வாய் வைத்துப் பால் குடிக்கவும், மலை முதலியன இசையைக் கேட்டு உருகவும், நீண்ட கானகத்தில் உள்ள உலர்ந்த மரங்கள் தளிர்க்கவும், எல்லா உயிர்களும் அந்த இசையைக் கேட்டு உள்ளம் மயங்கவும், மதங்கொண்ட யானைகள் பெண் யானையுடன் ஒரு புறம் போகவும், உயரத்தில் பறக்கும் பறவைகள் நிலத்தில் இறங்கி வரவும், விரல் வைத்து வாசிக்கக்கூடிய ஏழு தொளைகள் விட்டுள்ள புல்லாங்குழலை விரல்களினால் முறையே தடவி பலப்பலவிதமான இன்னிசைகளை உண்டாக்கிய நீலமேகம் போன்றவரும், வேதத்தின் பொருளாக விளங்குபவரும் நீண்ட உருவினரும் ஆகிய திருமாலின் மருகரே! அடியேனுக்கு அருந்துணையானவரே! அருட்குணங்களையுடையவரே! சரவணபவரே! வணக்கத்திற்கு உரியவரே! முருகக் கடவுளே! குருமூர்த்தியே! புகழ் வளர்கின்ற ஆறுமுகக் கடவுளே! உயிர்களின் இதய குகையில் வாழ்பவரே! கரையில் அலைகள் மோதுகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! சந்தனக் கலவை ஒழுகும் பூரித்த தனங்களை உடையவரும், நஞ்சும் அமிர்தமும் சேர்ந்த கண்களையுடையவரும், கழுவிய நல்ல புழுகு என்ற வாசனை ஒழுகிய கூந்தலையுடையவரும், எல்லோரிடமும் கலகம் புரியும் கயல் போன்ற கண்கள் மோதுகின்ற குழைகள் அணிந்த தந்திரக்காரரும், பொருள் இல்லாத இளை

ஞர்களைத் தமது வழிப்படுமாறும், இன்மொழிகளைப் பேசியும் தளர்ச்சியடையச் செய்பவரும், வீதியில் கண்டவர்களுடன் புன்னகை புரிந்து பேசி, உறவு கொண்டவர் பிரிவாராயின் அவர்களுக்குத் தக்கபடியெல்லாம் ஒழுகுபவரும், நடையாலும் உடையாலும் அழகோடு உலாவுபவரும், நிரம்பப் பொருள் பெற்ருல் படுக்கையில் இனிமையாகவும் உள்ளம் குழைந்தும் பிணம் போன்றவர்களையும் தழுவுபவர்களும் செருக்கு உடைய வரும் ஆகிய பொதுமகளிருடைய உறவைவிட்டு நீங்கத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**களபம் :—**

*சந்தனம், கஸ்தூரி முதலியவைகள் சேர்ந்த கலவை.*

**கடுவு மமிர்தமும் விரவிய விழியினர் :—**

*கடு—நஞ்சு. பெண்கள் பார்வை நஞ்சாகவும், அதுவே அமுதமாகவும் இருக்கும். அப்பார்வை சிலரை நஞ்சாகிக் கொல்லும். சிலரை அமுதாகிக் காக்கும்.*

இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. —*திருக்குறள்.*

**எவரோடும் கலகமிடு கயலெறி குழை :—**

*கயல்—மீன். இது ஆகுபெயராகக் கண்ணைத் தெரிவித்தது. கண்கள் நீண்டு காதுடன் மோதி நிற்கும். இக் கண்களால் பலரையும் விழித்து நோக்கி கலகமிடுந் தன்மையுடையவர் விலைமகளிர்.*

**பொருளில் இளைஞரை......தளர விடுபவர் :—**

*பொருள் இல்லாத வாலிபர்களை தங்கள் அழகு முதலியவைகளைக் கண்டு ஏங்குமாறு சாகசம் புரிவர்.*

**வெறிதரு புனலுணும் அவச வனிதையர் :—**

*வெறிதரு புனல்—கள். மது அருந்தி மதிமயங்கி நிற்பர்.*

**உறவினை விட அருள் புரிவாயே :—**

*“மோகாந்தகாரந் தீர்த்து வேதாந்த தீபங் காட்டும் பரம்பொருள்” முருகன் ஆதலின் அப் பரமனை நோக்கிப் பரத்தையர் உறவு நீங்க அருள் புரியுமாறு அடிகளார் வேண்டுகின்ருர்.*

அளையில் உறைபுலி பெறுமக வயிறரு பசுவினிரை முலையமுதுண :—

கண்ணபிரான் புல்லாங்குழலை ஊதி கானம் புரிந்தபோது உலகமே மயங்கி உருகி நின்றது. கொடுமை மறைந்தது. எங்கும் ஒரே இன்ப வெள்ளம் ஓடியது.

கொடிய புலிகள் குகையில் படுத்திருந்தன. அவைகளின் குட்டிகள், கண்ணபிரானுடைய வேய்ங்குழல் இசையில் மயங்கி ஓடிவந்து தமக்கு நேர் விரோதிகளாகிய பசுக்களின் மடியில் வாய் வைத்துப் பால் அருந்தலாயின.

நிரைமகள் வசவனெடு புலி முலையுண :—

பசுவினுடைய கன்றுகள் சென்று புலியின் மடியில் வாய் வைத்துப் பால் குடிக்கின்றன. புலியைக் கண்டால் நடுங்கி ஒடுங்கி ஓடி ஒளியும் பசுவின் கன்றுகள் சிறிதும் பயமின்றி புலிப்பால் குடிக்கின்றன. எத்துணைப் பெரிய மாறுதல்.

மலையுடன் உருகா :—

கானத்தின் இனிமையால் அங்கு, மண், மலை, மரம் எல்லாம் உருகி நின்றன.

நீள் அடவிதனிலுள உலவைகள் தளிர்விட :—

நீண்ட கானகத்தில் உலர்ந்த மரங்கள் தளிர்விட்டுத் தழைத்தன. என்ன அற்புதம்! சராசரங்கள் யாவும் இன்புற்றன.

மதமொடு களிறுகள் பிடியுடன் அகல :—

மதங்கொண்ட ஆண் யானைகள் பெண் யானையுடன் கூடி மகிழ்கின்றன.

வெளியுயர் பறவைகள் நிலம்வர :—

எட்டாத தொலைவில் பறக்கும் பட்சிகள் இந்த கானத்தைக் கேட்டு உருகி நிலத்திற்கு இறங்கி வந்து கேட்டு மகிழ்கின்றன.

ஏழ்தொளைகள் விடுகழை :—

மூங்கில் குழலில் ஏழு தொளைவிட்டு ஏழு சுரங்களை அமைத்து கோபாலகிருஷ்ணர் உலகம் உய்ய இன்னிசைத் தேனை வழங்கியருளினார்.

## புல்லாங்குழல்

இது இயற்கையான வாத்தியம். கானகத்தில் ஓங்கி வளர்ந்த மூங்கில்களில் தீப்பிடித்து தொளை உண்டாகும்,

அத் தொளையின் வழியே காற்று வீசும்பொழுது இயற்கையில் நாதம் எழும். ஆகவே இயற்கை வாத்தியம் புல்லாங்குழல்.

இது யாழினும் முந்தியது. அதனுல் "குழலினிது" என்கின்ருர், திருவள்ளுவர்.

மலையில் சம நிலத்தில் இளமையும் முதுமையுமின்றி ஒரு புருடாயுசு உடைய மூங்கிலை வெட்டி அதனை நிழலிலே ஆற விடவேண்டும். ஓராண்டு சென்றபின் இலக்கண விதிப்படி குழல் செய்ய வேண்டும். இருபது விரல் நீளமும், நாலரைவிரல் சுற்றளவும் அமைக்க வேண்டும். துளை இடும்போது ஓர் நெல்லரிசியில் பாதி மரம் நிறுத்தி வெண்கலத்தால் அணைசுபண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகம் வெளியாக விடவேண்டும். இருபது விரல் உள்ள குழலிலே தலைப்புறம் இரண்டு விரல் நீக்கி முதல் தொளை விடவேண்டும். அத்துளையிலிருந்து ஏழு விரல் விடுத்து கடைவாயிலும், வெளிவாயில் இரண்டு நீக்கி நடுவிலுள்ள ஒன்பது விரல் நீளத்தில் எட்டுத் துளை இடவேண்டும். இவற்றில் ஒன்று முத்திரை என்று கழித்து மிகுந்து நின்ற ஏழினும், ஏழுவிரல் வைத்து ஊதவேண்டும். தொளைகளின் இடப்பரப்பு ஒரு விரல் அகலம்.

ஏழு விரல்களாவன: இடக்கையில் பெருவிரலும், சிறுவிரலும் நீக்கிய மற்றைய மூன்று விரல்களும், வலக்கையில் பெருவிரல் நீங்க மற்றைய நான்கு விரல்களும் என உணர்க. இவற்றுள் சட்சமம், ரிஷபம், காந்தாரம், மத்திபம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற ஏழு சுரங்கள் பிறக்கும்.

இத்தகைய அருமையுடையது புல்லாங்குழல். இதனை முதன் முதலாக வாசித்தவர் முருகப் பெருமான். "குழலன் கோட்டன் குறும்பல்லியத்தன்" எனவரும் திருமுருகாற்றுப்படைத் திருவாக்கால் அறிக.

**துணைவ :—**

முருகன், அடியார்கட்கு எப்போதும் அருந்துணையாயிருந்து உதவுகின்ற கருணமூர்த்தி.

**குணதர :—**

அருட்குணங்களைத் தரித்தவர். "எண்குண பஞ்சரனே".

**துறையில் அலையெறி திருநகர் :—**

கரையில் அலைமோதி நிற்க, அக் கடற்கரையில் மிகமிக அழகாக விளங்கும் திருத்தலம் திருச்செந்தூர். இயற்கை வளமும், செயற்கை எழிலும் பொருந்தி காண்பார் கண்ணுங்

கருத்தும் ஒருங்கே கவர்ந்து பிறவிப் பெருங்கடலுக்குத் துறை முகமாக விளங்கும் புண்ணியப்பதி.

### கருத்துரை

கண்ணபிரானுடைய திருமருகரே! செந்திற் கடவுளே! மாதருறவு நீங்க அருள்புரிவீர்.

## 22

கனங்கள் கொண்ட குந்த ளங்க ளுங்கு லைந்த லைந்து விஞ்சு
கண்க ளுஞ்சி வந்த யர்ந்து களிகூரக்
கரங்க ளுங்கு விந்து நெஞ்ச கங்க ளுங்க சிந்தி டுங்க
றங்கு பெண்க ளும்பி றந்து விலைகூறிப்
பொனின்கு டங்க ளஞ்சு மென்த னங்க ளும்பு யங்க ளும்பொ
ருந்தி யன்பு நண்பு பண்பு முடனாகப்
புணர்ந்து டன்பு லர்ந்து பின்க லந்த கங்குழைந்த வம்பு
ரிந்து சந்த தந்தி ரிந்து படுவேனோ
அனங்க னொந்து நைந்து வெந்து குந்து சிந்த அன்று கண்தி
றந்தி நுண்ட கண்டர் தந்த அயில்வேலா
அடர்ந்த டர்ந்தெ திர்ந்து வந்த வஞ்ச ரஞ்ச வெஞ்ச மம்பு
ரிந்த அன்ப ரின்ப நண்ப உரவோனே
சினங்கள் கொண்டி லங்கை மன்சி ரங்கள் சிந்த வெஞ்ச ரந்தெ
ரிந்த வன்ப ரிந்த இன்ப மருகோனே
சிவந்த செஞ்ச தங்கை யுஞ்சி லம்பு தண்டை யும்பு னைந்து
செந்தில் வந்த கந்த எங்கள் பெருமாளே.

### பதவுரை

அனங்கன் நொந்து = மன்மதன் நொந்து, நைந்து வெந்து உகுந்து சிந்த = உடம்பு நலிந்து வெந்து சாம்பலாகி உதிர்ந்து போகுமாறு, அன்று = அந்நாளில், கண் திறந்து = நெற்றிக் கண்ணைத் திறந்தவரும்,

இருண்ட கண்டர் = நீலகண்டரும் ஆகிய சிவபெருமான், தந்த = பெற்றருளிய, அயில் வேலா = கூரிய வேலாயுதத்தை யுடையவரே! அடர்ந்து அடர்ந்து எதிர்ந்து வந்த = கூட்டம் கூட்டமாக நெருங்கி எதிர்ந்து வந்த, வஞ்சர் அஞ்ச = வஞ்சகர்களாகிய அசுரர்கள் அஞ்சுமாறு, வெம் சமம் புரிந்த = வெப்பமான போர் செய்த, உரவோனே = வலிமையுடையவரே! அன்பர் இன்ப நண்ப = அன்புடையார்கட்கு இன்பத்தை யருளும் நண்பரே! சினங்கள் கொண்டு = கோபங்கொண்டு, இலங்கை மன் சிரங்கள் சிந்த = இலங்கை யரசனாகிய இராவணனுடைய தலைகள் விழுமாறு, வெம் சரம் தெரிந்தவன் பரிந்த = வெப்பமான கணைவிடுத்த ஸ்ரீராமபிரான் அன்பு கொள்ளும், இன்ப மருகோனே = இன்பத்தைச் செய்யும் திருமருகரே! சிவந்த செம் சதங்கையும் = சிவந்த பொன்னாலாகிய அழகிய சதங்கையும், சிலம்பு = சிலம்பும், தண்டையும் = தண்டையும், புனைந்து = தரித்து, செந்தில் வந்த = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, கந்த = கந்தப்பெருமானே! எங்கள் பெருமாளே = அடியேங்களுடைய பெருமை மிகுந்தவரே! கனங்கள் கொண்ட = மேகம் போன்ற, குந்தளங்களும் அலைந்துஅலைந்து = கூந்தல் குலைந்து அசைந்து, விஞ்சு கண்களும் சிவந்து அயர்ந்து = அழகில் மிகுந்த கண்கள் சிவந்து சோர்வுற்று, களி கூர = மகிழ்ச்சி மிகுந்து, கரங்களும் குவிந்து = கரங்களைக் கூப்பி, நெஞ்சகங்களும் கசிந்திடும் கறங்கும் = நெஞ்சத்தினுள்ளே இரக்கங்கொண்டு திரியும், பெண்களும்பிறந்து = பெண்களும் தோன்றி, விலை பேசி = அவர்களுடன் பொருள் இவ்வளவு என்று உரை செய்து, பொனின் குடங்கள் அஞ்சும் என் = தங்கக் குடங்கள் அஞ்சும் என்று கூறுமாறு, தனங்களும் = கொங்கைகளையும், புயங்களும் = தோள்களையும், பொருந்தி = தழுவி, அன்பு நண்பு பண்பும் உடனாக = அன்பும் நட்பும் குணமும் ஒன்று கூடும்படி, புணர்ந்து = கலந்தும், உடன் புலர்ந்தும் = உடனே பிணங்கியும், பின் கலந்து அகம் குழைந்து = பின்னர் இணங்கியும் உள்ளம் உருகி, அவம் புரிந்து = பயனற்ற கருமங்கள் செய்து, சந்ததம் திரிந்து = நாள் தோறும் வீணாக உலாவி, படுவேனோ = அழிவேனோ?

## பொழிப்புரை

மன்மதன் உளம் நொந்து உடல் வெந்து அழிந்து விழுமாறு அந்நாளில் நெற்றிக் கண்ணைத் திறந்தவரும், இருண்ட நீலகண்டத்தையுடையவரும் ஆகிய சிவபெருமான் பெற்ற கூரிய வேலாயுதத்தை யுடையவரே! கூட்டமாக நெருங்கி எதிர்ந்து வந்த வஞ்சகராகிய அசுரர் அஞ்சும்படி வெம்மையான போர்புரிந்த வலிமை மிக்கவரே! அன்பர்கட்கு இன்பத்தைச் செய்யும் நண்பரே! கோபங்கொண்டு இலங்கை வேந்தனாகிய இராவணனுடைய சிரங்கள் அற்று விழுமாறு, வெய்ய

கணையை விடுத்த ஸ்ரீ ராமருடைய அன்புக்கு உகந்த இன்ப முடைய திருமருகரே! செம்பொன்னாலாகிய அழகிய சதங்கை, சிலம்பு, தண்டை என்ற அணிகலன்களையணிந்து, திருச்செந் தூரில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுளே! எமது பெருமித முடையவரே! மேகம் போன்ற கூந்தல் குலைந்து அலைந்து, அழகுமிக்க கண்கள் சிவந்து சோர்ந்து, மகிழ்ச்சி மிகுந்து, கைகளைக் குவித்து நெஞ்சினுள் இரக்கங்கொண்டு திரியும் பெண்கள் தோன்றி, அவருடன் பொருள் இவ்வளவு என்று விலை பேசி, பொற்குடங்களும் அஞ்சும் என்று கூறத்தக்க, தனங்களையும் தோள்களையும் தழுவி, உடனே அவருடன் ஊடியும், பின் கூடியும் மனம் குழைந்து வீண் செயலைச் செய்து நாள்தோறும் திரிந்து அழிவேனோ?

## விரிவுரை

**கனங்கள் கொண்ட குந்தளம் :—**

மகளிருடைய கூந்தல் கருமையால் மேகத்தை யொத்துள்ளது. இங்ஙனமே இப்பாடலில் மூன்று அடிகளில் அடிகளார் அம் மகளிரது அவயவ நலங்களைக் கூறுகின்றனர்.

**புணர்ந்துடன் புலர்ந்து கலந்து :—**

பொதுமகளிர் தம்மிடம் வரும் ஆடவர்கட்கு இன்பம் அதிகரிக்கும் பொருட்டு அடிக்கடி ஊடுவர். ஊடுவது பிணங்கிப் பிரிவது. அவ்வாறு சிறிது பிணங்கிப் பிரிந்துப் பின்னர் இணங்கிக் கூடுவதனால் காமுகர்க்கு இன்பம் அதிகப்படும். நன்கு பசித்து உண்பதனால் உணவின் சுவை அதிகப்படுவது போல் என உணர்க.

இத்தகைய மகளிருடன் கலந்து நாடோறும் வீணே திரிந்து அழிதல் கூடாது எனக் குறிப்பிடுகின்றனர்.

**அனங்கன் :—**

மன்மதன் சிவபெருமானை மயக்கும் பொருட்டு ஐங்கணைகளைச் சொரிய, இறைவன் நெற்றிக் கண்ணைச் சிறிது திறந்து நோக்கினார். கரியவேள் கரிந்து எரிந்து சாம்பரானான்.

**அடர்ந்தடர்ந்து எதிர்ந்து வந்த வஞ்சர் :—**

சூராதி யவுணர்கள் கூட்டமாக வந்து கந்தவேளை எதிர்த்துப் போர்புரிந்து அழிந்தனர். கொசுக் கூட்டங்கள் நெருப்பு மலையை யணுகி யழிவதுபோல் ஆயினர்.

**சினங்கள் கொண்டு இலங்கை மன் சிரங்கள் சிந்த :—**

பரதாரகமனம் என்பது பாவங்களில் தலையாயது. அப் பாவத்தை யழிக்க வந்தது இராமாவதாரம். பரதாரகமனம்

புரிந்த காரணத்தால் வாலியையும் இராவணனையும் இராமர் வதைத்தனர். ஏகபத்னி விரதத்தின் உயர்வைத் தாமே நடந்து காட்டியருளினார்.

காமம் மனத்தில் தங்கி எழுகின்றது. மனம், மெய், வாய், கண், நாசி, செவி, வாக்கு, பாணி, பாதம், பாயு, உபத்தம் என்ற பத்து இந்திரியங்களையும் பற்றி நிற்கின்றது.

எனவே மனமாகிய இராவணனுக்குத் தசேந்திரியங்கள் என்ற பத்து தலைகள் இருந்தன. ஆத்மாவாகிய இராமர் ஞான மாகிய பாணத்தினால் அப் பத்து இந்திரியங்களை அறுத்து அருளினார். இராமர் பரிந்து முருகவேளைக் கொண்டாடுகின்றார் என்பதன் குறிப்பு தச இந்திரியங்களை வென்றவன் மெய்ஞ் ஞானானந்தத்தை விரும்புவான் என்பது ஆகும். மெய்ஞ் ஞானானந்தம் முருகன். அஞ்ஞானத்தால் விளைவது துன்பம்; ஞானத்தால் விளைவது இன்பம். இன்ப வடிவினன் முருகன். "ஆனந்தாய நம" என்றே ஒரு மந்திரம் உண்டு. அது முருக னுடைய அஷ்டோத்தரசத நாமங்களில் ஒன்று.

## கருத்துரை

காம தகனஞ் செய்த சிவகுமாரரே! சூர குலகாலரே! மால் மருகரே! செந்திற் கந்தவேளே! மாதராசையினின்று நீங்கி உய்ய அருள்புரிவீர்.

## 23

கன்றிலுறு மானை வென்றவிழி யாலெ
கஞ்சமுகை மேவு முலையாலே
கங்குல்செறி கேச மங்குல்குலை யாமை
கந்தமலர் சூடு மதனாலே
நன்றுபொருள் தீர வென்றுவிலை பேசி
நம்பவிடு மாத ருடனாடி
நஞ்சுபுசி தேரை யங்கமது வாக
நைந்துவிடு வேனை யருள்பாராய்
குன்றிமணி போல்வ செங்கண்வரி போகி
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்
கொண்ட மயிலேறி அன்றசுரர் சேனை
கொன்றகும ரேச குருநாதா
மன்றல்கமழ் பூக தெங்குதிரள் சோலை
வண்டுபடு வாவி புடைசூழ
மந்தி நடமாடு செந்திநகர் மேவு
மைந்தஅம ரேசர் பெருமாளே.

## பதவுரை

குன்றி மணி போல்வ = குண்டுமணிபோன்ற, செம் கண் வரி போகி = சிவந்த கண்களையும்கோடுகளையும் உடைய பாம்பு, கொண்ட படம் வீசும் = தனது அழகிய படத்தை வீசுமாறு, அணி கூர்வாய் கொண்ட = அழகியதும் கூர்மையுள்ளதுமான வாயில் அப் பாம்பினைக் கொண்ட, மயில் ஏறி = மயிலின் மீது ஏறி, அன்று அசுரர் சேனை கொன்ற = அந்நாளில் அசுரர்களுடைய சேனைகளைக் கொன்றருளிய, குமர ஈச = குமாரக் கடவுளே! குருநாதா = குருநாதரே! மன்றல் கமழ் பூக = வாசனை வீசும் பாக்கு, தெங்கு திரள் சோலை = தென்னை முதலிய வைகள் நெருங்கியுள்ள சோலைகளும், வண்டு படு வாவி = வண்டுகள் ஒலிக்கும் குளங்களும், புடைசூழ = அருகில் சூழ்ந்திருக்க, மந்தி நட மாடும் = குரங்குகள் நடனம் புரிகின்ற, செந்தில்நகர் மேவு = திருச்செந் தூரில் வீற்றிருக்கின்ற, மைந்த = வீரரே! அமர ஈசர் = தேவர் தலைவர் களுக்கும், பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! கன்றில் உறு மானை வென்ற விழியாலே = மான் கன்றை வெற்றி பெற்ற அழகிய கண்களாலும், கஞ்ச முகை மேவு முலையாலே = தாமரை மொட்டு போன்ற தனங்களாலும், கங்குல்செறி கேசம் = இருள் நிறைந்த கூந் தல், மங்குல் = மேகம் போன்று விளங்கி, குலையாமை = அது குலையாத வண்ணம், கந்த மலர் சூடும் அதனாலே = மணங் கமழும் மலரை முடிக் கும் வகையாலும், நன்று பொருள் தீர = நல்லபடியே பொருள் முழு தும் வரும்படி, வென்று விலைபேசி = வெற்றியுடன் விலை பேசிக் கொண்டு, நம்பவிடு மாதர் உடன் ஆடி = தம்மை நம்புமாறு புரியும் விலைமகளிருடன் விளையாடி, நஞ்சு புசி தேரை அங்கம் அது ஆக = நஞ்சையுடைய பாம்பு உண்ணும் தேரையின் உடல்போல், நைந்து விடுவேனை = நலிந்து போகின்ற அடியேனை, அருள்பாராய் = அருட் கண்ணால் பார்த்தருளுவீர்.

## பொழிப்புரை

குண்டுமணி போன்ற சிவந்த கண்களும் கோடுகளும் உடையதும் படம் வீசுவதும் ஆகிய பாம்பைக் கூர்மையும் அழகும் உடைய வாயில் கவ்விக்கொண்டுள்ள மயிலின்மீது ஆரோகணித்து, அந்நாளில் அசுரருடைய சேனைகளை யழித்த குமாரக் கடவுளே! குருமூர்த்தியே! நறுமணங் கமழும் பாக்கு தென்னை முதலியன நெருங்கியுள்ள சோலைகளும், வண்டுகள் நிறைந்துள்ள குளங்களும் அருகில் சூழ, குரங்குகள் நடனம் புரிகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள வீரரே! தேவேந்திரர்கட்கும் பெருமை மிகுந்தவரே! மான் கன்றை வென்ற கண்களாலும், தாமரை யரும்பு போன்ற தனங்களா லும், மேகம் போல் இருண்ட கூந்தலில் அது கலையாவண்ணம் மலர் சூடியிருக்கின்ற வகையாலும், நல்லபடியே பொருள்

முழுவதும் வரும்படி வெற்றியுடன் விலை பேசித் தம்மை நம்பு மாறு புரிகின்ற விலைமகளிருடன் விளையாடி, விடங்கொண்ட பாம்பின் வாய் தேரையைப் போல் மெலிந்து உடல் நலிகின்ற சிறியேனைத் தேவரீர் அருள் திருக்கண்களால் நோக்கியருள் புரிவீர்.

## விரிவுரை

**குன்றிமணி போல்வ செங்கண் வரி போகி :—**

பாம்புகளின் கண்கள் குண்டுமணி போல் சிவந்திருக்கும். காரணம்? கோபம் உள்ள கண்கள் சிவந்திருக்கும். கண்களின் சிவப்பு சினத்தைக் குறிக்கும். அதன் உடம்புகளில் வரிகள் இருக்கும்.

**கொண்ட படம் வீசு மணிகூர்வாய் கொண்ட மயில் :—**

நல்ல நாகம் படம் விரித்து ஆடும். இத்தகைய நாகத்தை மயில் தனது வாயில் எடுத்துக்கொண்டு ஆடும். இங்கே பாம்பு என்பது குண்டலி சக்தி, மயில் என்பது ஓங்காரம். குண்டலியை எழுப்பிப் பிரணவம் மேல் எழுந்து விளங்கும். இந்தக் குறிப்பை இது உணர்த்துகின்றது.

**நம்பவிடு மாதர் உடனுடி ;—**

தங்கள்பால் வரும் ஆடவர்களைத் தங்களை உண்மை யன்புள்ளவர்களாகவே நினைத்து நம்புமாறு செய்வர். இத்தகைய வஞ்சனை நிறைந்த பொதுமகளிருடன் விளையாடி விழலுக்கிறைத்த வீணர்போல் கெடுவர்.

**நஞ்சு புசி தேரை :—**

நஞ்சையுடைய பாம்பு தேரையைப் பிடித்து விழுங்கும். "பாம்பின் வாயில் உள்ள தேரை எத்துணைப் பெரிய இடரில் ஏங்குமோ அத்துணை இடரையடைந்தேன்" என்று கூறு கின்றார்.

**நைந்துவிடுவேனை அருள்பாராய் :—**

"தேரைபோல் மெலிந்து நலிந்து கெடுகின்ற அடியேனை ஆண்டவனே உனது அருள் பார்வையால் நோக்கிக் காத்தருள்வாய்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்.

ஆண்டவனுடைய அருட்பார்வை விழுமாயின் எல்லாத் தீமைகளும் நீங்கி எல்லா நன்மைகளும் உண்டாகும்.

அருணகிரிநாதரை முருகப் பெருமான் தமது அருள் கண்ணால் நோக்கி யாட்கொண்டருளினார்.

"கனகத்தினு நோக்கினி தாயடி
யவர் முத்தமிழாற் புகவேபர
கதிபெற்றிட நோக்கிய பார்வையு மறவேனே"
—(சதுரத்த)திருப்புகழ்

"ஆணவ வழுக்கடையு மாவியை விளக்கியநு
பூதியடை வித்ததொரு பார்வைக்காரனும்" —திருவகுப்பு(4)

## கருத்துரை

மயில் வாகனரே! அசுரகுல காலரே! செந்திலாண்டவரே! விலைமகளிர் வலைப்பட்டு நலியாமல் அடியேனை அருள் நோக்கால் நோக்கியருள்வீர்.

## 24

குகர மேவுமெய்த் துறவினின் மறவாக்
கும்பிட் டுந்தித் தடமூழ்கிக்
குமுத வாயின்முற் றமுதினை நுகராக்
கொண்டற் கொண்டைக் குழலாரோ
டகரு தூளிகர்ப் புரதன இருகோட்
டன்புற் றின்பக் கடலூடே
அமிழு வேனைமெத் தெனவொரு கரைசேர்த்
தம்பொற் றண்டைக் கழல்தாராய்
ககன கோளகைக் கணவிரு மளவாக்
கங்கைத் துங்கப் புனலாடும்
கமல வாதனற் களவிட முடியாக்
கம்பர்க் கொன்றைப் புகல்வோனே
சிகர கோபுரத் தினுமதி ளினுமேற்
செம்பொற் கம்பத் தளமீதும்
தெருவி லேயுநித் திலமெறி யலைவாய்ச்
செந்திற் கந்தப் பெருமாளே.

## பதவுரை

ககன கோளகைக்கு = ஆகாய முகட்டின், அணவு இரும் அளவா = பொருந்திய பெரிய அளவுக்கு அடங்காத, கங்கை துங்கப் புனல் ஆடும் = தூய்மையான கங்கை நீர் சடையில் அசைந்து ஆடும்படி விளங்குபவரும், கமல ஆதனற்கு = தாமரை மலரில் இருக்கும் பிரம தேவனால், அளவிட முடியா = அளக்க முடியாதவரும் ஆகிய

கம்பர்க்கு = தாணுவாகிய சிவபெருமானுக்கு, ஒன்றை புகல்வோனே = ஒரு மொழியாகிய பிரணவப் பொருளை உபதேசித்தவரே! சிகர கோபுரத்தினும் = கலசங்களையுடைய கோபுரத்தின் மீதும், மதிளினும் = மதில் மீதும், மேல் செம்பொன் கம்பதள மீதும் = மேலான சிவந்த பொன்னுலாகிய தூண்கள் மீதுள்ள தளங்களின் மாடி வீடு மீதும், தெருவிலேயும் = வீதிகளிலும், நித்திலம் எறி = முத்துக்களை எறிகின்ற, அலைவாய் = கடல் அலைகளின் கரையில் உள்ள, செந்தில் கந்த = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுளே! பெருமாளே = பெருமையில் சிறந்தவரே! குகர மேவு மெய்துறவினின், மலைக் குகையில் இருக்கும் உண்மையான துறவிகளைப்போல், மறவா = துறவிகள் பரம் பொருளை மறவாதிருப்பதுபோல் நானும் விலைமகளிரை மறவாத மனத்துடன், கும்பிட்டு = அம்மாதர்களை வணங்கி, உந்திதடம் மூழ்கி = கொப்பூழ் என்ற குளத்தில் முழுகி, குமுதவாயின் முற்று அமுதினை நுகரா = குமுத மலர் போன்ற வாயில் பெருகும் அமுதினைப் பருகி, கொண்டல் கொண்டை குழலாரோடு = மேகம் போன்ற கூந்தலில் கொண்டையிட்ட மகளிருடன், அகரு தூளி = அகிற் பொடி, கர்ப்பூர = பச்சைக் கற்பூரம் இவைகளையணிந்த, தன இரு கோட்டு = தனங்களாகிய இரு மலைகளில், அன்பு உற்று இன்ப கடலூடே = அன்பு மேலிட்டு இன்ப சமுத்திரத்தினிடையே, அமிழுவேனை = அழுந்திவிடுகின்ற அடியேனை, மெத்தென = பக்குவமாக, ஒரு கரை சேர்த்து = ஒப்பற்ற முத்திக் கரையில் சேர்த்து, அம்பொன் தண்டைக்கழல் தாராய் = அழகிய பொன்னுலாகிய தண்டையணிந்த திருவடியைத் தந்து அருள் புரிவீர்.

## பொழிப்புரை

ஆகாய வெளியின் பெரிய அளவுக்கும் அடங்காத தூய கங்கை நீர் சடையில் அசைந்து ஆடுமாறு செய்தவரும், தாமரை மலரில் வாழுகின்ற பிரம தேவனால் அளக்க முடியாதவரும் ஆகிய சிவபெருமானுக்கு ஒரு மொழியாகிய பிரணவப் பொருளை உபதேசித்தவரே! கலசங்களையுடைய கோபுரத்தின் மீதும், திருமதில்கள் மீதும், மேலான செம்பொன் மயமான தூண்களின் மீதுள்ள மாடிகளின் மீதும், வீதிகளிலும் முத்துக்களை எறிகின்ற அலைகளின் கரையில் விளங்கும் திருச்செந்தூர் என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள கந்தப் பெருமானே! பெருமிதம் உடையவரே! மலைக் குகைகளில் வாழுகின்ற உண்மைத் துறவிகள் பரம் பொருளை மறவாது நாடுவதுபோல், நானும் விலைமகளிரை மறவாது நாடி அவர்களைத் தொழுது உந்தியென்கின்ற கடலில் முழுகி, குமுத மலர் போன்ற அதரத்தில் பெருகும் அமுதைக் குடித்து, மேகம் போன்ற கரிய கூந்தலைக் கொண்டையாக முடிக்கும் அம் மகளிரோடு, அகில்பொடி பச்சைக் கர்ப்பூரம் முதலிய வாசனைகளையணிந்துள்ள இரு மலைகளைப்போன்ற தனங்களில் அன்

புற்று இன்பமாகிய கடலில் முழுகி அழுந்துகின்ற அடியேனைப் பக்குவமாக ஒப்பற்ற முத்தியாகிய கரையில் சேர்த்து 'அழகிய பொன்னாலாகிய தண்டை சூழ்ந்த திருவடியைத் தந்து அருள் புரிவீர்.'

## விரிவுரை

**குகர மேவுமெய்த் துறவினின் மறவா கும்பிட்டு...மூழ்கி :—**

குகரம்-மலைக் குகை. மலைக் குகைகளில் முனிவர்கள் நாடு நகரம் வீடு வாசல் மனைவி மக்கள் செல்வம் உற்றார் பெற்றார் சுகம் ஆகிய அனைத்தையும் துறந்து இறைவனையே நினைந்து அசைவற்று இருப்பார்கள். அதுபோல் நானும் விலைமகளிரை நினைந்து ஏனைய எனது உறவு மனைவி மக்கள் முதலிய எல்லாவற்றையும் துறந்து அவர்கள் பற்றில் உறுதியுடன் இருக்கின்றேன் என்று அடிகளார் துறவிகளை உவமை கூறினார்.

ஒரு தூர்த்தன்; பக்தி ஞானம் ஒழுக்கம் சீலம் உறுதி தவம்ஆகியநற்குணங்களில் ஒன்றும்இல்லாதவன். தன் காமக் கிழத்தியுடன் உல்லாசமாகத் திரிவான். ஒருநாள் தன் காமக் கிழத்தியுடன் ஆடியும் பாடியும் கூடியும் ஒரு சோலை வழியே சென்றுகொண்டிருந்தான். அங்கே ஒரு மரத்தடியில் ஒரு சிறந்த மாதவ முனிவர் பெருமான் அமர்ந்திருந்தார். அவருக்கு அவன்மீது இரக்கம் உண்டாயிற்று "அந்தோ! அருமையாகக் கிடைத்த இந்த மானுடப் பிறப்பை இவன் வறிதே கழிக்கின்றானே. காமதேனுவின் பாலைக் கமரில் விடுவதுபோல் விலைமதிக்க ஒண்ணாத ஆயுள் நாளை காமச் செருக்கில் கழிக்கின்றானே. இவனுக்கு இதஞ் சொன்னால் ஏறாதே. ஓட்டைக் குடத்தில் தண்ணீரை நிரப்ப முடியாதே. இவனை எப்படித் திருத்தலாம்? இவனுக்கு உய்வு தேடவேணும். அதற்கு என்ன வழி?" என்று சிந்தித்தார்.

எழுந்தார். அந்தக் காமுகன் முன் சென்றார். அவனை வலம் வந்தார். அடியற்ற மரம்போல் அப்பாதகன் பாதத்தின் மீது வீழ்ந்து வணங்கினார். பெரிய மகானுடைய சடை முடி அவன் அடியில் தீண்டியது. வெள்ளை வெளேர் என்று வெள்ளிக் கம்பி போல் நீண்ட தாடியும், சிவந்த சடையும், கருணை பொழியும் முகமும், அருள் வழியும் விழிகளும், அறிவின் சிகரம் போன்ற திருமேனியும் உடைய அத்துறவி, ஒழுக்கங் கெட்ட தன்னை வணங்கியதைக் கண்டு அவன் நாணினான். நடுங்கினான்.

"சுவாமீ! நான் ஈனத் தொழில் புரிபவன். பக்தி ஞானம் அணுவளவும் இல்லாதவன். பாவியாகிய இந்த நாயேனைத் தேவரீர் வணங்கலாமா? இது என்ன அநியாயம்?" என்றான்.

துறவி, "அன்பனே! வருந்தற்க. நீதான் என்னைக் காட்டிலும் பெரிய துறவி. கடுகளவு இன்பம் சிற்றின்பம்; மலையளவு இன்பம் பேரின்பம். பேரின்பம் தெவிட்டாதது. பரிசுத்தமானது. ஒளிமயமானது. ஞானத்தில் விளைவது. சிற்றின்பம் நோய் செய்வது; அசுத்தமானது. இருள் நிறைந்தது. அஞ்ஞானத்தில் விளைவது.

நான் மலைபோன்ற பேரின்பத்தை நாடி மனைவி மக்களையும் நாடு நகரங்களையும் வீடு வாசல்களையுந் துறந்தேன். நீ அணுவளவான சிற்றின்பத்தை நாடி மலையளவான பேரின்பத்தையும் அதனையளிக்கும் ஆண்டவனையும் அவனையணையும் சாதனைகளாகிய பக்தி ஞான சீல விரதங்களையுந் துறந்தனை. பெரியதை விரும்பி சிறியதைத் துறந்தவன் நான். சிறியதை விரும்பி பெரியதைத் துறந்தவன் நீ.

சிற்றின்பம் வேப்பெண்ணெய் போன்றது. பேரின்பம் அமுதம் போன்றது. நான் அமுதத்தை நாடி வேப்பெண்ணெயைத் துறந்தேன். நீ வேப்பெண்ணெயை விரும்பி அமுதத்தைத் துறந்தவன். ஆகவே, என் துறவைக் காட்டிலும் உன்னுடைய துறவே பெரியது. நீயே பெரிய துறவி, நான் இந்த மண்ணுலகத்தைத் துறந்தவன். நீ முத்தியுலகையே துறந்தவனாயிற்றே. ஆதலால் என்னிலும் நீ பெரிய துறவி என்பதில் அணுவளவும் ஐயமுண்டோ?" என்று கூறி மீண்டும் ஒருமுறை அவன் கால்மீது வீழ்ந்தார்.

இந்தப் பொருள் பொதிந்த திருமொழிகளைக் காமுகன் கேட்டான். அவன் மனதில் பசுமரத்து ஆணிபோல் அவ்வறவுரை பதிந்தது. அருகில் நின்ற தன் காமக் கிழத்தியை மறந்தான். தனது அறியாமையை நினைந்து வருந்தினான். அக்கணமே அத் தீயவன் தூயவனானான். அம்மகானுடைய பாத மலர் மீது பணிந்தான்.

"ஐயனே! என்னை ஆட்கொள்ள வேண்டும். அந்தோ! என் மதியிருந்தவாறு என்னே! நான் மூடரில் மூடன். உய்யு நெறியை உபதேசிக்க வேண்டும்" என்று வேண்டினான். அவன் கண்களில் நீர் பெருகியது. உள்ளம் உருகியது. வினை கருகியது.

துறவரசர் அவனுக்கு சட்சு தீட்சையும் மானசதீட்சையும் பரிச தீட்சையும் வழங்கியருளினார்.

> விட்டேன் உலகம் விரும்பேன் இருவினை வீணருடன்
> கிட்டேன் அவருரை கேட்டுமிரேன் மெய் கெடாதநிலை
> தொட்டேன் சுகதுக்கம் அற்றுவிட்டேன் தொல்லை நான்மறைக்கும்
> எட்டேன் எனும்பரம் என்னிடத்தே வந்திங்கு எய்தியதே.

என்ற பட்டினத்து சுவாமிகள் பாடலுக்கு இலக்கியமானான்.

கருணை நிறைந்த மகான் அவனை அடிவணங்கி இவ்வாறு அருளால் ஆட்கொண்டார்.

இத்திருப்புகழின் முதலடியைப் படிக்கின்றபோது இந்த வரலாறு நினைவுக்கு வருகின்றது. "துறவிகள் பரத்தை மறவாததுபோல் நானும் பரத்தையரை மறவாது அவரைக் கும்பிட்டு உந்தித் தடாகத்தில் முழுகினேன்" என்று கூறி அருணை முனிவர் நயமாக நம்மைத் திருத்துகின்ருர்.

"உந்தி யென்கின்ற மடு விழுவேனை" —(மன்றலங்) திருப்புகழ்.

**குமுத வாயின்முற் றமுதினை நுகரா :—**

குமுத மலர் போன்ற வாயில் அமுதம் ஊறுகின்றதென்று பெண்மயல்கொண்ட பித்தர்கள் எண்ணி அதர பானத்தை விரும்பி கானல் நீரை நாடியலையும் மான்போல் திரிந்து கெடுவார்கள்.

**இன்பக் கடலூடே அமிழுவேனை :—**

"இன்பம்போல் தோன்றி துன்பத்தைத் தரும் மையல் கடலில் வீழ்ந்து மடிகின்ற அடியேனை, அதில் மடியாவண்ணம் உமது அடிமலராகிய புணையினுல் காப்பாற்றி யருளும்" என்று வேண்டுகின்றனர்.

**மெத்தென ஒருகரை சேர்த்து :—**

"கவலைப்பட்டு நோய்வாய்ப்பட்ட பலவீனமான சிறுமகவை அதன் தாய் மெத்தென எடுத்து ஆதரிப்பதுபோல், சிறியேன் பல நோயால் துடித்து அறிவீன முற்றேன். என்னை மெல்ல எடுத்து உமது பாதமாகிய தொட்டிலில் இட்டு ஆதரிக்க வேணும்" என்று உள்ளம் குழைந்து உருகித் துதிக்கின்றனர்.

**கமல வாதனற் களவிட முடியா :—**

பிரம தேவன் தேடியும் காணுத தகைமையுடைவர் சிவபெருமான். கலைமகள் நாயகன் பிரமன். கல்வியறிவால் காண முடியாதவன் ஆண்டவன். கலையறிவு அபரஞானம் எனப்படும். அபரஞானத்தால் அறியவொண்ணுதவன்.

"வாசித்துக் காணொணுதது" —திருப்புகழ்.

**கம்பர்க்கு :—**

சிவபெருமானுக்குக் கம்பர் என்று ஒரு பேருண்டு. வீட்டையும் மண்டபத்தையும் தாங்குவது கம்பம் அதுபோல் அகில உலகங்களையும் கம்பத்தைப் போல் நின்று சிவமூர்த்தி தாங்குவதனுல் கம்பர் என்ற பேர் பெற்ருர். வட மொழியில்

தாணு என்ற பேரும் இதே பொருளில் வழங்கப் பெறுகின்றது. தாணு-தூண் போன்றவர்.

சிறந்த தமிழ்ப் புலவராகிய ஒருவர் கம்பர் என்ற பேருடையவராக இருந்தார் என்பதையும் இங்கு நினைவு கூரவும். கம்பர் என்பது சிவபெருமானுடைய பேர். கம்பர் தனது மகனுக்கும் அம்பிகாபதி என்று சிவநாமத்தையிட்டார்.

"சயிலாங் கனைக்குருகி இடப்பக்கங்
கொடுத்த கம்பர்"
—திருப்புகழ்.

கம்பராகிய கண்ணுதற் கடவுளுக்கு நம்பர் என்றும் ஒரு பேருண்டு. கம்பத்தைப் பற்றிப் பிள்ளைகள் சுற்றிச் சுற்றியாடுவதுபோல், கம்பனாகிய இறைவனை நம்பி உலகில் சுற்றியுலாவவேண்டும். பற்றுதற்குரியவன் கம்பன்; நம்புதற்கு உரியவன் நம்பன்.

"சதிதாண்டவத்தர் சடையிடத்துக் கங்கை
வைத்த நம்பர்"
—(சயிலாங்கனைக்கு) திருப்புகழ்.

**ஒன்றைப் புகல்வோனே :—**

ஒன்று—ஒருமொழி. பிரணவம். ப்ர—விசேடம்; நவம்—புதிய ஆற்றலையளிப்பது; நினைப்பார்க்குப் புதிய புதிய சிறந்த ஆற்றலையளிப்பது பிரணவம். அது ஓரெழுத்து ஒருமறை. இதன் உட்பொருளை உம்பரறியாக் கம்பருக்கு எம்பெருமான் உபதேசித்தார்.

"கொன்றைச் சடையர்க் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே."
—(அம்பொத்தவிழி) திருப்புகழ்.

**சிகர கோபுரத்திலும்...தெருவிலும் நித்திலம் எறி அலைவாய் :—**

தென்கடல் முத்து விளைவது. இன்றும் முத்தெடுக்கின்றார்கள் தூத்துக்குடிக் கடலில். திருச்செந்தூர், கடற்கரையில் விளங்குகின்ற அருமையான திருத்தலம்.

"ஒரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தில் மேவிய சேவகனே"
—(அலங்காரம்) (106).

"கடற்கரையில் வளர்ந்திருக்கின்ற தென்னை மரங்களில் தங்கும்படி கடல் அலைகள் முத்துக்களை வீசுகின்றன" என்பதை,

"திரளுமணி தரளமுயர் தெங்கிற் றங்கிப்
புரள எறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரசல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே"
—(அமுதுததி) திருப்புகழ்

இப்பாடலில், கோபுரத்தின்மீதும், திருமதில்களின்மீதும், மாடிகளின்மீதும், வீதிகளிலும் முத்துக்களைக் கடல் அலைகள் வீசி எறிகின்றன என்று அழகாக சுவாமிகள் கூறுகின்றனர்.

## கருத்துரை

சிவகுருவே! செந்தில் கந்தவேளே! மாதர் மயல் கடலினின்றும் முத்திக்கரை சேர உமது திருவடியாகிய தோணியைத் தந்தருளும்.

## 25

குடர்நிணம் என்பு சலமல மண்டு
குருதிந ரம்பு சீயூன் பொதிதோல்
குலவு குரம்பை முருடு சுமந்து
குனகிம கிழ்ந்து நாயேன் தளரா
அடர்மத னம்பை யனையக ருங்க
ணரிவையர் தங்கள் தோடோய்ந் தயரா
அறிவழி கின்ற குணமற வுன்றன்
அடியிணை தந்து நீயாண் டருள்வாய்
தடவியல் செந்தி லிறையவ நண்பு
தருகுற மங்கை வாழ்வாம் புயனே
சரவண கந்த முருகக டம்ப
தனிமயில் கொண்டு பார்சூழ்ந் தவனே
சுடர்படர் குன்று தொளைபட அண்டர்
தொழவொரு செங்கை வேல்வாங் கியவா
துரிதப தங்க இரதப்ர சண்ட
சொரிகடல் நின்ற சூராந் தகனே.

## பதவுரை

தடவியல் செந்தில் இறையவ = விசாலமான பெருமையுடைய திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள தலைவரே! நண்பு தருகுற மங்கை வாழ்வாம் புயனே = அன்புடைய வள்ளியம்மையாருக்கு வாழ்வாக விளங்கும் திருப்புயத்தையுடையவரே! சரவண = சரவணப் பொய்கையில் தோன்றியவரே! கந்த = கந்தப் பெருமானே! முருக = முருகவேளே! கடம்ப = கடப்பமாலை தரித்தவரே! தனிமயில் கொண்டு = ஒப்பற்ற மயில்மீது ஏறிக்கொண்டு, பார்சூழ்ந்தவனே = உலகை வலம்

வந்தவரே! சுடர் படர் குன்று தொளைபட=ஒளிபரந்த கிரவுஞ்ச மலை தொளைபடவும், அண்டர் தொழ=தேவர்கள் வணங்கவும், ஒரு செங்கை வேல் வாங்கியவா=ஒப்பற்ற சிவந்த திருக்கரத்தினின்றும் வேலாயுதத்தை விடுத்தவரே! துரித பதங்க இரத ப்ரசண்ட=வேக மாகச் செல்லும் பறவையாகிய மயிலைத் தேராகக்கொண்ட பெரிய வீரரே! சொரிகடல் நின்ற=அலை வீசுகின்ற கடலுக்கு நடுவே நின்ற, சூர அந்தகனே=சூரபன்மனுக்கு முடிவைச் செய்தவரே! குடர்= குடல், நிணம்=கொழுப்பு, என்பு=எலும்பு,சலம்=நீர், மலம்=மலம், மண்டு குருதி=நிரம்பியுள்ள உதிரம், நரம்பு=நரம்பு, சீ=சீழ், ஊன்= மாமிசம், பொதிதோல்=மூடியுள்ள தோல், குலவு குரம்பை=இவை கள் கூடிய சிறு குடிலாகிய, முருடு சுமந்து=இந்தக் கட்டையைத் தூக்கிச் சுமந்து, குனகி மகிழ்ந்து=கொஞ்சிப் பேசியும் மகிழ்ந்தும், நாயேன் தளரா=நாயினேன் தளர்ச்சியுற்றும், அடர்மதன் அம்பை அனைய கருங்கண் அரிவையர் தங்கள்=நெருங்கிவரும் மன்மதனுடைய கணையையொத்த கரிய கண்களையுடைய பெண்களின், தோள் தோய்ந்து அயரா=தோளில் முழுகி அயர்ச்சியுற்றும், அறிவு அழிகின்ற குணம் அற=அறிவு அழிந்து போகின்ற தீய குணம் அற்றுப்போக, உன்றன் அடியிணை தந்து=தேவரீரது இரண்டு திருவடிகளைக் கொடுத்து, நீ ஆண்டு அருள்வாய்=அடியேனை நீர் ஆட்கொண்டு அருள் புரிவீராக.

## பொழிப்புரை

விசாலமான பெருமையுடைய திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்குந் தலைவரே! அன்பு மிகுந்த வள்ளியம்மைக்கு வாழ்வாக விளங்கும் திருத் தோள்களையுடையவரே! சரவண பவரே! கந்தக் கடவுளே! முருகப் பெருமானே! கடப்ப மலர் மாலையணிந்தவரே! ஒப்பற்ற மயில்மீது ஆரோகணித்து உலகத்தை வலம் வந்தவரே! ஒளி வீசுகின்ற கிரவுஞ்ச மலை தொளைபடவும், தேவர்கள் வணங்கி வழிபடவும் ஒப்பற்ற சிவந்த திருக்கரத்தில் எடுத்து வேலாயுதத்தை ஏவியவரே! வேகமாகப் பறக்கும் மயில் பறவையாகிய தேரின்மீது உலாவும் வீரரே! அலை வீசுகின்ற கடலில் நின்ற சூரபன்மனுக்கு முடிவைச் செய்தவரே! குடல், கொழுப்பு, எலும்பு, நீர், மலம், நிறைந்த உதிரம், நரம்பு, சீழ், மாமிசம் இவைகளின்மீது போர்த்துவைத்துள்ள தோல் என்ற சிறு குடிலாகிய இந்த உடம்பு என்ற கட்டையைச் சுமந்து கொஞ்சிப் பேசி மகிழ்ந்தும், அடியேன் தளர்ந்தும், நெருங்கிவரும் மன்மதனுடைய பாணம் போன்ற கரிய கண்களையுடைய பெண்களுடைய தோளைத் தழுவி அயர்ச்சியுற்றும் அறிவு அழிகின்ற தீய குணம் நீங்குமாறு தேவரீருடைய இரண்டு திருவடிகளைத் தந்து அடியேனை ஆட்கொண்டருள்வீர்.

## விரிவுரை

**குடர்நிணமென்பு......குலவு குரம்பை :—**

குரம்பை—சிறு வீடு. இந்த உடம்பு சிறு வீடு போன்றது. இந்த வீட்டிலுள்ள பண்டங்கள், அத்தர் புனுகு சவ்வாது என்ற வாசனைகள் அல்ல. குடல் கொழுப்பு எலும்பு சலம் மலம் உதிரம் நரம்பு சீழ் முதலியவைகள். இவை தெரியாவண்ணம் தோல்போட்டு மூடி மறைத்திருக்கின்றது. இந்த அசுத்த மான உடம்பில் வாழ்வது மிகவும் அருவருப்பானது. அன்றியும் இந்த உடம்பு கனமானது. நால்வர் சேர்ந்து தூக்கும் அளவு கனமுள்ளது. நாலு பேர் சுமக்கும் உடம்பை நாம் தூக்கிச் சுமக்கின்றோம்.

மானார் விழியைக்கடந் தேறிவந்தனன் வாழ்குருவும்
கோனாகி என்னைக் குடியேற்றிக் கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேறுஇருந் தாலும்நற்பேரிது பொய்யன்றுகாண்
ஆனாலும் இந்த உடம்போடிருப்ப தருவருப்பே. —பட்டினத்தார்.

"கள்ளப்புலக் குரம்பைக் கட்டழிக்க வல்லானே" —திருவாசகம்.

"குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்புஅணி சரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலக் குடில்"
—திருப்புகழ்.

**குனகி மகிழ்ந்து நாயேன்தளரா :**

குனகுதல்—கொஞ்சிப் பேசுதல். மனைவி மக்களுடன் கொஞ்சிப் பேசி மகிழ்ந்து, பின்னர் தளர்ச்சியடைவர்.

**அடர் மதனம்பையனைய கருங்கண் அரிவையர் :—**

மதன்—மன்மதன். மன்மதன்—உள்ளத்தைஉடைப்பவன். இவன் திருமாலின் சித்தத்தில் பிறந்ததனால் சித்தஜன் எனப் படுவான். இவன் அசுரர்மீது செல்லுங்கால் இரும்பு வில்லும், மாநுடர்மீது செல்லுங்கால் கரும்பு வில்லும், தேவர்கள்மீது செல்லுங்கால் மலர் வில்லும் கொண்டுபோர் புரிவான். இவனுக்குக் கணைகள் ஐந்து மலர்கள். அம்மலர் போன்ற கண்களை யுடையவர்கள் பெண்கள். மன்மதனுடைய கணைகள் மயக்கத்தைப் புரிவதுபோல் பெண்களின் கண்களும் ஆடவர் மனத்தை மயக்கும் வலிமையுடையது.

**அறிவழிகின்ற குணமற :—**

மாதர்மயல் அறிவை அழிக்கும்.

போதந் தனங் கல்வி பொன்றவருங் காலத்து
மாதர்மே லாகும் மனம்.

மேலும் நல்ல குணங்களை மாற்றி தீய குணங்களை நல்கும்.

**தடவியல் செந்தில் :—**

தடம்—விசாலம். இயல்—பெருமை, அளவற்ற பெருமை யுடையது திருச்செந்தூர். "பரமபதமாய செந்தில்" "கயிலை மலை யனைய செந்தில்" என்றும் சுவாமிகள் கூறுகின்றனர்

**தனிமயில் கொண்டு பார்சூழ்ந்தவனே :—**

முருகப் பெருமான் திருமயிலின்மீது ஆரோகணித்து அகில உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வந்தனர். அவர் அருட்ஜோதி மயமானவர். சூரியன் உதித்தால், சூரிய ஒளி எங்கும் ஒரு கணத்தில் பரவுவதுபோல், சிவஞான சூரியனாகிய முருகன் தன் அருள் ஒளியை எங்கும் ஒரு கணத்தில் பரப்பினார்.

"உருகுமடியவர் இருவினை யிருள்பொரும்
உதய தினகர இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே"
—(பகிர நினைவொரு) திருப்புகழ்.

**சுடர்படர் குன்று தொளைபட :—**

கிரவுஞ்ச மலை பொன்மயமானது. "சொன்னக் கிரவுஞ்ச கிரி" "பொன்னஞ் சிலம்பு" என்று கந்தரலங்காரத்தில் வருவதைக் காண்க. அதன் பொன்னொளி நன்கு பரந்து நின்றது. காண்பார் கண் கூசும்படி வீசியது. அதனை எம்பெருமான் வேலினால் பிளந்து அழித்தனர்.

**துரிதபதங்க இரத ப்ரசண்ட :—**

துரிதம்—வேகம், பதங்கம்—பறை. வேகமாகப் பறக்கும் மயிலை இரதம்போல் கொண்டு எங்கும் உலாவுகின்ற வீரன் முருகன்.

**சொரிகடல் நின்ற சூராந்தகனே :—**

சூரபன்மன் முருகவேளுடன் போர் புரிந்து இறுதியில் உறுதியிழந்து கடலில் மாமரமாக நின்றான். கந்தக் கடவுள் கதிர் வேலை ஏவி, அண்டங்கள் முழுவதும் நிழல்படுமாறு எஃகு இலைகளுடன் அசைந்து உலகம் நடுங்குமாறு செய்த அம் மாமரத்தைப் பிளந்தனர்.

கடற்சலந்தனிலே யொளி சூரனை
உடற்பகுந்திரு கூறென வேயது
கதித்தெழுந்தொரு சேவலுமாமயில் விடும்வேலா
—(மனத்திரைந்) திருப்புகழ்,

சூரனுக்கு அந்தத்தை (முடிவை)ச் செய்தபடியால் "சூராந்தகனே" என்றனர்.

"சூர குலாந்தகனே" —அலங்காரம்(45)

"நிருதரார்க் கொரு காலா ஜேஜெய" —திருப்புகழ்.

### கருத்துரை

செந்திற் கந்தவேளே! குன்றம் எறிந்த கூர்வேலா. சூர சங்காரா! உனது திருவடிதந்து ஆண்டருள்வீர்.

## 26

கொங்கைகள் குலுங்கவளை செங்கையில் விளங்கஇருள்
கொண்டலைய டைந்தகுழல் வண்டுபாடக்
கொஞ்சியவ னங்குயில்கள் பஞ்சரங்கிளி வனங்கிளிகள்
கொஞ்சியதெ னுங்குரல்கள் கெந்துபாயும்
வெங்கயல் மிரண்டவிழி அம்புலிய டைந்தநுதல்
விஞ்சையர்கள் தங்கள்மயல் கொண்டுமேலாய்
வெம்பிணியு ழன்றபவ சிந்தனைநி னைந்துனது
மின்சரண பைங்கழலொ டண்டஆளாய்
சங்கமுர சந்திமிலை துந்திமித தும்பவளை
தந்தனத னந்தவென வந்தசூரர்
சங்கைகெட மண்டிதிசை யெங்கிலும டிந்துவிழ
தண்கடல்கொ ளுந்தநகை கொண்டவேலா
சங்கரனு கந்தபரி வின்குருவெ னுஞ்சுருதி
தங்களின்ம கிழ்ந்துருகு மெங்கள்கோவே
சந்திரமு கஞ்செயல்கொள் சுந்தர குறம்பெணொடு
சம்புகழ் செந்தில்மகிழ் தம்பிரானே.

### பதவுரை

சங்கமுரசம் = கூட்டமான முரசு வாத்தியமும், திமிலை = திமிலை என்னும் பறையும், துந்துமிததும்ப = பேரிகையும் ஒலிக்கவும், வளை = சங்குகள், தந்தன தனந்த என = தந்தன தந்தன என்று ஒலிக்கவும், வந்தசூரர் = போருக்கு வந்த சூராதியவுணர்கள், சங்கை கெடமண்டி = அவர்களின் எண்ணிக்கை கெடுமாறு நெருங்கி, திசை எங்கிலும்மடிந்து விழ = எல்லாத் திசைகளிலும் இறந்து விழவும், தண்கடல் கொளுந்த = குளிர்ந்த சமுத்திரம் எரிபட்டு ஒழியவும், நகைகொண்ட வேலா = சிரித்தருளிய வேலாயுதக் கடவுளே! சங்கரன் உகந்தபரிவின் குரு எனும் = சிவபெருமான் மகிழ்ந்து அன்புடன் கொண்ட குருநாதர் என்று கூறி, சுருதி = வேதங்கள், தங்களின் மகிழ்ந்து உருகும் = தமக்

குள் மகிழ்ச்சியுற்று உள்ளம் குழையும், எங்கள் கோவே = எமது தலைவரே! சந்திர முகம் = சந்திரனைப் போன்ற குளிர்ந்த முகமும், செயல் கொள் = குளிர்ந்த செயலையும் கொண்ட, சுந்தர குறம்பெணொடு = அழகிய வள்ளியம்மையுடன், சம்பு புகழ் = சிவபிரான் புகழ்கின்ற, செந்தில் மகிழ் = திருச்செந்தூரில் மகிழ்ந்து எழுந்தருளியுள்ள, தம்பிரானே = தனிப்பெருந் தலைவரே! கொங்கைகள் குலுங்க = தனங்கள் அசையவும், வளை செங்கையில் விளங்க = சிவந்த கரங்களில் வளையல்கள் ஒளி செய்யவும், இருள் கொண்டலை அடைந்த குழல் வண்டு பாட = இருளும் மேகமும் போன்ற கூந்தலில் வண்டுகள் இருந்து பாடவும், கொஞ்சிய வன குயில்கள் = கொஞ்சுகின்ற சோலைக் குயில்களும், பஞ்ச நல் வன கிளிகள் = நல்ல பஞ்சவர்ணக்கிளிகளும், கொஞ்சியது எனும் குரல்கள் = கொஞ்சுகின்றனவோ? என்று கூறுமாறு இனியகுரலும், கெந்து பாயும் வெம் கயல் மிரண்ட விழி = தாண்டித் தாண்டிப் பாயும் வெம்மையான மீன் போல மிரளும் கண்களும், அம்புலி அடைந்த நுதல் = பிறைச்சந்திரன் போன்ற நெற்றியையும் படைத்த, விஞ்சையர்கள் தங்கள் மயல் கொண்டு மேலாய் = மாய வித்தையுடைய பொதுமாதர் மீது மையல் கொண்டு மென்மேலும் பித்தாகி, வெம்பிணி உழன்ற = வெய்ய நோயால் உழன்ற, பவ சிந்தனை = பிறவிக் கடலில் வீழ்ந்த அடியேனை, நினைந்து = கடைத்தேறவேண்டும் என்று தேவரீர் திருவுளத்தில் கருதி, உனது மின் சரண பை கழலொடு அண்ட = உமது ஒளி மிக்க இனிய வீரக்கழல் ஒலிக்கும் திருவடியில் பொருந்துமாறு, ஆளாய் = ஆண்டருள்புரிவீர்.

## பொழிப்புரை

கூட்டமான முரசு வாத்தியங்களும், திமிலை என்ற பறை வாத்தியமும், பேரிகையும் ஒலிக்கவும், சங்குகள் தந்தனதனம் என்று முழங்கவும், போருக்கு வந்த சூராதி யவுணர்கள், எல்லாத் திசைகளிலும் அவர்களுடைய எண்ணிக்கை குறைந்து நெருங்கி விழுந்து மடியவும், குளிர்ந்த சமுத்திரம் எரிபட்டு அழியவும், சிரித்தருளிய வேலாயுதரே! சிவபெருமான் மகிழ்ந்து அன்பு செய்யும் குருவே என்று வேதங்கள் கூறி தமக்குள் மகிழ்ச்சி கொண்டு குழையும்படி பெருமைகொண்ட எமது தலைவரே! சந்திரனைப் போல் குளிர்ந்த முகமும் குளிர்ந்த செயலும் கொண்ட அழகிய வள்ளியம்மையுடன் சிவ பிரான் புகழ்கின்ற திருச்செந்தூரில் எழுந்தருளி மகிழ்கின்ற தனிப்பெருந்தலைவரே! தனபாரங்கள் அசையவும், சிவந்த கைகளில் வளையல்கள் விளங்கவும், இருளும் மேகமும் போன்ற கூந்தலில் வண்டுகள் பாடவும், கொஞ்சுகின்ற சோலைக்குயிலும், அழகிய பஞ்ச வண்ணக்கிளியும் கொஞ்சுகின்றனவோ என்று ஐயுறக்கூடிய குரலும், தத்திப்பாயும் வெம்மையான மீன்போன்ற மிரண்ட கண்களும், பிறைச்

சந்திரனைப் போன்ற நெற்றியும் படைத்த மாயவித்தையில் வல்ல பொது மாதர்களிடம் மயக்கங் கொண்டு மிகுதியாக வெய்ய நோய் கொண்டு வேதனையுற்று பிறவிப் பெருங் கடலில் வீழ்ந்த அடியேனை, உய்யவேண்டும் என்று தேவரீர் திருவுளத்தில் கருதி, ஒளி மிகுந்த வீரக்கழல் அணிந்த உமது திருவடியில் சேருமாறு அடியேனை ஆட்கொண்டு அருள் புரிவீர்.

## விரிவுரை

**மயல்கொண்டு மேலாய் வெம் பிணியுழன்ற :—**

பொதுமாதர் மீது மயல்கொண்டு அவருடன் உறவாடிய பயன் பற்பல நோய்களையடைந்து துன்புறுதல்.

"அரிய பெண்கள் நட்பைப் புணர்ந்து
பிணியுழன்று" —(கருவடைந்து) திருப்புகழ்.

**பவசிந்தனை :—**

சிந்து—சமுத்திரம்.

பவசிந்தன்—பவக்கடலில் விழுந்தவன். பிறவிப் பெருங் கடல் என்பார் திருவள்ளுவர். ஆன்மாக்கள் பல்லூழி காலமாக அப்பெருங்கடலில் அழுந்தி அல்லலுறுகின்றன.

**நினைந்துனது மின்சரண பைங்கழலொ டண்ட ஆளாய் :—**

நினைந்து—"முருகா! உன் அடிமையாகியஎன்னை, உனது அடிமை என்றும், நான் ஈடேற வேண்டும் என்றும், உனது திருவுளத்தில் சற்று நினைத்தருள வேண்டும்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்.

"என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்" —நம்பியாண்டார் நம்பி.

"ஆதார மிலேன் அருளைப்பெறவே
நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே" —கந்தரநுபூதி.(26)

இறைவன் திருவடியில் ஞானவொளி இடையறாது வீசுவதனால் "மின்சரணம்" என்றனர்.

வீரர்கள் புனைவது வீரக்கழல். வீரர்கட்கெல்லாம் சிறந்த வீராதி வீரராகிய வெற்றி வீரமுருகன் திருவடியில் வீரக்கழல் விளங்குகின்றது. "கழலணிந்த திருவடி நிழலில் என்னைச் சேர்த்து ஆட்கொள்வாய்" என்று விண்ணப்பம் புரிகின்றனர்.

**சங்க முரசம் :—**

சங்கம்—கூட்டம்; முரசம்—முரசு வாத்தியம். முரசு என்பது வெற்றிக்கு அறிகுறியாக வாசிக்கும் வாத்தியம். இசையால் விளையும் பயன் பல; போர்க்களத்தில் பேரிகை சங்கு முதலிய வாத்தியங்களை ஒலித்தால், அந்த ஒலியால் நாடி நரம்புகள் முறுக்கேறி வீரஉணர்ச்சியுண்டாகும். போரில் பெரும் ஊக்கம் உண்டாகும். இவைகட்குச் "செருப்பறை" என்று பேர். சூரன் முதலியோர் போருக்கு இந்தப் போர்ப் பறைகளை முழக்கிக்கொண்டு வந்தனர்.

**கொளுந்த நகைகொண்ட வேலா:—**

ஆயிரத்தெட்டு அண்டங்களில் நிறைந்துவந்த அசுர சேனைகள் வெந்து சாம்பராகவும் கடல் எரிந்து வற்றவும் முருக வேள் சிறிது சிரித்தருளினர்.

"தளத்துடன் நடக்கும் கொடுசூரர்
சினத்தையும் உடற்சங் கரித்த மலைமுற்றும்
சிரித்தெரி கொளுத்தும் கதிர்வேலா"
—(சினத்தவர் முடிக்கும்) திருப்புகழ்.

**சங்கரனுகந்த பரிவின் குருவெனுஞ் சுருதி தங்களின் மகிழ்ந்துருகும் :—**

சுருதி—வேதம். வேதம் எழுதாக்கிளவி. காது வழியே கேட்டுக் கேட்டு வருவதால் சுருதி எனப்பட்டது.

ஆதிகுருவாகிய சிவபெருமானும் மகிழ்ந்து தனக்குக் குரு நாதர் என்று முருகப்பெருமானைக் கொண்ட அதி அற்புதத்தைக் கூறி வேதங்கள் உவந்து உருகுகின்றன.

**சந்திரமுகஞ் செயல்கொள் சுந்தரகுறம் பெண் :—**

வள்ளிநாயகியின் திருமுகம் சந்திரனைப் போல் குளிர்ந்த தன்மையுடையது. அன்றியும் அவருடைய செயல்களும் குளிர்ந்தவை. அத்தகைய உத்தம பத்தினியுடன் முருகன் செந்தில்ம்பதியில் எழுந்தருளியுள்ளான்.

**சம்பு புகழ் செந்தில் :—**

சம்பு—சுககாரணன். திருச்செந்தூர் தென் கயிலாயம். அதற்கு நிகரான திருத்தலம் யாண்டும் இல்லை. "கயிலைமலையனைய செந்தில்" என்று திருப்புகழில் அருணகிரிநாதரே கூறுகின்ருர். அதனுல் சிவமூர்த்தி திருச்செந்தூரைப் புகழ் கின்ருர்.

## கருத்துரை

சூர குல காலரே! செந்திற் குமாரரே! பிறவிக் கடலினின்றும் கரையேற்றி உன் பாதத்தில் சேர்த்து அருள்வாய்.

## 27

கொம்பனை யார்காது மோதிரு கண்களி லாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு
கொங்கையி னீராவி மேல்வளர் செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி லாதார சோபையில் மருளாதே
உம்பர்கள் ஸ்வாமீ நமோநம எம்பெரு மானே நமோநம
ஒண்டொடி மோகா நமோநம எனநாளும்
உன்புக ழேபாடி நானினி அன்புட னாசார பூசை செய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே
பம்பர மேபோல ஆடிய சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி
பங்கமி லாநீலி மோடிப யங்கரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்
டெம்புதல் வாவாழி வாழியெ னும்படி வீரான வேல்தர
என்றுமு ளானேம னோகர வயலூரா
இன்சொல்விசாகாக்ரு பாகர செந்திலில்வாழ்வாகியேயடி
யேன்றனை யீடேற வாழ்வருள் பெருமாளே.

### பதவுரை

பம்பரமே போல ஆடிய சங்கரி=(அம்பலத்தினில் இறைவன் நிர்த்தனஞ் செய்யுங்கால்) பம்பரத்தைப்போலவே சுழன்று ஆடிய சங்கரியும், வேதாள நாயகி=வேதாள பூத கணங்களுக்குத் தலைவியும், பங்கய சீ பாத நூபுரி=தாமரைக்கு நிகரானதும் சிறப்பு வாய்ந்தது மான திருவடிகளில் சிலம்புகளை யணிந்துகொண்டிருப்பவரும், கரசூலி=சூலத்தைக் கரத்திலே தாங்கிக்கொண்டிருப்பவரும், பங்கம் இலா நீலி=குற்றமில்லாத நீலநிறத்தையுடையவரும், மோடி=துர்க்கையும், பயம்ஹரி=அடியார்களது பயத்தை அகற்றுபவரும், மா காளி=மகா காளியும், யோகினி=யோகினி யென்னுந் தேவதையாக இருப்பவருமாகிய உமாதேவியார், பண்டு சுராபான சூரனொடு=முன்னாளில் கள்ளருந்தும் அசுரகுலத்திற் பிறந்த சூரபன்மனோடு, எதிர்போர் கண்டு=எதிர்த்துப் போர் செய்ததைக்கண்டு, எம் புதல்வா வாழி வாழி எனும்படி="எமது குமாரனே! நீ நீடூழி வாழ்வாயாக" என்று உன்னை வாழ்த்தும்படி, வீரான வேல்தர=வெற்றியையுடைய வேலாயுதத்தைத் தரித்துக்கொண்டிருப்பவரே! என்றும் உளானே=எந்நாளிலும் அழிவின்றி நித்திய பரவஸ்துவாகவுள்ளவரே! மனோகர=விரும்பப்படுந் தன்மையினரே! வயலூரா=வயலூர் என்னும் புண்

ணியத் திருத்தலத்தில் எழுந்தருளியிருப்பவரே! இன்சொல் விசாகா = இனிய சொற்களைப் பேசும் விசாகமூர்த்தியே!, க்ருபை ஆகர = கருணைக்கு உறைவிடமானவரே! செந்திலில் வாழ்வுஆகி = திருச்செந்தூரில் எழுந்தருளி, அடியேன் தனை ஈடேற வாழ்வு அருள் = அடியேனை உய்யுமாறு நல்வாழ்வை யருளிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே!, கொம்பு அனையார் = கொம்பைப்போல் ஒல்குந்தன்மையுடைய (விலை) மகளிரது, காது மோது இரு கண்களில் = காதுகள் வரையிலும் சென்று மோதுகின்ற நீண்ட இருகண்களின் அழகிலும், ஆமோத = மகிழ்ச்சியை விளைவிப்பதும், சீதள = குளிர்ந்துள்ள, குங்கும = குங்குமக்கலப்புகளையும், பாடீர = சந்தனக் குழம்பையும். பூஷண = ஆபரணங்களையும் அணிந்துள்ளதும், நகம் மேவும் = மலை போன்றதுமாகிய, கொங்கையில் = தனபாரங்களின் அழகிலும், நீர் ஆவி மேல் வளர் = நீர் நிலைகளில் பூத்த, செங்கழுநீர் மாலை சூடிய கொண்டையில் = செங்கழுநீர் மலர்களை முடித்துள்ள கூந்தலின் அழகிலும், ஆதார சோபையில் = உடம்பின் அழகிலும், மருளாதே = மனமயக்கம் அடையாமல், உம்பர்கள் ஸ்வாமீ நமோ நம = தேவர்களுக்குத் தலைவரே! நமஸ்காரம் நமஸ்காரம், எம்பெருமானே நமோநம = அடியேங்களாகிய எமக்கு நாயகரே! நமஸ்காரம் நமஸ்காரம்; ஒண்தொடி மோகா நமோநம = பிரகாசமான வளையல்களையணிந்துள்ள வள்ளிநாயகியார் மீது மோகமுடையவரே! நமஸ்காரம் நமஸ்காரம்; என நாளும் = என்று நாள்தோறும், உன் புகழே பாடி = தேவரீரது திருப்புகழையே பாடி, நான் இனி அன்புடன் ஆசார பூசை செய்து = அடியேன் இனிமேல் தேவரீரிடத்து மெய்யன்போடு தூய்மையாக இருந்து உம்மைப் பூசித்து, நாள் வீண்படாது உய்ந்திட = அடியேனுடைய வாழ்நாள் வீணாகாது உய்யுமாறு, அருள்புரிவாய் (ஏ-அசை) = திருவருள் புரிவீர்.

## பொழிப்புரை

(சிவபெருமான் சிற்றம்பலத்தில் இன்ப நடனம் புரியுங்கால் அந் நடனத்திற் கிசைய) பம்பரத்தைப்போல் திருநடனம் புரிந்த சங்கரியும், பூத வேதாள கணங்களுக்குத் தலைவியும், தாமரை மலரையொத்த சிறப்பு வாய்ந்த திருவடிகளில் சிலம்புகளை யணிந்துகொண்டிருப்பவரும், திரிசூலத்தைக் கரமலரில் தரித்துக்கொண்டிருப்பவரும், குற்றமில்லாத நீல நிறத்தையுடையவரும், துர்க்கையும், அடியார்களது அச்சத்தை அகற்றுபவரும், மகாகாளியும், யோகினியென்னுந் தேவதையாக இருப்பவரும் ஆகிய உமாதேவியார், முன்னாளில் மதுபானஞ்செய்யும் அசுரனாகிய சூரபன்மனோடு எதிர்த்து போர்புரியக்கண்டு, "எமது குமாரனே! நீ நீடூழி வாழ்வாயாக" என்று வாழ்த்துமாறு வெற்றி பொருந்திய வேற்படையைத் தரித்தவரே! என்றும் அழியாத நித்திய

சொரூபரே! விரும்பப்படுந் தன்மையினரே! வயலூரில் எழுந்தருளியிருப்பவரே! இனிய சொல்லேயுடைய விசாக மூர்த்தியே! கருணைக்கு உறைவிடமானவரே! திருச்செந் தூரில் வாழ்ந்துகொண்டு அடியேன் ஈடேறுமாறு திருவருள் செய்யும் பெருமை மிக்கவரே! பூங்கொம்பைப்போல் அழகாக ஒல்குந் தன்மையுடைய விலைமகளிரது காது வரை நீண்டுள்ள இருகண்களிலும், குளிர்ந்த குங்குமக்கலப்பையும் சந்தனக் குழம்பையும் அணிந்துகொண்டு மகிழ்ச்சியைத் தருவதும் மலைக்கு நிகரானதுமாகிய தனபாரங்களிலும் நீர் நிரம்பிய தடாகங்களிலும் பூத்துள்ள செங்கழுநீர் மாலையை முடித் துள்ள கூந்தலிலும், உடலின் அழகிலும், அடியேன் மனத்தை வைத்து மயக்கத்தையடையாமல், தேவர்களுக்குத் தலைவரே! நமஸ்காரம்; நமஸ்காரம்; எமது பெருமானே! நமஸ்காரம் நமஸ் காரம்; ஒளியுள்ள வளையலை யணிந்துள்ள வள்ளிபிராட்டியார் மீது மோகத்தையுடையவரே! நமஸ்காரம் நமஸ்காரம் என்று தினந்தோறும் தேவரீரது திருப்புகழ்ப்பாமாலைகளையே பாடி அடியேன் (அவமே சென்ற நாள் சென்றாலும்) இனியாவது அன்புடனும் ஆசாரத்துடனும் தேவரீரது திருவடிக்கமலங் களைப் பூசித்து, வீண் நாள் படாது உய்யுமாறு திருவருள் புரிவர்.

## விரிவுரை

**கொம்பனையார் :—**

பெண்கள் இடை சிறுத்து இளங்கொடிபோல் அசையுந் தன்மையுடையோர் ஆதலால் கொம்புக்கு நிகரானவர் என்று கூறுவது கவிகளின் மரபு. பிறரும் இவ்வாறு கூறுமாறு காண்க.

"பூத்தவிளங் கொம்பனைய பூவைமுகங் கோடாமல்"

—மகாபாரதம்.

**காதுமோது இரு கண்களில் :—**

கண்கள் நீண்டிருப்பது மாதர்க்குச் சிறந்த இலக்கண மாம். அங்ஙனம் நீண்டிருப்பதால் அக் கண்ணிலுள்ள கரு விழிகள் பிறழ்வது காதுகளுடன் போர்புரிய வருவதுபோலத் தோன்றுகிறது என்பது கவிநயம். இதனை, மன்மதனது கொலைசெய்யும் நஞ்சுபூசப்பட்ட கொடிய வேல்போல் அஞ்சனமெழுதிய விழியானது தன்னோடு போர்செய்ய வரு தலினாலே அக் கண்ணின் பகையாகிய குவளை மலரைத் தான் படைத்துணையாகச் சேர்த்துவைப்பதுபோல் குவளை மலரை ஒரு பெண் அழகிய காதின்மிசை சூடினாள் என்னும் பொருள் தரும் அடியில் கண்ட அழகிய செய்யுளையுங் காண்க.

வேனலம்பதி கொலேவிட மூட்டிய வெவ்வேல்
மான அஞ்சன மெழுதிய விழிபொர வரலால்
தானதன்பகை தனைத்துணை கொண்டுறுந் தகைபோல்
பானலஞ்செவி மிசையணிந் தனளொரு பாவை.

—பிரபுலிங்கலீலே.

**நகமேவு :—**

நகம் - மலே. நகக்குறி பொருந்திய தனம் என்று கூறுவாருமுளர்.

**உம்பர்கள் ஸ்வாமீ :—**

மூவர் தேவாதிகள் தம்பிரானுதலால் முருகப்பெருமான் தேவர்கள் யாவருக்கும் தலேவராவர்.

"தேவதேவ தேவாதிதேவப் பெருமாளே"

—(பேரவாவறு) திருப்புகழ்.

தேவர் நாயக னுகியே யென்மனச் சிலேதனி லமர்ந்தோனே
மூவர் நாயக னெனமறை வாழ்த்திடு முத்தியின் வித்தேயிங்
கேவ ராயினு நின்றிருத் தணிகைசென் றிறைஞ்சிடி னவரேயென்
பாவ நாசஞ் செய் தென்றனே யாட்கொளும் பரஞ்சுடர் கண்டாயே.

—திருவருட்பா.

**ஒண்டொடி மோகா :—**

வள்ளியென்பது ஜீவான்மா; அதனே யாட்கொள்ள வேண்டுமென்ற மோகம் தயையினுல் முருகப்பெருமானுக் குளது.

"தணியா அதிமோக தயாபரனே" —அநுபூதி. (6)

**நாளும் உன்புகழே பாடி :—**

பிரமனது கையெழுத்தை அழித்து இனி தாயுதரத்திற் பிறக்கவொட்டாத வேலாயுதனது திருப்புகழையே பாடுதல் வேண்டும். பிற புகழ்க்கவிகளேக் கற்று பாடுதல் கூடாது. பிறப்பிறப்பற்ற பெம்மானுகிய முருகன் புகழொன்றே இம்மை மறுமை நலன்களே நல்கும்.

"அழித்துப் பிறக்கவொட்டா அயில்வேலன் கவியை யன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்" —அலங்காரம். (2)

"கிழியும் படியடற் குன்றெறிந்தோன் கவி கேட்டுருகி
இழியுங் கவி கற்றிடா திருப்பீர்" —அலங்காரம். (56)

நாகமலேயில் வாழும் கந்தசுவாமியே! உன் திருப்புகழை யான் கேட்டறிந்த மாத்திரத்தில் நினது கோழிக்கொடி என்

ஆத்துமாவை அபயங் கொடுத்து ஆண்டுகொண்டது; உன் வேலாயுதம் பிறப்புக்கிடமான பேராசையை ஒழித்துவிட்டது; உன் தேவிமாரது திருவடியுங் கிடைத்தது; இனி யான் தேட வேண்டியது என்ன இருக்கிறது? என்னும் பொருள் தரும் அருணைக்கோனது அருள் வாக்கையும் உன்னுக.

செவிக்குன்ற வாரண நல்கிசை பூண்டவன் சிந்தை யம்பு
செவிக்குன்ற வாரண மஞ்சலென் றுண்டது நீண்ட கன்மச்
செவிக்குன்ற வாரண வேலாயுதஞ் செற்ற துற்றன கட்
செவிக்குன்ற வாரண வள்ளிபொற்றாண் மற்றென் றேடுவதே.
—*கந்தரந்தாதி. (26)*

ஆதலால் "யார் வேண்டினும் கேட்ட பொருளீயுந் தியாகாங்க சீலனும்" முருகப்பெருமானது தெய்வீகம் பொருந்திய திருப்புகழையே அன்புடன் ஓதி அப்பரம பிதாவினது திருவருளைப் பெறுவார்களாக.

"கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி"

**அன்புடனுசார பூசை :—**

பூஜா என்னும் வடசொல் ஆகார ஈறுகெட்டு பூசையென்று மருவியது. பூ - கன்மங்களைப் பூர்த்திசெய்து, ஜா - சிவஞானத்தை உதிக்கச்செய்வது என்பது பொருள். இப் பூசை ஒவ்வொருவரும் செய்யற்பாலது. பூசைக்கு ஆசாரமும் அன்பும் சிறந்த அங்கங்களாம். மனவாக்குகட்கெட்டாத ஆண்டவனைப் பூசிப்பதற்கு நமது கரங்களும் ஏனைய உறுப்புகளும் "என்ன மாதவஞ் செய்தனவோ" என்று இடையறாத அன்புடனும், தீய எண்ணங்களை எண்ணுமல் மனோசுத்தமுடனும், அவமொழிகளைப் பேசாமல் வாக்கு சுத்தமுடனும், அசுத்தப் பொருள்களைத் தொடாமல் காய சுத்தமுடனுமாக இருந்து இறைவனைப் பூசிக்க வேண்டும்.

**வீணுள்படாது அருள் புரிவாயே :—**

கிடைத்தற்கரிய வாழ்நாளை அவத்தொழில்களிலும் களியாடல்களிலும் வீண் சிந்தனைகளிலுமாக வாளா கழிக்காமல் "இரை தேடுவதோடு இறையுந் தேடு" என்ற அமுதவசனப்படி, உடம்பை வளர்ப்பதற்காக உழைப்பதோடு உயிரை வளர்ப்பதற்கும் பாடுபடவேண்டும். சிவசிந்தனையும், சிவ வழிபாடுமே உயிருக்கு உறுதி பயப்பனவாம்.

"வீணே நாள் போய்விடாமல் ஆறுறுமீதில்
ஞானோப தேசம் அருள்வாயே" —*(மாலாசை)* திருப்புகழ்.

**எம்புதல்வ ரவாழிவாழிஎனும்படி :—**

சூரபன்மாவோடு தமது குமாரராகிய குகப்பெருமான் போர்புரியுங்காலே. உமாதேவியார் தமது புதல்வருக்கு வெற்றியுண்டாமாறு "வாழிவாழியென்று" வாழ்த்துகிருர். ஆணவமலமாகிய சூரபன்மன் காமக்குரோதாதி துர்க்குணங்களாகிய அசுரர்களுடன் அறநெறி பிறழ்ந்து, சமதமாதி சற்குணங்களாகிய அமரர்களுக்குத் துன்பம் புரிந்தனுன்று, மறத்தையழித்து அறத்தை நிலைநாட்டுமாறு, ஞான பண்டிதராகிய எந்தை கந்தவேள், அசுத்த போகமாகிய கள்ளைக் குடித்து மயங்கியுள்ள அவ்வாணவ மலமாகிய சூரனேடு எதிர்த்துப் போர்புரிந்து ஆணவமலத்தை யழிப்பதைக்கண்ட அருட்சத்தியாகிய அம்பிகை மனமகிழ்ந்து, "சத்து வடிவாகிய சிவபெருமானுக்கும் சித்து வடிவமாகிய எனக்கும் தோன்றிய ஆனந்தவடிவமாகிய அண்ணலே! நீ ஆன்மாக்களின் ஆணவமலத்தை யழிப்பதற்காகவே வெளிப்பட்டுத் தோன்றினை. ஆதலால் ஆன்மாக்களது மலத்தைக் கெடுத்து ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டு நீடூழி வாழ்வாயாக" என்று வாழ்த்துகிருர் என்பது அதன் தத்துவம்.

**என்று முளானே :—**

நங் குமரக் கடவுள் மாறுபாடின்றி என்றும் ஒருபடித்தாக விளங்குகின்ற நித்திய வடிவினர்.

**மனோகர :—**

இளங் குமாரமூர்த்தியாய்த் திகழும் இன்ப வடிவினராதலால் எல்லோராலும் விரும்பப்படுகின்ருர்.

**வயலூரா :—**

அருணகிரியாரைத் திருவருளையில் ஆண்டுகொண்டு "நம் வயலூருக்கு வா" என்று அறுமுகப்பெருமான் அருளிச் செய்து, வயலூரில் திருப்புகழில் "இன்ன இன்ன வைத்துப் பாடு" என்று திருவருள்புரிந்த தெய்வீகம் பொருந்திய திவ்விய க்ஷேத்திரமாதலால், அருணகிரியார் தன்னையாட் கொண்ட வயலூரின்மீதுள்ள அளவற்ற அன்பின் பெருக்கால் அடிக்கடி அநேக பாசுரங்களில் "வயலூரா" "வயலூரா" என்று அருளிச் செய்தனர்.

**இன்சொல் :—**

கருணைக் குறைவிடமாகிய கந்தப்பெருமான் இன்சொல்லையுடையவராகி யிருக்கின்றனர். ஒவ்வொருவரும் வன்சொல்லை அறவே ஒழித்து, இன் சொல்லையே எஞ்ஞான்றும் யாரிடத்தும் உரைக்கவேண்டும். நம்மைப் பார்த்துப்

பிறர் கடுமையாகப் பேசினல் நமக்கு எத்துணை வருத்தம் உண்டாகிறது? இனிமையாகப் பேசினல் எத்துணை மகிழ்ச்சி யுண்டாகிறது. அதனை யுற்று நோக்கி நாமும் பிறரிடத்துப் பேசும்போது கடுஞ்சொற்களை மறந்தும் பேசாது இனிய சொற்களையே பேசுவோமாக.

இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. —திருக்குறள்.

## கருத்துரை

உமாதேவியார் வாழ்த்து கூற வெற்றிவேலைத் தாங்கி யுள்ளவரே! நித்தியரே! மனோகரமானவரே! வயலூரில் எழுந்தருளியவரே! விசாகரே! கிருபாகரரே! திருச்செந் தூரரே! விலைமகளிரது கண்கள், தனங்கள், கரிய கூந்தல், அழகிய உடல் என்பனவற்றைக்கண்டு மருளாமல், தேவரீரது திருப்புகழையே பாடி தேவரீரை அன்புடனும் ஆசாரத்துட னும் பூசித்து வீணுள் படாமல் உய்ந்திடத் திருவருள் புரிவீராக.

## 28

கொலைமத கரியன ம்ருகமத தனகிரி
கும்பத் தனமானுர்
குமுதஅ முதஇதழ் பருகியு ருகிமயல்
கொண்டுற் றிடுநாயேன்
நிலையழி கவலைகள் கெடவுன தருள்விழி
நின்றுற் றிடவேதான்
நினதிரு வடிமல ரிணைமன தினிலுற
நின்பற் றடைவேனே
சிலையென வடமலை யுடையவ ரருளிய
செஞ்சொற் சிறுபாலா
திரைகட லிடைவரு மசுரனை வதைசெய்த
செந்திற் பதிவேலா
விலைநிகர் நுதலிப மயில்குற மகளும்வி
ரும்பிப் புணர்வோனே
விருதணி மரகத மயில்வரு குமரவி
டங்கப் பெருமாளே.

## பதவுரை

சிலையென வடமலை உடையவர் = வடதிசையின்கணுள்ள மகாமேரு கிரியை வில்லாகக்கொண்டருளிய சிவபெருமான், அருளிய = பேரருளொடு தோற்றுவித்தருளிய, செம் சொல் சிறுபாலா = செவ்விய தமிழ் மொழிக்கிறைவராகிய இளங்குழவியே! திரைகடல்இடைவரும் = அலைகளைவீசும் சமுத்திரத்தின் மத்தியில் மாமரமாகத் தோன்றி எதிர்த்து வந்த, அசுரனை வதை செய்த = அசுரனாகிய சூரபன்மனை சங்கரித் தருளிய, செந்தில் பதி வேலா = திருச்செந்தூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள வேலாயுதக் கடவுளே! விலை நிகர் நுதல் = வில்லைப் போல் வளைந்து அழகுடன் விளங்கும் புருவங்களையுடையவர்களாகிய, இபமயில் = மயில்போன்ற தெய்வகுஞ்சரியம்மையாரையும், குறமகள் உம் = குறவர் குலத்திற்றோன்றிய வள்ளியம்மையாரையும், விரும்பி புணர்வோனே = விருப்பங்கொண்டு (அவர்கள் செய்த தவங்காரணமாகக்) கலந்து கொள்பவனே! விருது அணிமரகத மயில்வரு = வெற்றியைத் தெரிவிக்கும் கொடி, வீரகண்டாமணி இவைகளுடன் கூடிய மரகதம்போன்ற நிறத்தையுடைய மயில்வாகனத்தின்மீது எழுந்தருளி வருகின்ற, குமர = குமாரக் கடவுளே! விடங்க = அழகின் மிக்கவரே! பெருமாளே = பெருமையின் மிக்கவரே! கொலை மதகரி அ(ன்)ன = கொல்லுங்குணமுடைய மதயானையின் மஸ்தகத்திற்கு நிகரானவையும், ம்ருகமத = கஸ்தூரியை யணிந்தவையும், தனகிரி = பொன்மலைக்கு சமமானவையும், கும்ப = கும்பத்தை யொத்தவையுமாகிய, தனமானார் = பயோதரங்களையுடைய மகளிரது, குமுத அமுத இதழ் பருகி = செவ்வாம்பல் மலரை யொத்த இதழ்களிற் பெருகும் அமிர்தத்தைப் பானஞ்செய்து, உருகி = அதனால் மிகவும் உருகி, மயல் கொண்டு உற்றிடும் நாயேன் = காம மயக்கத்தைக்கொண்டு மேலும் மேலும் அவ்வாசை வழியிலேயே பொருந்தியுள்ள நாய்க்குச் சமானமாகிய அடியேன், நிலை அழி கவலைகள் கெட = அடியேனை நிலைகலங்கச் செய்யும் கவலைகள் அறவே அழிந்து போகவும், உனது அருள்விழி நின்று உற்றிட (ஏ தான்-அசை) = தேவரீரது திருவருள் பார்வையிலேயே உறுதியுடன் நின்று அச்செந்நெறியில் மேலும் மேலும் பொருந்தியிருக்கவும், நின திருவடிமலர் இணை மனதினில் உற = தேவரீரது திருவடி மலர்கள் இரண்டும் அடியேனது மனத்தாமரையின்கண் வந்து பொருந்தி விளங்கவும், நின் பற்று அடைவேனோ = தேவரீரது பற்றை அடியேன் அடைய மாட்டேனோ?

## பொழிப்புரை

மகாமேருகிரியை வில்லாகவுடைய சிவபெருமான் தமது பேரருளால் தோற்றுவித்தருளிய செந்தமிழ் மொழிக்குத் தலைவராகிய இளம்பூரணரே! அலைகளையுடைய கடலின்

நடுவில் மாமரமாகத் தோன்றி எதிர்த்துப் போர்புரிந்து கொண்டுவந்த சூரபன்மனை மறக்கருணையால் சங்கரித்தருளிய செந்திலம்பதியில் வாழும் வேற்படை நாயகரே! வில்லைப் போன்ற புருவங்களை யுடையவர்களாகிய மயில் போன்ற தெய்வகுஞ்சரி யம்மையாரையும் குரவர் குலத்தில் தோன்றிய வள்ளியம்மையாரையும் அன்னார்கள் அரிதிற் செய்த தவங் காரணமாக விருப்பத்துடன் புணர்ந்து அருள்பவனே! வெற்றியின் அறிகுறிகளாகிய விருது வீரக்கழல் முதலியவை களையுடைய அழகிய பச்சை மயில் வாகனத்தின்மீது அடி யார் பொருட்டு எழுந்தருளி வருகின்ற குமாரக் கடவுளே! கட்டழகரே! பெருமையின் மிக்கவரே! கொல்லுந் தொழிலை யுடையதும் மதத்தையுடையதுமாகிய யானையின் மஸ்தகத் தையும், பொன்மலையையும், கும்பத்தையும் ஒத்து கஸ்தூரி யணிந்துள்ள தனபாரங்களையுடைய மாதர்களது செவ்வாம் பலை நிகர்த்த இதழ்களின் அமிர்த ரசத்தைப் பருகி அதனால் மனமுருகி, மோகாந்தகாரமாகிய மயக்கத்தையுற்று, அத் துறையிலேயே உழலும்படியான அடியேன், நிலைகுலையச் செய்யும் கவலைகள் நீங்கவும், தேவரீரது திருவருட் பார்வை யில் உறுதியுடன் நின்று அவ் வழியிலேயே பொருந்தியிருக்க வும், தேவரீரது அருணசரணாரவிந்தங்களிரண்டும் அடியேனது மனதில் வந்து சேரவும் தேவரீரது பற்றை (அடியேன்) அடைய மாட்டேனோ?

## விரிவுரை

**கொலை மதகரி :—**

தனத்திற்கு யானையின் மஸ்தகத்தை நிகரென்று கூற வந்த நம் பரமாசிரியர் "கொலைமதகரி" என்று குறிப்பிட் டுள்ளதை ஊன்றி நோக்குக. யானை எவ்வாறு கொல்லுந் தொழிலையுடையதோ அவ்வாறு மானார் நட்பும் நமது அறிவை யும் ஆக்கத்தையும் ஆயுளையும் ஏனைய நலன்களையும் கொல் லுந் தன்மையுடையதாம். யானை எவ்வாறு மதங்கொண்டு வரம்புமீறித் திரியுமோ அவ்வாறே அவ் விலைமகளிரும் நாணம் முதலியன இன்றி வரம்புகடந்து திரிவர். மதங்கொண்ட யானையை அறிவுடையவர்கள் அங்குசத்தால் அடக்குவது போல் மகளிரது விழைவையும், வைராக்கியம் என்னும் அங்கு சத்தால் அறிவுடையார் அடக்கக்கடவர்.

**"வனமுலை**

**சயிலமல கொலையமனென.........**
**.........உணர்வொடு புணர்வதும் ஒருநாளே"**

—(விடமுமமுதமு) திருப்புகழ்.

**கும்பத்தனம் :—**

தலைகீழாகக் கவிழ்க்கப்பட்டுள்ள கும்பமே தனத்திற்கு உவமையாதலால், அக் கும்பத்தைப் போல் தனமும், மனிதர்களைத் தலைகீழாக நரகம் முதலிய துன்பத்தில் கவிழ்க்குந் தன்மையுடைத்து.

**அமுத இதழ் பருகி உருகி :—**

மகளிரது அதராமிர்தத்தை நாடோறும் பருகி அதனால் மிகவும் உருகிக் கெடுகின்றனர்.

"அருவமிடையென வருபவர் துவரிதழ்
அமுது பருகியு முருகியும்" —திருப்புகழ்.

**நிலையழிகவலை...மனதினிலுற :—**

மேற்கூறிய அற்ப சுகமாகிய மின்னல் வாழ்வைப் பெரிதென எண்ணி மயங்கி, அறிவு குன்றி, மனம் விழைந்தவாறு கங்குல்பகலாக அலைந்து, கவலைக்காளாகின்றனர். அக் கவலைகள் அறவே நீங்குவதற்கு வழி இறைவன் பற்றையடைவதாம். அப்பற்றின் முதிர்ச்சி இறைவனது திருவருள் நெறியில் அசைவற்று நிற்பதாம். அவ்வாறு நின்றவர் மனத்தில் இறைவனது திருவடித்தாமரை மலரும்; ஆதலால் இறைவன் பற்றையடைந்தோர்க்குத் துன்ப நீக்கமும், அதனால் இன்ப ஆக்கமும், திருவருணெறியின் திறமும், இறைவன் திருவடிப் பேறும் முறையே உண்டாகுமென்பது தேற்றம்.

**நின்பற்று அடைவேனோ :—**

மேற்காட்டியபடி இறைவன்பற்றை யடைந்தவர்க்கு ஏனைய பற்றுக்கள் தூங்கியோன் கைப்பொருள்போல் தாமே நீங்கும். இதனைப் பொய்யிற் புலவரும் கூறுமாறு காண்க.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

இறைவன் பற்றைப்பற்றி பற்றுவிட்டு அவன் அருணசரணாரவிந்தங்களைத் தம் மனத்தில் வைக்கப்பெற்றோர்க்கு அணுத்துணையேனும் கவலைகள் வாரா; இறைவன் திருவடியைச் சாராதவர்க்கு ஒருபோதும் மனக்கவலையை மாற்ற முடியாது.

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது. —திருக்குறள்.

ஏனைய பற்றுக்களை விட்டு எம்பிரானுடைய திருவடியைப் பற்றப் பெறுநாள் என்றோ, அன்றுதான் நாம் பிறந்தவ

ராவோம்; அப்பொழுதுதான் பிறவாத தன்மையும் பெறு வோம்.

> "மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமே மனம் பாவிததேன்
> பெற்றலும் பிறந் தேனினிப் பிறவாததன்மைவந் தெய்தினேன்"
> —சுந்தரர்.

> "உன்பற்றொழிய ஒரு பற்றுமில்லை யுடையவனே.
> —திருவெண்காடர்.

**செஞ்சொல் :—**

"செஞ்சொல்" என்பதற்குப் பிரணவமொழியென்று பொருள் கொள்வாருமுளர்; "செஞ்சொன் மாதிசை வடதிசை குடதிசை விஞ்சு கீழ்திசை" என்று நம் அருணகிரிநாதரே பிறிதோரிடத்தில் தென்திசையைக் குறிக்கவந்தபோது தமிழ் மொழியையுடைய திசை என்பதற்கு "செஞ்சொல்மாதிசை" என்று கூறியுள்ளாராதலால் "செஞ்சொல்" என்பதற்கு தமிழ் மொழி என்பதே ஆசிரியர் கருத்தாகும். மொழிகளிலே தமிழ் மொழியே இனிய சொற்களையுடையதென்பதும் போதரும்.

**சிறுபாலா :—**

விநாயகமூர்த்திக்கு இளையோன் என்பதையும், என்றும் இளையோனாக இருப்போன் என்பதையும் உணர்த்துகின்றார்.

> "என்று மகலாத இளமைக்கார" —(சந்தன சவாது) திருப்புகழ்.
> "என்றும் இளையாய் அழகியாய்" —நக்கீரர்.

**திரைகடலிடை வரு மசுரன் :—**

சமுத்திரத்திற்கு மத்தியில் மாமரமாகத் தோன்றி ஆயிரத் தெட்டண்டங்களும் நிழல்படுமாறு, இரும்பின் மயமான இலைகளையுடைய கிளைகளை அசைப்பதால் உயிர்களுக்குப் பெருந்துன்பத்தை விளைத்தான் சூரபன்மன்.

**இபமயில் குறமகளும் விரும்பிப் புணர்வோனே :—**

தெய்வயானையாகிய கிரியாசக்தியையும், வள்ளியம்மை யாராகிய இச்சாசக்தியையும், ஆன்மாக்களுக்கு அருள் செய்யும்பொருட்டு இறைவன் விரும்பிச் சேர்க்கின்றனன்.

**விருதணி மரகத மயில் :—**

எம்பெருமான் எழுந்தருளிவரும் பச்சைப்ரவாளமயில், துரக கஜரதகடக விகடதட நிருதர்குல துஷ்டர்நிஷ்டூரமுடைய தும், நெடியமுது ககனமுக டுறவீசி நிமிருமொரு நீலக்கலாப

முடையதும், படர் சக்ரவாளகிரி துகள்பட வையாளி வருந் திறமுடையதுமாகத் திகழ்வதால் விருதுகளை யணிந்து வெற்றியைத் தெரிவித்துக்கொண்டு வருகின்றது.

**குமர விடங்க :—**

திருச்செந்தூரிலுள்ள உத்சவமூர்த்திக்குக் 'குமரவிடங்கர்' என்று திருநாமம். விடங்கர்—உளிபடாமூர்த்தி என்றும் பொருள்.

## கருத்துரை

மலைவில்லாரருளிய செந்தமிழ்க்குமாரரே! சூரபன்மனை வதைத்தருளிய செந்திலதிபரே! வல்லீதேவசேனகாந்தரே! மரகதமயில் மிசைவரும் குமரவிடங்கப்பெருமாளே! விலை மகளிரது மயக்கத்தையுடைய அடியேன் கவலைகள் நீங்கவும், திருவருள் நெறியில் நிற்கவும் தேவரீரது திருவடி எனது மனதின்கண் பொருந்தவும் தேவரீருடைய பற்றை அடைய மாட்டேனோ!

## 29

சேமக் கோமள பாதத் தாமரை
சேர்தற் கோதும நந்தவேதா
தீதத் தேயவி ரோதத் தேகுண
சீலத் தேமிக அன்புறுதே
காமக் ரோதவு லோபப் பூதவி
காரத் தேயழி கின்றமாயா
காயத் தேபசு பாசத் தேசிலர்
காமுற் றேயும தென்கொலோதான்
நேமிச் சூரொடு மேருத் தூளெழ
நீளக் காளபு யங்ககால
நீலக் ரீபக லாபத் தேர்விடு
நீபச் சேவக செந்தில்வாழ்வே
ஓமத் தீவழு வார்கட் கூர்சிவ
லோகத் தேதரு மங்கைபாலா
யோகத் தாறுப தேசத் தேசிக
வூமைத் தேவர்கள் தம்பிரானே.

## பதவுரை

நேமி=கடலும், சூரொடு=சூரபன்மனும், மேரு தூள் எழ=மேரு மலையும் தூளாகுமாறு, நீள காள புயங்க கால=விஷமுள்ள நீண்ட

பாம்பைக் காலில் இடுக்கிக் கொண்டுள்ள, நீல க்ரீப=நீல நிறமுள்ள கழுத்தையுடைய, கலாப தேர்விடு=மயிலாகிய பறவையைத் தேர் போல் செலுத்துகின்ற, நீப=கடப்ப மலரையணிந்த, சேவக=வீரரே! செந்தில் வாழ்வே=திருச்செந்தூரில் வாழ்கின்றவரே! ஓம தீ=ஓம அக்னியை, வழுவார்கட்கு ஊர்=தவறுமல் வளர்ப்பவர்கட்கு உறை விடத்தை, சிவலோகத்தே தரும்=சிவலோகத்தில் தந்தருளுகின்ற, மங்கை பாலா=உமையம்மையாருடைய திருக்குமாரரே! யோகத்து ஆறு=யோக வழிகளை, உபதேச தேசிக=உபதேசிக்கின்ற குருநாதரே! ஊமை தேவர்கள் தம்பிரானே=ஊமை போல் வாயில்லாதவர்களாகிய தேவர்கட்குத் தலைவரே! சேம கோமள பாதத் தாமரை=இன்பந் தருகின்ற இளமையான திருவடிக் கமலத்தில், சேர்தற்கு ஓதும்=சேர்வதற்குரிய நெறியை ஓதுகின்ற, அநந்த வேத அதீதத்தே=எண்ணில்லாத வேதங்களைக் கடந்த நிலையிலும், அவிரோதத்தே=பகை என்பதேயில்லாத சாந்த நிலை மீதும், குண சீலத்தே=நற்குண நல்லொழுக்கத்திலும், மிக அன்பு உருதே=மிகுந்த அன்பைக் கொள்ளாமல், காம=காமத்தாலும், க்ரோதத்தே=க்ரோதத்தாலும், உலோப=உலோப குணத்தாலும், பூத விகாரத்தே=ஐம்பெரும் பூதங்களின் கலகத்தாலும், அழிகின்ற மாயா காயத்தே=அழிந்து படுகின்ற மாயமான இந்த உடம்பின் மீதும், பசு பாசத்தே=சீவாத்துமாவாகிய உயிர் இச்சைப்படும் உலகப் பற்றுக்களின் மீதும், சிலர் காமுற்று ஏயும் அது என்கொலோ தான்=சிலர் ஆசை வைத்துள்ள நிலை என்னே? தெரியவில்லையே!

## பொழிப்புரை

கடலும் சூரனும் மேரு மலையும் பொடிபடுமாறு, நஞ்சுடைய நெடிய பாம்பைக் காலில் கொண்டுள்ளதும், நீல நிறம் பொருந்திய கழுத்தையுடையதும் ஆகிய மயிலைச் செலுத்திய கடப்பமாலையணிந்த வீரரே! திருச்செந்தூரில் எழுந்தருளியவரே! வேள்வித் தீயைத் தவருது வளர்க்கும் சான்றோர்க்குச் சிவலோகத்தில் இடந்தருகின்ற உமையம்மையாரது திருக்குமாரரே! யோக வழிகளை உபதேசிக்கின்ற குருமூர்த்தியே! ஊமைகள் போல் வாயற்ற தேவர்களது தலைவரே! இன்பந் தருவதும், இளமையானதுமாகிய பாதாரவிந்தங்களைச் சேர்தற்கு உரிய வழிகளை ஓதுகின்ற எண்ணற்ற வேதங்களின் முடிவு நிலையிலும், பகையில்லாத சமாதான நிலையிலும், நற்குண நல்லொழுக்கத்திலும், மிகுந்த அன்பு கொள்ளாமல், காமத்திலும், குரோதத்திலும், லோபத்திலும், ஐம்பெரும் பூத வேறுபாட்டிலும், அழிகின்ற மாயமாகிய உடம்பிலும், உயிர்கள் விரும்புகின்ற உலகப் பொருள்களிலும் ஆசை வைத்துச் சிலர் அலைவது என்ன காரணமோ?

## விரிவுரை

**சேமக் கோமள பாதத் தாமரை :—**

சேமம்—இன்பம். கோமளம்—இளமை. இன்ப ஊற்று இறைவன் திருவடியில் இருக்கின்றது. அது நினைக்குந்தோறும் காணுந்தோறும் பேசுந்தோறும் தித்திக்கும் திறனுடையது. இன்பத் தேன் சொரிகின்றது. சேமம் என்பதற்குக் காவல் எனவும் பொருளுண்டு. அடியார்களுக்குக் காவல் புரிவது. அத்திருவடி இளமை மாறாதது.

**சேர்தற் கோது மநந்த வேதாதீதத்தே :—**

இறைவன் திருவடியைச் சேரும் நெறியை இனிது எடுத்துக் கூறும் வேதாந்தத்தின் மீது பற்று வைக்க வேண்டும். வேதம் எல்லா நூல்களுக்கும் ஆதியானது. இறைவன் அருளிச் செய்தது.

**அவிரோதத்தே :—**

யாரையும் பகைக்கக் கூடாது. பகையே உலகில் இருக்கக் கூடாது. எவரும் யாதும் யானாக நோக்கும் பெருஞான நிலையைப் பெற்றுவிட்டால் உறவு யார்? பகைவர் யார்? எல்லாம் தானே யாகிவிடும். அங்கே சாந்த நிலையன்றி வேறு நிலை இல்லை. அந்நிலைமீது பற்று வைக்க வேணும்.

**குணசீலத்தே :—**

நற்குணத்தால் வருவது சீலம்; சீலம் என்பது பண்பின் சிகரம். ஒழுக்கத்தின் உயிர். சிவபெருமானைச் 'சீலமே' என்று அழைக்கின்றனர் திருஞானசம்பந்தரும், அப்பரும்.

"ஆலமே அமுதமாக உண்டுவா னவர்க் களித்துக்
காலனை மார்க்கண் டர்க்காகக் காய்ந்தனை அடியேற்கின்று
ஞாலம்நின் புகழேயாக வேண்டும் நான் மறைகள் ஏத்தும்
சீலமே ஆலவாயிற் சிவபெருமானே" என்றார்.
—பெரிய புராணம்.

ஞால மேவிசும் பேநலந் தீமையே
கால மேகருத் தேகருத் தாற்றெரும்
சீல மேதிரு வீழி மிழலையுள்
கோல மேஅடி யேனைக் குறிக்கொளே. —அப்பர்.

சீலம் உள்ள இடத்தில் தருமம் இருக்கும்; தருமம் இருக்குமிடத்தில் சத்தியம் இருக்கும்; சத்தியம் இருக்குமிடத்தில் ஒழுக்கம் இருக்கும்; ஒழுக்கம் இருக்குமிடத்தில் பலம் இருக்கும். பலமுள்ள இடத்தில் லட்சுமி யிருப்பள். சீலம் இல்லையானால் இத்தனையும் இருக்கமாட்டா. ஆகவே சீலத்தை யாவரும் கடைப்பிடிக்க வேண்டும்.

## சீலத்தின் சிறப்பு

இந்திரன் சீலத்தைப் பெற விரும்பினுன். பிரம தேவரிடம் சென்று சீலத்தையருள வேண்டும் என்று கேட்டான். பிரம தேவர் "இந்திரனே! சீலம் மிகவும் உயர்ந்தது. அது பிரகலாத ரிடம் தங்கியிருக்கின்றது. அவரிடம் சென்று பெறக்கடவாய்" என்ருர்.

இந்திரன் பிரகலாதரிடம் வந்து பல காலம் பணிவிடை புரிந்தான். அவன் பணிவிடையால் மனம் மகிழ்ந்த பிரக லாதர், "இந்திரனே! உனக்கு என்ன வேண்டும் கேள். தரு கின்றேன்" என்ருர். இந்திரன் அவரைப் பணிந்து "ஞான சீலரே! தங்களிடம் சீலம் என்ற ஒன்றை யாசிக்கின்றேன்" என்ருன்.

பிரகலாதர் உடனே "நல்லது; சீலத்தைத் தந்தேன்" என்ருர். பிரகலாதரிடம் இருந்து ஒரு ஒளியுருவம் புறப்பட்டு இந்திரன் மேனியில் அடங்கியது. அந்த ஒளியுருவத்தைப் பிரகலாதர் பார்த்து "நீ யார்?" என்று கேட்டார்; "நான் சீலம்" என்று கூறியது அது.

பின்னர் பிரகலாதர் உடம்பிலிருந்து மற்ருெரு உருவம் புறப்பட்டது. "நீ யார்?" என்ருர். நான் தருமத்தின் அதி தேவதை; சீலமில்லாத இடத்தில் இருக்க மாட்டேன்" என்று கூறி அவ்வொளியுருவம் இந்திரன்பால் சென்று மறைந்தது.

அடுத்து ஒரு ஒளியுருவம் அவர் மேனியிலிருந்து புறப் பட்டது. பிரகலாதர் "நீ யார்?" என்று வினவினுர். நான் சத்தியம்; தருமம் இல்லாத இடத்தில் என்ருல் இருக்க முடி யாது" என்று கூறி இந்திரன் மேனியில் அடங்கியது.

அதற்குப்பின் பிரகலாதரிடமிருந்து மற்ருெரு ஒளியுருவம் புறப்பட்டது. "நீ யார்?" என்று அவர் கேட்டார். "நான் ஒழுக்கம்; சத்தியத்தை விட்டு நான் பிரிந்திருக்க மாட்டேன்" என்று கூறி மறைந்தது.

அடுத்து ஒரு ஒளியுருவம் புறப்பட்டது. கண் கூசும்படி யான அதனைப் பார்த்து பிரகலாதர், "நீ யார்" என்ருர். "நான் பலம். ஒழுக்கமில்லாத இடத்தில் பலமாகிய நான் இருக்க மாட்டேன்" என்றது.

பின்னர் ஒரு அழகிய பெண் உருவம் ஒளிமயமாகப் புறப் பட்டது. "அம்மா! நீ யார்?" என்று கேட்டார். "நான் மகாலட்சுமி; பலமில்லாத இடத்தில் நான் இருப்பதில்லை" என்று கூறி மறைந்தது.

ஆகவே லட்சுமியுள்ள இடத்தில் வலிமையும், வலிமை யுள்ள இடத்தில் ஒழுக்கமும், ஒழுக்கமுள்ள இடத்தில் சத்திய

மும், சத்தியமுள்ள இடத்தில் தருமமும், தருமமுள்ள இடத்தில் சீலமும் இருக்கும். இத்தனைக்கும் சீலமே ஆணிவேர்.

**மிக அன்புறுதே :—**

மேலே கூறிய வேதமுடிவிலும், அவிரோத ஞானத்திலும், குணசீலத்திலும் மிகுந்த அன்பு வைக்கவேணும்.

**காமக்ரோத உலோபப்பூத விகாரத்தே :—**

மேலே கூறிய நலங்களில் அன்பு வைக்காமல், காமத்தின் மீதும், குரோதத்தின் மீதும், உலோபத்தின் மீதும், ஐம்பூத பரிணமங்களின் மீதும் மிக்க ஆசை வைக்கின்றனர். காமம் —ஆசை; குரோதம்—ஒருவர் மீது தீராத வெறுப்பும் பகையும் கொள்ளுதல்.

**அழிகின்ற மாயா காயத்தே :—**

ஒரு கணத்தில் அழிகின்ற இந்த உடம்பின் மீது ஆசை வைக்கின்றனர். உடம்பு இருப்பதுபோல் மாயமாய் மறைந்து விடும் இயல்புடையது.

நேற்றுளார் இன்று மாளா நின்றனர் அதனைக் கண்டும்
போற்றிலேன் நின்னை அந்தோ போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலேன் அகண்டானந்த அண்ணலே அளவில் மாயைச்
சேற்றிலே இன்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறியனேனே.
—தாயுமானர்.

**பசுபாசத்தே :—**

பசுக்களாகிய உயிர்கள் உலகப் பொருள்கள் மீது சதா மனதைச் செலுத்துகின்றன.

"உலக பசுபாச தொந்த மதுவான
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
மலசல சுவாச சஞ்ச லமதாலென்
மதிநிலை கெடாம லுன்றன் அருள்தாராய்."
—திருப்புகழ்.

உலகத்தார், உயிருக்கு உறுதி தரும் நலங்களை நாடாமல் இறுதி தரும் இன்னல்களை விரும்பி உழல்வது குறித்து சுவாமிகள் இரங்குகின்றனர். வேறு ஒரு திருப்புகழிலும் இவ்வாறு சுவாமிகள் இரங்கிக் கூறுகின்றனர்.

"..................சிலர் தாமே
உளநெகிழ்ந்த சத்தான உரைமறந்து சத்தான
உனை யுணர்ந்து கத்தூரி மணநாறும்
உபய பங்க யத்தாளில் அபயமென் றுனைப்பாடி
உருகி நெஞ்சு சற்றேனுதில் இழிவாமோ?"
—(களவுகொண்டு) திருப்புகழ்.

**நேமிச்சூரொடு மேருத் தூளெழ :—**

நேமி—கடல்.

முருகவேள் கடலையும், சூரனையும் மேருமலையையும் பொடி படுத்தினார். எம்பெருமான் சரவணப் பூந்தொட்டிலில் சிறிது 'அழுதருளலும், இனி நமக்கு வாழ்வில்லை என்று கருதி கடலும் சூரும் குன்றும் அழுதன என்று கந்தரலங்காரத்திலும் கூறுகின்றார்.

"கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும்
குருந்து"
—அலங்காரம்.

**நீலக்ரீப :—**

மயிலுக்குக் கழுத்து நீலமாக இருக்கும். அதனால் அதற்கு நீலகண்டம் என்றும் ஒரு பேருண்டு.

**ஓமத் தீ வழுவார்கட் கூர்சிவ லோகத்தே தரு மங்கை :—**

அந்தணர்கள் சிவ பூஜையில் சிவாக்கினி வளர்க்க வேண்டும். அதனால் கலியின் கொடுமை நலியும். அவ்வாறு அப்பூதி நாயனார் நித்தியாக்கினி வளர்த்தார். "கலிநலியத் தழலோம்பும் அப்பூதி" என்கின்றார் அப்பரடிகள்.

அவ்வண்ணமே அழல் ஓம்பும் அந்தணர்கட்கு அரக்கர் இடர் விளைவிப்பர். அவ்வேளையில் முருகன் அரக்கரையழித்து வேள்விக் காவல் புரிவர்.

"மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒருமுகம்"
—திருமுருகாற்றுப்படை.

"அந்தண் மறைவேள்வி காவற்கார"
—(முந்துதமிழ்) திருப்புகழ்.

இத்தகைய சிவாக்கினி வளர்த்தவர்கட்கு அம்பிகை சிவலோகத்தில் இடந் தந்து அருள்புரிவர்.

**யோகத்தாறுபதேசத்தேசிக :—**

சிவயோகத்தின் நெறியை முருகவேள் தமது அடியவர்க்கு உபதேசிப்பர். அருணகிரியார்க்கு அதனை உபதேசித்தருளினார். அருணகிரியார் சிவயோக நிலையைப் பல இடங்களில் விளக்கிக் கூறுகின்றார்.

"..............மலமாயை
செனித்த காரியோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தையாகி யான்வேறெ னுடல்வேறு
செகத்தியாவும் வேருக நிகழ்ச்சியாமனோதீத
சிவச்சொரூப மாயோகி என ஆள்வாய்"
—(அனித்தமான) திருப்புகழ்.

**ஊமைத்தேவர்கள் :—**

தேவர்கள் சிறந்த வேதாகம பண்டிதர்கள். அங்ஙனம் இருந்தும், முருகன் திருமுன் ஊமைகளைப் போல் தமது கலையாற்றல் குன்றி வாய் பேசாது நிற்கின்றனர். இரவில் நட்சத்திரங்கள் மின்னும். பகலில் சூரியன் முன் உருத் தெரியாமல் மறைந்துபோம். அதுபோல் ஏனைய இடங்களில் வாசாமகோசரமாகப் பேசும் தேவர்கள் முருகவேள் திருமுன் வாயடங்கி மூகர்போல் நிற்கின்றனர்.

## கருத்துரை

மயில் வாகனரே! செந்திற்கந்தவேளே! உமைபாலரே! தேவதேவரே! உலகத்தார், உறுதிப் பொருள்களைப் பற்றாது அவமே திரிந்து கெடுவது என்னோ?

## 30

தகரநறை பூண்ட விந்தைக்
குழலியர்கள் தேய்ந்த இன்பத்
தளருமிடை யேந்து தங்கத் தனமானார்
தமைமனதில் வாஞ்சை பொங்கக்
கலவியொடு சேர்ந்து மந்த்ரச்
சமயஜெப நீங்கி இந்தப் படிநாளும்

புகலரிய தாந்த்ரி சங்கத்
தமிழ்பநுவ லாய்ந்து கொஞ்சிப்
புவியதனில் வாழ்ந்து வஞ்சித் துழல்மூடர்
புநிதமிலி மாந்தர் தங்கட்
புகழ்பகர்தல் நீங்கி நின்பொற்
புளகமலர் பூண்டு வந்தித் திடுவேனோ

தகுடதகு தாந்த தந்தத்
திகுடதிகு தீந்த மிந்தித்
தகுகணக தாங்க ணங்கத் தனதான
தனனதன தாந்த னந்தத்
தெனநடன மார்ந்த துங்கத்
தனிமயிலை யூர்ந்த சந்தத் திருமார்பா

திகையசுரர் மாண்ட முந்தத்
திறலயிலை வாங்கு செங்கைச்
சிமயவரை யீன்ற மங்கைக் கொருபாலா

திகழ்வயிர மேந்து கொங்கைக்
குறவனிதை காந்த சந்த்ரச்
சிகரமுகி லோங்கு செந்திற் பெருமாளே.

## பதவுரை

தகுடதகு தாந்த தந்த திகுடதிகு தீந்தமிந்தித் தகுகணக தாங் கணங்கத் தனதான தனனதன தாந்தனந்தத்தென = இந்த ஒலிக்குறிப் புடன், நடனம் ஆர்ந்த = நடனம் நிறைந்த, துங்க தனி மயிலை ஊர்ந்த = பரிசுத்தமுடைய ஒப்பில்லாத மயிலின் மீது ஆரோகணித்துவரும், சந்த திருமார்பா = சந்தனம் அணிந்த அழகிய மார்பையுடையவரே! திசை அசுரர் மாண்டு அழுந்த = திசையில் உள்ள அசுரர்கள் இறந்து ஒழியும்படி, திறல் அயிலைவாங்கு செங்கை = வலிய வேலை விடுத்தருளிய சிவந்த திருக்கரத்தையுடையவரே! சிமயவரை ஈன்ற மங்கைக்கு = இமயமலை பெற்ற உமாதேவியாருக்கு, ஒரு பாலா = ஒப்பற்ற புதல் வரே, திகழ்வயிரம் ஏந்து கொங்கை = விளங்குகின்ற வைரமணிமாலை தரித்த தன பாரங்களையுடைய, குறவனிதை காந்த = வள்ளியம்மை யுடைய கணவரே! சந்த்ர சிகரமுகில் ஓங்கு = சந்திரன் தவழும் கோபு ரத்தின்மீது மேகங்கள் உலாவும், செந்தில் பெருமாளே = திருச்செந் தூரில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! தகரநறை பூண்ட விந்தைக் குழலியர்கள் = மயிர்ச் சாந்தின் நறுமணங்கொண்ட அழகிய கூந்தலையுடையவர்களும், தேய்ந்த இன்பத் தளரும் இடை ஏந்து = மெலிந்ததும் இன்பத்தைத் தருவதும் ஆகிய தளர்ந்த இடை தாங்கு கின்ற, தங்க தனமானார் தமை = பொன்னிறம் பொருந்திய கொங்கை களை உடையவர்களுமான பெண்களை, மனதில் வாஞ்சை பொங்க = மனதில் ஆசை மேல் எழ, கலவியொடு சேர்ந்து = கலவி இன்பத்துடன் கூடி, மந்த்ர சமய ஜெபம் நீங்கி = சமய நெறி, மந்திர ஜெபம் ஆகிய இவைகளை விட்டு விலகி, இந்தப்படி நாளும் = இவ்வாறாக நாள் தோறும், புகல அரியதாம் = சொல்லுதற்கு அரியதாகிய, த்ரி சங்க தமிழ் பநுவல் = முச் சங்கத் தமிழ் நூல்களை, ஆய்ந்து கொஞ்சி = ஆராய்ந்து பேசியும், புவியதனில் வாழ்ந்து வஞ்சித்து உழல் மூடர் = பூமியில் வாழ்ந்து அநேகரை வஞ்சித்துத் திரிகின்ற மூடர்களும், புனிதம் இலி மாந்தர் தங்கள் = தூய்மையில்லாதவர்களும் ஆகிய மனிதர்களிடம் போய் அவர்களை, புகழ் பகர்தல் நீங்கி = புகழ்ந்து பேசு தலை விடுத்து, நின் = தேவரீருடைய, பொன் புளகமலர் பூண்டு = அழ குடையதும் இன்பந் தருவதுமாகிய பாத மலரைச் சிந்தையிலும் சென்னியிலும் தரித்து, வந்தித்திடுவேனோ = துதிக்கமாட்டேனோ?

## பொழிப்புரை

தகுடதகு தாந்த தந்தத் திகுடதிகு தீந்த'மிந்தித் தகுகணக தாங்கணங்கத் தனதான தனன தன தாந்தனந் தத்தென

என்ற ஒலிக் குறிப்புடன் நடனஞ் செய்கின்ற பரிசுத்தம் உடைய ஒப்பற்ற மயில் வாகனத்தின்மீது எழுந்தருளிவரும், சந்தனந் தரித்த அழகிய திருமார்பையுடையவரே! திசைகளில் வாழ்ந்த அசுரர்கள் மாண்டு அழியுமாறு வலிய வேலாயுதத்தை விடுத்த திருக்கரத்தையுடையவரே! இமவரை வேந்தன் ஈன்ற பார்வதி தேவியின் திருக்குமாரரே! ஒளி வீசுகின்ற வைரமணி மாலை தரித்த தனபாரங்களையுடைய வள்ளி நாயகியின் கணவரே! சந்திரன் தவழ்கின்ற கோபுரத்தின் மீது மேகம் உலாவுகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! மயிர்ச்சாந்து பூசிய அழகிய கூந்தலையுடையவர்களும், தேய்ந்ததும் இன்பத்தைத் தருவதும் ஆகிய தளர்ந்த இடையானது ஏந்துகின்ற பொன்னிற முடைய கொங்கைகளையுடையவர்களும் ஆகிய பெண்களை, மனதில் ஆசை மிகுந்து கலவியொடு கூடி, சமய சம்பந்தமான மந்த்ர ஜெபம் முதலியவைகளை விடுத்து, இவ்வாறு நாள்தோறும், சொல்லுதற்கு அரிய மூன்று சங்கங்களின் தமிழ் நூல்களை ஆராய்ந்து பேசி, பூதலத்தில் வாழ்ந்து, பலரையும் வஞ்சித்துத் திரிகின்ற மூடர்களும் தூய்மையில்லாதவர்களுமாகிய மனிதர்களிடம் போய் அவர்களைப் புகழ்ந்து பேசுவதை விடுத்து, இன்பந்தரும் அழகிய உமது திருவடி மலரைச் சிந்தையிலும் சென்னியிலும் தரித்து புகழ்ந்து உய்ய மாட்டேனோ?

## விரிவுரை

**தகர நறை பூண்ட விந்தைக் குழலியர்:—**

தகரம்—மயிர்ச் சாந்து. வாசனைப் பண்டம்; இதனைக் கூந்தலில் பெண்கள் அணிந்துகொள்வர்.

"தகர நறுமலர் பொதுளிய குழலியர்" —திருப்புகழ்.

**தேய்ந்த இன்பத் தளருமிடை:—**

பெண்களுடைய அழகிய லட்சணங்களுள் சுருங்கிய இடை ஒன்று. நூல் போன்று மெல்லிய இடையிருத்தல் வேண்டும். "தெரியாதனவும் வாவளையார் தங்கள் மருங்கே" என்பது நளவெண்பா. தன பாரங்களைத் தாங்கமாட்டாமல் இடை தளர்கின்றது என்கின்றார்.

**மந்த்ர சமய ஜெப நீங்கி:—**

மனிதனுக்கும் விலங்குகளுக்கும் உண்பதும் உறங்குவதும் உலாவுவதும் மக்களைப் பெறுதலும் பொதுவானவை. ஆகவே, மனிதனுக்கும் விலங்குக்கும் இடையிலே உள்ள எல்லைக்கல் தெய்வவுணர்ச்சி ஒன்றே. மனிதனாகப் பிறந்ததனால்மட்டும் மனிதனாகிவிட முடியாது மனிதத் தன்மையிருத்

தல் வேண்டும். மனிதப் பண்பினை நமக்குத் தெளிவாக வுணர்த்துவது சமயம்.

மந்—நினைப்பு. த்ர—காப்பாற்றுவது. நினைப்பவரைக் காப்பாற்றுவது மந்த்ரம். மந்திர ஜெபத்தால் ஆத்மசக்தி வளரும். நல்லவுணவினுல் உடல் வளரும். நல்ல நூலகளினுல் உணர்வு வளரும். திருஐந்தெழுத்தோதிய ஆத்ம சக்தியால் அப்பரடிகள் "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்ருர். அன்றி கல்லைத் தெப்பமாக்கிக் கடலில் மிதந்து கரை சேர்ந்தார். திருஐந்தெழுத்தை ஓதும் சிவனடியார்கள் திருமடத்தில் சமணர்கள் ஏவிய மந்திரத் தீ செல்லவில்லை.

"ஆதிமந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதிரத்தினும் மற்றை மந்திரவிதி வருமே!" —சேக்கிழார்.

சாமானியமானவர்கள், சாமானியமான சில மந்திரங் களைச் செபித்து பாம்பு தேள் முதலிய விஷபயங்களைப் போக்குவது கண்கூடு. மந்திர ராஜாவாகிய திருவைந்தெழுத் துக்கு எத்துணைப் பெருமை யென்பதை உய்த்துணர்மின்.

**த்ரி சங்கத் தமிழ்ப் பநுவல் :—**

மூன்று சங்கம். முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம். முதற் சங்கம் கடலால் அழிக்கப்பட்டதாகிய கபாட புரத்தில் இருந்தது. அதில் நாலாயிரத்து நானூற்று நாற்பத் தொனபது புலவர்கள் இருந்தார்கள். இடைச் சங்கம், கடலால் அழிக்கப்பட்ட தென்மதுரையில் இருந்தது. அதில் நானூற்று நாற்பத தொன்பது புலவர்கள் இருந்தார்கள். கடைச் சங்கம் இப்போதுள்ள மதுரையில் இருந்தது. அதில் நாற்பத்தொன் பது புலவர்கள் இருந்தார்கள்.

இந்த மூன்று சங்கத்தார்கள் அநேக செந்தமிழ் நூல்கள் இயற்றினுர்கள். முதற் சங்க நூல்களும் இடைச் சங்க நூல் களும் கடற் கோளால் அழிந்தொழிந்தன. இந்த முச் சங்க காலத்தில் எழுந்த தமிழ் நூல்களை யெல்லாம் ஆராய்ந்து அவற்றைப் பற்றிப் பேசிப் புலவர்கள் நல்வழிப் படவேண்டும்.

**வஞ்சித்துழல்... ...மாந்தர் தங்கள் புகழ் பகர்தல் நீங்கி :—**

பிறரை மோசஞ் செய்து உழல்கின்ற மூடர்களும், தூய்மை இல்லாதவர்களும் ஆகிய மனிதர்களைப் புகழ்ந்து பாடுவது கூடாது உயர்ந்த தமிழை அவர்கட்குப் பயன் படுத்துவது காமதேனுவின் பாலைக் கமரில் சிந்துவது போலாகும். பழங்காலத்தில் பல புலவர்கள் இங்ஙனம் உழன் றனர்.

ஒரு புலவன் ஒரு லோபியிடம்போய் இல்லாத பெருமைகளை உண்டென்று பாடினுன். அந்த லோபி இல்லை இல்லை என்ருன்.

கல்லாத ஒருவனையான் கற்றுயென்றேன்
காடெறியும் அவனைநா டாள்வா யென்றேன்
பொல்லாத ஒருவனை நான் நல்லாய் என்றேன்
போர் முகத்தை யறியானைப் புலியேறு என்றேன்
மல்லாரும் புயம் என்றேன் சூம்பல் தோளை
வழங்காத கையனையான் வள்ளால் என்றேன்
இல்லாது சொன்னேனுக்கு இல்லை யென்றான்
யானும் என்றன் குற்றத்தால் ஏகின்றேனே.

எனவே இன்றிருந்து நாளை மாளுகின்ற மனிதர்களைப் புகழ்தல் கூடாது.

**'நின்பொற் புளகமலர் பூண்டு வந்தித் திடுவேனோ'? :—**

முருகனுடைய சரணும்புயத்தைப் புகழ்ந்து கவி பாடித் துதிக்கவேண்டும்.

"முகே மே பவித்ரம் சதா தச் சரித்ரம்"

"மே—என்னுடைய, முகம்—வாயானது, சதா—எப்பொழுதும், தத்—அவருடைய(முருகனுடைய), பவித்ரம் சரித்ரம்—புனிதமான சரித்திரத்தைச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டும்" என்று ஆதிசங்கரர் கூறுகின்றார்.

"பாடும் பணியே பணியா அருள்வாய்" —அநுபூதி.

**நடனமார்ந்த துங்கத் தனிமயில் :—**

அறுபத்து நான்கு கலைகளில் உயர்ந்தது நடனக் கலை; அதில் வல்லவர் நடராஜப் பெருமான். எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதங்களில் மயில் ஒன்று இயற்கையில் நடனஞ் செய்யவல்லது. நடராஜப் பெருமானுக்கு நீலகண்டர் என்று பேர். மயிலுக்கும் நீலகண்டம் என்று பேருண்டு. க்ரீவம் என்றால் கழுத்து. "நீளக்காள புயங்ககால நீலக்ரீவ கலாபத் தேர்விடு நீபச் சேவக" என்று அருணகிரிநாதர் மற்றொரு திருப்புகழிலும் பாடுகின்றார்.

**சிமய வரை யீன்ற மங்கை :—**

அகில வுலகங்களுக்கும் அன்னையாகிய ஆதி பராசக்தி இமவான் செய்த அளவற்ற தவத்தினால், ஒரு தாமரை மலரில் திருக் குழந்தையாகத் தோன்ற, இமவான் எடுத்து வளர்த்தான். அதனால் மலையரையன் மகள் என்று அம்பிகை அளவற்ற கருணையினால், அவன்பால் வளர்ந்து அவனை மகிழ்வித்தனர்.

## கருத்துரை

மயில் வாகனரே! வள்ளி மணாளரே! செந்திற் கந்தப் பெருமானே! மனிதர்களைப் பாடாது தேவரீரையே பாடி உய்ய அருள் புரிவீர்.

## 31

தந்த பசிதனைய றிந்து முலையமுது
தந்து முதுகுதட வியதாயார்
தமபி பணிவிடைசெய் தொண்டர் பிரியமுள
தங்கை மருகருயி ரெனவேசார்

மைந்தர் மனைவியர்க டும்புகட னுதவு
மந்த வரிசைமொழி பகர்கேடா
வந்து தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க ஒருமகிட மிசையேறி

அந்த கனுமெனைய டர்ந்து வருகையினில்
அஞ்ச லெனவலிய மயில்மேல்நீ
அந்த மறலியொடு கந்த மனிதனம
தன்பனென மொழிய வருவாயே

சிந்தை மகிழமலை மங்கை நகிலிணைகள்
சிந்து பயமயிலு மயில்வீரா
திங்க ளரவுநதி துன்று சடிலரருள்
செந்தி னகரிலுறை பெருமாளே.

## பதவுரை

மலைமங்கை = மலையரசனது புதல்வியாகிய பார்வதி யம்மையாரது, சிந்தை மகிழ = உள்ளங்களிக்க, நகில் இணைகள் சிந்து = இரு தனங்களி னின்றும் பொழியும், பயம் = பாலமுதத்தை, அயிலும் = உண்டருளிய, அயில் வீரா = வேலாயுதத்தைத் தாங்கிய வீரரே! திங்கள் = சந்தி ரனும், அரவு = சர்ப்பமும், நதி = கங்காநதியும், துன்று சடிலர் = நெருங்கியுள்ள சடாபாரத்தையுடைய சிவபெருமான், அருள் = அருளிய, செந்தில் நகரில் உறை = திருச்செந்தூர் என்னும் புனித க்ஷேத்திரத்தில் வசிக்கின்ற, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! தந்த பசிதனை அறிந்து = வருத்தத்தைத் தந்த பசியைக் குறிப்பா லுணர்ந்து, முலை அமுது தந்து = தனங்களினின்றும் பெருகும் பாலமு

தத்தை ஊட்டி, முதுகு தடவிய தாயார்=மகவின் மீது வைத்த அளவு கடந்த அன்பால் முதுகைத்தடவிய தாயார், தமபி=தம்பி, பணி விடை செய்தொண்டர்=குற்றேவல்களைச் செய்யும் வேலைக்காரர்கள், பிரியம் உள தங்கை=அன்புடைய தங்கை, மருகர்=மருகர்கள், உயிர் எனவே சார்=உயிரேபோல் மிகவும் அன்புடன் சார்ந்துள்ள, மைந்தர்=பிள்ளைகள், மனைவியர்=பத்தினிகள், கடும்பு=உறவினர் முதலியோர், கடன் உதவும்=உடலுக்கு வேண்டிய கடன்களை அவரவர்கள் தமக்குத் தக்கவாறு செய்வர், அந்த வரிசை மொழி பகர்= அழகிய உபசார வார்த்தைகளைக் கூறுவதெல்லாம், கேடா வந்து= அழியும்படியாக வந்து, தலை நவிர் அவிழ்ந்து=தலைமயிர் அவிழ்ந்து, தரைபுக=தரையில் வீழ்ந்து புரள, மயங்க=மயங்கும் வண்ணம், ஒரு மகிட மிசை ஏறி=ஒப்பற்ற எருமைக்கிடாவின் மீதூர்ந்து, அந்தகன் (உம்-அசை)=கூற்றுவன், எனை அடர்ந்து வருகையினில்=அடியேனை நெருங்கி உயிரைப் பற்ற வருங்காலத்தில், அஞ்சல் என=பயப்படாதே என்று சொல்லி அடியேனுக்கு அபயங் கொடுக்க, அந்த மறலியொடு=அடியேனுடைய உயிரைப் பற்றவருகிற அந்தக் கூற்றுவனோடு, உகந்த மனிதன்=சம்பந்தப்பட்ட இவன், நமது அன்பன் என மொழிய=நமது அன்பிற் சிறந்தவன் என்று கூறியருளுவதற்கு, வலிய=(அடியேன் ஆன்மா பிரியுங்கால் அழைக்க வலியற்று அறிவு மயங்கி விழுந்திருந்தாலும் இப்போது தந்த மனுவை நினைந்து) வலிய, மயில்மேல் நீ=தேவரீர் மயில் மிசை ஊர்ந்து, வருவாயே= வந்தருளவேணும்.

## பொழிப்புரை

மலையரசனாகிய இமவானது புதல்வியாரென அவதரித்த பார்வதிதேவியின் சிந்தை மகிழ இரு தனங்களினின்றும் பெருகும் ஞானப் பாலை யுண்டருளிய வேல்வீரரே! சந்திரன், அரவு, கங்காநதி இவைகள் நெருங்கியுள்ள சடைமுடியுடைய சிவபெருமானது திருக்குமாரரே! திருச்செந்தூரில் வாழ்கின்ற பெருமையிற் சிறந்தவரே! வருத்தத்தைத் தந்த பசியினது குறிப்பைக் குறிப்பாலுணர்ந்து முலைப்பாலைத் தந்து மகவின்மீதுள்ள முடிவில்லாத அன்பின் பெருக்கால் பலகாலும் முதுகைத் தடவிய தாயார், தம்பி, ஏவல் செய்யும் பணியாளர், அன்புடைய தங்கை, மருகர், உயிரையொத்த மைந்தர், மனைவியர், சுற்றத்தார் முதலியோர் அவரவர்கள் உடலுக்கு வேண்டிய கடமைகளைச் செய்வர். அவர்கள் அழகிய உபசார வார்த்தைகளைக்கூறுவதெல்லாம் ஒழியுமாறு வந்து, தலைமயிர் அவிழ்ந்து தரையிற் புரளுமாறு மயங்க, ஒரு எருமைக் கிடாவின்மீதுஏறி அந்தகன் என்னை நெருங்கி வருகின்ற காலத்தில் பயப்படாதே என்று சொல்லி எனக்கு அபயங்கொடுக்க அந்தக் கூற்றுவனிடத்தில் "இவன் நமது அன்பன்" என மொழிவதற்காக (யான் மயங்கியுள்ளதால்

அழைக்காதிருக்கினும்) வலிய மயில்வாகனத்தின் மீது வந்தருளவேணும்.

## விரிவுரை

**தந்தபசி......வருவாயே :—**

அந்தகன் வருகின்ற சமயத்தில் தாய், தம்பி, மனைவி, மைந்தர் முதலியோர் அனைவரும் உடலைக் காப்பாற்றுங்கடன்களைத் தருவாரேயன்றி உயிரைக் காப்பாற்ற ஒருவராலும் முடியாது. கூற்றுவனை ஒருவரும் தடுக்க வலியற்று வாளா வருந்துவர்.

என்பெற்ற தாயாரு மென்னைப்பிணமென் றிகழ்ந்துவிட்டார்
பொன்பெற்ற மாதரும் போவென்று சொல்லிப் புலம்பிவிட்டார்
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம்வந்து குடமுடைத்தார்
உன்பற்றொழிய ஒருபற்று மில்லை உடையவனே.

—பட்டினத்தார்.

மரணம் நேருகையில் பொறிகலங்கி புலனழிந்து மயங்கியிருப்பராதலால் அறிவுடைய காலத்திலேயே அழைத்து விண்ணப்பம் கொடுக்கின்றனர். அம் மரண பக்குவகாலத்தில் வலிய மயில்மிசைவரவேணும் என்றனர். முருகனடியார் என்று தெரிந்தவுடன் கூற்றுவன் பயந்தோடுவன்; ஆதலால் அந்தக் கூற்றுவனிடத்தில் "இவன் நமது அன்பன்" என்று கூறுமாறு வரவேணும் என்றனர்.

**திங்களரவு......குமர ! :—**

மார்க்கண்டேயரைப் பற்றவந்த மறலியை உதைத்து என்றும் மாளாத வரத்தை நல்கிய மகாதேவரது மகவானபடியால் முருகனும் அந்த இயமபயத்தை நீக்கி இன்னருள் புரிவார் எனக் குறிப்பிடுகின்றனர். அருள் சக்தியாகிய உமாதேவியாரது முலைப்பாலை யுண்டவரும் ஞான சக்தியைத் தாங்கிய வீரருமான படியால் அப் பெருமான் அடியாருக்கு நிச்சயமாக மரண பயம் நீக்கி தமது கந்தவுலகத்தைத் தருவார்.

## கருத்துரை

உமாதேவியாரது ஞானப்பாலையுண்ட வேல் வீரரே! சந்திரமௌலீசரது திருக் குமாரரே! செந்திலம்பதியில் வாழும் பெருமாளே! அந்தகன் வருகின்ற சமயத்தில் "இவன் நமது அன்பன்" என்று சொல்லுதற்காக மயில்மிசை வர வேணும்.

## 32

தரிக்குங்கலை நெகிழ்க்கும்பர
தவிக்குங் கொடி மதனேவில்
தகைக்குந்தனி திகைக்குஞ்சிறு
தமிழ்த் தென்றலி னுடனேநின்
றெரிக்கும்பிறை யெனப்புண்படு
மெனப் புன்கவி சிலபாடி
இருக்குஞ் சிலர் திருச்செந்திலை
உரைத் துய்ந்திட அறியாரே
அரிக்குஞ்சதுர் மறைக்கும்பிர
மனுக் குந்தெரி வரிதான
அடிச்செஞ்சடை முடிக்கொண்டிடு
மரற் கும்புரி தவபாரக்
கிரிக்கும்பநன் முநிக்குங்க்ருபை
வரிக்குங்குரு பரவாழ்வே
கிளைக்குந்திற லரக்கன்கிளை
கெடக் கன்றிய பெருமாளே.

### பதவுரை

அரிக்கும்=நாராயணருக்கும், சதுர் மறைக்கும்=நான்கு வேதங்களுக்கும், பிரமனுக்கும்=பிரம தேவனுக்கும், தெரிஅரிது ஆன=தெரிந்து கொள்வதற்கு அரியதான, அடி=திருவடியையும், செஞ் சடை முடி கொண்டிடும்=சிவந்த சடை முடியையும் கொண்டுள்ள, அரற்கும்=சிவபெருமானுக்கும், புரிதவபார=செய்துள்ள தவம் நிறைந்த, கிரி கும்ப நல் முநிக்கும்=பொதிய மலையில் வாழும் அகத்திய முனிவருக்கும், க்ருபை வரிக்கும்=கருணை புரிந்த, குருபர வாழ்வே=மேலான குருமூர்த்தியே! கிளைக்கும்=சுற்றத்துடன் பெருகிய, திறல் அரக்கன் கிளை=வலிமை பொருந்திய சூரன் உறவுடன், கெட கன்றிய=அழிந்து போகுமாறு கோபித்த, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தரிக்கும் கலை நெகிழ்க்கும்=அணிந்துள்ள ஆடை அவிழ்ந்துபோம்; பரதவிக்கும்=விரக வேதனைப்படும், கொடி=கொடி போன்ற இப்பெண், மதன் ஏவில்=மன்மதனுடைய பாணத்தினால், தகைக்கும்=தடையுண்ணும், தனி திகைக்கும்=தனியாக நின்று திகைப்புண்ணும், சிறு தமிழ்த் தென்றலின் உடனே நின்று=மெல்லிய இனிய தென்றல் காற்றுடனே வந்து நின்று, எரிக்கும் பிறை

என=இந்த சந்திரன் கொளுத்துகின்றது என்று கூறி, புண்படும் என=மனம் புண்ணுகின்றது என்றும் கூறி, புன்கவி சில பாடி=மனிதர்கள் மீது கீழான பாடல்கள் சிலவற்றைப் பாடி, இருக்கும் சிலர்=(அவலநிலையில்) இருக்கின்ற சிலபேர், திருச்செந்திலே=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள எம்பிரான்மீது, உரைத்து உய்ந்திட அறியாரே=பாடிக் கடைத்தேற அறியமாட்டாரோ ?

## பொழிப்புரை

திருமாலுக்கும் நான்கு வேதங்களுக்கும், பிரம தேவருக்கும் காணமுடியாத திருவடியையும், சிவந்த சடைமுடியையும் உடைய சிவமூர்த்திக்கும், நிறைந்த தவம் புரிந்தவரும் பொதிய மலையில் உள்ளவரும், கும்பத்தில் பிறந்தவரும் ஆகிய அகத்தியருக்கும் கருணையுடன் உபதேசித்த மேலான குருமூர்த்தியே ! சுற்றப் பெருக்குடன் வந்த சூரபன்மன் உறவுடன் மாண்டு அழியுமாறு கோபித்த பெருமிதம் உடையவரே ! (அகப்பொருள் துறையில் பாடுகின்ற புலவன் தன்னைப் பெண்ணுகப் பாவித்து பொருள் தருகின்றவனைத் தலைவனுக அமைத்து) உடுத்தியுள்ள ஆடை அவிழ்கின்றது; விரக வேதனையால் தவிக்கின்றேன்; கொடி போன்ற, யான் மன்மதனுடைய பாணங்களினுல் தடைப்படுகின்றேன்; தனியே நின்று திகைக்கின்றேன்; மெல்லிய இனிய தென்றல் காற்றினுடன் வந்துநின்று சந்திரன் கொளுத்துகின்ருன்; என்றும், மனம் புண்படுகின்றேன் என்றும் கூறி புன்மையான கவிகள் சிலவற்றை மனிதர்கள்மீது பாடி சில புலவர்கள் வீணே இருக்கின்ருர்கள்; திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள முருகா ! இவர்கள் உன்னைப் பாடி உய்யுந்தன்மையை அறிந்திலரே ? (இது என்ன பாவம் ? அந்தோ !)

## விரிவுரை

இப் பாடலில் அருணகிரிநாத சுவாமிகள், கற்றறிந்த புலவர்கள் இறைவனைப் பாடாது, தனவந்தர்களிடம் போய் அவர்களைப் பாடி அலையும் அவல நிலையைக் குறித்து வருந்தி இரங்குகின்றனர்.

**தரிக்குங்கலை நெகிழ்க்கும் :—**

அகப் பொருட்டுறையில், புலவன் தன்னைப் பெண்ணுக அமைத்து, தனவந்தனைத் தலைவனுக அமைத்து, "ஏ அழகனே! உன்மீதுள்ள மோகத்தால் எனக்கு ஆடை நெகிழ்கின்றது. நான் விரக வேதனையால் பரதவிக்கின்றேன்" என்று பாடுவான்.

**மதனேவில் தகைக்கும் :**

"மன்மதனுடைய மலர்க் கணைகளால் நான் புண்ணுகி தடைப்படுகின்றேன் " ஏ—கணை (அம்பு)

**தனி திகைக்கும் :—**

"உன்னைப் பிரிந்து தன்னந்தனியில் இருந்து நான் திகைக்கின்றேன்; என்னை வந்து அணைவாய்" என்றெல்லாம் புலவர்கள் பாடுவார்கள்.

**தமிழ்த் தென்றலினுடனே நின்றெரிக்கும் பிறை :—**

தமிழ் தென்றல். தமிழ் வழங்குந் திசை தென் திசை. அத் திசையில் இருந்து வரும் மெல்லிய காற்று தென்றல். இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும் என்பது நிகண்டு. இனிய காற்றுதென்றல். "தமிழ் மாருதமே" என்று சேக்கிழாரும் கூறுகின்றனர்.

தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்குக் குளிர்ந்த தென்றல் காற்று நெருப்பை அள்ளி வீசுவதைப்போல் துன்பத்தைத் தரும்.

பரவையாரைப் பிரிந்து வருந்தும் சுந்தரரைத் தென்றல் மாருதம் வருத்தியது. அப்போது அப் பெருமான் கூறுகின்றார். "ஏ தென்றல் காற்றே! உயர்ந்த இடத்தில் பிறந்தவர்க்கு நற்குணம் தானேயமையும்; நல்லவரை சார்ந்தவர்க்கும் அவ்வாறே நல்ல பண்புகள் உண்டாகும். தமிழ் மாருதமே! நீ எம்பிரானுடைய பொதிய மலையில் பிறந்தனை; பரமன் இருந்து அரசாண்டதும், தடாதகைப் பிராட்டியார் திருவவதாரம் புரிந்ததுமாகிய சிறந்த பாண்டி நாட்டின் வழியே அருள் நிறைந்த சோழவள நாட்டைச் சார்ந்து தவழ்கின்றனை. இவ்வாறிருக்க, நீ பிறரை வருத்தும் இத் தீமைக் குணத்தை எங்கே கற்றுக் கொண்டாய்?"

"பிறந்ததெங்கள் பிரான்மலயத் திடைச்
சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டினில்
புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம்ப யின்ற தெங்கோ தமிழ்மாருதம்" —பெரிய புராணம்.

**எரிக்கும் பிறை :—**

எல்லோர்க்கும் குளிர்ந்திருக்கின்ற சந்திரன் காதலனைப் பிரிந்திருக்கின்ற காதலிக்கும், காதலியைப் பிரிந்திருக்கின்ற காதலனுக்கும் மிகுந்த வெப்பத்தை வீசுகின்ற நெருப்பு போல் துன்பத்தைச் செய்யும்.

இராமர்மீது வேட்கை கொண்ட சீதாதேவியைத் திங்கள் சுடுகின்றது. அப்போது அம்மை கூறுகின்றாள். "ஏ சந்திரனே! நீ திருப்பாற் கடலிலே பிறந்தனை. நீ கொடியவனுமல்லன். இதுவரை யாரையும் நீ கொன்றதில்லை. குற்றமில்லாத அமிர்தத்தோடு பிறந்தனை. அன்றியும் இலக்குமி

யாகிய பெண்ணுடன் தோன்றினையே? பெண்ணாகிய என் மீது ஏன் உனக்கு இத்தனை சினம்? என்னை ஏன் சுடுகின்றாய்?"

கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
வடுவில் இன்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென்றலெனைச்
சுடுதியோ கடல் தோன்றிய திங்களே. —கம்பர்.

**புன்கவி சிலபாடி :—**

புலவர்கள் இவ்வாறு தனமுடையவர் பால் சென்று அருமையினும் அருமையான இனிய தமிழை ஈசனுக்கு அர்ப்பணியாமல் அழிந்து போகின்றவர்களும் பரமலோபிகளும், மகா மூடர்களுமாகிய பாவிகளைப் பாடிப் பரதவிக்கின்றார்கள். இந்த அவலநிலையைக் கண்டு அருணகிரிநாதர் இத் திருப்புகழில் வருந்துகின்றனர். அந்தோ! இவர்கட்கு என்னே மதி? கேட்டதெல்லாம் தரும் பரம கருணாநிதியாகிய முருகனைப் பாடினால் இகம் பரம் இரண்டு நலன்களையும் வழங்குவானே? அப் பரமனை வாழ்த்தக்கூட வேண்டாம். தமிழால் வைதாலும் வாழவைப்பானே?

மூடர்களாகிய உலோபிகளை, "தந்தையே! தாயே! தெய்வமே! ஆதரிக்கின்ற வள்ளலே! ஆண்மை நிறைந்த அர்ச்சுனனே!" என்று என்ன என்னவிதமாகப் புகழ்ந்து பாடினாலும் மனமிரங்கி அரைக்காசும் உதவமாட்டார்கள்.

செந்தமிழ்த் தெய்வமாகிய முருகப் பெருமானை இலக்கண இலக்கியக் கற்பனை நயங்களோடு ஒன்றும் அழகாகப் பாட வேண்டாம். "பித்தன் பெற்ற பிள்ளை; நீலி மகன்; தகப்பன் சாமி; பெருவயிற்றான் தம்பி. பேய் முலையுண்ட கள்வன் மருமகன்; குறத்தி கணவன்" என்று ஏசினாலும் இன்னருள் புரிவான். அத்துணைக் கருணைத் தெய்வம்.

அத்தனீ எமதருமை அன்னைநீ தெய்வநீ
ஆபத்தகற்றி அன்பாய்
ஆதரிக்குங் கருணை வள்ளல்நீ மாரன்நீ
ஆண்மையுள விசயன்நீ என்
றெத்தனை விதஞ்சொலி உலோபரைத் தண்டமிழ்
இயற்றினும் இரக்கஞ் செயார்
இலக்கண இலக்கியக் கற்பனைக் கவியால்
இறைஞ்சியெனை ஏத்தவேண்டாம்
பித்தனொடு நீலியும் பெறுதகப்பன் சாமி
பெருவயிற்றான் தம்பியப்

பேய்ச்சிமுலை யுண்டகள் வன்மருகன் வேடுவப்
பெண்மணவன் என்றேசினும்
சித்தமகி ழருள்செய்யும் என்றே முழக்கல்போல்
சிறுபறை முழக்கி யருளே
செம்பொன் நகருக்கினிய கம்பைநகருக் கிறைவ
சிறுபறை முழக்கி யருளே.

*—கம்பை முருகன் பிள்ளைத்தமிழ்.*

*சுந்தரமூர்த்தி நாயனார் பாடுகின்றார் :*

நலமிலாதானை நல்லனே என்றும் நரைத்தமாந்தரை இளையனே
குலமிலாதானைக் குலவனே என்று கூறினுங் கொடுப்பாரிலை
புலமெலாம் வெறி கமழும் பூம்புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அலமரா தமருலகம் ஆள்வதற் கியாதும் ஐயுறவில்லையே.

**இருக்குஞ் சிலர் திருச்செந்திலை உரைத்துய்ந்திட அறியாரே :—**

முன்னே தெரிவித்தபடி மனிதர்களைப் பாடி அல்லல்படுகின்ற புலவர்கள் பூலோக கைலாயமாகிய திருச்செந்தூரைப் பாடி உய்யுமாறு உணர்ந்திலரே! இது என்ன பாவம்? இந்த நாவும் அவன் தந்தது. அவன் தந்த நாவால் அவனைப் பாடாது அழிகின்றார்களே!

நீ நாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்
சா நாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூ நாளும் தலைசுமப்பப் புகழ்நாமம் செவிகேட்ப
நா நாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. —சம்பந்தர்.

முருகப் பெருமானுடைய திருத்தலங்களுள் தலையாயது திருச்செந்தூர். "கயிலை மலையனைய செந்தில்" "பரமபதமாய செந்தில்" என்ற திருப்புகழ் வாக்கியங்களால் அறிக.

**அரிக்குஞ்சதுர் மறைக்கும் பிரமனுக்குந் தெரிவரிதான :—**

இறைவனுடைய சொரூபத்தை மாலும் அயனும் வேதங்களும் காணவில்லை. அத்துணை அரியவன் இறைவன். இறைவனை மாலும் அயனும் மலர்கொண்டு வணங்குகின்றார்கள்; வெறும் மலர் அல்ல; தொடுத்த மலர்; மேலும் தூபமும் சந்தனமும் கொண்டு வணங்குகின்றார்கள். காலை மாலை மட்டுமன்று; எப்பொழுதும் வணங்குகின்றார்கள். தொலைவில் இருந்து வணங்குகின்றார்களில்லை; அடுத்து வணங்குகின்றார்கள். அப்படி வணங்கியும் அந்த மாலுக்கும் அயனுக்கும் அவன் காண்பரியனாக இருக்கின்றான்.

தொடுத்த மலரொடு தூபமும் சாந்துங்கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்குங் காண்பரியான்

பொடிக் கொண்டணிந்து பொன்னு கியதில்லைச் சிற்றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே.

—அப்பர்.

**புரிதவபாரக் கிரிக்கும்ப நன்முனி :—**

அகத்திய முனிவர் அளவற்ற தவமுடையவர். குடத்தில் தோன்றிய காரணத்தால் கும்ப முனிவர் எனப்படுவார். குறுகிய உருவத்தினுல் குறுமுனி எனவும் பெறுவர். முருகனிடம் நேரே பிரணவ உபதேசம் பெற்றவர். தவவலிமையால் விந்த கிரியை பாதலத்தில் அழுத்தியவர்; கடலை ஆசமனஞ் செய்து உண்டவர். தென்கோடு உயர்ந்தபோது பொதியையில் எழுந்தருளி உலகைச் சமமாகச் செய்தார்.

## கருத்துரை

சிவபெருமானுக்கும் அகத்தியருக்கும் குருநாதரே! செந்தில் முருகவேளே! புலவர்கள் திருச்செந்தூரைப் பாடி உய்ய அருள்புரிவீர்.

## 33

துன்பங்கொண் டங்க மெலிந்தற
நொந்தன்பும் பண்பு மறந்தொளி
துஞ்சும்பெண் சஞ்சல மென்பதி லணுகாதே
இன்பந்தந் தும்பர் தொழும்பத
கஞ்சந்தந் தஞ்ச மெனும்படி
என்றென்றுந் தொண்டு செயும்படி அருள்வாயே
நின்பங்கொன் றுங்குற மின்சர
ணங்கண்டுந் தஞ்ச மெனும்படி
நின்றன்பின் றன்படி கும்பிடு மிளையோனே
பைம்பொன்சிந் தின்துறை தங்கிய
குன்றெங்குஞ் சங்கு வலம்புரி
பம்புந்தென் செந்திலில் வந்தருள் பெருமாளே.

## பதவுரை

நின்பங்கு ஒன்றும்=தேவரீருடைய பக்கத்தில் பொருந்தி நிற்கும், குறமின்=வள்ளியம்மையின், சரணம் கண்டு=பாதத்தைப் பார்த்து, தஞ்சம் எனும்படி நின்று=புகலிடம் என்றுகூறி நின்று, அன்பின் தன்படி கும்பிடும்=அன்பின் முறைப்படி கும்பிட்ட, இளையோனே= இளம்பூரணரே! பைம் பொன் சிந்தின் துறை தங்கிய=பசுமைப்

பொலிவுடன் விளங்கும் கடற்கரையில் உள்ள; குன்று எங்கும்= குன்றுகளிலெல்லாம், வலம்புரி சங்கு பம்பும்=வலம்புரி சங்குகள் நிறைந்துள்ள, தென் செந்திவில் வந்தருள்=அழகிய திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! துன்பம் கொண்டு=துன்பத்தையடைந்து, அங்கம் மெலிந்து=உடம்பு மெலிவுற்று, அற நொந்து=மிகவும் நலிந்து, அன்பும் பண்பும் மறந்து= அன்பையும் பண்பையும் மறந்து, ஒளி துஞ்சும்=உடம்பின் ஒளி குறைந்து போகுமாறு செய்கின்ற, பெண் சஞ்சலம் என்பதில் அணுகாதே=பெண்களால் வருந் துன்பத்தில் அடியேன் சிக்கி வருந்தாமல், இன்பம் தந்து=இன்பத்தைத் தந்தருளி, உம்பர் தொழும்=தேவர்கள் பணிகின்ற, பதகஞ்சம்=பாத தாமரையே, தம் தஞ்சம் எனும்படி= நமது புகலிடம் என்று கொண்டு, என்றென்றும்=எந்த நாளிலும், தொண்டு செயும்படி=தேவரீருக்குத் திருத்தொண்டு செய்யுமாறு, அருள்வாயே=அருள்புரிவீர்.

## பொழிப்புரை

தேவரீருடைய பக்கத்தில் பொருந்தியுள்ள, வள்ளியம்மையாருடைய பாத மலரைக் கண்டு இதுவே புகலிடம் என்று கூறி நின்று அன்பின் முறைப்படி வணங்கிய இளங் குமாரரே! பசுமை நிறப் பொலிவுடைய கடற் கரையின் கண்ணுள்ள குன்றுகளிலெல்லாம் வலம்புரி சங்குகள் நிறைந்துள்ள இனிமையான திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! துன்பத்தையடைந்தும் தேகம் மெலிந்தும், மிகவும் நொந்தும், அன்பையும் பண்பையும் மறந்தும், உடல் ஒளி குறைந்து போகும்படியும் புரியும் பெண்கள் மயக்கத்தில் அணுகி வீணாகாமல், பேரின்பத்தை வழங்கி, தேவர்கள் தொழுகின்ற உமது பாத தாமரையே நமது புகலிடம் என்று நினைத்து எந்த நாளிலும் தேவரீருக்கே தொண்டுசெய்து உய்யுமாறு அருள் புரிவீர்.

## விரிவுரை

**துன்பங் கொண்டு :—**

உலகிலே வருகின்ற துன்பங்களுக்கெல்லாந் தலையாய துன்பம் பெண்மயலால் விளைவதுவே யாகும். வலிமையில் சமானமில்லாத வாலியும், இந்திரபோகம் பெற்ற இராவணனும், சந்திரன், இந்திரன், நகுஷன் முதலியோர்களும் அழிந்தது இப்பெண் மையலால் என அறிக.

இராமர் சுக்ரீவனை நோக்கிக் கூறுகின்றார் :

**மங்கையர் பொருட்டால் எய்தும் மாந்தர்க்கு மரணம் என்றல்**
**சங்கையின் றுணர்தி வாலி செய்கையால் சாலும் இன்னும்**

அங்கவர் திறத்தி ஞனே அல்லலும் பழியும் ஆதல்
எங்களில் காண்டி யன்றே இதற்குவே றேதி யாதோ !

அங்கம் மெலிந்தற நொந்து :—

மாதர் நலத்தை மிகுதியாக விரும்பி அநுபவிப்பார்க்கு உடல் மெலிவும் உளநலிவும் உண்டாகும். அன்றி ஆரோக்கியம் குறையும்; ஆற்றல் கெடும். மேலும் நோய்கள் மலியும்.

அன்பும் பண்பும் மறந்து :—

உயிர் வாழ்க்கைக்கு அன்பு மிகச் சிறந்தது. அன்பின் முடிவில் அதன் சிகரமாக விளங்குவது பண்பு.

அன்பின் வழிய துயிர்நிலே அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

பண்பு என்பது மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது. பண்புடைமை என்று ஒரு அதிகாரமே வகுத்துரைத்தார் திருவள்ளுவதேவர். அதுவும் சான்ருண்மைக்கு அடுத்த அதிகாரமாக அமைத்தனர்.

"பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்"

என்று புறநானூறு புகல்கின்றது.

பண்பில்லாதவர் கூரிய அறிவுடையவர்களாக இருப்பினும் அவர்கள் மனிதர்கள் அல்லர் மரத்துக்குச் சமானமாவார் என்கின்ருர் தெய்வப் புலவர் திருவள்ளுவர்.

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

கெடுதலான பாத்திரத்தில் விட்ட பால் கெட்டுவிடுவது போல் பண்பில்லாதானிடம் அமைந்த பெருஞ் செல்வமும் பயன்படாது ஒழியும் என்கின்ருர்.

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று.

ஒளி துஞ்சும் :—

மிகுந்த ஆசையாளராய் அரிவையர் மயலில் வீழ்ந்து உழன்ருேர்க்கு உடல்ஒளி குன்றும். அன்றியும் அறிவின் ஒளியும் குறையும்.

பெண் சஞ்சல மென்பதில் அணுகாதே :—

மாதரை யணைதல் வேண்டும் என்றும், அவருக்கு ஆடை அணிகலன்கள் அளிக்க வேண்டும் என்றும், அவருடைய உற்

ருரை ஓம்புதல் வேண்டும் என்றும் சதா மனதில் துயரமே உண்டாகும். அறிவுடையவர்கள், துயரங்களுக்கு மூல காரணமாகவுள்ள மாதராசையை வேருடன் களைதல் வேண்டும்.

தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வரும்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனும்
நாம மில்லை நரகமும் இல்லையே. —கம்பராமாயணம்.

இன்பந் தந்து :—

உலகிலேயுள்ள சுகங்கள் யாவும் திணையளவாகும். இந்த அற்ப சுகத்தைப் பெரிதெனக் கருதி ஆன்ம கோடிகள் இங்கும் அங்கும் அலைகின்றன. அந்தோ ! பரிதாபம்.

மன்னர்கள் சிறந்த அரண்மனையில் வாழ்ந்து அநுபவிக்கின்ற சுகமும், இந்திரன் அமராவதியில் கற்பகத் தருவின் கீழ் வீற்றிருந்து அநுபவிக்கின்ற சுகமும், பிரம்மதேவர் சத்தியவுலகில் தாமரைத் தவிசின் மீது அமர்ந்து துய்க்கின்ற பெரிய சுகமும், திருமால் வைகுண்டத்தில் இருந்து சீதேவி பூதேவியுடன் இனிதமர்ந்து நித்திய சூரிகள் சேவிக்க அநுபவிக்கின்ற பரமபத வாழ்வின் சுகமும், நாகவுலகில் மணி விளக்கு எரிய நாகர்கள் அநுபவிக்கின்ற சுகமும், ஏனைய குபேரன், வசுக்கள் முதலியோர் அநுபவிக்கின்ற சுகமும், சிவத்திடம் விளைகின்ற பெருஞ்சுகத்தின் கோடியில் ஒரு பாகத்திற்கும் இணைவராது எனத் தெளிக.

மன்னராவார் உறுசுகமும் வானோர் மகிழ்ந்து பெறுசுகமும்
மணிப்பைந்நாகத் தவர்சுகமும் மற்றையோர்க ளடைசுகமும்
பன்னுமிடத்தில் சிவத்தெழுந்த பரமானந்த லேசமெனப்
பகர்ந்தாய் குருவாய் எழுந்தருளிப் படிறேன் மறந்திங் குழல்கின்றேன்
கன்னல் எழுந்த தெளிசாறே கட்டுமாவின் தீங்கனியே
கதலிக்கனியே நறும்பலவின் கனகச்சுளையே கதிமுளையே
பொன்னம்பொருப்பே என்விருப்பே போதச் சுகமே கிஞ்சுகமே
பூரண வெளியே உள்ளொளியே போரூர் முருகப் பெருமானே.
—சிதம்பர சுவாமிகள்.

ஒரு பெரிய பூஞ்சோலை; அதன் இடையே பளிங்கு மாளிகை; வசந்த காலம்; மாலை நேரம்; முழுநிலா தன் குளிர்ந்த கிரணத்தை அள்ளித் தெளித்துக்கொண்டிருக்கின்றது; தென்றல் காற்று மென்மையாக வீசுகின்றது; நறுமணம் கமழ்கின்றது. பளிங்குமாளிகையின் முற்றத்தில் சாய்வு நாற்காலியில் சாய்ந்திருக்கின்றார் ஒருவர். இனிய வாத்திய நாதம் ஒலிக்கின்றது. பெண்மணிகள் பன்னீர்

தெளிக்கின்றனர். அமுதம் போன்ற இள வனிதையர் அமுதத்தை எடுத்து ஊட்டுகின்றார்கள். ஆகிய இந்த வகையால் விளைகின்ற சுகங்கள் யாவும் தோல்வியுறுமாறு உடம்பு உணர்வு உள்ளம் உயிர் ஆகிய அனைத்தும் இன்புறுமாறு அருளின்பத்தை ஆண்டவன் அருளுகின்றான்.

**உம்பர் தொழும்பதம் :—**

மூவர் தேவாதிகள் தொழும் தம்பிரான் முருகப்பெருமான். அவருடைய திருவடியை மூவர்களும் தேவர்களும் முனிவர்களும் முத்தர்களும் சித்தர்களும் தொழுது தொழுது இன்புறுகின்றார்கள்.

"ஆலமுண்டகோன் அகண்ட லோகமுண்ட மால் விரிஞ்சன்
ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்தாளும்"
—(தோலெலும்பு) திருப்புகழ்.

"வேதாமுதல் விண்ணவர் சூடுமலர்ப் பாதா" —அநுபூதி. (36)

**தஞ்சமெனும்படி :—**

முருகனுடைய கஞ்சமலர்ப்பாதமே ஆன்மாக்களுக்குத் தஞ்சமாகும். அப் பரமகருணாநிதி, தஞ்சம் என்பவரை ஆட்கொள்கின்றான். தஞ்சம் - புகலிடம்.

"தஞ்சந் தஞ்சஞ் சிறியேன்மதி
கொஞ்சங் கொஞ்சந் துரையேயருள்
தந்தென் றின்பந்தரு வீடது தருவாயே" —(வஞ்சங்) திருப்புகழ்.

"தஞ்சத் தருள் சண்முகனுக்கு" —கந்தரநுபூதி.

**என்றென்றுந் தொண்டு செயும்படி அருள்வாயே :—**

முருகப் பெருமானுக்கு எந்த நாளும் இனிய திருத்தொண்டு புரிய வேண்டும். அதுவே உய்யு நெறியாகும். தொண்டு புரிபவர் தொண்டர். இத் தொண்டர் தம் பெருமை சொல்லுதற்கு அரிது. அது பெரிது என்று கூறுவர் ஔவையார். திருத்தொண்டர் புராணமே பெரிய புராணம் எனப் பெற்றது. எனவே, நமது கருவி கரணங்கள் அத்தனையையும் அப்பரமனுடைய தொண்டிலேயே அர்ப்பணித்து விட வேண்டும்.

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கி ஐம்புலன்க ளார

வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனை செந்தாமரைக் காடனைய மேனித்
தனிச் சுடரே இரண்டுமிலித் தனியனேற்கே. —*திருவாசகம்.*

**இன்பங் கொன்றுங் குறிமின் சரணங்......கும்பிடும் :—**

அருணகிரிநாதர் அநேக இடங்களில் வள்ளியம்மையாரை முருகவேள் கும்பிட்டதாகக் கூறுகின்றார்.

"குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே"
—*(தடக்கைப்)* திருப்புகழ்.

"பணியாவென வள்ளி பதம் பணியும்" —*அநுபூதி. (6)*

*இவ்வாறு கூறுவதன் கருத்து யாது ?*

முருகவேள் காமனை எரித்த கனற் கண்ணிலிருந்து அருட் பெருஞ்சோதியாக வந்தவர். ஞானந்தான் உருவாகிய நாயகன் அப் பரமனடியார்கள் பார்த்தருளும் பக்கத்திலேயே ஆசாபாசம் அணுகாது. அப்படியாயின் முருகவேள் வள்ளி பிராட்டியை வணங்கினார் என்பது ஆசையாலன்று. அந்த ஆன்மாவை உய்விக்கக் கருதி அத்துணை எளியராகி வேண்டியும் தொழுதும் ஆட்கொண்டருளினான் எனக் கொள்க.

ஒரு மகன் உணவு உண்ணாது வெய்யிலில் விளையாடுகின்றான். தாய் அவனைத் தொழுது 'அப்பா! உன் காலுக்குக் கும்பிடு; வெய்யிலில் ஆடாதே வந்து சாப்பிடு' என்று வேண்டுகின்றாள். அது அவள் கருணையைக் குறிக்கும். அதே நியாயந்தான் இங்கே.

**குன்றெங்குஞ் சங்கு வலம்புரி பம்பும் :—**

தென் திசைக் கடலில் இன்றும் சங்கும் முத்துக்களும் உற்பத்தியாகின்றன.

"வாலுகமீது வண்ட லோடிய காலில் வந்து
சூல் நிறைவான சங்கு மாமணி யீன வுந்து
வாரிதி நீர்பரந்த சீரலை வாயுகந்த பெருமாளே"
—*(பூரணவார)* திருப்புகழ்.

**கருத்துரை**

வள்ளி மணவாளரே! செந்தில் மேவிய கந்த நாயகரே! மாதர் மயக்குறாது பேரின்பந் தந்து உமது திருவடித்தொண்டு புரிந்து உய்யுமாறு அருள் புரிவீர்.

## 34

தெருப்பு றத்துத் துவக்கியாய்
முலைக்கு வட்டைக் குலுக்கியாய்
சிரித்து ருக்கித் தருக்கியே பண்டைகூள மெனவாழ்
சிறுக்கி ரட்சைக் கிதக்கியாய்
மனத்தை வைத்துக் கனத்தபோ
தியக்க மற்றுத் தவிக்கவே கண்டுபேசி யுடனே

இருப்ப கத்துத் தளத்துமேல்
விளக்கெ டுத்துப் படுத்துமேல்
இருத்தி வைத்துப் பசப்பியே கொண்டுகாசு தணியா
திதுக்க துக்குக் கடப்படா
மெனக்கை கக்கக் கழற்றியே
இளைக்க விட்டுத் துரத்துவார்
தங்கள்சேர்வை தவிராய்

பொருப்பை யொக்கப் பணைத்ததோ
ரிரட்டி பத்துப் புயத்தினால்
பொறுத்த பத்துச் சிரத்தினால் மண்டுகோப முடனே
பொரப்பொ ருப்பிற் கதித்தபோ
ரரக்கர் பட்டுப் பதைக்கவே
புடைத்து முட்டத் துணித்தமா லன்புகூரு மருகா

வரப்பை யொட்டிக் குதித்துமே
லிடத்தில் வட்டத் தளத்திலே
மதர்த்த முத்தைக் குவட்டியே
நின்றுசேலி னினம்வாழ்

வயற்பு றத்துப் புவிக்குள் நீள்
திருத்த ணிக்குட் சிறப்பில்வாழ்
வயத்த நித்தத் துவத்தனே செந்தில்மேவு குகனே.

### பதவுரை

பொருப்பை ஒக்க பணைத்தது = மலையை நிகர்த்துப் பருத்தனவாம், ஓர் இரட்டி பத்து புயத்தினால் = ஒப்பற்ற இருபது தோள்களினாலும், பொறுத்த பத்து சிரத்தினால் = தாங்கியுள்ள பத்துத் தலைகளினாலும், மண்டு கோபம் உடனே = மூண்டெழுந்த கோபத்துடன், பொர = போர் செய்ய, பொருப்பில் கதித்த போர் அரக்கர் = மலைபோல்

கொதித்து எழுந்து போர் புரியும் அசுரர்கள் அனைவரும்,பட்டு பதைக் கவே புடைத்து=சிதைந்து பதை பதைக்குமாறு அடித்து, முட்ட துணித்த மால்=எல்லோரையும் வெட்டி ஒழித்த ஸ்ரீராமர், அன்பு கூரு மருகா=அன்பு மிகவும் கொண்டுள்ள திருமருகரே! வரப்பை ஒட்டிகுதித்து=வயலின் வரப்பின்மீது தாவிக்குதித்து, மேல் இடத்தில் வட்டதளத்திலே=வயலின் மேல்பகுதியில் வட்டமான நிலப்பரப்பில், மதர்த்த முத்தை குவட்டியே நின்று=செழித்து முத்துக்களை ஒன்று படக் குவித்துக் கூட்டி நின்று, சேலின் இனம் வாழ்=சேல் மீன் கூட் டங்கள் வாழும், வயல் புறத்து=வயல் புறங்களைக் கொண்ட, புவிக் குள் நீள்=இப் பூதலத்தில் புகழால் ஓங்கிய, திருத்தணிக்குள்=திருத் தணிகை என்ற திருத்தலத்தில், சிறப்பில் வாழ்=சிறப்புடன் வாழ் கின்ற, வயத்த=வெற்றியினரே! நித்தத் துவத்தனே=என்றும் உள் ளவரே! செந்தில் மேவு குகனே=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள குகப் பெருமானே! தெரு புறத்துத் துவக்கியாய்=தெருவின் வெளிப் புறத்திலேயே எப்போதும் கட்டுண்டவர் போல் நிற்பவராய். மூலைக் குவட்டை குலுக்கியாய்=மலைபோன்ற தனங்களை அசைப்பவராய், சிரித்து=ஆடவரை மயக்கும் பொருட்டு புன்னகை புரிந்தும்,உருக்கி= ஆண்களின் உள்ளத்தை உருக்கியும், தருக்கியே=நம்மினும் உயர்ந்த வர் இல்லை என்று அகங்கரித்தும், பண்டை கூளம் என வாழ்=பழைய குப்பை என்று வாழ்கின்ற, சிறுக்கி=இளம் பருவமுள்ள விலைமகளிர், ரட்சைக்கு இதக்கியாய்=தம்மை விரும்புவோரைக் காத்தளிப்பவரை போல இனிய மொழிகளை மொழிகின்றவராய், மனத்தை வைத்து= செல்வத்தின் மீது மனத்தை வைத்து, கனத்த பேர் தியக்க முற்று தவிக்கவே=பலமான பேர்வழிகள்கூடமயக்கங்கொண்டுதவிக்குமாறு, கண்டு பேசி=அவர்களைப் பார்த்துப் பேசியும், உடனே இருப்பு அகத்து தளத்துமேல்=உடனே அந்த ஆடவரைத் தமது இருப்பிடமான வீட் டின் மேல் தளத்திற் கொண்டுபோய், விளக்கு எடுத்து=விளக்கை எடுத்துவிட்டு, படுத்து மேல் இருத்தி வைத்து=சயனித்து மேலே இருக் குமாறு வைத்து, பசப்பியே கொண்டு=பசப்பு நடிப்புகளை நடித்துக் கொண்டு, காசு தணியாது=கொடுத்த பணம் போதாது, இதுக்கு அதுக்கு="இதற்கு வேண்டும் அதற்கு வேண்டும்" என்று கூறி, கட படாம் என=கடபடம் என்று ஜகஜாலப் பேச்சுக்களைப் பேசி, கை கக்க கழற்றியே=கையில் உள்ள பொருள்களைக் கக்குமாறு செய்து பிடுங்கி, இளைக்க விட்டு துரத்துவார்=பின்னர் சோர்வுற்றுப் போகும் படி துரத்துகின்ற பொது மாதர்களின், தங்கள் சேர்வை தவிராய்= அவர்களுடைய நட்பை யகற்றி அருளுவீர்.

## பொழிப்புரை

மலையை நிகர்த்துப் பருத்துள்ள இருபது புயங்களாலும், (மகுடத்தை) தாங்கியுள்ள பத்துத் தலைகளாலும், மிகுந்த

கோபத்துடன் (இராவணன்) போர் புரிய, அவனுடன் மலை போல் கொதித்து எழுந்து போர்புரிந்த அசுரர்கள் சிதைந்து பதைபதைக்குமாறு அடித்து எல்லோரையும் வெட்டியழித்த திருமாலின் அவதாரமாகிய ஸ்ரீராமர் அன்பு மிகவும் கொண்டுள்ள திருமருகரே! வயலின் வரப்பின் மீது தாவிக் குதித்து மேல் பகுதியில் வட்டமாகவுள்ள நிலப்பரப்பின் மீது வளமையாகவுள்ள முத்துக்களைக் குவித்து விளையாடுகின்ற மீன் கூட்டங்கள் வாழ்கின்ற வயற்புறங்களைக் கொண்ட, பூதலத்தில் புகழால் நீண்ட திருத்தணியில் சிறப்புடன் வாழ்கின்ற வெற்றியாளரே! என்றும் உள்ளவரே! திருச்செந்தூரில் வாழுகின்ற குகப் பெருமானே! நடுத்தெருவிலேயே கட்டுண்டு நிற்பவராய், மலை போன்ற தனங்களை அசைப்பவராய், (ஆடவர் மயங்குமாறு) சிரிப்பவராய், அவருடைய உள்ளத்தை உருக்கி தருக்கி பழைய குப்பை என உதவாக்கரையாக வாழ்கின்ற இளம் பொதுமகளிர், காத்து ரட்சிப்பவர் போல் இனிய சொற்களைப் புகல்பவராய், செல்வத்தில் மனத்தை வைத்து, பலமான பேர்வழிகளையும் தியங்கவைத்துப் பரதவிக்குமாறு, அவர்களைக் கண்டு பேசி, உடனே தாங்கள் இருக்கும் வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய், மேல் மாடியில் வைத்து, விளக்கை நிறுத்தி, சயனித்து, ஆடவரை இருத்திப் பசப்புரை பகன்று, அவர்கள் தந்த பணம் போதாது என்று இதற்கு வேண்டும் அதற்கு வேண்டும் என்று கூறி கடம்படம் என்று உருட்டி கைப்பணத்தைக் கக்குமாறு செய்து, அவர்கள் இளைத்தவுடன் அவர்களை வீட்டைவிட்டு விரட்டியடிக்கும் விலைமாதர்களின் நட்பைத் தவிர்த்து அருள்புரிவீர்.

## விரிவுரை

**தெருப்புறத்து...சிரித்துருக்கித் தருக்கியே :—**

விலைமகளிர் தமது தெருவழியே வரும் இளைஞர்களைக் கண்ணெனும் வலைவீசிப் பிடித்துப் பொருள் பறிக்கும் நோக்கமுடன் சதா தெருவிலேயே நின்றுகொண்டிருப்பர். அடிக்கடி ஆடவரை நோக்கி காரணமின்றியே சிரித்து மனத்தை உருக்குவர்.

> "நகைகொளு மவர்கள் உடைமை மனமுடனே
> பறிப்பவர்கள்"

> "முலையிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள்"
> —(குமரகுருபர முருககுகனே) திருப்புகழ்.

தருக்கு - அகங்காரம், நம்மினும் அழகுடையார் ஒருவரும் இல்லையென்று கருதி அகங்கரித்திருப்பர்.

**பண்டை கூளம் எனவாழ் சிறுக்கி :-**

கூளம் - குப்பை. பழமையான குப்பைபோன்று மிகவும் சீர்கேடானவர் அம் மகளிர் என உரைக்கின்றார்.

**ரட்சைக்கிதக்கியாய் :-**

தம்மிடம் வரும் ஆடவரைத் தாமே எந்நாளும் இனிது காத்தருள்பவரைப்போல் நடித்து இன்னுரை புகன்று இதம் பதமாக நடப்பர்.

**மனத்தை வைத்து :-**

இங்கே செல்வத்தின்மேல் மனத்தை வைப்பவர் எனப் பொருள் செய்யப்பெற்றது. செல்வம் என்பதை அவாய் நிலையாகக் கொள்க.

**கனத்தபேர் தியக்க முற்றுத்தவிக்கவே :-**

மிகவுஞ் சமர்த்தரான பேர்வழிகளும் அப் பொதுமகளிரின் சாகசத்தில் மயங்கி அறிவு தியங்கித் தவிப்பர். அத்துணை மாய வித்தையை அம்மகளிர் புரிவர்.

**இருப்பகத்துத் தளத்துமேல் :-**

தம்மைக் கண்டு மதிமயங்கி கதிகலங்கி நின்ற ஆடவர்களை "ஏன் இங்கு நிற்க வேண்டும்; உங்கள் பாதம் பட்டால் போதும் வாருங்கள்; இதோ என் வீடு; இன்று உங்களைக் கண்டதனால் என் மனம் அளவற்ற மகிழ்ச்சி யடைகின்றது. இன்று நான் கடைத்தேறும் நாள். தாமதிக்க வேண்டாம். வாருங்கள்" என்று கனியமுதம் போன்ற இனிய வுரை கூறி அழைத்துச் செல்வர்.

**கொண்டு காசு தணியாது :-**

எவ்வளவு காசு தந்தாலும், மேலும் மேலும் பறிக்கவேண்டும் என்ற ஆசையாளராயிருப்பர். நெருப்பில் எத்துணை நெய் விடினும் அது தணியாது மேலும் கொழுந்து விட்டு எரிவது போல் அவர்கள் ஆசை நெருப்புக்குப் பொருள் நெய் போல் ஆகும்.

**இதுக்கதுக்கு :-**

"புடவை எடுக்கவேண்டும், நகை வாங்கவேண்டும், வீடு வாங்கவேண்டும், கடன் தீர்க்கவேண்டும்" என்றெல்லாம் கூறி தம்பால் வரும் தனவந்தரிடம் மெல்ல மெல்லப் பொருளைப் பறிப்பர்.

**கடபடாமென :-**

கடபட மென ஒலித்து உருட்டிப் பேசுதல்- இப்படிச் சில புலவர்களும் உருட்டிப் புரட்டிப் பேசுவர்.

"கற்றதுங்கேட்டதுந்தானே ஏதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டும் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிலை கூடவன்றோ ?" —தாயுமானுர்.

**கை கக்கக் கழற்றியே :-**

கையிலே யுள்ள காசுகளை எப்படியும் கக்குமாறு புரட்சி கள் புரிவர். அவர்கள் மயலில் சிக்கிய மாந்தர் மதிமயங்கி உள்ள பொருள் எல்லாவற்றையும் தந்துவிட்டு ஓட்டாண்டி யாவார்.

**இளைக்கவிட்டு துரத்துவார் ;-**

கை வரண்டு போனவர்களை அதிர்வெடி வைத்து முடுக்கி விரட்டித் துரத்தியடிப்பார்கள்.

நாவாரவேண்டும் இதஞ்சொல்லுவார் உனை நான்பிரிந்தால்
சாவேன் என்றேயிருந் தொக்கஉண்பார்கள் கைதான்வரண்டால்
போய்வாரும் என்று நடுத்தலைக்கே குட்டும் பூவையருக்
கீவார் தலைவிதி யோ இறைவா கச்சி ஏகம்பனே. —பட்டினத்தார்.

**தங்கள் சேர்வை தவிராய் ;-**

"இத்தகைய பொதுமகளிருடைய நட்பு இம்மை மறுமை இரண்டையும் அழிக்கும். ஆதலால் முருகா அவருடன் சேரும் தீமையிலிருந்து என்னை விலக்கிக் காப்பாற்றி யருள்வீர்" என்று அருணகிரிநாதர், மன்மதனை எரித்த கனற்கண்ணில் வந்த ஞானபண்டிதனை வேண்டுகின்றார்.

**பொருப்பை யொக்கப் பணைத்ததோர் :-**

5 வது 6 வது அடிகளில் இராவண சங்காரத்தைப் பற் றிச் சுவாமிகள் கூறுகின்றார். இராவணன் பிறன்மனை நயத் தல் என்ற பெரும்பிழை செய்தான். அதனால் குலத்தோடும் பிற நலத்தோடும் மாய்ந்து ஒழிந்தான்.

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில். —திருக்குறள்.

பத்தினியிருக்க அவளைப் புறக்கணித்து, மற்றொருவன் பத்தினியை விரும்பி அவள்பால் ஏக்குற்று நிற்பவனே மூடர் கள் கூட்டத்திற்குத் தலைவன்.

இதனைக் கும்பகர்ணன் தன் தமையனை நோக்கி அழகாக இடித்து அறவுரை பகர்ந்தான்.

நன்னக ரழிந்ததென நாணினை நயத்தால்
உன்னுயி ரெனத்தகைய தேவியர்கள் உன்மேல்
இன்னகை தரத்தர ஒருத்தன் மனையுற்ருள்
பொன்னடி தொழத்தொழ மறுத்தல்புகழ் போலாம்.

மாரீசன் இராவணனை நோக்கி யுரைக்கின்ருன்.

நாரங்கொண்டார் நாடுகவர்ந்தார் நடையல்லா
வாரங்கொண்டார் மற்ருெருவர்க்காய் மனைவாழும்
தாரங்கொண்டார் என்றிவர்தம்மைத் தருமந்தான்
ஈருங்கண்டாய் கண்டகர் உய்ந்தார் எவரையா,

**புவிக்குள் நீள் திருத்தணி :-**

திருத்தணி உலகுக்கு உயிர் போன்றது. தெரிசிப்பார் வினைகளைத் தணிப்பது. அதனுல் தணிகை எனப் பெயர் பெற்றது. "வரையிடங்களில் சிறந்தது தணிகை மால் வரையே" என்ற கந்த புராணத் திருவாக்காலறிக.

அத் தலத்தின் வளத்தை 7-வது அடியால் மிக அழகாக சுவாமிகள் கூறுகின்றனர்.

**வயத்த ;-**

வயம் - வெற்றி. வெற்றியை யுடையவன் முருகன். வெற்றிவேற்பரமன்.

**நித்தத்துவனே :-**

நித்தம் - அழிவில்லாதது. நித்தத்துவன் - அழிவில்லாதவன். என்றும் உள்ள பரம்பொருள் குமரவேள். அப் பரமனையன்றி ஏனைய அனைத்தும் அநித்தமானவை. ஆகவே நித்தப் பொருளாகிய இறைவனைச் சார்தல் வேண்டும்.

"நிதியே நித்தியமே என் நினைவே" —(மதியால்) திருப்புகழ்.

நாம் அழிகின்ற பொருளைச் சார்ந்தால் அழிவைப் பெறுவோம். அழிவற்ற பொருளைச் சார்ந்தால் அழிவின்மையைப் பெறுவோம்.

சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். —திருக்குறள்.

ஆகவே எல்லா ஆன்மாக்களும் நித்தப் பொருளாகிய நிமலனைச் சார்ந்து நித்தத்துவத்தைப் பெறுவார்களாக.

## கருத்துரை

திருமால் மருகரே! தணிகாசலபதியே! செந்திலாண்டவரே! மாதர் நட்பை நீக்கி யருள்புரிவீர்.

## 35

தொந்திசரிய மயிரே வெளிறநிரை
தந்தமசைய முதுகே வளைய இதழ்
தொங்கவொருகை தடிமேல்வர மகளிர் நகையாடி
தொண்டுகிழவ னிவனாரென இருமல்
கிண்கிணெனமு னுரையே குழறவிழி
துஞ்சுகுருடு படவே செவிடுபடு செவியாகி

வந்தபிணியு மதிலே மிடையுமொரு
பண்டிதனுமெ யுறுவே தனையுமிள
மைந்தருடைமை கடனே தெனமுடுகு துயர்மேவி
மங்கை யழுது விழவே யமபடர்கள்
நின்றுசருவ மலமே யொழுகவுயிர்
மங்குபொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்

எந்தைவருக ரகுநா யகவருக
மைந்தவருக மகனே யினிவருக
என்கண்வருக எனதா ருயிர்வருக அபிராம
இங்குவருக அரசே வருக முலை
யுண்கவருக மலர்சூ டிடவருக
என்றுபரிவி னொடுகோ சலைபுகல வருமாயன்

சிந்தைமகிழு மருகா குறவரிள
வஞ்சிமருவு மழகா அமரர்சிறை
சிந்தஅசுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா
திங்களரவு நதிசூ டியபரமர்
தந்தகுமர அலையே கரைபொருத
செந்தி னகரி லினிதே மருவிவளர் பெருமாளே.

### பதவுரை

எந்தை வருக=என் அப்பனே வா! ரகுநாயக வருக=ரகு குலத்திற்கு நாயகனேவா! மைந்தவருக=வலிமையுடையவனே வா! மகனே இனி வருக=என் புதல்வனே தாமதியாது இனி வருவாய், என் கண் வருக=எனது கண்ணே வா! எனது ஆர்உயிர் வருக=எனது அருமையான உயிருக்கு நிகரானவனே வா! அபிராம இங்கு வருக=அழகிற் சிறந்தவனே இவ்விடம் வா! அரசே வருக=இராஜாவே வா! முலை உண்க வருக=பால் உண்ண வா! மலர்சூடிட வருக=மலர்களை சூட்

டிக்கொள்ளவா! என்று பரிவினொடு கோசலை புகல=என்று அன்புடன் கௌசலாதேவி சொல்லி அழைக்குமாறு, வரும் மாயன்=இராமபிரானாக அவதரித்து வந்த மாயா சொரூபராகிய நாராயணமூர்த்தி, சிந்தை மகிழும் மருகா=உள்ளங்களிக்கும்படியான மருமகரே! குறவர் இள=குறவர் குலத்தில் தோன்றியவரும் இளமையுடையவரும், வஞ்சி மருவும் அழகா=வஞ்சிக்கொடி போன்ற இடையுடையவருமாகிய வள்ளி நாயகியார் அணைகின்ற அழகிற் சிறந்தவரே! அமரர் சிறை=தேவர்களது சிறைச்சாலைத் துன்பமானது, சிந்த=நீங்குமாறு, அசுரர் கிளை=இராக்கதர்களுடைய சுற்றமுழுவதும்,வேரொடு மடிய=வேருடன் (அடியோடு) அழிந்து போகுமாறு, அடுதீரா=போர்புரிந்து கொன்ற தீரரே! திங்கள்=சந்திரனையும், அரவு=பாம்பையும், நதி=கங்கையையும், சூடிய=சடாபாரத்தில் தரித்துள்ள, பரமர்=எப்பொருட்கும் இறைவரும் பெரிய பொருளுமாகிய சிவபெருமான், தந்த குமர=பெற்றருளிய குமாரக்கடவுளே! அலை (ஏ=அசை) கரை பொருத=கடலில் எழும் அலைகள் ஒழியாது கரையில் மோதப்பெற்ற, செந்தில் நகரில்=திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூரில், இனிதே மருவி வளர்=இனிமையாகப் பொருந்தி வாழ்கின்ற, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தொந்தி சரிய=வயது முதிர்ச்சியால் வயிறு சரிந்து தொங்கவும், மயிர் (ஏ-அசை) வெளிற=கருத்திருந்த தலைமயிரானது (கொக்கைப்போல்) வெளுத்து நரைக்கவும், நிரை தந்தம் அசைய=வரிசையாக இருந்த பற்கள் அசையவும், முதுகு (ஏ-அசை) வளைய=நிமிர்ந்திருந்த முதுகானது வளையவும், இதழ் தொங்க=உதடுகள் தொங்கவும், ஒருகை தடிமேல் வர=(கூனுடன்) ஒருகரம் தடியின் மேல் பொருந்திவர (தடியூன்றி தள்ளாடி நடந்து வருகின்ற சமயத்தில்), மகளிர்=பெண்கள், நகையாடி=(கிழவனாகிய என்னை நோக்கி) ஏளனமாகச் சிரித்து, தொண்டு கிழவன் இவன் ஆரென=பழைய கிழவனாகிய இவன் ஆர் என்று பரிகசிக்கவும், இருமல் கிண் கிண் என=கிண் கிண் என்ற ஒலியுடன் இருமல் வரவும், முன் உரை (ஏ-அசை) குழற=முன்னர் திருத்தமாகப் பேசிக்கொண்டிருந்த சொற்கள் குழறவும், விருதுஞ்சு குழிடுபட (ஏ-அசை)=கண்கள் எக்காலத்தும் தூங்குவது போல் ஒளி குன்றி குருட்டுத் தன்மையடையவும், செவிடு படு செவியாகி=காதுகள் செவிட்டுத் தன்மையடையவும், வந்த பிணியும்=உடலுக்கு வந்த நோயும், அதிலே மிடையும்=அந்த நோயை அகற்றுதற் பொருட்டு நெருங்கிய, ஒரு பண்டிதனும்=ஒரு வைத்தியனும், மெய்உறு வேதனையும்=சரீரத்திற்கு வந்த நோயாலாகிய துன்பமும் துன்புறுத்த, இளமைந்தர் உடைமை கடன் ஏது என=இளம் பருவத்தையுடைய மக்கள் சொத்து எவ்வளவு இருக்கிறது என்றும் கடன் எவ்வளவு இருக்கின்றது என்றும் கேட்கவும், முடுகு துயர் மேவி=இதனாலாகிய துன்பங்களை நான் அடையவும், மங்கை அழுது

விழவே = என் பத்தினி ஓவென்று கதறி அழவும், யமபடர்கள் நின்று சருவ = யமதூதர்கள் என் உயிரைப் பற்றுமாறு வந்து நெருங்கி நிற்கவும், மலம் (ஏ = அசை) ஒழுக = மலம் தண்ணீர் போல் ஒழுகவும், உயிர் மங்கு பொழுது = அடியேனது உயிர் மங்குந்தன்மை யடையும் போது, கடிதே மயிலின் மிசை வரவேணும் = விரைவாக மயில்வாகனத்தின்மீது வந்தருள்புரிய வேணும்.

## பொழிப்புரை

என் அப்பனே வா! இரகு குலத்திற்கு நாயகனே வா! வலிமையுடையவனே வா! என் மகனே இனி வருவாயாக! என் கண்ணே வா? எனது ஆருயிரே வா! அழகிற் சிறந்தவனே இவ்விடம் வா! ராஜாவே வா! பால் குடிக்கும் பொருட்டு வா! மலரைச் சூடிக்கொள்ளுவதற்காக வா! என்று அன்புடன் கௌசலாதேவி அழைக்குமாறு மண்ணுலகில் அவதரித்து வந்த இராமபிரானும் மாயா சொரூபியுமாகிய மகாவிஷ்ணு உள்ளம் மகிழ்ச்சியடையும் மருகரே! குறவர் குலத்திற் பிறந்தவரும், இளமையுடையவருமாகிய வள்ளியம்மையார் மருவுகின்ற கட்டழகுடையவரே! தேவர்களது சிறைவாசம் ஒழிய அசுரர்களது வமிசம் அடியோடு அழியப் போர் புரிந்த தீரரே! சந்திரனையும் சர்ப்பத்தையும் நதியையும் சடையிற் சூடிக்கொண்டுள்ள சிவபெருமான் பெற்ற குமார மூர்த்தியே! கடலின் அலை கரையில் மோதுகின்ற திருச்செந்தூர் என்னும் புனித தலத்தில் வாழ்கின்ற பெருமையிற் சிறந்தவரே! முதுமையடைந்ததனால் தொந்தி சரியவும், கருமை நிறம் பொருந்திய மயிர்கள் வெளுத்து நரையடையவும், வரிசையாகிய பற்கள் அசையவும், முதுகு வளையவும், உதடுகள் தொங்கவும், ஊன்றுகோலின்மீது ஒரு கரம் பொருந்துமாறு தள்ளாடி நடந்து வருங்காலையில், பெண்கள் "பழய கிழவனாகிய இவன் யார்?" என்று எள்ளி நகையாடவும், 'கிண் கிண்' என்ற ஒலியுடன் இருமல் வரவும், அழுத்தமாகவும் திருத்தமாகவும், முன் பேசிக்கொண்டிருந்த வார்த்தைகள் குழறவும், கண்கள் எப்போதும் தூங்குவதுபோல் ஒளி குன்றி குருட்டுத் தன்மையடையவும், செவிகள் செவிட்டுத் தன்மையடையவும், உடலுக்கு வந்த நோயும் அதனை நீக்குதற்கென நெருங்கி வந்த வைத்தியனும் சரீரத்திற்கு உற்ற பிணியின் துன்பமும் (ஒருங்கே வருத்த) இளம் பிள்ளைகள் சொத்து (ஆஸ்தி) எவ்வளவு இருக்கிறது கடன் எவ்வளவு இருக்கின்றது என்று கேட்கவும், துன்பமானது மிகவும் விரைந்து வரவும், என் பத்தினி ஓ வென்று கதறி அழவும், யம தூதர்கள் என் உயிரைப் பற்றுமாறு வந்து நெருங்கி நிற்கவும், மலம் ஒழுகவும் ஆகிய மரண வேதனையடைந்து உயிர் மங்குகின்ற காலத்தில், தேவரீர் மயில்வாகனத்தின் மீது விரைவாக வந்து அடியேனைக் காத்தருளவேண்டும்.

## விரிவுரை

**தொந்தி சரிய :-**

வயது முதிர்ந்த காலத்தில் ஆலிலை போலிருந்த வயிறு பெருத்து சரிந்துவிடும்.

**மயிரேவெளிற :-**

கருமை நிறத்துடனிருந்த மயிர்கள் கொக்குபோல் நரைத்து வெளுத்துவிடும். "தலை மயிர் கொக்குக் கொக்க நரைத்து" என்ற திருவாக்கையும் உன்னுக. ஒவ்வொரு உரோமம் நரைக்குந்தோறும் ஒவ்வொரு பொருளில் உள்ள அவாவை விடுதல் வேண்டும்.

**நிரைதந்தம் அசைய :-**

முத்தைப்போல் வரிசையாயிருந்த பற்கள் அசைந்து உதிரும்

"வயது சென்றது வாய்ப்பல் உதிர்ந்தது"

—(முனையழிந்தது) திருப்புகழ்.

பற்கள் உதிர்ந்தவுடனே சொற்கள் கெட்டுவிடுமாதலால் இறைவனை வாயார வாழ்த்துதற்கு இயலாதுபோகும். ஆதலால் பற்கள் விழுமுன் இறைவனைத் துதித்தல் வேண்டும். பற்கள் உதிர்ந்தபின் மந்திரம் ஜெபிப்பார்க்குச் சித்தியுறாதென்னும் மந்திர சாத்திரத்தையும் உய்த்துணர்க.

**முதுகே வளைய :-**

"நிமிர்ந்த முதுகுங் குனிந்து" என்றபடி முதுகு பல்லக்கு கொம்பு போல் வளைந்துவிடும். அங்ஙனம் கூன் வளைந்த பின் இறைவன் திருவடியை மனத்தின்கண் நினைத்து தியான சமாதி செய்தற்கியலாது. முதுகு தண்டிலுள்ள சுழுமுனை என்னும் வெள்ளை நரம்பிலுள்ள தாமரைத் தண்டின் நுண்ணிய வழியில் பிராண வாயுவைக் கபாலம் வரைக்கும் ஏற்றும் சிவ யோக சாதனம், முதுகு வளைந்துவிட்ட பின் செய்ய முடியாது. எனவே இடுப்பும் முதுகும் சிரமும் நேரே நிறுத்தி சித்திரப் பதுமைபோல் இருந்து தியானித்தல் வேண்டும். ஆதலால் முதுகு வளையாமுன் சிவயோகத்தை முயலல் வேண்டும்.

**மகளிர் நகையாடி :—**

முதுமைப் பருவம் வந்த காலத்தில் பெண்களும் இளைஞர்களும் பரிகசித்து நகையாடுவர்.

**விழி துஞ்சு குருடுபடவே:—**

"வருத்த முந்தர தாய்மனை யாள்மக
வெறுத்தி டங்கிளை யோருடன் யாவரும்
வசைக்கு றுஞ்சொலி னுல்மிக வேதினம் நகையாட"
—(மனத்திரைந்) திருப்புகழ்.

கண்கள் முதுமையில் ஒளிகுன்றி குருடுபடும். அங்ஙனம் கண்ணொளி இழந்தபின் இறைவனது திவ்ய மங்கள திருமேனியின் பொலிவைக் கண்டு "ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள" என்ற பேரானந்தத்தையடைய முடியாது. ஆதலால் கண்கள் ஒளியுடன் விளங்கும்போதே கண்ணினுலாகிய பயனைப் பெறவேண்டும்.

**செவிடுபடு செவியாகி :—**

முதுமையில் கண்கள் குருடுபட்டதோடு காதுகளும் கேட்குந்தொழிலை இழந்துவிடும். அங்ஙனம் செவிட்டுத் தன்மையடைந்தபின் இறைவனது அருட்பெருங் குணங்களைக் கேட்டு மகிழ முடியாது. செவிபடைத்ததன் பயன் இறைவனது சீர்கேட்டு சிந்தை மகிழ்தலே.

"செவ்வேளின் சீர்கேளாச் செவியென்ன செவியே"

**வந்த பிணியும் :—**

உதிரம் வற்றி உடல் தளர்ந்துவிடுவதால் முதுமையில் பல நோய்கள் வந்து துன்புறுத்தும்.

"சூலை சொறி யீளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைசுர மோடுபிணி தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுடல் அழிவேனோ"
—(வாலவய) திருப்புகழ்.

**இள மைந்தர் உடைமை கடன் ஏதென :—**

தொந்தி சரிந்தும், மயிர் நரைத்தும், பற்கள் கழன்றும், முதுகு வளைந்தும், இதழ் தொங்கியும், தடியூன்றியும், வருகின்ற "இந்தக் கிழவன் யார்" என்று பெண்கள் பரிகசித்து நகையாடவும், இருமல் வரவும், மொழி குழறவும், குருடுபடவும், செவிடு படவும், பற்பல நோய்கள் வரவும், வைத்தியர் வந்து பணங் கேட்கவும், உடலில் வேதனையும் ஏற்பட இவை முதலான பல துன்பங்களால் துன்புற்று ஆவி பிரியுங் காலத்தில் இளம் பிள்ளைகள் மரணுவஸ்தைப் படுவோனுடைய வருத்தத்தைக் கண்டு மனம் துடியாமல், ஆஸ்தி எவ்வளவு? கடன் எவ்வளவு? எங்கெங்கு கொடுத்திருக்கிறீர்? என்று கேட்டுத் துன்புறுத்துவார். அவர்களது நன்மையைக் கருதுவார்களே

யன்றி நம்முடைய நன்மையைக் கருதி ஆவியீடேறுகின்ற வழியைத் தேடமாட்டார்கள்.

**யமபடர்கள்......மலமே ஒழுக :—**

யம தூதர்கள் வந்து பாசக்கயிற்றால் உயிரைக் கட்டியீர்க்கின்ற சமயத்தில் மலம் நீர்போலே நெகிழ்ந்து ஒழுகும்.

**உயிர் மங்குபொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும் :—**

ஆவி மங்குகின்ற காலத்தில் முருகனுடைய தெரிசனம் உண்டாயின் இயமதூதர்கள் வெருவி ஓடுவார்கள். ஆதலால் விரைவாக மயில் வாகனத்தின் மிசை வந்து காப்பாற்ற வேணும் என்றனர்.

**எந்தைவருக......வருமாயன் :—**

பகவானாகிய நாராயணர், அளவற்ற தவம்புரிந்த கௌசலா தேவி அன்புடன் பற்பல வகையாக அழைக்க அவளது திருவுதரத்தில் தோன்றி மகனாக வந்தனர்.

"மன்னுபுகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே"

—திருமொழி.

**மைந்த வருக மகனே இனி வருக :—**

மைந்த—பல குடும்பங்களைப் போஷிப்பவர்.

மைந்தன், மகன் என்ற இரு சொற்களும் ஒரே பொருளைக் கொடுப்பன அல்ல.

தனக்கு உரிய வயது வந்தும், 'தந்தைக்கு என்ன வருவாய்? எப்படிக் குடும்பம் நடைபெறுகின்றது? பிற்காலத்தில் நாம் எப்படி வாழ்வது?' என்ற சிந்தனையும் அறியும் ஆற்றலும் இன்றி தாய் தந்தையர் பாதுகாப்பிலேயே இருக்கின்றவன் பாலன்.

வயது முதிர்ந்த தந்தை வேலை செய்ய, தனக்கு உரிய பருவம் வந்தும் தந்தைக்கு உதவி செய்யாது மேற்கொண்டும் செலவு செய்து கொண்டும், ஆடல், பாடல்களில் ஈடுபட்டுக் கொண்டும் இருப்பவன் பிள்ளை

தந்தைக்கு ஞானம் உரைக்கும் அளவுக்கு உயர்ந்த அறிவு பெற்றவன் குமாரன்.

தந்தைக்கு நற்கதி தருகின்றவன் புத்திரன்.

தந்தைக்கு நன்மையைச் செய்கின்றவன் புதல்வன்.

தான் பிறந்த குடும்பத்தைக் காத்து, ஆலமரத்தின் விழுது அந்த மரத்தைத் தாங்குவதுபோல் நிற்பவன் மகன்.

தந்தையின் குடும்பம், தாயின் குடும்பம், குருவின் குடும்பம், நண்பரின் குடும்பம், இப்படிப் பல குடும்பங்களைக் காப்பாற்றுபவன் மைந்தன்.

இராமர், தன் குடும்பம், குகனுடைய குடும்பம், சுக்ரீவனுடைய குடும்பம், விபீஷணனுடைய குடும்பம் ஆகிய பல குடும்பங்களைக் காத்தலினால் மைந்தன் என்றும், தான் பிறந்த குடும்பத்தையும் காத்தலினால் மகன் என்றும் அழைக்கப் பெற்றார்.

**முலையுண்க வருக :—**

ஒரு குழந்தைக்குத் தாயே பால் தந்தால் தாயின் அரும் பெருங்குணங்கள் அம்மகவுக்கு உண்டாகும். அரசமாதேவியே பால் தரவேண்டும் என்ற குறிப்பை இது உணர்த்துகிறது.

**சிந்தை மகிழு மருகா :—**

ஷண்முகப்பெருமான் அளவற்ற கருணையும், முடிவில்லாத ஆற்றலும் ஞானமேயொரு திருமேனியும் உடையவராக இருந்து கார்த்திகைப் பெண்கள் அறுவர்களுக்கும் மகனாகி அன்னார் பலவாறு அழைக்க அவர்களுக்கு அருள்புரிந்தமையால், நாராயணர் சிந்தை மகிழுகின்றார்.

**குறவரிள வஞ்சி மருவும் அழகா :—**

முருகப்பெருமான் வள்ளி நாயகியார் மருவுகின்ற அழகிற் சிறந்தவர்; முருகப்பெருமானுடைய வடிவே அழகு; அழகால் அவரின் மிக்காரும் ஒப்பாரும் இல்லை. "முழுது மழகிய குமர" (விழையுமனி)' திருப்புகழ்.

**அமரர் சிறை சிந்த......அடுதீரா :—**

தேவர்களை சூரபன்மன் சிறையிட்டு பல யுகங்களாகத் துன்புறுத்த, இனி நமக்கு உய்வில்லை என்று நிர்க்கதியாக இருந்த தேவர்களது சிறையை மீட்டு சூராதி அசுரர்களது குலத்தை அடியோடு அழித்து முருகப்பெருமான் அறத்தை நிலைபெறச் செய்தனர். ஒருவராலும் வெல்லவொண்ணாத சூரன் முதலியோரை வென்றதனால் தீரன் என்றனர்.

தேவர்கள் என்பது :—சத்துவம் முதலிய நற்குணங்கள்; அசுரர்கள் என்பது :—தாமசம் முதலிய தீய குணங்கள். தீய குணங்களை அழித்து நற்குணங்களை நிலைபெறச் செய்தனர் என்பது அதன் தத்துவம்.

**திங்கள் அரவு......தந்த குமர :—**

அபயமென்று வந்த சந்திரனையும் கொல்லவந்த அரவம் முதலியவைகளையுங் காப்பாற்றிச் சடாபாரத்தில் சூடிக் கொண்ட கருணாமூர்த்தியாகிய கண்ணுதற் கடவுளது மைந்தனைபடியால, இயம பயம் நேருங்கால் மயில்மிசை வந்து காத்தருளல் வேண்டும் என்று விண்ணப்பம் புரிகின்றனர்.

**அலையே கரை......பெருமாளே :—**

அலைகள் வந்து தமது திருவடியில் ஒய்வுறுமாறு கடற் கரையில் முருகன் உறைகின்றனர். அலைகள் என்பது பல வகையான எண்ணங்கள். அவைகள் எம்பெருமானது திருவடியில் ஒயுமாறு செந்திலம்பதியில் வாழ்கின்றனர். செந்திலாண்டவனை நினைப்பார்க்குத் துன்பங்கள் இல்லை.

**கருத்துரை**

மாயவனது மருகரே! வள்ளிநாயகியின் மணாளரே! அசுரரையழித்த அதிதீரரே! சிவபெருமானது புதல்வரே! செந்திலாண்டவரே! பற்பலவிதமாகத் துன்புற்று ஆவி பிரியுங்கால் மயில்மிசை வந்து காப்பாற்ற வேண்டும்.

## 36

தோலொடு மூடிய கூரையை நம்பிப்
பாவையர் தோதக லீலை நிரம்பிச்
சூழ்பொருள் தேடட வோடி வருந்திப் புதிதான
தூசொடு நான்மணி மாலைப்ர பந்த
கோவை யுலாமடல் கூறிய மூந்தித்
தோமுறு காளையர் வாசல்தொ றும்புக் கலமாரும்
காலனை வீணனை நீதிகெ டும்பொய்க்
கோளனை மானமி லாவழி நெஞ்சக்
காதக லோபவ்ரு தாவனை நிந்தைப் புலையேனைக்
காரண காரிய லோகப்ர பஞ்சச்
சோகமெ லாமற வாழ்வுற நம்பிற்
காசறு வாரிமெய்ஞ் ஞானத வஞ்சற் றருளாதோ
பாலன மீதும ணுன்முக செம்பொற்
பாலனை மோதப ராதன பண்டப்
பாரிய மாருத் தோளமிசை கொண்டுற் றமராடிப்

பாவியி ராவண ஞர் தலை சிந்திச்
சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்
பாவையர் தோள்புணர் மாதுலர் சிந்தைக்
கினியோனே

சீலமு லாவிய நாரதர் வந்துற்
றீதவள் வாழ்புன மாமென முந்தித்
தேமொழி பாளித கோமள இன்பக் கிரிதோய்வாய்

சேலொடு வாளைவ ரால்கள்கி ளம்பித்
தாறுகொள் பூகம ளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே.

## பதவுரை

பால் அன மீதுமன் = பால்போன்ற வெண்ணிறமுடைய அன்ன வாகனத்தில் மீது நிலைபெற்றவனும், நான்முக = நான்குமுகங்களை யுடையவனும், செம்பொன் பாலனை = சிவந்த இலக்குமிதேவியின் குமாரனுமாகிய பிரமதேவனை, மோது அபராதன = (பிரணவப் பொருள் வினவி அது கூறாது விழித்தமையின்) கரங்களால் மோதி தண்டனையைப் புரிந்தவரே!, பண்டு = முன்னாளில், அ பாரிய மாருதி தோள் மிசை கொண்டு உற்று = பருத்த வடிவுடைய அந்த அநுமனது தோள்மிசை யூர்ந்து (இலங்கையை) அடைந்து, அமர் ஆடி = போர் புரிந்து, பாவி இராவணனார் தலை சிந்தி = கொடும் பாவியாகிய இராவணனது தலைகள் பத்தையும் அறுத்துக் கீழே வீழ்த்தி, சீரிய வீடணர் வாழ்வுற = சிறப்புடைய விபீஷணர் இலங்கைக்கு அரசனாகி இன்புற்று வாழ்வுறச் செய்து, மன்றல் பாவையர் தோள் புணர் = வாசனை தங்கிய சீதை யென்னும் திருமகள், ஜெயத்தால் வந்த ஜெயமகளென்னும் இரு மகளிரது புயத்திற் சேர்ந்த, மாதுலர் சிந்தைக்கு இனியோனே = திரு மாமனாகிய நாராயணமூர்த்தியினது உள்ளத்திற்கு இனிமையான மருகோனே!, சீலம் உலாவிய நாரதர் = நல்லொழுக்கத்திற் சிறந்த நாரத முனிவர், வந்து உற்று = தணிகைமாமலையில் வந்தடைந்து (முருக வேளை அழைத்தேகி), ஈது அவள் வாழ்புனமாம் என = வள்ளியம்மையார் வாழ்கின்ற தினைப்புனம் இதுதான் என்று காட்ட, முந்தி = முன்னாளில், தேமொழி = தேன்போன்ற இனிய மொழியை யுடையவரும், பாளித = சந்தனக் குழம்புகளை யணிந்தவரும், கோமள = இளமை யுடையவரும், இன்பகிரி தோய்வாய் = இன்பமலை போன்றவருமாகிய வள்ளிநாயகியைப் பொருந்தியவரே! சேலொடு வாளை வரால்கள் கிளம்பி = சேற் கெண்டைகளும் வாளை மீன்களும் வரால் மீன்களுந் துள்ளியெழுந்து, தாறுகொள் பூகம் அளாவிய = குலைகளை

யுடைய கமுகு மரங்களில் விளையாடும், இன்ப=இன்பத்தையுடைய, சீரலைவாய் நகர்=திருச்சீரலைவாய் என்னும் செந்திலம்பதியில், மேவிய=விரும்பி யுறைகின்ற,கந்த=கந்தமூர்த்தியே!, பெருமாளே= பெருமையிற் சிறந்தவரே, தோலொடு மூடிய கூரையை=தோலாலே மூடி வைத்துள்ள சிறுகுடிலை (உடம்பை), நம்பி=நிலைத்திருக்கு மென நம்பி, பாவையர்=பெண்களது, தோதக லீலை நிரம்பி= வஞ்சகத்தையுடைய காமலீலை மிகுந்து, சூழ்பொருள் தேடிட=நிலை யின்றி சுற்றுகின்ற செல்வத்தை யீட்டுதற்பொருட்டு, ஓடி வருந்தி= பல திசைகளிலும் ஓடி மிகவும் வருத்தமுற்று,புதிதான=நூதனமான தூது ஒடு நான்மணிமாலை ப்ரபந்த கோவை உலா மடல் கூறி=தூது நான்மணிமாலை கோவை உலா மடல் முதலிய பிரபந்தங்களை அந்நரர் கள்மீது பாடி, அழுந்தி=அந் நரகத்திலேயே அழுந்திய மனத்தை யுடையவனாகி, தோம்உறு காளையர்=குற்றம் நிறைந்த ஆடவருடைய, வாசல்தொறும் புக்கு=வீடுகள்தோறும் புகுந்து, அலமாரும்=அலைந்து திரியும், காலனை=கால்களை யுடையவனை, வீணனை=வீணே நாள்போக் குபவனை, நீதி கெடும் பொய் கோளனை=நீதிநெறிகெட்ட பொய்யே பேசும் தன்மையுடைய கோள் சொல்லுபவனை, மானம் இலாவழி= பெருமையில்லாத தீயவழியிற் செல்லும், நெஞ்ச=உள்ளத்தை யுடைய, காதக=கொலைத்தன்மையும், லோப=உலோபத்தன்மையு முடைய, விருதாவனை=விருதாவாகக் காலங்கழிப்பவனை, நிந்தை புலையேனை=உலகத்தோர்கள் நிந்தித்தற்குரிய புலைத்தொழிலுடைய வனை, காரண காரிய லோக ப்ரபஞ்ச=காரண காரியங்களால் வந்த உலக வாழ்க்கையின், சோகம் எலாம் அற=துன்பங்கள் முழுவதும் அறவே நீங்கப்பெற்று, வாழ்வு உற=முத்திப்பேற்றை யடைந்து இன்ப வாழ்வையடைய, நம்பில்=விரும்பினால், காசு அறு=குற்ற மற்ற, வாரி=கடல்போன்ற, மெய்ஞான தவம்=உண்மை ஞானத் தோடு கூடிய தவநிலையை, சற்று அருளாதோ=(அடியேனுக்கு நினது திருவருள்) சிறிது அருள்புரியாதோ ?

## பொழிப்புரை

பால்போன்ற வெண்ணிறமுடைய அன்னவாகனத்தின் மீது நிலைபெற்றுள்ளவனும், நான்கு முகங்களை யுடையவனும், சிவந்த இலக்குமியின் குமாரனுமாகிய பிரமதேவனைப் பிரண வார்த்தங் கேட்டு அதனை யுரைக்காது விழித்தமையால் கரங் களால் மோதி தண்டனை புரிந்தவரே! முன்னாளில் பெரிய வடிவத்தோடு நின்ற அநுமனது தோளின்மிசை யூர்ந்துவந்து போர்புரிந்து, பாவத்தொழிலை மேற்கொண்ட இராவணனது தலைகள் பத்தும் சிந்துமாறு அறுத்துத் தள்ளி, நல்லொழுக்க முடைய விபீஷணர் (இலங்காபுரி யரசாட்சியைப் பெற்று) இன்புற்று வாழுமாறு, மணம் பொருந்திய சீதையாகிய திரு மகள், ஜயத்தாலுண்டாகிய ஜெயலட்சுமி ஆகிய இருபாவை

யரது தோள் புணர்ந்த திருமாமகளாகிய நாராயணமூர்த்தியினது சிந்தைக்கினிய மருகரே! ஒழுக்கத்தால் மிக்க நாரதமுனிவர் (தணிகைமாமலை) வந்தடைந்து, வள்ளிநாயகியார் வாழ்கின்ற தினைப்புனம் இதுதான் என்று காட்ட, முன்னாளில் தேன்போன்ற மதுர மொழியுடையவரும் சந்தனமணிபவரும் இளமையுடையவரும் இன்ப மலையனையவருமாகிய வள்ளிபிராட்டியாரை அணைபவரே! சேல், வாளை, வரால் முதலிய மீன்கள் நீர்ப்பெருக்கால் துள்ளியெழுந்து குலைகளோடு கூடிய கமுகு மரங்களின்மேல் தாவி விளையாடும் இன்பத்தை நல்கும் திருச்செந்திலம்பதியில் விரும்பி வாழுகின்ற கந்தக் கடவுளே! பெருமையின் மிக்கவரே! தோலால் மூடிய கூரை வீட்டிற்கு நிகராகிய இவ்வுடம்பை நிலைத்திருக்குமென நம்பி, பெண்களது வஞ்சனையோடு கூடிய காம லீலையில் மிகவும் ஈடுபட்டு நிலையின்றி சுற்றுகின்ற பொருளைத் தேடும் பொருட்டு திசைகள்தோறும் ஓடி வருத்தமுற்று நூதனமான தூது நான்மணிமாலை கோவை உலா மடல் முதலிய பிரபந்தங்களை நரர்கள்மீது பாடி அந்நரத் துதியிலேயே அழுந்தி குற்றமுடைய மனிதர்களது வீடுகள்தோறும் சென்று அலைந்து சுழலுகின்ற கால்களையுடையவனை வீண்பொழுது போக்குபவனை, நீதி நெறியற்ற பொய்மொழியுடன் கோள்சொல்லுபவனை, பெருமையில்லாத் தீ நெறியில் நின்ற நெஞ்சத்தையுடைய கொலை உலோபமுதலிய தீயகுணமிக்க விருதாவனை, எல்லோராலும் நிந்திக்கப்படுகின்ற புலையனை, காரண காரிய உலக வாழ்வாலாகிய துன்பங்களெல்லாம் அறவே நீங்கப்பெற்று இன்ப வாழ்வுறுமாறு விரும்பினால் குற்றமற்ற கடல்போன்ற மெய்யுணர்வுடன் கூடிய தவநிலை அடியேனுக்கு உண்டாகத் தேவரீரது திருவருள் சிறிது அருள் புரியாதோ?

## விரிவுரை

**தோலொடு மூடிய கூரையை நம்பி :—**

இந்த உடம்பு கூரைவீட்டிற்கு நிகரானது; கூரைவீட்டை ஓலையால் மூடியுள்ளதுபோல் இவ்வுடம்பை தோலால் மூடியுளது. ஒரு மனிதன் கல்வீடு, ஓட்டுவீடு, மாடிவீடு இவைகளில் வாழ்ந்தால நெருப்பு பயம் அதிகமின்றி ஒரு சில நாளாவது அந்த வீட்டில் சுகமே வாழலாம் கூரைவீட்டிலே யிருப்பவன், நெருப்பு காற்று மழை முதலியவைகளுக்கு மிகவும் அஞ்சி வாழ்வான். கூரை வீட்டிற்கு விரைவில் அழிவு நேரும். கூரை வீடு என்றும் நிலைத்திருக்குமென நம்புதற்கில்லை; அதுபோல் கூரைவீடனைய இவ்வுடம்பிற்கும் விரைவில் அழிவு நேரும்; பிணி மூதுமை முதலியவைகள் உண்டாகிக் கெடும். இதனை நம்பியிருத்தல் பெருந்தவறு. யாக்கை நிலையாமையையுணர்ந்து ஆன்மலாபத்தை விரைந்து தேடவேண்டும்.

"புல்லின் நுனியிலுள்ள நீர் எப்படி நிலைக்காதோ, அதுபோல் இவ்வுடம்பும் நிலை யற்றதென்றுணர்ந்து, இப்பொழுதே அற வினையைச் செய்க; நாம் பார்த்திருக்கும்போதே ஒருவன் பிறந்து நின்று, இருந்து, கிடந்து சுற்றத்தார்கள் அலற இறந்துபடுகின்றான்; இதனைக் கண்கூடாகக் காண்கின்றோ மாதலால் இதனை நம்பியிராதே" என்று கூறும் நாலடியாரின் நல்வாக்கை யுன்னுக.

புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
இன்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப்படுத லால்.

இத்தகைய சரீரமாகிய கூரைவீடு இடிகின்ற காலத்தில் குமாரக் கடவுளது திருவடியே துணை செய்யும்.

**பாவையர் தோதக லீலை நிரம்பி :—**

கூரைவீட்டிற்கு நெருப்பு எப்படி அழிவை உண்டாக்குமோ, அப்படி உடம்பிற்கு அழிவை யுண்டாக்குவது பொது மகளிரது போகம். ஆவி யீடேறும் நெறியை வேண்டுவார், வரைவின் மகளிரை விழையா தொழிக.

**சூழ் பொருள் தேடிட ஓடிவருந்தி :—**

மேற்கூறிய விலைமகளிர் பொன் கொடுத்தாலன்றி விரும்பாராதலால் பொருள் தேடும்பொருட்டு பல ஊர்களிலும் சென்று வருந்த நேரும். சிறிது கை வரண்டால் விலைமாதர் வெறுத்து விரட்டுவர்; ஓயாமல் பொருள் கொடுத்த வண்ண மாகவே இருத்தல் வேண்டும். விளக்கும் வேசையர் நட்பும் ஒன்று; விளக்கு நெய் வற்றிவிட்டால் அணைந்துவிடும். அது போல வேசையர் நட்பு பொருள் வற்றி விட்டால் ஒழியும். இதனை நாலடியார் கூறுமாறு காண்க.

விளக் கொளியும் வேசையர் நட்பு மிரண்டுந்
துளக்கற நாடின்வே றல்ல—விளக்கொளியு
நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்புங்
கையற்ற கண்ணே யறும்.

**தூது :—**

பாணன் முதலிய உயர்திணையோடும், கிள்ளை முதலிய அஃறிணையோடும், ஆண்பாலும் பெண்பாலும் அவரவர் காதலைச் சொல்லி தூது போய் வாவெனக் கூறுவது. கிள்ளை விடு தூது, வண்டு விடு தூது, நெஞ்சு விடு தூது, பணவிடு தூது, தமிழ் விடு தூது முதலியவற்றில் காண்க.

**நான்மணி மாலை :—**

வெண்பாவுங் கலித்துறையும், விருத்தமும், அகவலு மாக அந்தாதித் தொடையாகப்பாடுவது; நாறபது கவிகளால் செய்யப்படுவது. கோயில் நான்மணிமாலை, திருவாரூர் நான்மணிமாலை, நால்வர் நான்மணிமாலை முதலியவற்றில் காண்க.

**கோவை :—**

இருவகைப்பட்ட முதற்பொருளும், பதினான்கு வகைப் பட்ட கருப்பொருளும், பத்து வகைப்பட்ட உரிப்பொருளும், பொருந்திக் கைக்கிளை முதலுற்ற அன்புடைக் காமப் பகுதி யவாம் களவொழுக்கத்திணையும் கற் பொழுக்கத்திணையும் கூறு தலே எல்லையாகக் கட்டளைத்துறை நானூற்ருல் திணை முதலா கத் துறையீருகக்கூறப்பட்ட பன்னிரண்டாகப் பாட்டுறுப்பும் வழுவின்றித் தோன்றப்பாடுவது. இது வெண்பா, அகவல், கலி, வஞ்சி, வண்ணம் இவற்ருனும் வழங்கப்படும். திருக் கோவையார், திருவெங்கைக் கோர்வை, கோடீசுரக் கோவை முதலியவற்றில் காண்க.

**உலா :—**

இளமைப் பருவமுதல் தலைமகனைக் குலங் குடிப்பிறப்பு மங்கல பரம்பரை இவற்ருல் இன்னான் என்பது தோன்றத் தலைமையாய் மாதர்நெருங்கிய வீதியிடத்து அவன் பவனிவரப் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் ஆகிய ஏழு வகைப் பருவ மடந்தையர்களும், கண்டு காமுற்றுத் தொழுததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது.

**மடல் :—**

கனவில் ஒரு பெண்ணைக் கண்டு கலவியின்பம் நுகர்ந் தோன் விழித்தபின் அவள்பொருட்டு மடலூர்வேன் என் பதைக் கலிவெண்பாவினுல் முற்றுவிப்பது.

இத்தகைய பிரபந்தங்களைப் பொருள் பெறும்பொருட்டு நற்குணமில்லா நரர்களை மட்டின்றிப் புகழ்ந்துபாடி யலைவது சில புலவரது தொழில். அங்ஙனம் அலைந்து நரதுதி செய்து சேகரித்த பொருளைக் கொண்டுவந்து தாம் இச்சித்த போக மாதரிடந் தந்து உழல்வர்.

**வீணை :—**

நமது ஆயுளில் ஒவ்வொரு கணமும் விலைமதிக்க முடியாத மாணிக்கமாம். இத்தகைய அருமையான காலத்தை இழந்து விட்டால் மீளவும் பெறமுடியாது. எத்தனை கோடி பொன்

கொடுத்தாலும் கழிந்த நாள் வாராது. அதனை வறிதே கழிக்காமல் ஒவ்வொரு கணமும் தெய்வ சிந்தனையுடன் தவப் பொழுதாகக் கழிக்க வேண்டும்.

"நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாவோம்" —ஞானசம்பந்தர் தமிழ்மறை.

"போதவமே யிழந்து போனது மான மென்ப தறியாத
பூரியன்" —(பூரணவார கும்ப) திருப்புகழ்.

**நிந்தைப் புலையேனை :—**

புலாலுண்பவர்கள் புலையர்கள்; புலையர்கள் என்பது பிறப்பினாலன்று; புலைப் புசிப்புடையோர்கள் யாவராயினும் புலையரே.

"மாமிசம் தின்போரெல்லாம் மானிடப் புலையர்தாமே"

என்றார் வள்ளலார். புலாலையுண்ணும் புலையரை யாவருங் காண இயம தூதர்கள் துன்பமிகுந்த தீவாய் நரகில் மல்லாக்கத் தள்ளி வருத்துவர்.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தின்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே. —திருமந்திரம்.

புலாலை யுண்பவன் எத்துணைச் சிறந்தவனாயினும் எவ்வளவு புண்ணியத்தைப் புரியினும் பயனில்லை.

கங்கையிற் படிந்திட்டாலுங் கடவுளைப் பூசித்தாலு
மங்குல் போற் கோடி தானம் வள்ளலாய் வழங்கினாலும்
சங்கை யில்லாத ஞான சாத்திர முணர்ந்திட்டாலும்
பொங்குறு புலால் புசிப்போன் போய்நர கடைவனன்றே.
—வள்ளலார்.

இதுவேயுமன்றி கருணையென்பது ஒரு சிறிதுமின்றி ஒரு தீங்குமியற்றாது உபகாரம் புரியும் ஆடு கோழி பன்றி மீன் முதலிய ஏழைப் பிராணிகளைக் கொன்று அவற்றின் புலாலை யுண்ணும் கொடியவர், அவர்கள் கொன்ற பிராணிகளின் உடலிலுள்ள மயிர்கள் எத்துணையளவோ அத்துணைக்காலம் வெப்பமான நரகங்களை யனுபவித்து மிகவுந் துன்புற்று, புழுக்களோடு கூடிய வாயுடையவராய் தொழுநோய் முதலிய பிணிகளை யடைந்து உழலுவர்.

கொன்று விலங்கின் தசைநுகருங் கொடுமையோரவ் விலங்கினுடல்
துன்று மயிரெத் துணையாமத் துணைய காலம் வெந்நரகி

ஞென்றி நுகர்வாய் புழுவொழுக வுழப்ப ரென்கை யுணர்ந்தேயோ
கன்று சினவெங் கொடு விலங்கும் புலவூன் றின்னக் கருதாவால்.

—சிவதருமோத்தரம்.

**காரண காரிய லோக :—**

உலகம் காரணம் காரியம் என இருவகைத்து. உயிர்கள் புரியும் நல்வினை தீவினைக் காரணத்தால் காரியப்படுவது காரிய உலகம். இவைகட்கு காரணமாவது காரண உலகம். இவ்விரு உலகங்களின் துன்பங்களும் நீங்கவேண்டுமாயின் மெய்ஞ்ஞான தவம் அவசியம் வேண்டும்.

**பாலனமீது......அபராதன :—**

அயனைத் தண்டித்த வரலாற்றை திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 108-வது பக்கத்திற் காண்க

**பாரிய மாருதி :—**

விஸ்வருபத்தை எடுத்து அரும்பெருங் காரியத்தைப் புரிந்தோராதலால் அநுமாரைப் பாரிய மாருதி என்றனர்.

**பாவி யிராவணன் —**

"அறன்கடை நின்றுரு ளெல்லாம் பிறன் கடை
நின்றாரிற் பேதையா ரில்"

—திருக்குறள்.

அயலானுடைய பத்தினியைக் கரவாகக் கொண்டுபோன வனுதலால் பாவி யென்றனர்.

**சீரிய வீடணர் :—**

சீலம், தவம், பொறை, இறையன்பு முதலிய நற்குண நல்லொழுக்கமுடையவர் விபீஷணர்.

**சீலமுலாவிய நாரதர் :—**

நாரதர் சுப்ரமண்ய பக்தியிற் சிறந்தவர்; கந்தபுராணத்துத் தக்ஷகாண்டத்துக் கந்தவிரத படலத்தில் உள்ளவாறு, கார்த்திகை மாதத்தில் வருங் கார்த்திகைநக்ஷத்திரத்தின் முதல் நாளாகிய பரணிநாள் உதயத்தில் யாவனொருவன் நித்திய கரும முடித்துப் பரிசுத்தனாய் ஒருவேளை யுண்டு. மறுநாள் கார்த்திகை தினத்தன்று அதிகாலையெழுந்து புண்ணிய நதியில் நீராடி, தூய ஆடையுடுத்தி, முருகவேளை அலங்கரித்து அருச்சித்து நீர் சந்தன புஷ்ப தூப தீப நிவேதனங்களால் வழிபாடு செய்து, முருகவேள் சரித்திரத்தைப் பக்தி

யுடன் கேட்டு உபவாசமிருந்து பகல் முழுவதும் குகசிந்தை யுடன் இருந்து, இரவில் தருப்பையைப் பரப்பி அதன் மீதிருந்து அரிவையரை அணுவளவும் நினையாது அறுமுக வள்ளலின் அடிமலரையுன்னி, துயில் புரியாது தியானம் புரிந்த நிலையில் இருந்து விடிந்த உரோகணி நட்சத்திரத்தில் விடியற்காலத் தில் நீராடி நித்திய கருமமுடித்து, கந்தவேளை முன்போல் வழிபட்டு, அடியார்களுடனிருந்து பாரணைபண்ணி அப் பகல் உறங்காது வைகி மாலைக்கடன் முடித்து அன்றிரவு உறங்க வேண்டும். இவ்வித கந்த விரதத்தை விநாயகமூர்த்தி பணித்த வாறு, நான்முகன் மகனாராகிய நாரத முனிவர், பன்னிரண் டாண்டு ஆற்றிக் கந்தவேளைத் தரிசித்துத் தேவ இருடிகளில் முதன்மைப்பேறு பெற்றனர். இவர் வள்ளி நாயகியை மணம் புணருமாறு விண்ணப்பம்புரிய, அவரை வழி காட்டுமாறு செய்து வள்ளிநாயகியை வரைபகவெறிந்த வடிவேலண்ணல் மணம்புரிந்து கொண்டனர்.

## இதன் தத்துவம்

வள்ளியென்பது ஜீவான்மா; முருகன் பரமான்மா; நாரதர் வள்ளியினது தபோ சக்தி; தபோசக்திதான் ஆண்டவனை அருள்புரிய அழைத்துவரும். வள்ளிநாயகியார் திருமண தத்துவத்தைப் பின்னர் விரிவாக விளக்குவோம்.

**சேலொடு......சீரலைவாய் :—**

திருச்செந்தூரில் நீர்வள மிகுந்திருப்பதால் வயல்களில் வாழும் வாளை முதலிய மீனினங்கள் துள்ளிக் குதித்து கமுகு களில் தாவி விளையாடுகின்றன.

## கருத்துரை

நான்முகனைத் தண்டனை புரிந்தவரே! இராவண சம்மாரம் புரிந்த இரகு வீரரது மருகரே! நாரதனுர் புகல் வள்ளிபிராட் டியை மணந்தவரே! செந்திமாநகரத்தில் வாழும் கந்தமூர்த் தியே! பெருமையின் மிக்கவரே! தோலால் மூடிய சிறு குடிலை நம்பி, மாதர் மயலுற்று, பொருள் தேடுமாறு நரதுதி செய்து அலையும் தீயவனுகிய அடியேன் விரும்பினுல், உலக துன்பமற மெய்ஞ்ஞான தவத்தைத் தமது திருவருள் சிறிது உண்டாக் கச் செய்யாதோ?

## 37

நாலு மைந்து வாசல் கீறு தூறு டம்பு கால்கையாகி
நாரி யென்பி லாகு மாக மதனூடே
நாத மொன்ற ஆதி வாயில் நாட கங்க ளான ஆடி
நாட றிந்தி டாம லேக வளராமுன்

நூல நந்த கோடி தேடி மால்மி குந்து பாரு ளோரை
நூறு செஞ்சொல் கூறி மாறி விளைதீமை
நோய்க லந்த வாழ்வு றுமல் நீக லந்து ளாகுஞான
நூல டங்க வோத வாழ்வு தருவாயே

காலன் வந்து பால னாவி காய வென்று பாசம் வீசு
காலம் வந்து வோல மோல மெனுமாதி
காமனைந்துபாணமோடு வேமினின்று காணுமோனர்
காள கண்ட ரோடு வேத மொழிவோனே

ஆல மொன்று வேலை யாகி யானை யஞ்சல் தீரு மூல
ஆழி யங்கை ஆயன் மாயன் மருகோனே
ஆர ணங்கள் தாளை நாட வார ணங்கை மேவு மாதி
யான செந்தில் வாழ்வ தான பெருமாளே.

### பதவுரை

காலன் வந்து = இயமன் வந்து, பாலன் ஆவிகாய என்று = இளைஞராகிய மார்க்கண்டேயருடைய உயிரை வருத்தவேண்டும் என்று, பாசம் வீசு காலம் வந்து = பாசக் கயிற்றை வீசிய சமயத்தில் வெளிப்பட்டு, ஓலம் ஓலம் எனும் ஆதி = "அஞ்சேல் அஞ்சேல்" என்ற ஆதி முதல்வரும், காமன் = மன்மதன், ஐந்துபாணமோடு வேமின் என்று = ஐந்து கணைகளுடன் வெந்தழிக என்று, காணும் மோனர் = நெற்றிக் கண்ணால் பார்த்த மோனமூர்த்தியும், காளகண்டரோடு = திருநீலகண்டரும் ஆகிய சிவபெருமானுடன், வேதம் மொழிவோனே = வேதமுதலாகிய பிரணவத்தின் உட்பொருளைக் கூறியவரே! ஆலம் ஒன்று வேலை ஆகி = ஆலகாலம் தோன்றிய கடலில் பள்ளிகொண்டு, ஆனை அஞ்சல் தீரும் மூல = கஜேந்திரனுடைய அச்சத்தைத் தீர்த்த ஆதிமூலப் பொருளும், ஆழி அங்கை = சக்ராயுதத்தைத் தாங்கிய அழகிய கரமுடையவரும், ஆயன் = ஆயர்குலத்தில் அவதரித்தவரும், மாயன் = மாயையில் வல்லவருமாகிய திருமாலின், மருகோனே = திருமருகரே! ஆரணங்கள் தாளைநாட = வேதங்கள் திருவடியைத் துதிக்க, வாரணம் கை மேவும் = சேவற்கொடியைத் திருக்கரத்தில் ஏந்தும்,

ஆதியான=ஆதிபரம்பொருளாகியும், செந்தில் வாழ்வு அது ஆன= திருச்செந்தூரில் வாழ்கின்றவரும் ஆகிய, பெருமாளே=பெருமை யின் மிக்கவரே! நாலும் ஐந்து வாசல் கீறு=ஒன்பது வாயில்களைப் பிளந்து வைத்த, தூறு உடம்பு=அவதூறுக்கு இடமான இவ்வுடம்பு, கால் கையாகி=கால்களும் கரங்களுங்கொண்டு, நாரி என்பில் ஆகும் ஆசம்=நாணி போன்ற நரம்பு எலும்பு இவைகளால் ஆகிய சரீரம்; அதனூடே=அந்த உடம்பினுள், நாதம் ஒன்ற=ஒலி (இந்திரியம்) பொருந்த, ஆதிவாயில்=தொழில்களுக்கு மூலமாகிய ஐம்பொறிகளி னுல், நாடகங்களான ஆடி=பல வகையான கூத்துக்களையாடி, நாடு அறிந்திடாமல் ஏக=இவ்வாறு உயிர் போயிற்று என்று உலகம் அறியாவகையில் செல்ல, வளராமுன்=இவ்வுடம்பு வளர்வதற்குமுன், நூல் அநந்த கோடிதேடி=கருவிநூல்களை பலகோடி தேடிப்படித்து, மால்மிகுந்து=மயக்கத்தையடைந்து, பாருளோரை=உலகில் உள்ள செல்வரை, நூறு செஞ்சொல் கூறி=நூற்றுக்கணக்கான செவ்வை யான சொற்களால் துதித்துப்பாடி, மாறி=புத்தி தடுமாறி, வினை தீமை=அதனுல் தீமை விளைந்து, நோய்கலந்த வாழ்வுஉருமல்= பலவகையான பிணிகளுடன் சேர்ந்து துன்ப வாழ்வை யடையாமல், நீ கலந்து=தேவரீர் அடியேனுடைய அறிவில் கலந்து, உள் ஆகு ஞான நூல் அடங்க ஓத=உள்ளுக்குள் பொருந்தும் ஞான சாத்திரங் கள் முழுவதும் ஓதியுய்யுமாறு, வாழ்வு தருவாயே=பேரின்ப வாழ் வைத் தந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

பாலராகிய மார்க்கண்டேயருடைய உயிரை வருத்த வேண்டும் என்று இயமன் வந்து பாசக்கயிற்றை வீசும் சமயம் வெளிப்பட்டு "அஞ்சேல் அஞ்சேல்" என்று அருள் புரிந்த ஆதிமுதல்வரும், மன்மதன் ஐந்து கணைகளுடன் வெந்து அழிய நெற்றிக்கண்ணைத் திறந்து பார்த்த மோன தேசிகரும், திருநீலகண்டரும் ஆகிய சிவமூர்த்தியுடன், வேதமுதலாகிய பிரணவத்தின் பொருளைப் பேசியவரே! ஆலகாலவிடந் தோன் றிய திருப்பாற்கடலில் பள்ளிகொணடிருந்து, கஜேந்திரம் ஆதிமூலம் என்று அழைக்க, அதன் அச்சத்தைத் தீர்த்த சக்கிராயுதபாணியும், ஆயர்குலக் கொழுந்தும் மாயா விநோ தருமாகிய நாராயணமூர்த்தியின் திருமருகரே! வேதங்கள் திருவடியைத் துதிக்க, சேவற்கொடியைத் திருக்கரத்தில் ஏந்தி, திருச்செந்தூரில் வாழுகின்ற அநாதிமூலமாகிய பெருமையின் மிக்கவரே! ஒன்பது வாசல்களைப் பிளந்து வைத்த பழிப்புக் கிடமாகிய இவ்வுடம்பு கால்கைகளைக்கொண்டு, நரம்பு எலும்பு களால் ஆகும் சரீரம். இவ்வுடம்புக்குள் நாதம் பொருந்தி, தொழில்களுக்கு மூலமாகிய மெய்வாய் கண் நாசி செவியென்ற ஐம்பொறிகளினுல் பலப்பல கூத்துக்களையாடி உயிர் எப்படிப்

போயிற்று என்று உலகம் அறியாத வகையில் இவ்வுடம்பு வீணில் வளர்ச்சியடையா முன்னும், பலகோடி நூல்களைப் படித்து மயக்கமுற்று, செல்வர்களை நூற்றுக் கணக்கான செம்மையான சொற்களைக் கொண்டு துதித்துப்பாடி, புத்தி தடுமாறி, அதனால் தீமையுற்று, நோய்களுடன் கூடிய வாழ்வை யடையா முன்னும், தேவரீர் என் உணர்வில் கலந்து, ஞானசாத்திரங்கள் யாவும் ஓதி உய்யுமாறு பேரின்பவாழ் வைத் தந்து அருள்புரிவீர்.

## விரிவுரை

**நாலுமைந்து வாசல் கீறு :—**

ஒன்பது வாசல்களோடு கூடியது இந்த உடம்பு.

"நவ தொளையுடைய குரம்பை" —*(நிணமொடு)* திருப்புகழ்.

**தூறுடம்பு :—**

*தூறு—அவதூறு; பழி. ஆன்றோர்கள் பழிப்பதற்கு இடமான சரீரம்.*

நாறுமுடலை நரிப்பொதி சோற்றினை நான் தினமும்
சோறுங் கறியும் நிரப்பிய பாண்டத்தைத் தோகையர் தம்
கூறும் மலமும் இரத்தமுஞ் சோரும் குழியில் விழா
தேறும் படி அருளாய் இறைவா கச்சி யேகம்பனே,

ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன் பொதிந்த
பீற்றல் துருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றில் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல் செய்தே
ஏற்றுத்திரிந்து விட்டேன் இறைவா கச்சி யேகம்பனே.
—பட்டினத்தடிகள்.

**நாரி என்பிலாகும் ஆகம் :—**

நாரி—நாண். நரம்பாலாயது. நாரி—நார் போன்ற நரம்பு. இனி, நாரி—பெண், பெண்பாலாகிய தாயாருடைய உடம்பி லிருந்து உண்டாகிய உடம்பு எனினும் அமையும்.

இந்த உடம்பு தாய் தந்தையர்களால் உண்டாகியது.

நாடியும் நாளமும் நவில் இள எலும்பும்
வெள்ளைநீரும் வெள்ளிய பற்களும்
தலைமயிர் நகமும் தந்தையின் கூறும்.
சிறிய குடலும் சிவப்புநீரும்
மருவிய கொழுப்பும் மன்னும் ஈரலும்
நுவல் நுரை ஈரலும் நோக்கு மிதயமும்
தசையு நிணமும் தாயின் கூறும், —உடல்நூல்.

**நாதம் ஒன்ற :—**

நாதம்—ஒலி. ஒலிக்கு வாயிலாக வாக்குகள் பொருந்த. அன்றியும் நாதம்—இந்திரியம் எனவும் பொருள்படும்.

**ஆதி வாயில் :—**

வாயில்—பொறி, தொழில்கள் நிகழ்வதற்கு முதன்மையான ஐம்பொறிகள்; கண், காது, மூக்கு, வாய், மெய்.

**நாடகங்களான ஆடி :—**

பலவகையான கூத்துக்களை இந்த உயிர் நடிக்கின்றது.

"கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி"

**நாடறிந்திடாமலேக வளராமுன் :—**

இந்த உயிர் எவ்வாறு பிரிகின்றது என்று உலகம் அறியாத வகையில் இது பிரிகின்றது. அப்படி உயிர் பிரிவதற்கு ஏதுவான இவ்வுடம்பு வறிதே வளர்ந்து என்ன பயன்?

**நூலநந்த கோடிதேடி......பாரு ளோரை நூறு செஞ்சொல் கூறி :—**

பலப்பல இலக்கண இலக்கியங்களைப் படித்து செல்வர்களைப் பலவாறு புகழ்ந்து பாடி அக்காலத்துப் புலவர் வீணில் கல்வியறிவைப் பாழ்படுத்தினர். கல்வியையும் அதனால் வந்த அறிவையும் இறைவனுக்கே உரியனவாக்குதல் வேண்டும்.

யாமோதிய கல்வியும் எம்மறிவும்
தாமேபெற வேலவர் தந்ததனுல்
பூமேன் மயல்போயற மெய்ப்புணர்வீர்
நாமே னடவீர் நடவீர் இனியே. —அநுபூதி. (17)

**நோய் கலந்த வாழ்வு :—**

இந்த உடம்புடன் கூடி வாழும் வாழ்வு; பல்வேறு நோய்களுக்கிடமுயது. சில்லாண்டும் பல்வியாதியும் உடைய இந்த உடம்புடன் கூடி வாழும்போதே இனி இந்த உடம்பு வராவகையைத் தேடிக் கொள்ளுதல் வேண்டும்.

**நீ கலந்து :—**

இறைவன் உயிரில் கலந்து இருக்கின்றான். ஆனால் பாலில் படுநெய் போல் மறைந்துள்ளான். அப் பரம்பொருளை இடையறாத தியானத்தினால், உணர்வில் கலக்குமாறு புரிந்தவர்க்கு தயிரில் நெய்போல் விளங்கித் தோன்றுவன்.

**ஞான நூலடங்க ஓத வாழ்வு தருவாயே:—**

ஞான சாத்திரங்கள் எல்லாவற்றையும் ஓதுதல் வேண்டும். எதனை உணர்ந்தால் எல்லாவற்றையும் உணர்ந்ததாக ஆகுமோ அதனை உணருதல் வேண்டும்.

ஞானநூல் என்பவை அறிவுநூல் எனப்படும்; அவையாவன: சிவஞானபோதம் முதலிய சாத்திரங்களாகும். சாத்திரங்கள் 14. தோத்திரங்கள் 12. திருமுறைகள் திருப்புகழ் முதலியவை. இவைகளை நாடோறும் ஓதி உய்வு பெறுதல் வேண்டும். "கற்பவை கற்க" என்பார் திருவள்ளுவர். "அறிவுநூல் கலாமூடர்" என்பார் வேறு திருப்புகழில்.

**காலன் வந்து பாலணுவி காய......ஓலம் ஓலம் எனுமாதி :—**

கடகம் என்ற இடத்தில் வாழ்ந்த குச்சக முனிவருடைய புதல்வர் கௌசிகர்; அவருடைய புதல்வர் மிருகண்டுமுனிவர்; அவருடைய புதல்வர் மார்க்கண்டேயர். இவருக்கு இறைவர் தந்தது பதினாறு ஆண்டு. ஆயுள் இறுதியில் இயமன் வந்து உயிரைப் பற்றும்பொருட்டு பாசக்கயிற்றை வீச, மார்க்கண்டேயர் அபயம் அபயம் என்று இறைவரைத் தஞ்சம் புக, இறைவர் சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு, மறலியையுதைத்து, என்றும் பதினாருக இருக்குமாறு மார்க்கண்டேயருக்குத் திருவருள் புரிந்தனர். இதன் விளக்கத்தை திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 56 ஆம் பக்கத்திற் காண்க.

**காமனைந்து பாணமோடு வேமினென்று காணுமோனர் :—**

கல்லாலின் புடையமர்ந்து, கண்ணுதற் கடவுள் சனகாதி நால்வருக்கும், எல்லாமாய் அல்லவுமாய், இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டி மோனநிலையில் அமர்ந்தனர். அதனால் உலகில் உள்ள உயிர்கள் யாவும் இணைவிழைச்சு இன்றியும் உயிர்கள் உற்பத்தியின்றியும் வாளா கிடந்தன. அதனாலும், குமரோற்பத்தி குறித்தும், மாலயனாதி வானவர், இறைவருடைய மோன நிலையை மாற்றும் பொருட்டு மன்மதனை யேவினார்கள். நெருப்பு மலையிடம் ஒரு சிறு ஈ சென்றதுபோல் பரஞ்சுடர் முன்னே மதனன் சென்று, கரும்புவில்லை வளைத்து சுரும்பு நாண் மாட்டி மலர்க்கணைகளைப் பொழிந்தான். தென் முகப்பரமாசிரியர் சிறிதே நெற்றிக் கண்ணைத் திறந்தனர். அதினின்றுந் தோன்றிய சிறு நெருப்புப் பொறியால் மதனன் சாம்பற்குவியலாக ஆனன். மாரனை யெரித்த அக் கண்ணினின்றும் குமாரன் தோன்றினர். நிக்கிரகம் அநுக்கிரகம் இரண்டையும் அத் திருவிழியே புரிந்தது.

சிவபெருமானை வழிபடுவோருக்குக் காமபயமில்லை என்பதும் ஒருதலை.

காலன் றனை யுதைத்தான் காமன் றனை யெரித்தான்
பாலன்பசிக் கிரங்கிப் பாற்கடலை—ஞாலமெச்சப்
பின்னை நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்
கென்னை நடக்கை யினி. —தாயுமானார்.

பிறவிக்குக் காரணமான அவாவை யுண்டுபண்ணுபவன் மன்மதன். இறப்பை யுண்டுபண்ணுபவன் மறலி. இந்த இருவரையும் இறைவர் உதைத்தும் எரித்தும் தண்டித்தனர். ஆதலின் இறைவழிபாடு அன்புடன் புரிபவர்க்கு இறப்பு பிறப்பு என்ற இடர் எய்தாது.

"மரணப்ரமாதம் நமக்கில்லையாம்" —அலங்காரம். (21)

"நமனையஞ்சோம்" —அப்பர்.

என்ற திருவாக்குகளை யெல்லாம் உன்னி உறுதி பெறுக.

**ஆனையஞ்சல் தீரும்......மருகோனே :—**

ஆதிமூலம் என்று அழைத்த ஆனைக்கு அருள்சுரந்த அரி முகுந்தனுடைய மருகர் முருகர். அநாதிமூலம்.

## கருத்துரை

சிவகுருவே! திருமால் மருகரே! செந்திலாண்டவரே! இந்த உடம்புடன் கூடித் துன்புறாமல் ஞான வாழ்வை அருள்வீர்.

## 38

நிதிக்குப் பிங்கலன் பதத்துக் கிந்திரன்
நிறத்திற் கந்தனென் றினவோரை
நிலத்திற் றன்பெரும் பசிக்குத் தஞ்சமென்
றரற்றித் துன்பகெஞ் சினில்நாளும்

புதுச்சொற் சங்கமொன் றிசைத்துச் சங்கடம்
புகட்டிக் கொண்டிடம் பழிமாயும்
புலத்திற் சஞ்சலங் குலைத்திட் டுன்பதம்
புணர்க்கைக் கன்புதந் தருள்வாயே

மதித்துத் திண்புரஞ் சிரித்துக் கொன்றிடும்
மறத்திற் றந்தைமன் றினிலாடி

மழுக்கைக் கொண்டசங் கரர்க்குச் சென்றுவண்
டமிழ்ச்சொற் சந்தமொன் றருள்வோனே
குதித்துக் குன்றிடந் தலைத்துச் செம்பொனுங்
கொழித்துக் கொண்டசெந் திலின்வாழ்வே
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே.

## பதவுரை

மதித்து = மனத்தில் எண்ணி, திண்புரம் = வலிமை நிறைந்த முப்புரங்களை, சிரித்து கொன்றிடும் = புன்னகை புரிந்து எரித்துவிட்ட, மறத்தில் தந்தை = வீரமுள்ள பிதாவும், மன்றினில் ஆடி = அம்பலத்தில் ஆனந்த நடனம் புரிபவரும், மழு கை கொண்ட = மழுவைத் தமது திருக்கரத்தில் கொண்டவரும் ஆகிய, சங்கரற்கு சென்று = சிவபெருமானுக்குக் குருவாகச் சென்று, வண் தமிழ் சொல் சந்தம் ஒன்று அருள்வோனே = வளமையான செந்தமிழ்ச் சொற்களால் வேதப் பொருளை உபதேசித்தவரே! குதித்து குன்று இடந்து அலைத்து = அலைகள் குதித்து குன்றுகளைத் தோண்டியலைத்து, செம்பொனும் கொழித்து கொண்ட = சிவந்த பொன்னையும் (மணியையும்) கொழித்துத் தள்ளுகின்ற, செந்திலின் வாழ்வே = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவரே! குறபொன் கொம்பை = குறவர் குலத்தில் வளர்ந்த பொற் கொம்பு போன்ற வள்ளி நாயகியை, முன் = முற்காலத்தில், புனத்தில் = தினைக் கொல்லையிலே, செம் கரம் குவித்து கும்பிடும் = செம்மையான திருக் கரங்களைக் கூப்பிக் கும்பிட்ட, பெருமாளே = தனிப்பெருந் தலைவரே! நிதிக்கு = செல்வத்துக்கு, பிங்கலன் = குபேரன் என்றும், பதத்துக்கு = நல்ல பதவிக்கு, இந்திரன் = தேவர் கோமான் என்றும், நிறத்தில் = பொன் போன்ற நிறத்துக்கு, கந்தன் = கந்தப் பெருமான் என்றும் புகழ்ந்து கூறி, இனையோரை = கொடுப்பதற்கு வருந்துகின்ற தனவந்தரிடம் போய், நிலத்தில் = இப்பூதலத்தில், தன் பெரும் பசிக்கு தஞ்சம் என்று அரற்றி = எனது பெரிய பசியை மாற்றுதற்கு நீயே புகலிடம் என்று கூறி முறையிட்டு, துன்ப நெஞ்சினில் = துன்பங் குடிகொண்ட மனதினில், நாளும் புது சொல் சங்கம் ஒன்று இசைத்து = புதிய சொற்களின் கூட்டத்தால் கவி ஒன்றைப் பாடி, சங்கடம் புரட்டிக் கொண்டு = சங்கடத்தில் மாட்டிக்கொண்டு, உடம்பு அழி மாயும் = சிறந்த இந்த உடம்பு அழியும்படி மாய்கின்ற, புலத்தில் சஞ்சலம் குலைத்திட்டு = புலன்களால் வருகின்ற துன்பங்களைத் தொலைத்து, உன் பதம் புணர்க்கைக்கு = தேவரீருடைய திருவடியைச் சேர்வதற்கு உரிய, அன்பை தந்து அருள்வாயே = அன்பினை வழங்கி அருள்புரிவீர்.

## பொழிப்புரை

திருவுளத்தில் சிந்தித்து வலிய முப்புரத்தைப் புன்னகையால் எரித்து அழித்த வீர மூர்த்தியாகிய தந்தையும், பொன்னம்பலத்தில் ஆனந்த நடனம் புரிபவரும், மழுவைத் திருக்கரத்தில் ஏந்தியவரும், சுகத்தைச் செய்பவரும் ஆகிய சிவபெருமானுக்குக் குருவாகச் சென்று, வளமையான தமிழ்மொழியால் வேதத்தின் உட்பொருளை உபதேசித்தவரே! அலைகள் குதித்துக் குன்றுகளைத் தோண்டியலைத்து, முத்து மணியையும் செம்பொன்னையுங் கொழிக்கின்ற திருச்செந்தூரில் வாழ்கின்றவரே! குறவர் குலத்தில் வளர்ந்த பொற்கொம்பு போன்ற வள்ளி பிராட்டியாரை முற்காலத்தில் சிவந்த திருக்கரங்களைக் கூப்பிக் கும்பிட்ட தனிப்பெருந் தலைவரே! பொருள் கொடுக்க வருந்துவோரிடம் போய், பொன்னுக்குக் குபேரன் என்றும், பதவியின் சிறப்புக்கு தேவேந்திரன் என்றும், அழகுக்கு முருகப் பெருமான் என்றும் புகழ்ந்து கூறி, இப்பூதலத்தில் என் பெரும் பசியை மாற்றப் புகலிடம் நீயே என்று முறையிட்டு, துன்பங்கொண்ட மனதில் ஆய்ந்து புதிய புதிய சொற்களின் கூட்டத்தால், ஒரு பாடலை அமைத்துச் சொல்லும் சங்கடத்தில் கிடந்து உடல் அழிகின்ற வனுகி, புலன்களால் வரும் துன்பங்களைத் தொலைத்துத் தேவரீருடைய திருவடியைச் சேர்வதற்கு வேண்டிய அன்பினை அடியேனுக்குத் தந்து அருள் புரிவீர்.

## விரிவுரை

**நிதிக்குப் பிங்கலன்** :—பிங்கலன்—குபேரன்.

இந்தப் பாடலிலும் தனவந்தர்களைப் புகழ்ந்துபாடும் செயலையே அடிகளார் மீட்டுங் கூறுகின்றார். அக்காலத்தில் புலவர்களமாட்டு இந்த செயல் மிகுதியாக இருந்தது. கொடாதவனைக் காமதேனு என்றும் கற்பகத்தரு என்றும் கூறித் திரிந்தனர். தனவந்தனிடம் போய், "நீ செல்வத்தில் குபேரனுக்குச் சமானம்" என்று கூறுவர்.

**பதத்துக் கிந்திரன்** :—

பதத்தில் சிறந்தது இந்திர பதம். பொன்னுலகம்; கற்பக நிழல்; காமதேனு, சிந்தாமணி; உச்சைசிரவம்; ஐராவதம்; இந்திராணி, அரம்பை முதலிய அரமகளிர்; தேவாமிர்தம் முதலிய உயர்ந்த பொருள்களை நுகர்ந்து இன்புறுகின்ற பதவி இந்திர பதவி. ஆனால் இதனை ஆன்றோர்கள் விரும்புவதில்லை.

"மேலையிந்திரன் அரசினைக் கனவிலும் வெஃகேன்" —கந்தபுராணம்.

"இந்திரலோக மாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்"—பிரபந்தம்.

எனவே, செல்வம் படைத்தவரை 'நீ இந்திரன்' என்று புகழ்ந்துரைப்பர். "இந்திரராகிப் பார்மேல் இன்பமுற் றினிது மேவி" என்பது கந்தபுராணம்.

**நிறத்தில் கந்தன் :—**

"ஒளி, அழகு முதலிய சிறப்பில் நீ முருகப் பெருமான்" என்று கூறுவர். தனக்குவமையில்லாத தனிப்பெருந்தலைவனை உவமித்து உலோபரைப் புகழ்வர். என்னே மதி?

**இனைவோரை :—இனைதல்—வருந்துதல்.**

இனைவோர்—வருந்துவோர். யாசகர் வந்த விட்டால் "ஐயோ! இவன் வந்துவிட்டானே! என்ன செய்வது? எப்படித் தப்பித்துக் கொள்வது?" என்று மனவருத்தங் கொள்வார். உலோபத்தனத்தால் செல்வம் இருந்தும் மனம் வராமல் யாசகரைக் கடிந்து பேசுவர்; ஒளித்துக் கொள்வர். இப்படிப் பல்வேறு நிலையடைவர் உலோபர்.

உலோப குணம் மனிதனுடைய நல்ல குணங்கள் எல்லாவற்றையும் மறைத்துவிடும். தீய குணங்களை எல்லாம் ஒருங்கே மறைக்கும் தரும குணம். தாடகை தன் வனத்தின் வளமைகளை யெல்லாம் ஒரே நாளில் ஒருங்கே அழித்து விட்டாள். மரம் செடி கொடி முதலிய அனைத்தையும் பொடி செய்து அடியுடன் அழித்து விட்டாள். கம்ப நாடர் கூறுகின்றார்.

"உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே
அளப்பரும் குணங்களை அழிக்குமாறு போல்
கிளப்பரும் கொடுமைய வரக்கி கேடிலா
வளப்பரும் மருதவைப் பழித்து மாற்றினள்"

**நிலத்தில் தன்பெரும் பசிக்குத் தஞ்சமென்......நெஞ்சினில் :—**

மேலும் அப் பொருளாளரைப் புலவர், "ஏ! தருமகுண சீலரே! எனக்குப் பெரும்பசி. இப்பசியை மாற்ற நீயே தஞ்சம் (புகலிடம்) என்று வாய்விட்டு முறையிடுவர். அப்படி முறையிட்டும் அவர் உதவி செய்யாமையால் நெஞ்சில் துன்பமுற்றுத் தவிப்பர்.

**புதுச் சொற் சங்க மொன்றிசைத்து :—**

புதிய புதிய அழகிய சொற்களை ஒன்று கூட்டி சதுரப் பாடாகக் கவி பாடுவது.

**சங்கடம் புரட்டிக் கொண்டுடம் பழிமாயும் :—**

இதனால் துன்பமெய்தி திரிந்து திரிந்து உடல் தேய்ந்து மாய்ந்து ஒழிவர்.

ஒரு சமயம் இரட்டைப் புலவர்கள் மலையும் காடுமாக நடந்து வெய்யில், மழை, காற்று, பனி முதலிய இடர்களைத் தாங்கி அலைந்தபோது ஒருவர் கூறினார். "இவ்வாறு நாம் குன்றும் வனமும் குறுகி நடந்து திரிகின்ற இவ் விடர்ப்பாடு விலகாதோ?" மற்றொருவர் கூறுகின்றார். "இந்த இடர் என்றும் நம்மைவிட்டு அகலாது, ஏன் எனில்? ஒரு அணுவளா வுந் தராதவனைக் காமதேனு என்றும், சங்கநிதி என்றும் புகழ்ந்து பொய்யுரை புகல்கின்றோம்; அப் பொய்யே நம்மை வாட்டுகின்றது" என்றார்.

குன்றும் வனமுங் குறுகி வழிநடந்து
சென்று திரிவதென்றுந் தீராதோ—ஒன்றுங்
கொடாதவனைச் சங்கென்றுங் கோவென்றும் சொன்னால்
இடாதோ அதுவே இது.

**புலத்தில் சஞ்சலம் :—**

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்களால் துன்பம் விளைகின்றது.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை" —சிவஞானபோதம்.

"ஐம்புல மகற்றி வளர் அந்தி பகல் அற்ற நினைவு அருள்வாயே"
—(ஐங்கரனை) திருப்புகழ்.

ஐம்புலன்கள் நம்மைப் படுத்தும் பாடு கொஞ்சமல்ல.

ஓரவொட்டார் ஒன்றை யுன்ன வொட்டார் மலரிட் டுனதாள்
சேரவொட்டார் ஐவர் செய்வ தென்யான்? சென்று தேவருய்ய
சோர நிட்டூரனைச் சூரனைக் காருடல் சோரி கக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப் போதினில் கொன்றவனே.
—கந்தரலங்காரம். (4)

சுவை ஒளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு. —திருக்குறள்,

உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து. —திருக்குறள்.

ஆதலால் ஞானமென்ற அங்குசத்தால் ஐம்புலன்களாகிய மத யானைகளை அடக்குவார் துன்புறாது இன்புறுவர்.

**உன் பதம் புணர்க்கைக் கன்புதந் தருள்வாயே :—**

இறைவனுடைய பாதம் இன்பமயமானது. அதனை அடைந்தால் அல்லது ஆன்மாவுக்கு ஆறுதல் இல்லை.

தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. —திருக்குறள்.

அத் திருவடியைச் சேரும் நெறி அன்பு நெறியேயாகும். அன்புடையவர்களாக ஆகவேண்டும்.

**மதித்து :**—மதித்தல்—நினைத்தல்.

முப்புராதிகள் அமரரை அல்லல் படுத்தினர். மாலயனாதி வானவர்கள் சிவபெருமானிடம் வந்து முறையிட்டார்கள். திரிபுராதிகள் சிவ பக்தியுடையவர்கள் ஆதலின் சிவபெருமான் அவர்களை யழிக்க இணங்கவில்லை.

அப்போது நாரதரைச் சீடராக்கிக் கொண்டு திருமால் புத்தாவதாரங் கொண்டு, திரிபுராதிகளின் நகரில் வீதிவீதியாகச் சென்று 'கடவுள் பற்று வேண்டா' என்று பிரசாரம் புரிந்தனர். அதனால் தலைவர்களாகிய கமலாட்சன், தாரகாட்சன், வித்யுன்மாலி என்ற மூவரைத் தவிர ஏனையோர் யாவரும் சிவபக்தி குலைந்து உறுதி யிழந்தனர்.

பின்னர் தேவர்கள் சிவபெருமானிடஞ் சென்று முறையிட்டனர். அன்றியும் சிவபிரானுடைய ஆற்றலை யறியாது அவர் போருக்குப் புறப்படும் பொருட்டு, தேர் வில் அம்பு முதலியவற்றை ஆயத்தஞ் செய்து தந்தார்கள். திருமால் அம்பு, பிரமன் தேர்ப்பாகன், வாயு அம்பின் குதை; அக்கினி அம்பின் வாய்; தேவர்கள் தேர்ப் பதுமைகள்; சந்திர சூரியர் தேர்ச் சக்கரங்கள். ஒவ்வொரு தேவனும் நாம் துணை செய்வதனால்தான் திரிபுரவதம் நடைபெறப் போகின்றது என்று கருதிச் செருக்குற்றனர்.

இதனைச் சிவபெருமான் மதித்தனர். இந்த இடத்தைக் குறிக்கின்றது மேலேயுள்ள "மதித்து" என்ற சொல். சிவமூர்த்தி "நமக்குத் தேரும் வில்லும் அம்பும் வேண்டுமோ?" எனக் கருதி சிறிது சிரித்தனர். சிவபக்தி மாறாத அந்த மூன்று தலைவர்கள் நீங்க ஏனையவருடன் திரிபுரம் சாம்பராயிற்று.

**மழுக்கை கொண்ட சங்கரன் :—**

இறைவன் ஒரு திருக்கரத்தில் மானும் ஒரு திருக்கரத்தில் மழுவும் ஏந்திக் கொண்டிருக்கின்றனன். சம—சுகம். கரன்—செய்கின்றவன். சுகத்தை ஆன்மாக்களுக்குச் செய்கின்றவன் சங்கரன்.

**வண்டமிழ்ச்சொற் சந்தமொன் றருள்வோனே :—**

வண்—வளமை. சந்தம்—வேதம். வளமையான தமிழ்ச் சொற்களால் வேதத்தின் முதலெழுத்தாகிய பிரணவத்தின் உட்பொருளை முருகன் சிவபிரானுக்கு உபதேசித்தனர்.

"கொன்றைச் சடையர்க் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே"
—(அம்பொத்தவிழி) திருப்புகழ்.

**குதித்துக் குன்றிடந் தலைத்துச் செம்பொனும் கொழித்துக் கொண்ட செந்திலின் வாழ்வே :—**

திருச்செந்தூர் கடற்கரையில் உள்ள திருத்தலம். கடல் அலைகள் ஒழியாது அருகில் உள்ள குன்றுகளின் அடியில் வந்து வந்து மோதி அதனைத் தொளைக்கின்றன. சங்கும் முத்தும் பொன்னும் கொழிக்கின்றன.

கடலில் பொன் மணி முதலியன அடங்கியிருக்கின்றன. அதனால் சமுத்திரம் ரத்னாகரம் எனப்படும்.

## கருத்துரை

சிவ குருவே! செந்தில் நாயகரே! வள்ளி மணவாளரே! மனிதரைப் பாடாது உமது பாதத்தில் அன்பினை வைக்கும்படி யருளுவீர்.

## 39

நிலையாப் பொருளை உடலாக் கருதி
நெடுநாட் பொழுது மவமேபோய்
நிறைபோய்ச் செவிடு குருடாய்ப் பிணிகள்
நிறைவாய்ப் பொறிகள் தடுமாறி

மலநீர்ச் சயன மிசையாப் பெருகி
மடிவேற் குரிய நெறியாக
மறைபோற் றரிய ஒளியாய்ப் பரவு
மலர்தாட் கமல மருள்வாயே

கொலைகாட் டவுணர் கெடமாச் சலதி
குளமாய்ச் சுவற முதுசூதம்
குறிபோய்ப் பிளவு படமேற் கதுவு
கொதிவேற் படையை விடுவோனே

அலைவாய்க் கரையின் மகிழ்சீர்க் குமர
அழியாப் புநித வடிவாகும்
அரனுர்க் கதித பொருள்காட் டதிப
அடியார்க் கெளிய பெருமாளே.

## பதவுரை

கொலை காட்டு அவுணர் கெட=கொலையே புரிகின்ற அசுரர்கள் அழியவும், மா சலதி குளமாய் சுவற=பெருங்கடல் குளம்போல் வற்றிப் போகவும், முதுசூதம் குறிபோய் பிளவுபட=முதிர்ந்த மாமரமானது குறியின்படி பட்டு பிளந்து அழியவும்=மேல்கதுவு கொதிவேல் படையை விடுவோனே=மேலே பற்றும்படியாக எரி வீசும் வேலாயுதத்தை விடுத்தவரே! அலைவாய் கரையின் மகிழ்=கடல் அலைக்கரையில் (திருச்செந்தூரில்) மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கின்ற, சீர் குமர=சிறப்பு வாய்ந்த குமாரக் கடவுளே! அழியா புநித வடிவு ஆகும் அரனுர்க்கு=அழியாத பரிசுத்த வடிவுடைய சிவபெருமானுக்கு, அதித பொருள்காட்டு அதிப=எல்லாங் கடந்த பொருளை விளக்கிக் காட்டி உபதேசித்த தலைவரே! அடியார்க்கு எளிய பெருமாளே=அடியவர்க்கு எளியராய் இருந்து அருள்புரியும் பெருமையின் மிகுந்தவரே! நிலையா பொருளை உடலா கருதி=நிலையில்லாத பொருள்களைப் பொன்போல் நினைத்து, நெடுநாள் பொழுதும்=அந்த அழிகின்ற பொருளை ஈட்டும் பொருட்டு நெடுங்காலமாகவும், அவமே போய்=வீணுகக் காலத்தைத் தொலைத்து, நிறைபோய்=மனத் திண்மை நீங்கி, செவிடு குருடாய்=செவிடாகியும், குருடாகியும் பிணிகள் நிறைவாய்=நோய்கள் நிறைந்தும், பொறிகள் தடுமாறி=ஐம் பொறிகளும் தடுமாற்றத்தையடைந்தும், மலம் நீர் சயன மிசையாய் பெருகி=மலமும் நீரும் படுக்கை மீதிலேயே பெருகி, மடிவேற்கு=இறந்துபடுகின்ற அடியேனுக்கு, உரிய நெறியாக=உரிய முத்தி நெறியாக, மறைபோற்ற அரிய=வேதங்களால் போற்றுதற்கு அரிதான, ஒளியாய் பரவு=ஞான ஒளிவீசி விரிந்துள்ள, மலர்தாள் கமலம் அருள்வாயே=மலர்தலைப் புரியும் உமது திருவடியை அருள்புரிவீர்.

## பொழிப்புரை

கொலையே புரிகின்ற அவுணர்கள் அழியவும், பெரிய சமுத்திரம் குளம்போல் வற்றி விடவும், முதிர்ந்த மாமரமானது குறிதவருது பிளந்து போகவும் மேல்பட்டு கொதிக்கின்ற வேலாயுதத்தை விடுத்தவரே! கடற்கரையில் மகிழ்ச்சியுடன் எழுந்தருளியிருக்கும் சிறந்த குமாரக் கடவுளே! அழிவில்லாத பரிசுத்தமான வடிவுடைய சிவபெருமானுக்கு உயர்ந்த பிரணவ மந்திரப் பொருளை உபதேசித்த தலைவரே!

அடியவர்க் கெளியவரே! பெருமிதம் உடையவரே! நிலையில்லாத பொருள்களைப் பொன்போல் கருதி நெடுங்காலமாக வீண் காலம் போக்கி, மனத்தில் நிறைவும் அற்று, செவிடாகியும் குருடாகியும், நோய்கள் பல நிறைந்தும், ஐம்பொறிகள் தடுமாற்றத்தையடைந்தும், படுக்கைமீது மலமும் நீரும் பெருக மாள்கின்ற அடியேனுக்கு முத்திநெறி உரியதாகுமாறு வேதங்கள் போற்றுதற்கு அரிய எங்கும் ஒளிமயமாய் விரிந்துள்ள மலர்தலைப் புரியும் தாமரை போன்ற திருவடிகளை அருள் புரிவீர்.

## விரிவுரை

**நிலையாப் பொருளை உடலாக் கருதி :—**

நில்லாது அழிகின்ற பொருளை நிலையானது என்று அறிகின்ற அறிவே மிகவும் தாழ்மையானது.

> நில்லாதவற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை. —திருக்குறள்.

உடல்—பொன். அழிகின்ற அற்பமான பொருள்களையெல்லாம் பொன்னே போல் உயர்வாகக் கருதி மாந்தர் மலைந்து மயங்கித் திரிகின்றனர்.

அரசசெல்வ மெல்லாம் ஓடுகின்ற நீரில் எழுதிய எழுத்துக்கு நிகராகும்.

> "தேரில் கரியில் பரியில் திரிபவர் செல்வ மெல்லாம்
> நீரில் பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே"
> —அலங்காரம். (49)

**நெடுநாட் பொழுது மவமேபோய் :—**

ஆன்ம யீடேற்றத்துக்கு உரிய வழி யாது என்று அறிந்து அதன்படி நின்று உய்யாமல், இறைவன் தந்த விலைமதிக்க முடியாத வாழ்நாளை அவமே கழித்து மடிகின்றனர் பலர்.

**நிறைபோய் :—**

மனத்தில் உள்ள திட்பம் கழிந்து மனவலிமை யின்றி நிற்றல்.

**செவிடு குருடாய் :—**

வயது முதிர்வதால் செவி கேட்குஞ் செயல் அற்றும், கண் காணும் ஆற்றலற்றும் பெருந்துன்பம் எய்தும். அந்நிலை வருமுன் நன்னிலை பெறவேணும்.

**பிணிகள் நிறைவாய் :—**

அப்பொழுது பல்வேறு நோய்கள் வந்து உறவாடும். ஒரு நோய்க்கு மருந்து கொடுத்துத் தணித்தால் மற்றொரு நோய் தலை நீட்டும். சோந்தாப்போல் பல பிணிகள் சூழ்ந்து வாட்டும். "பல நோயும் நிலுவை கொண்டது" என்கின்றார் பிறிதொரு திருப்புகழில்.

**பொறிகள் தடுமாறி :—**

மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐம்பொறிகளும் தமது நிலையினின்றும் தடுமாற்றத்தை யடையும்.

'புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு'

என்பது திருஞானசம்பந்தர் திருவாக்கு.

**மடிவேற்குரிய நெறியாக :—**

"சலமலங்களின் நாற்ற மிகுந்து, வீணே அழிகின்ற அடியேனுக்கு, முத்தி நெறி உரிமையாக அருள்புரிவீர்'! என்று அடிகளார் முருகனை வேண்டுகின்றார்.

**மறை போற்றரிய ஒளியாய்ப் பரவு :—**

இறைவனுடைய திருவடியின் பெருமையை வேதங்களாலும் போற்றுதற்கு ஒண்ணாது.

"ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்தாளும்"
—(தோலெலும்பு) திருப்புகழ்.

திருவடியின் ஒளி நூறுகோடி சூரியப் பிரகாசம் போன்றது.

"உததியிடை கடவு மரகத வருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதய மென"
—சீர்பாத வகுப்பு.

**மலர் தாட் கமலம் :—**

மலர் தாள் என்பதற்கு மலரைப் போன்ற தாள் என்று பொருள் செய்தல் பொருந்தாது. ஏன்? மலர் போன்ற தாள் என்பது உவமைத் தொகையாகும். "அங்ஙனமானால் வல்லின மெய் சேர்ந்து மலர்த்தாள் என்று வரவேண்டும். ஆதலின் உலகத்தை மலர்விக்கும் பாதம் எனப் பொருள் செய்யப் பெற்றது. 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்' என்ற சேக்கிழார் திருவாக்கினாலும் அறிக.

"போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்"
—திருவாசகம்.

**சூதம் ;—**

சூதம்—மாமரம். சூரபன்மன் இறுதியில் உறுதியிழந்து கடல் நடுவில் இரும்பு மயமான மாமரமாகித் தலை கீழாக நின்றான். முருகனுடைய வேற்படை அம் மாமரத்தைப் பிளந்தழித்தது.

... ... ... ... ... ... "கவிழ் இணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்இசைச் செவ்வேல்சேஎய்" —திருமுருகாற்றுப்படை,

**அலைவாய்க் கரையில் மகிழ்சீர்க் குமர :—**

அலைவாய் என்பது திருச்செந்தூர். இது திருச்சீரலைவாய் எனப் பெறும் அருமை பெருமை நிறைந்த திருத்தலம். இயற்கை வளம் செறிந்தது. சகல கவலைகளையும் தீர்க்க வல்லது. ஒரு காலத்தில் இத் தலத்தில் சங்கப் புலவர்கள் இருந்து தமிழ் ஆராய்ந்தார்கள். புலவர்கட்கு உறைவிடமான செந்தமிழ்ப்பதி செந்திலம்பதி.

"செஞ்சொற்புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்திற் பதிநகர் உறைவோனே" —(வஞ்சத்து) திருப்புகழ்.

**அழியாப் புநித வடிவாகும் அரனார் :—**

சிவபெருமானுடைய திருவுருவம் திருவருளேயாகும். அது தூய வடிவம். ஏனோர்க்குள்ளது மாய வடிவம். இறைவனுடைய அருள்வடிவம் என்றும் அழியாதது.

**அதித பொருள் காட்டதிப :—**

முருகவேள் முக்கட் பெருமானுக்கு மொழிந்த பொருளே எல்லா வேதாகமங்களுக்கும் மேலானது. கந்தக் கடவுள் எல்லாத் தேவர்கட்கும், மூவர்கட்கும் தலைவர்.

"அகரமுமாகி அதிபனுமாகி அதிகமுமாகி அகமாகி"
—திருப்புகழ்.

## கருத்துரை

சூரனைத் தடிந்த வீரமூர்த்தியே! சிவமூர்த்திக்கு உபதேசித்த தவமூர்த்தியே! செந்திலம்பதியுறை செவ்வேளே! உமது திருவடியைத் தந்தருள்வீர்.

## 40

பஞ்ச பாதக முறுபிறை யெயிறெரி
குஞ்சி கூர்விட மதர்விழி பிலவக
பங்க வாண்முக முடுகிய நெடுகிய திரிசூலம்
பந்த பாசமு மருவிய கரதல
மிஞ்சி நீடிய கருமுகி லுருவொடு
பண்பி லாதொரு பகடது முதுகினில் யமராஜன்

அஞ்ச வேவரு மவதர மதிலொரு
தஞ்ச மாகியெ வழிவழி யருள்பெறும்
அன்பி னுலுன தடிபுக ழடிமையெ னெதிரேநீ
அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்த மோகர மயிலினி லியலுடன் வரவேணும்

மஞ்சு போல்வள ரளகமு மிளகிய
ரஞ்சி தாம்ருத வசனமு நிலவென
வந்த தூயவெண் முறுவலு மிருகுழை யளவோடும்
மன்றல் வாரிச நயனமு மழகிய
குன்ற வாணர்த மடமகள் தடமுலை
மந்த ராசல மிசைதுயி லழகிய மணவாளா

செஞ்சொல் மாதிசை வடதிசை குடதிசை
விஞ்சு கீழ்திசை சகலமு மிகல்செய்து
திங்கள் வேணியர் பலதளி தொழுதுயர் மகமேரு
செண்டு மோதின ரரசரு ளதிபதி
தொண்ட ராதியும் வழிவழி நெறிபெறு
செந்தில் மாநக ரினிதுறை யமரர்கள் பெருமாளே.

### பதவுரை

மஞ்சுபோல்வளர் = மேகத்தைப்போல் கரியநிறத்துடன் வளர்ந்துள்ள, அளகமும் = கூந்தலும், இளகிய = (கேட்டவுடனே) மனதை இளகச்செய்யும் மேன்மையானதும், ரஞ்சித = இனிமையுடையதும், அம்ருத = அமிர்தத்தை யொத்ததுமாகிய,வசனமும் = இன்மொழியும், நிலவு எனவந்த = சந்திரனது ஒளியைப்போல் விளங்கியதும், தூய வெண் = பரிசுத்தம் பொருந்தியதும் வெண்ணிறத்தோடு அழகுசெய்வதுமாகிய, முறுவலும் = இளநகையும், இருகுழை அளவு ஓடும் = (காது

களில் அணிந்துள்ள) இரண்டு தோடுகள்வரை நீண்டுள்ளதும், மன்றல் வாரிச = வாசனைதங்கிய தாமரை மலரை யொத்ததுமாகிய, நயனமும் = கண்களும், அழகிய = (மேற்கூறிய அவயவங்கள் முழுவதும்) அழகுடைய, குன்றவாணர் தம் = குன்றுகளில் வாழும் வேடர்களது, மடமகள் = மடமைத்தன்மை பொருந்திய குமாரியாகிய வள்ளிநாயகியாரது, தடமுலை = பெருத்த தனங்களாகிய, மந்தர அசலமிசை = மந்தரகிரிகளின்மீது, துயில் = நித்திரை செய்கின்ற, அழகிய = கட்டழகிற் சிறந்த, மணவாளா = நாயகரே! செஞ்சொல் மாதிசை = செம்மையுடைய தமிழ் மொழியாற் சிறந்து விளங்கும் தென்திசை, வடதிசை = வடதிசை, குடதிசை = மேல்திசை, விஞ்சு கீழ்திசை = பெருமை மிகுந்த கீழ்திசை, சகலமும் இகல்செய்து = (அக்கினி, நிருதி, வாயு, ஈசானன், மேல், கீழ் என்னும்) ஏனைய திசைகளிலும் போர் புரிந்து (வெற்றி புனைந்து), திங்கள் வேணியர் = சந்திரனைச் சூடிய சடைமுடியராகிய சிவபெருமானது, பலதளி தொழுது = ஆலயம் பலவுஞ் சென்று வழிபாடுசெய்து, உயர் மகமேரு = உயர்ந்துள்ள மகாமேருகிரியை, செண்டு மோதின = செண்டால் எறிந்த, அரசருள் அதிபதி = அரசர்களுக்கெல்லாந் தலைவரே! தொண்டர் ஆதியும் = அடியார் முதலானவர்களும், வழிவழி நெறிபெறு = வழிவழியாக என்று மழியா இன்பநெறியைப் பெறும்படியான, செந்தில்மாநகர் = பெருமை பொருந்திய செந்திலம்பதியில், இனிது உறை = இனிமையாக வாழுகின்ற, அமரர்கள் பெருமாளே = தேவர்களுக்குத் தலைவராக விளங்கும் பெருமையுடையவரே!, பஞ்சபாதக = கொலை களவு கள் காமம் சூது என்னும் ஐந்து பாதகங்களையும், உறு = தாக்கும், (இயமன்) பிறை எயிறு = பிறைத்திங்களையொத்த பற்களும், எரிகுஞ்சி = கொழுந்துவிட்டெரியும் அக்கினி போன்ற சிவந்த மயிரும், கூர்விட மதர்விழி = கூர்மையானதும் விடத்தைப்போல் வெப்பத்தைச் செய்வதும் செருக்குள்ளதுமான கண்களும், பிலவக = குரங்கு போன்ற, பங்கவாள்முக-பங்கமுடைய ஒளிவீசும் முகமும், முடுகிய நெடுகிய திரிசூலம் = வல்லபத்துடன் நீண்டுள்ள திரிசூலமும், பந்தபாசமும் = கட்டும்படியான பாசக்கயிறும், மருவிய கரதல = பொருந்தியுள்ள கைகளும், மிஞ்சி நீடிய = வலிமிகுந்து நீண்டுள்ளதும், கருமுகில் உருவொடு = கரியமேகத்தை யொத்ததுமாகிய பெரிய ரூபத்துடன், பண்பு இலாது = குணமில்லாத, ஒரு பகடு அதுமுதுகினில் = ஓர் எருமைக்கிடா வாகனத்தின் பிடரிமேல், யமராஜன் = இயமன். அஞ்சவேவரும் அவதரமதில் = அடியேன் பயப்படுமாறு கோர ரூபத்துடன் வருகிற சமயத்தில், ஒரு தஞ்சம் ஆகியெ = ஒப்பற்ற துணையாகி, வழிவழி அருள்பெறும் = வழிவழியாக அருள் பெறுகின்ற, அன்பினால் = பக்தியால், உனது அடிபுகழ் = தேவரீரது திருவடிகளைப் புகழ்ந்து துதிக்கும், அடிமை என் = அடிமையாகிய நாயேனது, எதிரே = எதி

ராக, அண்ட கோளகை = வட்டவடிவான அண்டகடாகங்களெல்லாம், வெடிபட = அதிர்ச்சியால் பிளந்துபோகவும், எண் திசாமுகம் இடிபட = எட்டுத் திக்குகளும் இடிந்து தூள்படவும், மடமடநடமிடும் = மடமட என்னும் ஒலியுண்டாகுமாறு நடனம் புரியும், அந்த மோகர = அந்த உக்கிரமான, மயிலினில் = மயில்வாகனத்தின் மீதூர்ந்து, இயலுடன் நீ வரவேணும் = அருட்குணத்துடன் தேவரீர் வந்து அருள்புரியவேண்டும்.

## பொழிப்புரை

காரண்ட மேகம்போல் கரியநிறத்துடன் வளர்ந்த கூந்தலும், மெல்லிய தன்மையும் இனிமையும் உடையதும் அமிர்தத்தையொத்ததுமாகிய இனிய மொழியும், சந்திர ஒளிபோல் குளிர்ச்சியும் பரிசுத்தமும் பொருந்தியதும் வெண்ணிறமுடையதுமாகிய இளநகையும், இரு காதுகளிலுமணிந்துள்ள தோடுகள் வரை நீண்டுள்ளதும் வாசனை பொருந்திய தாமரை மலரை நிகர்த்ததுமாகிய விழிகளும், அழகிற் சிறந்து விளங்கும் வேடர் மகளாகிய வள்ளிநாயகியாரது மந்தரமலைபோல் பருத்துள்ள தனங்களின்மேல் துயில்புரியும் அழகிய மணவாளரே! கனத்த செந்தமிழ் மொழியால் சிறப்புறும் தென்திசை வட திசை மேல் திசை பெருமை மிகுந்த கீழ்த்திசை முதலிய எல்லாத் திசைகளிலும் போர்செய்து வெற்றியடைந்து, சந்திரசேகரராகிய சிவபெருமானது திருவாலயங்கள்தோறும் வழிபாடு செய்து, உயர்ந்த மகாமேருகிரியைச் செண்டாலெறிந்த அரசர்க்கரசரே! தொண்டர் முதலியோர்களும் வழிவழியாக இன்பநெறியைப் பெறும் புனித க்ஷேத்திரமாக விளங்கும் திருச்செந்தூரில் இனிமையாக வாழும் அமரர் போற்றும் பெருமையுடையவரே! பஞ்சபாதகங்களைத் தாக்கியழிக்கும் கூற்றுவன் பிறைச்சந்திரனையொத்த வக்கிர தந்தங்களுடனும், அக்கினிபோற் சிவந்து விரித்த தலைமயிருடனும், கூர்மையான விடங்களைப் பொழியும் செருக்குடைய கண்களுடனும், குரங்குபோன்ற பங்கமுடைய ஒளிவீசும் முகமுடனும், வலிமிகுந்த நீண்ட திரிசூலத்தையும், கட்டுகின்ற பாசக்கயிற்றையுந்தாங்கிய கரதலங்களுடனும், மிக உயர்ந்து கருமேகம்போற் பயங்கரத்தைத் தருவதாகிய சரீரத்துடனும் (இத்தகைய கோர வடிவத்துடன்) குணமில்லாத எருமை வாகனத்தின்மேல் அடியேன் அஞ்சுமாறு வருகின்ற சமயத்தில், வழிவழியாக அருள்பெறும் அன்பினால் தேவரீரது திருவடிகளைப் புகழும் அடிமையாகிய நாயேனது எதிராக, அண்டகடாகங்கள் அதிர்ச்சியால் பிளந்து போகவும் எட்டுத் திசைகளும் இடிபடவும் மடமட என்ற ஒலியுடன் நடம்புரியும் உக்கிரம் பொருந்திய அந்த மயில் வாகனத்தின் மீது தேவரீர் எழுந்தருளி வரவேண்டும்.

## விரிவுரை

**பஞ்சபாதக :—**

கொலை, சூது, கள்ளுண்ணல், களவு, குருநிந்தை என்பாரும் உண்டு. இம்மகா பாதகங்களை அறவே ஒழிக்க வேண்டும். பஞ்ச பாதகங்களை நீக்கினோர்க்கு இயமபயங் கிடையாது. பஞ்சமகா பாதகரை எமன் மிகக்கோபத்துடன் வருத்துவன். பஞ்சபாதகத்தின் விரிவையும் அவற்றைப் புரிந்தார்க்குக் கழுவாயும் சூதசம்மிதையிற் காண்க.

**பிலவக :—**

பிலம்—குகை, அகம்—உட்புறம், குகையின் உட்புறம் போன்ற முகம் எனினும் பொருந்தும்.

**கருமுகில் உரு :—**

பாவஞ்செய்தார்முன் கூற்றுவன் பெரிய கருமேகம்போல் பயங்கரமான கோர ரூபத்துடன் எதிர்ப்படுவன். புண்ணியஞ் செய்தார் முன் சுந்தரவடிவுடன் தோன்றுவன்.

**தஞ்சமாகி :—**

கூற்றுவன் சூலத்தையும் பாசத்தையும் ஏந்தி உயிரைப் பற்றுவதற்கு வரும் அந்த பயங்கரமான சமயத்தில் முருகப் பெருமான் திருவடிதான் நற்றுணையாயிருந்து நல்லருள் புரியும்.

> "படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினால்
> பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென்பாய்" —*அலங்காரம் (50)*

**அண்டகோளகை......நடமிடும் :—**

மயிலின் நடனச்சிறப்பை விளக்குகிறார். மயில் நடனம் புரியுங்கால் அண்டகோளங்கள் பிளந்து உதிரவும், எண்டிசைகள் வெடிபடவும் உலகங்கள் நடுங்கும். அத்தகைய உக்ரமான மயில். மயில் வாகனத்தின் நடனப் பெருமையை மயில் விருத்தத்திலுங் காண்க.

> "சக்ரப்ர சண்டகிரி முட்டக்கிழிந்து வெளி
> பட்டு க்ரவுஞ்ச சயிலம்
> தகரப் பெருங்கனக சிகரச் சிலம்பு மெழு
> தனிவெற்பு மம்புவியு மெண்
> டிக்குத் தடங்குவடு மொக்கக் குலுங்கவரு
> சித்ரப் பதம் பெயரவே
> சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
> திடுக்கிட நடிக்கு மயிலாம்" —*மயில் விருத்தம்.*

மயிலினது சிரத்திலுள்ள பீலி சிறிது அசைந்தது. அந்த அசைவினால் ஏற்பட்ட காற்றினால் மேருகிரி இடம்விட்டசைந்தது. மயில் சிறிது அடியெடுத்து வைத்த உடனே எட்டுக் குலகிரிகளும் தூள் பட்டன. அத்தூளால் சமுத்திரம் மேடு பட்டது.

குசைநெகிழா வெற்றி வேலோனவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால் பட்டசைந்தது மேரு அடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட அத்தூளின்வாரி திடர்பட்டதே.
—கந்தரலங்காரம். (11)

**இயலுடன் வரவேணும் :—**

மறைகள் முழங்க தேவதுந்துபிகள் முழங்க அடியார் குழாங்கள் சூழ பலகோடி வெண்மதிபோல் ஆறுமுகப் பரஞ்சுடர் தோன்றியவுடனே மறலிபடை பயந்து பிறகிட்டு ஓடுமாதலால் கூற்றுவன் வரும்போது எமபயம் நீங்க இளம் பூரணரும் எம்பெருமானை வரவேண்டுமெனத் துதிக்கின்றனர்.

ஆவி துறக்குங்கால் ஆறுமுக வள்ளலின் அடிமலரே சிறந்த துணையாகும். அவன் இருதாளன்றி வேறு துணை இல்லை.

தோலால் சுவர்வைத்து நாலாறுகாலில் சுமத்தியிரு
காலாலெழுப்பி வளைமுது கோட்டிக்கைந் நாற்றிநரம்
பாலார்க்கை யிட்டுத் தசைகொண்டு மேய்ந்த அகம்பிரிந்தால்
வேலாற்கிரி தொளைத்தோன் இருதாளன்றி வேறில்லையே.
—கந்தரலங்காரம். (44)

**இளகிய ரஞ்சிதாம்ருத வசனமும் :—**

வள்ளிநாயகியாரது இனிய குரல் அமிர்தத்தினு மதுரமுடையது என்பது இதனால் விளங்குகிறது. "தேமொழி பாளித கோமள இன்பக்கிரி'! என்றார் பிறிதோரிடத்திலும். செம்மான் மகளது குரலுக்கு உவமையாக தேனையும் பாகையும் கூறவொண்ணாது என்றார்.

"தேனென்று பாகென் றுவமிக் கொணுமொழித்
தெய்வ வள்ளிக் கோன்"
—அலங்காரம். (9)

**மடமகள் தடமுலை......துயில் :—**

குறமகளாகிய வள்ளிபிராட்டியாரது இரு தனங்களின் மிசை முருகன் துயில்புரிகிறார் என்பதன் தத்துவம். வள்ளி

பிராட்டியார் ஞானம்பிகை, ஞான சொரூபி. அந்த அம்மையின் ஆதனமும் ஞானமே.

"ஞான குற மாதைதினை காவில்மண மேவுபுகழ் மயில்வீரா"
—(வாலவய) திருப்புகழ்.

சுந்தர ஞான மென்குற மாது தன்திருமார்பி லணைவோனே
—(விந்ததி) திருப்புகழ்.

"திருமா லளித்தருளு மொருஞான பத்தினி"
—(இருநோய்) திருப்புகழ்.

"ஏனல் மங்கை சுசிஞான ரம்பை" —(தேனிருந்த) திருப்புகழ்.

"மூலஞான மங்கை அமுதஞ் சொரூபி:'
—(மார்புரம்) திருப்புகழ்.

எனவே, ஞானமங்கையாகிய வள்ளியம்மையாரது இரு தனங்களும் பரஞானம் அபரஞானம் என்பவைகளாம். அந்த இரு ஞானங்களின்மேல் முருகர் ஆனந்த நித்திரை புரிகிறார் என்பது கருத்து.

**அழகிய மணவாளா :—**

முருகு என்றால் அழகு என்பது ஒரு பொருள். அழகே வடிவாகக் கொண்டது நமது குமாரதெய்வமாதலால் அவரை அழகிய மணவாளனென்றனர். அவருடைய அழகிலிருந்து சிறிது பாகந்தான மன்மதன் அடைந்தனன். உலகிலுள்ள அழகிய பொருளெல்லாம் முருகவேளது சொரூபமே. அப் பெருமானது முழுவடிவத்தையும் ஞானவிழியால் தெரிசித்த சூரபன்மன் "ஆயிரங்கோடி மன்மதர்கள் ஒருங்கு கூடினும் குமாரக்கடவுளது திருவடியழகுக்கு இணையாகாது என்றால் அவரது வடிவிற்கெல்லாம் யாரே உவமைகூற வல்லார்" என்று வியந்துரைக்குமாறு காண்க.

ஆயிரகோடி காமர் அழகெலாந் திரண்டொன்றாகி
மேயின வெனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடி லினைய தொல்லோன்
மாயிரு வடிவிற்கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.
—கந்தபுராணம்.

**செஞ்சொல்மாதிசை :—**

தீந்தமிழ் மொழியின் தெய்வ மணம் வீசும் சிறப்பு தென் திசைக்கே உரியதாதலினால் செஞ்சொல்மாதிசை என்று வாயார வாழ்த்தினர். செம்மையான சொற்கள் தமிழிலேயே நிறைந்திருப்பதால் தமிழ் என்று கூறாமல் செஞ்சொல் என்ற

னர். இந்திரன் முதலிய இமையவரும் தமக்கு இடையூறு நேர்ந்தபோது இத்தமிழ் நாட்டில் வந்தன்றோ இடர்தீரப் பெற்றனர். வில்லிபுத்தூராரும் அருச்சுனன் தீர்த்தயாத்திரை புரிந்துகொண்டு தென்னாட்டினை யணுகுங்கால்,

"சித்திக்கொரு விதையாகிய தென்னாட்டினையணுகி"

என்று விதந்தோதினார்.

சிவபெருமான் அறுபத்திநான்கு திருவிளையாடல்களை அயர்ந்ததும், சமயாசாரியர் நால்வரும் அறுபான்மும்மை நாயன்மார்களும் அவதரித்ததும், உமாதேவியார் இடப்பாகம் பெற்றதும், இத்தமிழ் நாட்டிலன்றோ? என்னே தமிழ்நாட்டின் பெருமை? முழுமுதற் கடவுளாம் முக்கட்பெருமான் எந்நாட்டிற்கும் பொதுவாக இறைவனாக இருக்கினும் சிறப்பாக தென்னாட்டிற்கே உடையவனாக விளங்குகின்றனன்.

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" —மணிவாசகனார்.

காணுமிடந்தோறுஞ் சிவாலயமும், பேசுமிடந்தோறும் தமிழ் வேதமும் விளங்குவது நந்தமிழ் நாட்டிலன்றோ? இத்தமிழ் நாட்டிற் பிறத்தற்கு என்ன மாதவஞ் செய்தோமோ? தமிழன்பர்களே! சிந்தித்துப் பாருங்கள். தமிழ் நாட்டின் பெருமையை விளக்கும் மற்றொரு செய்தியையும் உற்று நோக்குங்கள்.

சுக்ரீவன் கிட்கிந்தையிலிருந்து அநுமாரை இலங்கைக்குச் சீதாபிராட்டியாரைத் தேடுமாறு அனுப்புகிறான். அக்கால் அநுமாரை நோக்கி, "மாருதி! நீ சீதையைத் தேடிச் செல்லுங்கால் பொதியமலைக்கு அருகில் செல்லவேண்டாம். அங்ஙனஞ் சென்றால் அங்கு தமிழ்ச் சங்கம் பேசும், பாடும், படிக்கும், பயிலுந் தீந்தமிழ்ச்சுவை உன் செவி வழியே சென்று நீ அத்தமிழின் சுவையில் இலயமாகி அவ்விடத்தைவிட்டு நீங்க மனமின்றாகி அவ் விடத்திலேயே தங்குமாறு நேரும்; சீதையைத் தேடும் வேலையை மறந்துவிடுவாய். ஆதலால் அத்தமிழோசை நின் செவியிற்படாத தொலைவிற் செல்லுதி" என்று தமிழின் இனிமையையும், அவ்வினிய தமிழைக்கேட்டவுடனே அதன் மயமாக ஆவார் என்பதையும், அத்தமிழ் மொழியைப் பயிலும் பெரும் புண்ணியம் படைத்த தமிழ் நாட்டின் சிறப்பையும் நன்கு எடுத்துக் கூறினர்.

"தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன்
றமிழ்ச்சங்கஞ் சேர்கிற்றீரேல்
என்றுமவ னுறைவிடமா மாதலான்
அம்மலையை யிடத்திட் டேகி'; —கம்பராமாயணம்.

செண்டு மோதினர் :—

மேருவை உக்கிரகுமாரர் செண்டாலெறிந்த வரலாற்றை திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 69-ம் பக்கத்திற் காண்க.

செந்தில் மாநகர் :—

இத்திருத்தலம் இரண்டாவது படைவீடு ஆகும். சுவாதிஷ்டான க்ஷேத்திரம், திருச்சீரலைவாய், ஜயந்திபுரம், திருச்செந்தூர். செந்தில் எனப் பலபெயர்களுள்ளன. திருநெல்வேலியிலிருந்து கிழக்கே 35 மைல் தூரம். கடற்கரையில் கண்ணுங் கருத்துங் கவரும் கட்டழகுடைய திருத்தலம். முருகப்பெருமானது தலங்களுக்கெல்லாந் தலையாயது. அலைகள் சுவாமி கோயிலின் திருமதிலில் மோதும்படி விளங்குகிறது. இத்திருத்தலஞ் சென்றோர் திரும்ப மனமெழாது பலநாள் தங்குமாறு செய்யும்; அத்துணை மகிமையுடையது. இதனாலன்றோ நம் அருணகிரியார் இச்செந்திலம்பதியை,

> "பரமபதமாய செந்தில் முருகனென வேயுகந்து"
> —(அவனிதனி) திருப்புகழ்.

> "கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே"
> —(இயலிசை) திருப்புகழ்;

> "ஒருகோடிமுத்தந் தெள்ளிக் கொழிக்குங்கடற்
> செந்தில் மேவிய சேவகனே" —அலங்காரம் (106)

என்று துதித்தனர். மகா புனிதந் தங்கும் செந்திலம்பதியின் பெருமையை சங்கரர் திருவாக்காலுமுணர்க.

> யதா ஸந்நிதானம் கதாமானவாமே
> பவாம்போதிபாரம் கதாஸ்தே ததைவ
> இதிவ்யஞ்ஜயன் ஸிந்துதீரே யஆஸ்தே
> தமீடே பவித்ரம் பராசக்தி புத்ரம்.

பொருள் :—

மக்கள் எனது சந்நிதியை அடைந்த மாத்திரத்திலேயே அபாரமாகிய சம்சாரசாகரத்தின் மறுகரையை யடைந்து முத்தியின்பத்தை நுகர்கின்றனர் எனனும் உண்மையை உணர்த்தும் பொருட்டு கருணைக் கடலாகிய யாதொரு கடவுள் கடற்கரையில் (செந்திலில) வசிக்கின்றாரோ பரிசுத்தனும் பராசக்தியின் புத்திரனுமான அவரைத் துதிக்கின்றனன்.

## கருத்துரை

வள்ளிநாயகியாரது மணாளரே! திசைமுழுதும் வென்று மேருவைச் செண்டாலெறிந்த பாண்டியர் தலைவரே! செந்திலம்பதியில் வாழும் பெருமையிற் சிறந்தவரே! இயமன் கோரரூபத்துடன் பாசத்தையுந் திரிசூலத்தையும் தாங்கி அடியேனைப்பற்ற வருங்கால் தேவரீர் அழகிய சித்திரமயிலின் மிசைவந்து திருவருள் புரியவேண்டும்.

## 41

படர்புவியின் மீது மீறி வஞ்சர்கள்
வியனினுரை பானு வாய்வி யந்துரை
பழுதில்பெறு சீல நூல்க ளுந்தெரி சங்கபாடல்
பனுவல்கதை காவ்ய மாமெ ணெண்கலை
திருவளுவ தேவர் வாய்மை யென்கிற
பழமொழியை யோதி யேயு ணர்ந்துபல் சந்தமாலை

மடல்பரணி கோவை யார்க லம்பக
முதலுளது கோடி கோள்ப்ர பந்தமும்
வகைவகையி லாசு சேர்பெ ருங்கவி சண்டவாயு
மதுரகவி ராஜ னுனென் வெண்குடை
விருதுகொடி தாள மேள தண்டிகை
வரிசையொடு லாவு மால கந்தைத விர்ந்திடாதோ

அடல்பொருது பூசலே விளைந்திட
எதிர்பொர வொணுமலேக சங்கர
அரஹர சிவாம ஹாதெ வென்றுனி அன்றுசேவித்
தவனிவெகு கால மாய்வ ணங்கியு
ளுருகிவெகு பாச கோச சம்ப்ரம
அதிபெல கடோர மாசலந்தர னொந்துவீழ

உடல்தடியு மாழி தாவெ னம்புய
மலர்கள் தச நூறு தாளி டும்பக
லொருமலரி லாது கோவ ணிந்திடு செங்கண்மாலுக்
குதவியம கேசர் பால இந்திரன்
மகளைமண மேவி வீறு செந்திலி
லுரியஅடி யேனை யாள வந்தருள் தம்பிரானே.

## பதவுரை

அடல் பொருது=வலிமையுடன் எதிர்த்து, பூசலே விளைந்திட= அசுரர்கள் போர் புரிந்திட, எதிர்பொர ஒணுமல் ஏக=எதிர் நின்று போர் புரிய மாட்டாதவராகி புறந்தந்து சென்ற திருமால், சங்கர= சுகத்தைச் செய்பவரே! அரஹர=பாவத்தைக் கெடுப்பவரே! சிவ= சிவ சிவா! மஹாதேவ=பெரிய தேவரே! என்று உன்னி=என்று நினைத்து, அன்று சேவித்து=அந் நாளில் ஆராதனை புரிந்து, அவனி= மண்ணுலகில், வெகு காலமாய் வணங்கி=அநேக காலமாய் வழிபாடு செய்து, உள் உருகி=உள்ளம் உருகி, வெகு பாச=அநேகபாசம் என்ற ஆயுதமும், கோசம்=கவசமும், சம்ப்ரமம்=சிறப்பும், அதிபெலம் மிகுந்த வலிமையும், கடோரம்=கொடுமையும், மா=பெருமையும் உடைய, சலந்தரன்=சலந்தராசுரன், நொந்து வீழ=துன்புற்று மாண்டு விழுமாறு, உடல் தடியும்=அவனது உடம்பைப் பிளந்த, ஆழி=சக்ராயுதத்தை, தா என=தந்தருளுவீர் என்று வேண்டி, தச நூறு அம்புய மலர்கள்=ஆயிரம் தாமரை மலர்களை, தாள் இடும் பகல்=திருவடியில் அருச்சனை செய்து வர ஒரு நாள், ஒரு மலர் இலாது=ஒரு மலர் குறைந்து போக, கோ அணிந்திடு=கண்ணை எடுத்துத் திருவடியில் அருச்சித்த, செங்கண்மாலுக்கு=சிவந்த கண்களையுடைய நாராயணருக்கு, உதவிய மகேசர் பால=அந்தச் சக்ராயுதத்தைக் கொடுத்தருளிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! இந்திரன் மகளை மணம்மேவி=இந்திரனுடைய புதல்வியாகிய தெய்வயானை யம்மையைத் திருமணம் செய்துகொண்டு, வீறு செந்திலில்=பெருமை நிறைந்த திருச்செந்தூரில், உரிய அடியேனை ஆள வந்து அருள்=தங்கட்கே உரிய அடியவனுகிய என்னை ஆட்கொள்ளும் பொருட்டு வந்து அருளிய, தம்பிரானே=பெருந்தலைவரே! படர் புவியின் மீது மீறி= விசாலமான பூதலத்தின் கண் உயர்ச்சியடைந்து, வஞ்சர்கள் வியனின் உரை பானுவாய் வியந்து=வஞ்சனையாளர்கள் வியப்பாகக் கூறு முறையில் கல்வியில் சூரியனே என்று புகழ்ந்து சொல்லவும், உரை பழுதில் பெறு சில நூல்களும்=நல்ல உரைகளுடன் கூடிய குற்றமில்லாத ஒழுக்க நூல்களையும், கதை=வரலாற்று நூல்களையும், காவ்யம்=காவியங்களையும், ஆம் எண்எண்கலை=ஆகிய அறுபத்து நான்கு கலைகளையும், திருவளுவ தேவர் வாய்மை என்கிற பழமொழியை ஓதியே உணர்ந்து=திருவள்ளுவ தேவர் திருவாய் மலர்ந்தருளிய பொய்யா மொழியாகிய பழைய மொழி என்கின்ற திருக்குறளையும் ஓதியும் உணர்ந்தும், பல் சந்த மாலை=பலவிதமான சந்தங்களையுடைய மாலை, மடல்=மடல், பரணி=பரணி, கோவையார்=கோவை, கலம்பகம்=கலம்பகம், முதல் உளது கோடி கோள் ப்ரபந்தமும்=முதலாக உள்ள கோடி

கொள்கைகளையுடைய நூல்களையும், வகை வகையில் = வகை வகையாகக்கற்று, ஆசு சேர் பெருங்கவி = விரைந்து பாடுகின்ற பெரிய கவியென்றும், சண்டவாயு = சண்ட மாருதம் என்றும், மதுர கவிராஜன் நான் என் = மதுரகவிராஜன் நான் என்றும், வெண்குடை = வெண்மை நிறமுடைய குடையும், விருது = விருதுகளும், கொடி = கொடிகளும், தாளம் மேளம் = தாளம் மேளங்களும், தண்டிகை = பல்லக்கும், வரிசையொடு உலாவும் = இந்த வரிசையோடு புலவர்கள் உலாவுகின்ற, மால் அகந்தை = மயக்கத்துடன்கூடிய செருக்கு, தவிர்ந்திடாதோ = தவிராதோ?

## பொழிப்புரை

வலிமையுடன் எதிர்த்துப் போர் நிகழ, அப்போரில் எதிர்த்துப் போரிட முடியாமையால், திருமால் அந் நாளில் சிவபெருமானை வழிபாடு செய்து, "சங்கரா! அரஹர! சிவ சிவ! மஹாதேவா" என்று துதிசெய்து, பூதலத்தில் நெடுங் காலமாகப் பூசித்து உள்ளம் உருகி, பாசக் கயிறுகளும் கவசமும் சிறப்பும் மிகுந்த வலிமையும் கொடுமையும் பெருமையும் உடைய சலந்தராசுரனுடைய உடம்பைப் பிளந்த சக்கராயுதத்தைத் தந்தருள வேண்டும் என்று, சிவபெருமானுடைய திருவடியில் ஆயிரம் தாமரைப் பூக்களால் நாடோறும் அருச்சனை புரிந்து வந்தபோது, ஒருநாள் ஒருமலர் குறைந்தது கண்டு, உடனே தன் கண்ணை எடுத்து அர்ச்சித்தலும், அவருக்குச் சக்கரத்தை உதவிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! இந்திரனுடைய புதல்வியாகிய தெய்வயானையைத் திருமணம் புரிந்துகொண்டு, பெருமை பொருந்திய திருச்செந்தூரில், அருள்பெறுவதற்கு உரிய அடியேனை ஆட்கொள்ளுமாறு எழுந்தருளிய பெருமை மிகுந்தவரே! 'பரந்த உலகிலே மேம்பாடு பெற்று, வஞ்சகர்கள் புகழ்ந்துரையாக சூரியன் போன்றவர்' என்று வியந்துரைக்க, குற்றமில்லாத உரையுடன் கூடிய ஒழுக்க நூல்களையும் தெரியவேண்டிய சங்க நூல்களையும், வரலாற்று நூல்களையும், காவியங்களையும், அறுபத்து நான்கு கலைகளையும், திருவள்ளுவதேவர் கூறிய பொய்யாமொழியாகிய திருக்குறளையும் ஓதியுணர்ந்து, பல சந்தங்களுடன் கூடிய மாலை, மடல், பரணி, கோவையார், கலம்பகம் முதலிய அநேக நயங்களைக் கொள்ளுகின்ற நூல்களை வகைவகையாகப் பாடி, பெரிய "ஆசுகவி," "சண்டமாருதம்" "மதுரகவிராஜன்" என்று புலவர்கள் (தம்மைத் தாமே கூறிக்கொண்டு) வெண்குடை, விருது, கொடி, தாளம், மேளம், பல்லக்கு முதலிய வரிசைகளோடு உலவுகின்ற மயக்கத்துடன் கூடிய அகந்தை அவர்களை விட்டு அகலமாட்டாதோ?

## விரிவுரை

**படர்புவியின்மீது மீறி :—**

விசாலமான இந்த மண்ணுலகத்திலே சிலர் பலவகையான சிறப்புக்களால் மேம்பாட்டை யடைவர்; அப்படி யடைந்தவர் களைக் கண்டு சிலர் வஞ்சனையாக அவர்களைப் புகழ்வர்.

**வஞ்சகர் வியனினுரை பானுவாய் வியந்து :—**

ஆ! தாங்கள் "ஞானபானு" "கலா சூரியன்" "கல்விக் கதிர்" என்றெல்லாம் வெறுமையாக வியந்து கூறுவர் வஞ்சகர்.

**உரை பழுதில் பெறு சீல நூல்கள் :—**

குற்றமில்லாத சொற்களைப் பெற்ற ஒழுக்க நூல்கள், பதினெண் கீழ்க் கணக்கு என்ற நூல்கள் இந்த வரிசையைச் சேர்ந்தவை.

**சங்கபாடல் பநுவல் :—**

சங்ககாலத்தில் எழுந்த நூல்கள்; அவைகளில் பல கடல் கோளால் அழிந்துபட்டன. எஞ்சி நின்ற நூல்கள் சில. இப் போது உள்ளவை பத்துப்பாட்டு, எட்டுத் தொகை முதலிய நூல்கள்.

**கதை காவ்யம் :—**

கதை—வரலாற்று நூல்கள். காவ்யம்—சிந்தாமணி, நைடதம் முதலியவை காவியங்களாகும்.

**எண்ணெண் கலை :—**

### அறுபத்து நான்கு கலைகள்

அக்கர இலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதி சாத்திரம், ஜோதிட சாத்திரம், தரும சாத்திரம், யோக சாத்திரம், மந்திர சாத்திரம், சகுன சாத்திரம், சிற்ப சாத்திரம், வைத்திய சாத்திரம், உருவ சாத்திரம் இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடணம், நாடகம், நிருத்தம், சத்தப் பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரீட்சை, கனகபரீட்சை, இரதபரீட்சை, கசபரீட்சை, அசுவபரீட்சை, இரத்னபரீட்சை, பூமிபரீட்சை, சங்கிராமவிலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடணம், வித்துவேடணம், மதனசாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைப்பீலவாதம்,

கௌத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப் பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப் பிரவேசம். அதிரிசியம், இந்திரசாலம், மகோ திரசாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப் பிரயோகம்.

**திருவள்ளுவதேவர் :—**

மனிதர்களில் விலங்கு உண்டு; மனிதர்களில் மனிதர் உண்டு; மனிதர்களில் தேவர் உண்டு. ஆசையுள்ளம் படைத்தவன் விலங்கு. அன்பு உள்ளம் படைத்தவன் மனிதன். அருள் உள்ளம் படைத்தவன் தேவன். திருவள்ளுவர் அருள் உள்ளம் படைத்தவர். 1330 திருக்குறள் அமுதத்தால் உலகில் உள்ள மன்பதைகளை வாழச் செய்தவர். அதனால் அவர் மனித உலகில் தேவர்.

"தேவர் குறளும் திருநான் மறை முடிவும்"

என்ற பாடலாலும் அறிக.

"ஆருயிர் கொல்லா மேலோர் அறிவினை யறிந்த நல்லோர்
தீமனம் அடக்க வல்லார் இவர்களே தேவராவார்"

**வாய்மை யென்கின்ற பழமொழி :—**

திருவள்ளுவர் பாடியருளிய திருக்குறள் எப்போதும் மாறுபாடு—அழிவு இல்லாத ஒரு பெரிய சத்தியமறை. பொய்யாமொழி எனப்படும். அதற்கு ஈடு அதுதான். அது போன்ற ஒரு நூல் எந்த நாட்டிலும் எம் மொழியிலும் இல்லை என்பது உறுதி. சுருங்கிய சொற்களால் விரிந்த கருத்துக்களைத் தன்னகத்தே கொண்ட அறிவுக் கருவூலம் அது.

**ஓதியே உணர்ந்து :—**

படிப்பது வேறு; ஓதுவது வேறு. ஆழமாகப் பதிவு பெறாமல் மேல்வாரியாக ஒரு நூலைப் பயில்வதற்குப் படிப்பது என்று பேர். ஆழ்ந்து நுணுகி அறிவிற் செறிந்து அநுபவத்துக்கு வரும் அளவில் பயில்வது ஓதுவது ஆகும்.

"ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும்" —திருக்குறள்.

"காதல் நான்முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும்
ஓதினன் கதிரோன்முன் சென்று"

"மறையெலாம் ஓதியுணர்ந்தீர்" —கம்பராமாயணம்.

ஆகவே திருக்குறளைப் படிக்கக்கூடாது. ஓதுதல் வேண்டும். ஓதியுணர்தல் வேண்டும்.

**பல்சந்த மாலை :—**

பிரபந்தவகை 96. அவற்றுள் ஒன்று மாலை. பல்சந்த மாலை, பன்மணி மாலை, மணி மாலை, புகழ்ச்சி மாலை, பெருமகிழ்ச்சி மாலை, மெய்க்கீர்த்தி மாலை, காப்பு மாலை, வேனின் மாலை, வசந்தமாலை, தாரகைமாலை, உற்பவமாலை, தானைமாலை, மும்மணிமாலை, தண்டகமாலை, வீரவெட்சிமாலை, நாமமாலை, நான்மணிமாலை, நவமணிமாலை, இணைமணிமாலை, இரட்டை மணிமாலை, அநுராகமாலை, எனப் பல மாலைகள் உண்டு ஒவ்வொரு மாலை நூலும் அதனதற்குரிய விதிப்படிப் பாடவேண்டும்.

**மடல் :—**

மடல் ஊர்வது பற்றிப் பாடும் நூல். உலாமடல், வள மடல் என்பன.

**பரணி :—**

போரில் ஆயிரம் யானைகளை வென்ற வீரன்மீது பாடுவது. கலிங்கத்துப் பரணி, மோகவதைப் பரணி, அஞ்ஞவதைப் பரணி, அண்டத்துப்பரணி, வீரபத்திரப்பரணி என வரும் நூல்களைக் காண்க.

**கோவை :—**

இருவகைப்பட்ட முதற்பொருளும், பதினன்கு வகைப் பட்ட கருப்பொருளும், பத்து வகைப்பட்ட உரிப் பொருளும் பொருந்திக் கைக்கிளை முதலுற்ற அன்புடைக் காமப்பகுதிய வாங் களவொழுக்கத்தினையுங் கற்பொழுக்கத்தினையுங் கூறு தலே எல்லையாகக் கட்டளைக் கலித்துறையால் நானூறுபாடல் களால், திணை முதலாகத் துறையீருகக் கூறப்பட்ட பன்னி ரண்டு அகப்பாட்டுறுப்பும் வழுவின்றித் தோன்றப் பாடுவது.

திருக்கோவையார், தஞ்சைவாணன் கோவை, வெங்கைக் கோவை, கோடீச்சுரக் கோவை, ஒருதுறைக் கோவை, அம்பிகாபதிக் கோவை, திருவாரூர்க் கோவை, காழிக்கோவை முதலியவற்றைக் காண்க.

**கலம்பகம் :—**

ஒருபோகும், வெண்பாவும், முதற்கலியுறுப்பாக முற் கூறப்பெற்றுப், புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல்; கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் இப்பதினெட்டு உறுப்புக்களும் இயைய, மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலி

விருத்தம், கலித் தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித் துறை, வெண் துறை என்னும் இவற்றுல், இடையே வெண்பா கலித் துறை விரவ அந்தாதித் தொடையால் பாடுவது கலம்பகம்.

தில்லைக் கலம்பகம், மறைசைக் கலம்பகம், மதுரைக் கலம்பகம், காசிக் கலம்பகம், அருணைக் கலம்பகம், கதிர்காமக் கலம்பகம், கச்சிக் கலம்பகம், வெங்கைக் கலம்பகம், புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம் முதலிய நூல்களைக் காண்க.

**ஆசுசேர் பெருங்கவி :—**

கவி நான்கு வகைப்படும். ஆசுகவி, மதுரகவி, சித்திர கவி. வித்தார கவி. ஆசு—விரைவு. விரைந்து பாடுவது ஆசுகவி.

(1) பொருளடி, பாவணி முதலியன தந்து மற்ருெருவன் பாடுக என்ற உடனே பாடுவோன் **ஆசுகவி.**

(2) பொருட் செல்வம், சொற் செல்வம், தொடை விகற்பம் செறிய, உருவகம் முதலிய அலங்காரத்தோடு இன்னேசைத்தாய் அமுதமுறப் பாடுவோன் **மதுரகவி.**

(3) மாலை மாற்று, சுழி குளம், ஏகபாதம். சக்கரம், ஏழு கூற்றிருக்கை, காதை கரப்பு, கரந்துரை, தூசங்கொளல், வாவனூற்று, பாதமயக்கு, பாவின் புணர்ப்பு, கூட சதுக்கம் கோமூத்திரி, ஓரெழுத்தினம், ஒற்றெழுத்துத் தீர்ந்த ஒரு பொருட்பாட்டு, சித்திரப்பா, விசித்திரப்பா, வினவுத்தரம், சருப்பதோபத்திரம், எழுத்துவருத்தனம் இவை முதலிய மிளிரக் கவி பாடுவோன் **சித்திரகவி.**

(4) மாலை, யமகம், கலம்பகம், தசாங்கம், புராணம் முதலிய விரித்துப் பாடுவோன் **வித்தாரகவி.**

புலவர்களில் பலர் தங்களை 'நாற்கவி வலவன்' "சண்ட மாருதம்" முதலிய பட்டங்களைத் தம்பட்டம் அடித்துச் செருக்குற்றிருப்பர்.

**விருது :—**

அப்புலவர்கள் மற்ற புலவர்களை வென்று அதற்கு அடையாளமாக அமைத்து வைக்கும் வெற்றிச்சின்னம் விருது.

**கொடி தாளம் மேளம் தண்டிகை :—**

கொடிகள், மேளதாளங்கள், பல்லக்கு, பரிசனங்கள் முதலியன சூழ்ந்துவர ஆடம்பரமாகப் போதல்.

**வரிசையொ டுலாவு மாலகந்தை தவிர்ந்திடாதோ :—**

மேற்கூறிய வரிசைகளுடன் சிறிதாவது பக்தியும் ஞானமுமின்றி, உய்யவேண்டும் என்ற அருள் தாகம்இன்றி கேவலம் நான் என்ற மமதையுடன் உலாவித் திரிகின்ற இந்த அகந்தை அகன்று புலவர்கள் நல்வழிப்படமாட்டார்களா ?

**எதிர்பொர வொணுமலேக :—**

ஒரு சமயம் வலிமை மிகுந்த அசுரர்கள் திருமாலுடன் போர்புரிய, அவர்களை வெல்லும் ஆற்றல் இன்றி அவர் வாட்டமுற்றனர். அப்போது சிவபெருமானிடம் சலந்தரனைக் கொன்ற சக்கரம் இருந்தது. அதனைப் பெற்று அசுரர்களை அழிக்கவேண்டும் என்று விரும்பினார்.

சலந்தரன் கங்கை வயிற்றில் சமுத்திரராசனுக்குப் பிறந்தவன். அளவிடமுடியாத ஆற்றல் படைத்தவன். இவன் மனைவி பிருந்தை. இவன் மிக்க இளமையிலேயே தன் கைக்கு அகப்பட்ட பிரமதேவரைக் கழுத்திற் பிடித்து வருத்தி விட்டவன். இந்திரன் முதலிய இமையவர் இவனிடம் போர் புரிந்து தோற்றுப புறங்கொடுத்து ஓடி ஒளிந்தார்கள். திருமால் இவனிடம் அமர்புரிந்து ஆற்றல் தேய்ந்து அல்லல்பட்டு தோற்றோடினார்.

இறுதியில் சலந்தரன் திருக்கைலாயமலைக்குச் சென்றான் அங்கே சிவபெருமான் ஒரு முது மறையவர் உருவில் கோபுர வாசலில் இருந்தார். "அப்பா ! எங்கே போகின்றாய் ?" என்று வினவினார். 'சிவனுடன் போர்புரியப் போகின்றேன்" என்றான். "அப்படியா ! நல்லது" என்று அக் கிழவர் கூறி தன் இடக் காலால் நிலத்தில் வட்டமாகக் கீறி, "இதை உன்னால் எடுக்க முடியுமா ?" என்றார்.

"ஓய் ! இந்த உலகத்தையே எடுக்கும் ஆற்றல் படைத்த என்னால் இதனை எடுக்க முடியாதா ?" என்று சலந்தரன் கூறி, வட்டமான அதனைப் பேர்த்துத் தலையில வைத்தான். அது கூரிய சக்ராயுதமாகி அவன் உடம்பைப் பிளந்துவிட்டது.

இந்தச் சக்கராயுதம் சிவபெருமானிடம் இருந்தது. இதனைப் பெறுதல்வேண்டும் என்று கருதிய திருமால், திருவீழிமிழலை என்ற திருத்தலஞ் சென்றார். தாமரைக்குளம் அமைத்து, நாள்தோறும் ஆயிரம் தாமரை மலர்களால் சிவமூர்த்தியை மிகுந்த அன்புடன் உள்ளம் குழைந்து உருகி வழிபட்டு வந்தார்.

சிவபெருமான் ஒருநாள் அவருடைய அன்பை மற்றவர் கட்குக் காட்டும்பொருட்டு ஒருமலரைக் காணுமல் செய்து

விட்டார். அர்ச்சனை புரிந்துகொண்டு வந்த திருமால் ஒரு மலர் குறைவதைக் கண்டார். ஆயிரம் மந்திரங்களால் ஆயிரம் மலர்கள் அருச்சிப்பது அவருடைய நியதி. உடனே தனது அழகிய கண்ணைப் பிடுங்கி அரனார் அடிமலர்மீது அருச்சித்தார். உடனே சிவபெருமான் வெளிப்பட்டுத் தோன்றி, அவருடைய அளவற்ற அன்புக்கு மகிழ்ந்து சக்ராயுதத்தையும், கண்ணையும், கண்ணன் என்ற பெயரையும் வழங்கி அருள் புரிந்தனர்.

ஒரே ஒரு மலரைப் பிய்த்துப் பிய்த்து அர்ச்சிப்போரும், நான்கு, ஐந்து மந்திரங்கட்கு ஒரு மலரையிட்டு அர்ச்சிப்போரும் இந்த வரலாற்றை ஊன்றி நோக்கி உய்வு பெறுக.

பங்கயம் ஆயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்கண் இடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கரன் எம்பிரான் சக்கரமாற் கருளியவாறு
எங்கும் பரவிநாம் தோணக்கம் ஆடாமோ.

சலமுடைய சலந்தரன்றன் உடல்தடிந்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ
நலமுடைய நாரணன்றன் நயனமிடந் தரனடிக்கீழ்
அலராக இடஆழி அருளினன்காண் சாழலோ. —திருவாசகம்.

## கருத்துரை

மாலுக்குச் சக்கரமருளிய மகேசருடைய மதலையே! செந்திற் குமாரரே! புலவர்கள் அகந்தை தீர்ந்து அறநெறி நிற்க அருள் புரிவீர்.

## 42

பதும இருசரண் கும்பிட் டின்பக்
கலவி நலமிகுந் துங்கக் கொங்கைப்
பகடு புளகிதந் துன்றக் கன்றிக் கயல்போலும்
பரிய கரியகண் செம்பொற் கம்பிக்
குழைகள் பொரமருண் டின்சொற் கொஞ்சிப்
பதற விதமுறுங் கந்துக் கொந்துக் குழல்சாயப்

புதுமை நுதிநகம் பங்கத் தங்கத்
தினிது வரையவெண் சந்தத் திந்துப்
புருவ வெயர்வுடன் பொங்கக் கங்கைச் சடைதாரி

பொடிசெய் தருள்மதன் தந்த்ரப் பந்திக்
கறிவை யிழவிடும் பண்புத் துன்பப்
பொருளின் மகளிர்தம் மன்புப் பண்பைத்
தவிரேனோ

திதிதி தததததந் திந்தித் தந்தட்
டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத்
தெனன தனதனந் தெந்தெத் தந்தத் தெனனானா
திகுர்தி தகிர்ததிந் திந்தித் திந்தித்
திரிரி தரரவென் றென்றொப் பின்றித்
திமிலை பறையறைந் தெண்டிக் கண்டச்
சுவர்சோரச்

சதியில் வருபெருஞ் சங்கத்தொங்கற்
புயவ சுரர்வெகுண் டஞ்சிக் குஞ்சித்
தலைகொ டடிபணிந் தெங்கட் குன்கட்
க்ருபைதாவென்

சமர குமரகஞ் சஞ்சுற் றுஞ்செய்ப்
பதியில் முருகமுன் பொங்கித் தங்கிச்
சலதி யலைபொருஞ் செந்திற்கந்தப் பெருமாளே.

## பதவுரை

திதிதி தததததந் திந்தித் தந்தட் டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத் தெனன தனதனந் தெந்தத் தந்தத் தெனனானா திகுர்தி தகிர்ததிந் திந்தித் திந்தித் திரிரி தரர என்று = திதிதி......தரர என்ற ஒலியுடன் பன்முறை, ஒப்பின்றி திமிலை பறை அறைந்து = ஒப்பில்லாத முறையில் திமிலை என்ற பறை வாத்தியத்தை முழக்கி, எண் திக்கு = எட்டுத்திசைகளும், அண்ட சுவர் சோர = அண்டத்தின் சுவர்களும் சோருமாறு, சதியில் வரு பெரும் சங்க = வஞ்சனை எண்ணத்துடன் வருகின்ற பெரிய கூட்டமான, தொங்கல் புய அசுரர் = மாலை யணிந்த புயங்களையுடைய இராக்கதர்கள், வெகுண்டு = கோபித்தும், அஞ்சி = பின்னர் பயந்தும், குஞ்சி தலைகொடு அடிபணிந்து = குடுமியுடைய தலையுடன் திருவடியில் பணிந்து, எங்கட்கு உன் கட்க்ருபை தா என் = எங்களுக்கு உனது திருவருளைத் தரவேண்டும் என்று கேட்கும்படி, சமர குமர = போர்செய்த குமாரக் கடவுளே! கஞ்சம் சுற்றும் = தாமரைக் குளங்கள் சூழ்ந்துள்ள, செய்பதியில் முருக = வயலூரில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானே! முன் பொங்கி தங்கி = எதிரில் பொங்கியும் தங்கியும், சலதி அலைபொரும் செந்தில் = கடலின் அலைகள் கரையில் மோதுகின்ற திருச்

செந்தூரில் வாழுகின்ற, கந்த = கந்தக் கடவுளே! பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! பதும இருசரண் கும்பிட்டு = தாமரை போன்ற இரண்டு பாதங்களையும் கும்பிட்டு, இன்ப கலவி நலமிகும் = இன்பமான கலவிச்சுகம் மிகுந்துள்ள, துங்க கொங்கை பகடு புளகிதம் துன்ற = உயர்ந்த தனங்களின் பரப்பு புளகம் கொள்ள, கன்றி கயல் போலும் பரிய கரிய கண் = சினக் குறிப்புள்ள மீன் போன்ற விசாலமான கருமை நிறம் பொருந்திய கண், செம்பொன் கம்பி குழைகள் பொர = சிவந்த பொற் கம்பியுடன் கூடிய தோடுகளைத் தாக்க, மருண்டு இன்சொல் கொஞ்சி பதற = மருட்சியுடன் இனிய மொழிகள் கூறிப் பதற, விதமுறும் கந்து கொந்து குழல் சாய = விதவிதமாகத் தொடுத்துள்ள பூங்கொத்துக்கள் கொண்ட கூந்தல் சரிய, புதுமை நுதி நகம் பங்கத்து அங்கத்து இனிது வரைய = புதிய வகையில் நுனி நகத்தால் விகாரப்படும்படி உடலில் அடையாளம் இனிதாகச் செய்ய, எண் சந்தத்து இந்து புருவ வெயர்வுடன் பொங்க = மதிக்கத் தக்க அழகிய பிறை போன்ற புருவத்தில் வியர்வை எழுமாறு, கங்கை சடைதாரி = சடையில் கங்கையைத் தரித்த சிவபெருமான், பொடி செய்து அருள் மதன் = பொடியாக்கிய மன்மதனுடைய, தந்த்ர பந்திக்கு = சேனையாகிய மகளிர் கூட்டத்திற்கு, அறிவை இழவிடும் பண்பு = அறிவைத் தொலைக்கும் மனப்பான்மையையும், துன்ப பொருளின் மகளிர் தம் அன்பு பண்பை = துன்பந் தரும் பொருட் பெண்டிர் மீது அன்பு செய்யும் மனப்பான்மையையும், தவிரேனோ = விட்டு ஒழிக்கமாட்டேனோ ?

## பொழிப்புரை

திதிதி தததததந் திந்திந் தந்தட் டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத் தெனன தனதனந் தெந்தந் தந்தத் தெனஞெ திகுர்தி தகிர்த திந் திந்தித் திந்தித் திரிரி தரர என்ற ஒலிக்குறிப்புடன் ஒப்பில்லாத வகையில் திமிலை என்ற பறை வாத்தியத்தை முழக்கி எட்டுத்திசைகளும் அண்டச் சுவர்களும் சோரும்படி வஞ்சனை எண்ணத்துடன் வந்த பெருங்கூட்டமான மாலைகளை யணிந்த புயங்களை யுடைய அரக்கர்கள் முதலில் கோபித்தும், பின்னர் அச்சமுற்றும், தங்கள் குடுமியுடன் கூடிய தலை கீழே படுமாறு பாதத்தில் பணிந்து எங்களுக்கு உனது அருளைத் தரவேண்டும் என்று வேண்டுமாறு போர்செய்த குமாரமூர்த்தியே ! தாமரைக் குளங்கள் சூழ்ந்துள்ள வயலூரில் வாழ்கின்ற முருகவேளே ! எதிரில் பொங்கியுந் தங்கியும் கடல் அலைகள் கரையில் மோதுகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள கந்தக்கடவுளே ! பெருமிதம் உடையவரே ! விலைமகளிருடைய தாமரை போன்ற இரண்டு பாதங்களையும் தொழுது இன்பமான கலவிநலம் மிகுந்துள்ள உயர்ந்த தனங்களின் பரப்பு புளகங் கொள்ளவும்

கோபக் குறியுள்ள கயல்மீன் போன்ற பெரிய கரிய கண்கள் பொற்கம்பியுடன் கூடிய குழைகளைத் தாக்கவும், மருட்சி யுடன் இனிய சொற்களைக் கொஞ்சிப் பேசிப் பதறவும், பல விதமாகப் பிணைத்துள்ள பூங்கொத்துக்களை யுடைய கூந்தல் சரியவும், புதிய வகையில் நகநுனியால் விகாரப் படும்படி உடலில் இனிதாக அடையாளங்களைச் செய்யவும், மதிக்கத் தக்க அழகிய பிறைபோன்ற புருவங்களில் வியர்வை தோன்ற வும், கங்கையைச் சடையில் தரித்த சிவபெருமான் பொடி செய்த மன்மதனுடைய சேனைகளாகிய மாதர் கூட்டத்துக்கு அறிவைத் தொலைக்கும் மனப்பான்மையையும், துன்பந்தரும் பொருட் பெண்டிர்மேல் அன்புகொள்ளும் மனப்பான்மையை யும் அடியேன் விடமாட்டேனோ?

## விரிவுரை

இப்பாடலின் பாதி, விலைமகளிரால் விளையும் தன்மை களைப்பற்றிக் கூறுகின்றது. மற்றப் பாதியில் ஆறு வரிகளில் சூராதியவுணர்களது போரில் பறைமுழக்கத்தின் தாளவரி சையை அழகாகக் கூறுகின்றார்.

**பதும இருசரண் கும்பிட்டு :—**

மாதர் மீது மோகமுற்றவர்கள் அவர்கள் ஊடலுற்ற போது அவர்களைப் பணிந்து தணிந்து ஆறுதல் புரிவர்.

**அசுரர் வெகுண்டு அஞ்சி :—**

அசுரர்கள் போரில் முதலில் சினமுற்றார்கள். பின்னர் அஞ்சினார்கள்.

**குஞ்சித்தலைகொடடிபணிந்து :—**

குஞ்சி—ஆண்பால் மயிர். அவர்களது குடுமியுடன்கூடிய சென்னியை நிலத்தில் வைத்து வணங்கினார்கள்.

**எங்கட்குன்கட் க்ருபைதா :—**

''முருகா! எங்களுக்கு உமது கருணையைத் தந்தருள வேண்டும்'' என்று கூறி, அந்த அசுரர்களில் சிலர் முறை யிட்டார்கள்.

**செய்ப்பதி :—**

செய்—வயல்; பதி—ஊர். செய்ப்பதி—வயலூர். இத் தலம் அருணகிரிநாதருக்கு மிகுந்த விருப்பமானது. இங்கே தான் அவருக்குத் திருப்புகழ் பாடுந் திறம் கிடைத்தது.

## கருத்துரை

அசுர குல காலரே! வயலூர் வள்ளலே! செந்திற் கடவுளே! மாதர் மீதுள்ள மயக்கந் தவிர அருள் புரிவீர்.

## 43

பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானார்
படையம படையென அந்திக் குங்கட் கடையாலே
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே
மறுகிடு மருளனை யின்புற் றன்புற் றருள்வாயே
அரிதிரு மருக கடம்பத் தொங்கற் றிருமார்பா
அலைகுழ குழுவென வெம்பக் கண்டித் தெறிவேலா
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா
ஜெய ஜெய ஹரஹர செந்திற் கந்தப் பெருமாளே.

### பதவுரை

அரி திரு மருக=திருமாலின் திருமருகரே! கடம்ப தொங்கல் திரு மார்பா=கடப்ப மலர் மாலையணிந்த திருமார்புடையவரே! அலை குழுகுழு என வெம்ப=கடலின் அலைகள் குமுகுமு என்று கொதிப்புறு மாறு, கண்டித்து எறிவேலா=கண்டனம் புரிந்து வேலை எறிந்தவரே! திரிபுர தகனரும்=முப்புரத்தை எரித்த சிவபெருமானும்,வந்திக்கும்= கும்பிடுகின்ற, சற்குருநாதா=உத்தமமான குருமூர்த்தியே! ஜெய ஜெய=வெற்றியையுடையவரே! ஹர ஹர=பாவத்தை நீக்குபவரே! செந்தில் கந்த=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுளே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! பரிமள களப=இனிய மண முள்ள கலவைச் சாந்தினின்றும், சுகந்த= நறுமணம் வீசுகின்ற, சந்த= அழகிய, தனமானார்=தனங்களையுடைய பெண்களின், படை யம படை என=படைகளுள் யமனுடைய படையென்று கூறும்படியான, அந்திக்கும் கண்கடையாலே=சந்திக்கும் கடைக்கண் பார்வையாலும், வரி அளி நிரை முரல்=கோடுகள் உள்ள வண்டுகளின் வரிசை ஒலிக் கின்ற, கொங்கு=வாசனையுள்ள, கங்குல் குழலாலே=இருண்ட கூந்த லாலும், மறுகிடு மருளனை=மனம் சுழன்று மயங்குகின்ற அடியேனை, இன்புற்று=இன்பத்துடனும், அன்புற்று=அன்புடனும், அருள் வாயே=ஆட்கொண்டு அருள்புரிவீர்.

### பொழிப்புரை

நாராயணருடைய திருமருகரே! கடப்பமலர் மாலையை யணிந்த திருமார்பை யுடையவரே! கடலின் அலைகள் குமு குமு என்ற ஒலியுடன் கொதிப்புறுமாறு கண்டித்து வேலை எறிந்தவரே! முப்புரங்களை எரித்த சிவபெருமானும் வணங் கிய உத்தமமான குருநாதரே! ஜெயஜெய! ஹரஹர! திருச் செந்தூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளே! பெருமிதம்

உடையவரே! மணம் வீசுகின்ற சந்தனக் கலவையின் நறுமணம் வீசுகின்ற அழகிய தனங்களையுடைய பெண்களின், படைகளுள் யமனுடைய படை என்று சொல்லும்படியாகச் சந்திக்கும் கடைக்கண்களாலும், கோடுகள் உள்ள வண்டுகளின் கூட்டம் ஒலிக்கின்ற வாசனையும் கருமையுமுடைய கூந்தலாலும் மனம் சுழன்று மருளுகின்ற அடியேனை இன்புடனும் அன்புடனும் ஆட்கொண்டு அருளுவீர்.

## விரிவுரை

**பரிமளகளப சுகந்தச் சந்தத் தனமாஞர் :—**

சந்தனம் ஒரு சிறந்த வாசனைப் பொருள். அதனை அணிவதனுல் உடலுக்குப் பல நலன்கள் உண்டு. சந்தனத்தை உணவுக்குப் பின் பூசிக்கொள்வதனுல் ஜீரண சக்தி மிகுதிப்படும். நம் நாட்டில் எல்லாச் சிறப்பு நாட்களிலும் சந்தனந்தந்து தாம்பூலந்தரும் வழக்கம் தொன்றுதொட்டு வந்தது.

"களபமணிந்திடு மணிமார்பா" —(பரவுநெடுங்) திருப்புகழ்.

தகுதியுடைய பெண்கள் சந்தனக் குழம்பை உடம்பிலுந் தமது மார்பிலும் அணிந்துகொள்வர்.

மகளிர் மான் போன்று, மருண்ட பார்வையும் அச்சமுமுடையவர்களாதலின் "மாஞர்" என்றனர்.

**படையம படையென அந்திக்குங் கட்கடையாலே :—**

படை என்ற சொல்லை தனமாஞர் படைத்த என்று கூட்டிப் பொருள் செய்து கொள்ளவும்.

பெண்களுடைய கண்கள் ஆடவரை மிகவும் மயங்கச் செய்து கேடு விளைக்கும். இங்கே விலைமகளிரைப் பற்றி இது குறிக்கின்றது. கற்புடைய மகளிரையன்று என்று தெளிக.

**வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே :—**

வரி—கோடு; அளி—வண்டு; நிரை—கூட்டம்; கொங்கு—வாசனை; கங்குல்—இருள்.

கூந்தலில் பூக்களை முடித்திருப்பதனுல் வண்டுகள் தேனைப் பருகும் பொருட்டு, இனிய நாதமுடன் ஒலிக்கும். பெண்களின் கூந்தலும் ஆடவரை மயக்கும்.

**மறுகிடு மறுளனே :**

மறுகல்—சுழலல்.

"வையகம் மறுகுறும் என்பதோர் மறுக்கமுண்டரோ" —கம்பர்.

"மறப்பன் கொலோ என்று உள்ளங்கிடந்து மறுகிடுமே"
—அப்பர்.

**இன்புற் றன்புற் றருள்வாயே :—**

அவாவற்று, பற்றினைவிட்டு, பரம்பொருளைப் பற்றி நின்றபோது உண்மையான இன்பம் விளைகின்றது. இன்பத்தை அன்பினாலேயே பெறவேண்டுமாதலின் இன்புற்று அன்புற அருள்வாய் என்றனர்.

**அரி திருமருக :—**

அரி—பாவத்தை நீக்குபவர்.

**அலை குமுகுமுவென வெம்பக் கண்டித் தெறிவேலா :—**

இறுதிப் போரில் உறுதியிழந்த சூரன் கடலில் ஒளிந்தான் முருகவேள் வேற்படையைக் கடலின் மீது விடுத்தருளினார்.

"சூரனுடலற வாரி சுவறிட வேலை விடவல பெருமாளே"
—(பாதிமதி) திருப்புகழ்.

"வேலைவற்றி வறண்டு சுறீல்சுறீலென"
—(ஓலமிட்ட) திருப்புகழ்.

இனி உக்கிரப் பெருவழுதி மூலம் கடல் மீது வேல் விட்ட வரலாற்றையும் குறிக்கும்.

## கருத்துரை

திருமால் மருகரே! கடல்மீது வேலை எறிந்தவரே! சிவ குருவே! செந்திலாண்டவரே! மாதர் மயக்கில் வீழ்ந்து தவியாது அடியேன் உய்வு பெற்று இன்புற அருள் புரிவீர்.

## 44

பாத நூபுரம் பாடகம் சீர்கொள்நடை
யோதி மோகுலம் போலசம் போகமொடு
பாடி பாளிதங் காருகம் பாவையிடை வஞ்சிபோலப்
பாகு பால்குடம் போலிரண் டானகுவ
டாட நீள்வடஞ் சேரலங் காரகுழல்
பாவ மேகமொன் சாபமிந் தேபொருவ ரந்தமீதே

மாதர் கோகிலம் போல்கரும் பானமொழி
தோகை வாகர்கண் டாரைகொண் டாடிதகை
வாரும் வீடெயென் றோதிதம் பாயல்மிசை
யன்புளார்போல்

வாச பாசகஞ் சூதுபந் தாடஇழி
வேர்வை பாயசிந் தாதுகொஞ் சாரவிழி
வாகு தோள்கரஞ் சேர்வைதந் தாடுபவர்
சந்தமாமோ

தீத தோதகந் தீததிந் தோதி திமி
டுடு டுடுடுண் டுடுடுண் டுடுடுடு
டீகுடீகுகம்போல வொண் பேரிமுர சங்கள்வீறச்
சேடன் மேருவுஞ் சூரனுந் தாருகனும்
வீழ ஏழ்தடந் தூளிகொண் டாடமரர்
சேசெ சேசெயென் றுடநின் றுடிவிடு மங்கிவேலா

தாதை காதிலங் கோதுசிங் காரமுக
மாறும் வாகுவுங் கூரசந் தானசுக
தாரி மார்பலங் காரியென் பாவைவளி
யெங்கள்மாதைத்

தாரு பாளிதஞ் சோரசிந் தாமணிக
ளாட வேபுணர்ந் தாடிவங் காரமொடு
தாழை வானுயர்ந் தாடுசெந் தூரிலுறை
தம்பிரானே.

## பதவுரை

தீத தோதகந் தீததிந் தோதிதிமி டுடு டுடுடுண் டுடுடுண் டுடுடுடு டீகு டீகுகம் போல = தீத...டீகுகம் போன்ற ஒலிகளைச் செய்து, ஒண் பேரி முரசங்கள் வீற = ஒளிபெற்ற முரசு வாத்தியங்களும் பேரிகைகளும் பெரிய முழக்கஞ் செய்ய, சேடன் = ஆதிசேடனும், மேருவும் = மகாமேரு மலையும், சூரனும் = சூரபன்மனும், தாருகனும் வீழ = தாருகாசுரனும் அயர்ந்து விழவும், ஏழ்தடம் தூளிகொண்டாட = ஏழுமலைகளும் பொடிபட்டுதிரவும், அமரர் சேசெ சேசெ என்று ஆட நின்று = தேவர்கள் "ஜேஜெ ஜேஜெ" என்று ஆடவும் அவர் முன்நின்று, ஆடிவிடும் = நடனம் செய்து விடுத்த, அங்கிவேலா = நெருப்பு மயமான

வேலாயுதத்தை யுடையவரே! தாதை காதில் அங்கு ஓது = தந்தையின் செவியில் அங்கே பிரணவப் பொருளை ஓதிய, சிங்கார முகம் ஆறும் = அழகிய திருமுகங்கள் ஆறும், வாகுவும் கூர = (பன்னிரு) தோள்களும் பூரிக்குமாறு, சந்தான சுகதாரி = வழிவழி இன்பம் தருபவளும், மார்பு அலங்காரி = திருமார்பில் அலங்காரம் கொண்டவளும், என் பாவை = எனது அரிய பதுமை போன்றவளும், வளி எங்கள் மாதை = வள்ளிபிராட்டியாகிய எங்கள் பெண் மணியை, தாரு = மரச் சோலையினிடையே, பாளிதம் சோர = பட்டாடை சோரும்படி, சிந்தாமணிகள் ஆட = அணிந்துள்ள சிறந்த மணிகள் அசைய, புணர்ந்து = கலந்து, ஆடி = அவருடன் விளையாடி, வங்காரமொடு = செப்பமாக வளர்ந்த, தாழை வான் உயர்ந்து ஆடு = தென்னை மரங்கள் வானளாவி உயர்ந்து அசைகின்ற, செந்தூரில்உறை = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, தம்பிரானே = தனிப்பெருந் தலைவரே! பாத நூபுரம் = பாதத்தில் அணிந்துள்ள சிலம்பு, பாடகம் = பாடகம் என்ற நகைகளுடன், சீர்கொள் நடை = சிறப்புடைய நடை, ஓதிமோகுலம்போல = அன்னப் பறவைகளின் கூட்டம்போல விளங்கி, சம்போகமொடு = கலவியின்பங்கொண்டு, பாடி பாளிதம் காருகம் பாவை இடை = நன்றாக பாவை அமைத்து நெய்த பட்டாடையுடன் கூடிய இடையானது, வஞ்சி போல = வஞ்சிக் கொடி போல் விளங்கவும், பாகு பால்குடம் போல் = அழகிய பாற்குடம் போன்ற, இரண்டு ஆன குவடு ஆட = இரு மலை போன்ற தனங்கள் அசையவும், நீள் வடஞ் சேர் = நீண்ட இரத்தினமணி ஆரஞ் சேர்ந்த, அலங்கார குழல் பா அ மேக = அலங்கரித்த கூந்தல் பரந்த அம் மேகத்தை நிகர்க்கவும், பொன் சாபம் = அழகிய வில் (புருவத்தையும்), இந்து பொருவர் = சந்திரன் (நெற்றியையும்) நிகர்த்தவை யென்று கூறவும், அந்த மீதே = அழகு மிகுதியாகக் கொண்டு, மாதர் கோகிலம் போல் கரும்பான மொழி = அழகிய குயில் போலவும் கரும்பு போலவும் மொழியையும், தோகை வாகர் = மயில் போன்ற அழகையும் கொண்டவரும், கண்டாரை கொண்டாடி = கண்டவர்களைப் புகழ்ந்து பேசி, தகை = அவர்களை மறித்து நிறுத்தி, வாரும் வீடே என்று ஓதி தம் = எமது வீட்டுக்கு வாருங்கள் என்று கூறி அழைத்துப் போய், பாயல் மிசை அன்புளார்போல் = படுக்கையின் மீது அன்புள்ளவரைப்போல் நடித்து, வாசபாசு அகம் = மணமும் பசுமையுமுடைய மார்பில், சூது பந்து ஆட = சூதாடு கருவிபோன்ற தனங்கள் பந்துபோல் அசையவும், இழி வேர்வை பாய = வேர்வை வழிந்து பாயவும், சிந்து ஆகு கொஞ்சு ஆரவிழி = கடல் போன்றதும் கொஞ்சுதல் நிறைந்ததுமான கண்களும், வாகுதோள் கரம் = அழகிய தோள்களும் கரங்களும், சேர்வை தந்து ஆடும் அவர் = ஒன்று பட்த்தந்து விளையாடுகின்ற விலைமகளிரது, சந்தம் ஆமோ = உறவு ஆகுமோ ?

## பொழிப்புரை

தீததோதகந் தீததிந் தோதிதிமி டுடு டுடுடுண் டுடுடுண் டுடுடுடு டீகு டீகுகம் என்ற ஒலிகளை யுண்டாக்கி ஒளி பெற்ற முரசு வாத்தியமும் பேரிகையும் முழக்கஞ்செய்ய, ஆதிசேடனும் மேருமலையும், சூரபன்மனும் தாருகாசுரனும் அயர்ந்து விழுமாறும், ஏழுமலைகள் பொடிபட்டு உதிரவும், ஜேஜே ஜேஜே என்று அமரர்கள் ஆடவும், போர்க்களத்தில் நடனஞ்செய்து விடுத்த நெருப்பு மயமான வேற்படையை உடையவரே! தந்தையாரது செவியில் அங்கு ஓங்கார மந்திரத்தின் உட்பொருளை ஓதிய ஆறுமுகமும் பன்னிரு தோள்களும் பூரிக்குமாறும், உயிர்கட்கு வழிவழியே இன்பத்தை நல்குபவரும், அலங்கரித்த மார்பையுடையவரும், எனது பதுமை போன்றவரும் ஆகிய எங்கள் மாதாவாகிய வள்ளி நாயகியை மரச் சோலையில், பட்டாடை சோருமாறும், இரத்தின மணியாரங்கள் அசையுமாறும் கலந்து விளையாடி, வளமையுடன் வானளாவி வளர்ந்து தென்னை மரங்கள் சூழ்ந்துள்ள திருச்செந்தூரில் உறைகின்ற பெருமிதம் உடையவரே! பாதத்தில் சிலம்பும் பாடகமும் அணிந்து அன்னப் பறவைகள் போன்ற நடையும், கலவியின்பங் கொண்டு, நன்கு நெய்யப்பட்ட பட்டாடை சூழ்ந்துள்ள வஞ்சிக் கொடி போன்ற இடையும் விளங்கவும், அழகிய பாற்குடம் போன்ற—இரண்டு மலை போன்ற தனங்கள் அசையவும், நீண்ட மணியாரஞ் சேர்ந்துள்ள அலங்கரித்த கூந்தல் பரந்த அம் மேகத்தை நிகர்க்கவும், புருவம் அழகிய வில்லையும், நெற்றி சந்திரனையும் நிகர்க்கும் என்று கூறுமாறு மிகுந்த அழகைக் கொண்டு, அழகான குயிலையும் கரும்பையும் ஒத்த மொழியையும், மயில் போன்ற சாயலையும் கொண்டு; கண்டவர்களைக் கொண்டாடி நிறுத்தி, இதோ எமது வீட்டுக்கு வாருங்கள் என்று இதவசனம் புகன்று அழைத்துச் சென்று படுக்கை மீது அன்புள்ளவர்கள் போல் நடித்து, மணமும் பசுமையுமுள்ள மார்பில் சூதுக் கருவிபோன்ற தனங்கள் பந்துபோல் அசைய, வேர்வை சிந்த, கடல்போல் கொஞ்சுகின்ற கண்கள் தோள்கள் கரங்கள் இவைகளை ஒன்றுபடத் தந்து விளையாடுகின்ற வேசையரது உறவு ஆகுமோ? ஆகாது.

## விரிவுரை

**பாதநூபுரம்...... :—**

இப்பாடலில் பாதிவரை விலைமகளிரது அலங்காரத்தைக் கூறுகின்றனர்.

**பாடி பாளிதம் காருகம் பாவை :—**

படி—என்பது பாடி என சந்தத்தை நோக்கி நீண்டு வந்தது. படி—குணம், பாளிதம்—பட்டாடை, காருகம்—நெய்யுந்

தொழில், பாவு ஐ—பாவை (ஐ. சாரியை) பட்டுப்பாவில் நன்ருக நெய்த அழகிய ஆடை.

**பாகு பால் குடம் :—**

பாகு—அழகு. அழகிய பால்குடம் போன்ற தனம்.

**வாசபாசகம் :—**

பாசு—பசுமை. அகம்—மார்பு. மணமும் பசுமைநிறமும் உடைய மார்பு.

**சூதுபந்தாட :—**

தனங்களுக்கு சூதுக் கருவியையும் பந்தையும் உவமிப்பது மரபு.

**சந்தம் ஆமோ :—**

விலைமகளிரது உறவு கூடாது என்கின்றனர்.

**தீத தோதகம்......பேரி முரசங்கள் வீற :—**

போர்க்களத்திலே போரிடுவோர்க்கு வீரவுணர்ச்சி யுண்டாகுமாறு செருப்பறைகளை ஒலிப்பர். அந்த முழக்கங்களைப் பற்றி இந்த அடியில் கூறுகின்றனர்.

**ஏழ்தடந் தூளி கொண்டாட :—**

தடம்—மலை. முருகப் பெருமானுடைய வேலால் ஏழு மலைகளும் துகளாயின.

"ஓரெழு குலகிரி யடைய இடிந்து தூளெழ"
—(நிணமொடு) திருப்புகழ்.

"எழுமலை பொடித்த கதிரிலை நெடுவேல்" —கல்லாடம்.

**சந்தான சுகதாரி :—**

சந்தானம்—வழிவழியாக வரும் மரபு. உயிர்கட்கு வழி வழியாக இன்பத்தைத் தருகின்ற சக்தி இச்சா சக்தி. வள்ளியம்மை இச்சா சக்தியாதலின் சந்தான சுகதாரி என்றருளிச் செய்தனர்.

**எங்கள் மாதை :—**

தமிழகத்திலே தமிழ்க்குடியில் அவதரித்த அம்மை வள்ளிபிராட்டி யாதலின் எங்கள் மாது என்று உரிமையுடன் கூறினார்.

**தாரு**—மரச்சோலை, **பாளிதம்**—பட்டாடை, **வங்காரம்**—வளப்பம், **தாழை**—தென்னை மரம்.

தென்னையின் மலருக்கு மடல் கனமாக இருக்கும். ஆனால் வாசனை துளிகூட இராது. இதனை நோக்கியே, "மடல் பெரிது தாழை மகிழினிது கந்தம்" என்று ஔவையார் கூறுகின்றனர்.

தாழை என்ற சொல்லுக்குத் தென்னையென்று பொருள் கொள்வதுதான் சிறப்பு. சிலர் தாழை மலர் என்றே கூறுவர். தாழை மலருக்கும் மணமுண்டு. ஆதலின் அப்பொருள் சிறக்காது என உணர்க.

### கருத்துரை

சூர சங்காரஞ் செய்த வேலவரே! வள்ளி மணவாளரே! செந்திற் கந்தவேளே! விலை மகளிர் உறவு நீங்க அருள் புரிவீர்.

## 45

பூரண வாரகும்ப சீதப டீர கொங்கை
மாதர்வி கார வஞ்ச லீலையி லேயு ழன்று
போதவ மேயி ழந்து போனது மான மென்ப
தறியாத

பூரிய னாகி நெஞ்சு காவல்ப டாத பஞ்ச
பாதக னாய றஞ்செ யாதடி யோடி றந்து
போனவர் வாழ்வு கண்டு மாசையி லேய ழுந்து
மயல்தீரக்

காரண காரி யங்க ளானதெ லாமொ ழிந்து
யானெனு மேதை விண்டு பாவக மாயி ருந்து
காலுட லூடி யங்கி நாசியின் மீதி ரண்டு விழிபாயக்

காயமு நாவு நெஞ்சு மோர்வழி யாக அன்பு
காயம்வி டாம லுன்ற னீடிய தாள்நி னைந்து
காணுதல் கூர்த வஞ்செய் யோகிக ளாய்வி ளங்க
அருள்வாயே

ஆரண சார மந்த்ர வேதமெ லாம்வி ளங்க
ஆதிரை யானை நின்று தாழ்வனெ னாவ ணங்கு
மாதர வால்வி ளங்கு பூரண ஞான மிஞ்சு
முரவோனே

ஆர்கலி யூடெ ழுந்து மாவடி வாகி நின்ற
சூரனை மாள வென்று வானுல காளு மண்ட
ரானவர் கூர ரந்தை தீரமு னாள்ம கிழ்ந்த முருகேசா

வாரண மூல மென்ற போதினி லாழி கொண்டு
வாவியின் மாடி டங்கர் பாழ்பட வேயெ றிந்த
மாமுகில் போலி ருண்ட மேனிய னாமு குந்தன்
மருகோனே

வாலுக மீது வண்ட லோடிய காலில் வந்து
சூல்நிறை வான சங்கு பால்மணி யீன வுந்து
வாரிதி நீர்ப ரந்த சீரலை வாயு கந்த பெருமாளே.

## பதவுரை

ஆரண சார மந்த்ர=வேதத்தின் சாரமாகிய பிரணவ மந்திரப் பொருளால், வேதம் எலாம் விளங்க=வேதத்திலுள்ள இரகசியங்கள் முழுவதும் நன்றாக விளங்கும்படி, ஆதிரையான்=(ஐ-சாரியை) திருவாதிரை நக்ஷத்திரத்திற்கு உரித்தானவராகிய சிவபெருமான், நின்று தாழ்வன் எனு வணங்கும்=வாய் பொத்தி எதிரில் நின்று "நின்னைப் பணிகின்றேன்" என்று கூறி வணங்கும்படியான, ஆதரவால் விளங்கு=அன்பினால் விளங்குகின்ற, பூரண ஞான மிஞ்சும் உரவோனே=நிறைந்த ஞானம் ததும்பிய அறிவாற்றலுடையவரே! ஆர்கலி யூடு எழுந்து மா வடிவு ஆகிநின்ற=சமுத்திரத்தின் நடுவில் மாமரத்தின் வடிவத்தைக் கொண்டு நின்ற, சூரனை மாளவென்று=சூரபன்மனை இறக்கச்செய்து வெற்றிபெற்று, வான் உலகு ஆளும் அண்டர் ஆனவர் கூர்=தேவலோகத்தை யாள்கின்றவர்களான தேவர்கள் அடைந்த, அரந்தை தீர=துன்பமானது அகலும்படிச் செய்து, முன் நாள் மகிழ்ந்த முருக ஈசா=முன்னொரு காலத்தில் மகிழ்ச்சியடைந்த முருகப் பெருமானே! வாரணம் மூலம் என்ற போதினில்=கஜேந்திரமென்ற யானை "ஆதி மூலமே" என்று அழைத்தபோது, ஆழி கொண்டு=சக்ராயுதத்தைக் கொண்டு, வாவியின் மாடு=மடுவிலிருந்த, இடங்கர்=முதலையானது, பாழ்படவே எறிந்த=அழிந்து போகுமாறு அதை எறிந்தருளியவரும், மாமுகில் போல் இருண்ட மேனியன் ஆம்=சிறந்த மேகத்தைப் போல் கரிய திருமேனியை யுடையவருமாகிய, முகுந்தன்=நாராயண மூர்த்தியினுடைய, மருகோனே=மருகரே! வாலுகமீது=(நதியின் முகத்துவாரத்தில் சமுத்திரக்கரையிலுள்ள) மணலின்மீது, வண்டல் ஓடிய காலின் வந்து=வண்டல் ஓடி படியப்பட்ட கிளைநதி வழியாக வந்து, சூல் நிறைவான சங்கு=நிறைந்த கருப்பமுற்ற சங்கினங்கள், மாமணி

ஈன=சிறந்த முத்துக்களைப் பெறும்படி, உந்து வாரிதி நீர் பரந்த= செலுத்துகின்ற அலைகளையுடைய சமுத்திரத்தின் நீர் எங்கும் பரந்துள்ள, சீரலைவாய் உகந்த=திருச்சீரலைவாய் என்னும் புண்ணிய க்ஷேத்திரத்தில் எழுந்தருளிய, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! பூரண வார கும்ப=பூரணமாக வளர்ந்துள்ளவையும் அன்பைப் பெருக்குபவையும் குடத்திற்குநிகரானவையும், சீத படீர கொங்கை= குளிர்ந்த சந்தனக்குழம்பு பூசப்பெற்றவையுமாகிய தனங்களையுடைய, மாதர்=விலைப்பெண்களது, விகார வஞ்ச லீலையிலே உழன்று=விகாரத்தை யுண்டுபண்ணுவதும் வஞ்சத்தையுடையதுமாகிய கலவி லீலையிலே ஈடுபட்டு அதனிடத்திலேயே மயங்கிச் சுழன்று, போது அவமே இழந்து=பொழுதை வீணுகக் கழித்து, மானம் போனது என்பது அறியாத=மானம் போய்விட்டது என்பதைத் தெரிந்துகொள்ளாத, பூரியன் ஆகி=கீழ் மகனுகி, நெஞ்சு காவல் படாத=இன்னதைத் தான் நினைக்கவேண்டும் இன்னதை நினைக்கப்படாது என்ற நியதிக்காக நெஞ்சத்தில் நல்லுணர்வாகிய காவலை வைக்காத, பஞ்ச பாதகனுய்=ஐம் பெரும் பாதகங்களைச் செய்பவனுய், அறஞ்செயாது=தருமத்தைச் செய்யாமல். அடியோடு இறந்துபோனவர் வாழ்வு கண்டும்=இருந்த சுவடேயின்றி அறவே இறந்தவர்கள் மாயவாழ்வை கண்டும், ஆசையிலே அழுந்தும்=ஆசையாகிய கடலில் அழுந்துகின்ற, மயல்தீர=மயக்கம் நீங்கும் வண்ணம், காரண காரியங்கள் ஆனது எலாம் ஒழிந்து=வினைகளின் காரணமாக இருப்பதும் காரியமாக வருவதுமாகிய அனைத்தும் நீங்கப்பெற்று, யானெனும் மேதை விண்டு=நான் என்கின்ற தற்போதத்தை விட்டு, பாவகமாய் இருந்து=குஹோஹம் பாவனையில் அசைவற்று இருந்து, கால் உடலூடு இயங்கி=பிராணவாயுவானது இரேசக பூரக கும்பகமாகிய சாதனையால் உடலில் வியாபிக்கப்பெற்று, நாசியின் மீது இரண்டு விழி பாய=நாசி முனையில் இரு விழிகளின் பார்வையைச் செலுத்தி, காயமும் நாவும் நெஞ்சும் ஓர் வழியாக=உடலும் உரையும் உள்ளமும் ஒருவழிப்பட்டு நிற்க, அன்பு காயம் விடாமல் =அன்பானது உடம்பைவிட்டு நீங்காத வண்ணம், உன்றன்=தேவரீரது, நீடிய தாள் நினைந்து=நித்தியமான திருவடிக் கமலங்களைச் சிந்தித்து, காணுதல் கூர் தவஞ்செய்=அத்திருவடித்தாமரைகளைப் பார்ப்பதற்கு விரும்பித் தவம்புரியும், யோகிகளாய் விளங்க=சிவயோகிகளைப் போல் அடியேன் நிருவிகற்ப சமாதியில் நிலைபெற்று விளங்க, அருள் வாயே=அருள்புரிவீர்.

## பொழிப்புரை

வேதத்தின் சாரமாகிய குடிலை மந்திர உரையால், அவ் வேதத்திலுள்ள இரகசியப் பொருள்கள் யாவும் நன்றுக விளங்கும்படி, திருவாதிரை நட்சத்திரத்திற்கு உரித்தானவராகிய சிவமூர்த்தி, வாய் பொத்தி நின்று, (நாதா குமரா)

"உன்னை நமஸ்கரிக்கின்றேன்" என்று கூறி வணங்கும் படியான தன்மையால், உயர்ந்து விளங்குகின்ற பரிபூரண ஞானமிகுதியுடைய உரவோனே! முன்னொரு காலத்தில் சமுத்திரத்தின் மத்தியில் மாமர வடிவுகொண்டு நின்ற சூர பன்மன் மாளும்படி வெற்றிபெற்று, வானுலகத்தை யாளும் தேவர்கள் அடைந்த துன்பம் நீங்கும்படி யருள்புரிந்து, மகிழ்ச்சியடைந்த முருகப்பெருமானே! கஜேந்திரம் என்ற யானை "ஆதிமூலமே" என்று அழைத்தபோது, மடுவிலிருந்த முதலை யழியுமாறு சக்ராயுதத்தை விடுத்தருளியவரும், பெருமையுடைய நீலமேகவண்ணருமாகிய திருமாலினது மருமகரே! (நதியின் முகத்துவாரத்தில் சமுத்திரக் கரையிலுள்ள) மணற்குன்றின்மீது, வண்டல் வந்து படியப் பட்ட கிளைநதி வழியாக வந்து, பூரண கருப்பமான சங்குகள் சிறந்த முத்துக் களைப் பெறும்படி செலுத்துகின்ற அலைகளையுடைய சமுத் திரத்தின் நீர் எங்கும் பரந்துள்ள திருச்சீரலைவாய் என்னும் செந்திலம்பதியில் எழுந்தருளியுள்ள பெருமையிற் சிறந்தவரே! நன்றாக வளர்ந்துள்ளவையும் ஆசையைப் பெருக்குபவையும் குளிர்ந்த சந்தனக்குழம்பு பூசப்பெற்றவையும், குடத்திற்கு நிகரானவையுமான தனபாரங்களை யுடைய விலைமாதர்களது விகாரத்தையுண்டாக்குவதும் வஞ்சகமுடையதுமாகிய கலவி லீலையிலே ஈடுபட்டு மயங்கிச் சுழன்று, அரிய வாழ்நாளை அவமே கழித்து மானம் அழிந்துவிட்டது என்பதையுணராத கீழ்மகனாகி, இன்னதைத்தான் நினைக்கவேண்டும் இன்னதை நினைக்கப்படாது என்ற நியதிக்காக நெஞ்சத்தில் நல்லுணர் வாகிய காவலை வைக்காத பஞ்சபாதகனாகி, தருமத்தைச் செய் யாது தாமிருந்த அடையாளமேயின்றி அடியோடு அழிந்து போனவர்களைக் கண்டும் ('நாமும் இப்படியே யழிவோ' மென்ற உணர்ச்சியின்றி) ஆசையாகிய சமுத்திரத்தில் அழுந்துகின்ற மயக்கம் தீரும்படி, உடல் எடுப்பதற்குக் காரண காரியங்களா யுள்ளவை யனைத்தும் நீங்கப்பெற்று, நான் என்ற தற் போதத்தை யொழித்து குஹோஹம் பாவனையில் அசைவறறு இருந்து, இரேசக பூரக கும்பகமென்னும் சாதனையால் உடலில் பிராணவாயு வியாபிக்கப்பெற்று, நாசிமுனையில் விழிகளின் பார்வையைச் செலுத்தி, உடலும் உரையும் உள்ளமும் ஒருவழிப்பட்டு நிற்க, உடலில் அன்பு என்னும் தத்துவம் நீங் காத வண்ணம் தேவரீருடைய நித்தியமான திருவடித்தாமரை களைச் சிந்தித்து, அத்திருவடித்தாமரைகளைப் பார்ப்பதற்கு விரும்பித் தவம்புரியும் சிவயோகிகளைப்போல் அடியேன் விளங்கத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**போதவமே யிழந்து :—**

உலகத்தில் அரிய பொருளாகக் கருதப்படுகின்றவை யனைத்திற்கும் அரியது வாழ்நாளேயாம். ஒவ்வொரு நிமிஷமும்

விலைமதிக்க முடியாததாம்; கழிந்துபோன ஒரு நிமிஷத்திற்கு எத்தனைகோடி செல்வத்தைக்கொடுத்தாலும் திரும்பவராது; அதன் அருமை நுனித் துணர்வார்க்குப் புலனாகும். அத்தகைய அருமையான நாள்களை வீணே கழித்துவிடுகின்றோம். ஒவ்வொரு நிமிஷத்தையும் நல்ல விஷயத்திலேயே கழிக்க வேண்டும்.

"வீணேநாள் போய்விடாமல் ஆறுறுமீதில்
ஞானோபதேசம் அருள்வாயே" —(மாலாசை) திருப்புகழ்.

**நெஞ்சு காவல்படாத :—**

வீட்டு வாயிலில் தக்கவனை விடு; தகாதவனை விடாதே என்று காவல் வைப்பதுபோல் நெஞ்சில் நல்லுணர்வு என்ற காவலை வைக்க வேண்டும். அதனால் தீய எண்ணங்களை எண்ணுதற்கு இடமிராது. நல்லெண்ணங்களே தோன்றும்.

**அடியோ டிறந்துபோ னவர்வாழ்வு கண்டும் :—**

பெருமையுடன் வாழ்ந்தவர்களும் தமது அடையாளமே இன்றி இறந்து போவதைக் கண்டாவது "நாமும் இறந்து போவோம்" என்று எண்ணித் தெளிவடைய வேண்டும்.

**நானெனும் மேதை விண்டு :—**

நான் என்கின்ற எண்ணம் ஒழிந்தால்தான், பரமசுகம் தலைப்படும்.

"நானென்ப தற்றுயிரொ டுனென்ப தற்றுவெளி
நாதம் பரப்பிரம ஒளிமீதே" —(தேனுந்து) திருப்புகழ்.

**பாவகமாயிருந்து :—**

குஹோஹம் பாவனையில் அசைவற்றிருப்பது. குஹமூர்த்தியாகத் தன்னைப் பாவிப்பது; விடமேறியவன் கருடனாகத் தன்னைப் பாவிப்பதாகிய கருடோஹம் பாவனையால், விடநீங்கப் பெறுவதுபோல், குஹோஹம் பாவனையால் மல நிவிர்த்தியடையும்.

**காயமு நாவு நெஞ்சும் ஓர்வழியாக :—**

மனம் வாக்கு காயம் என்ற திரிகரணங்களும் ஒருவழிப் படுதலே இன்பத்திற்குக் காரணமாம். இறைவனை நினைக்குங் காலையிலும் ஒருவழிப்பட்டு நிற்கவேண்டும்,

"வாயுந் தனுவு மனமுமொரு வழிநின் றிடநின் மகிமைதனை
ஆயுந்திறமை வரவிலையே ஐயோ இதற்கென் செய்வேன்நான்"
—மாம்பழக்கவி.

**மாவடிவாகிநின்ற சூரனைமாள வென்று :—**

மாளஅறிந்த வரலாற்றை 37-ஆம் பக்கம் பார்க்க.

**வாரண மூலமென்ற......யெறிந்த :—**

## கஜேந்திரன் வரலாறு

திருப்பாற் கடலாற் சூழப்பட்டதாயும், பதினுயிரம் யோசனை உயரமுடையதாயும், பெரிய ஒளியோடு கூடியதாயும், திரிகூடமென்ற ஓர் பெரிய மலையிருந்தது. சந்தனம், மந்தாரம், சண்பகம் முதலிய மலர்த்தருக்கள் நிறைந்து எப்போதும் குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. அம்மலையில் குளிர்ந்த நீர் நிலைகளும் நவரத்தினமயமான மணற் குன்றுகளும் தாமரை ஓடைகளும் பற்பல இருந்து அழகு செய்தன. கந்தருவரும், இந்திரர் முதலிய இமையவரும், அப்சர மாதர்களும் வந்து அங்கு எப்போதும் நீராடி மலர் கொய்து விளையாடிக்கொண்டிருப்பார்கள். நல்ல தெய்வ மணம் வீசிக்கொண்டிருக்கும் அவ்வழகிய மலையில் வளமை தங்கிய ஒரு பெரிய தடாகமிருந்தது. அழகிய பூந்தருக்கள் சூழ அமிர்தத்திற்கு ஒப்பான தண்ணீருடன் இருந்தது அத் தடாகம். அந்தத் திரிகூட மலையின் காடுகளில் தடையின்றி உலாவிக்கொண்டிருந்த கஜேந்திரமென்கின்ற ஓர் யானை யானது, அநேக பெண் யானைகளாலே சூழப்பட்டு, தாகத் தால் மெலிந்து, அந்தத் தடாகத்தில் வந்து அதில் முழுகி தனது தும்பிக்கை நுனியால் வீசப்பட்ட நீர்த்துளிகளால் பெண் யானைகளையும் குட்டிகளையும் நீராட்டிக்கொண்டு மிகுந்த களிப்புடன் விளையாடிக்கொண்டிருந்தது. அப்போது ஒரு முதலை அந்த யானையின் காலைப் பிடித்துக்கொண்டது. அக் கஜேந்திரம் தன்னுல் கூடிய வரைக்கும் முதலையை இழுக்கத் தொடங்கிற்று. முதலையை வெற்றிபெறுஞ் சக்தி யின்றித் தவித்தது. கரையிலிருந்த மற்ற யானைகள் துக்கப் பட்டு அந்த யானையை இழுக்க முயற்சி செய்தும் காப்பாற்ற முடியவில்லை; யானைக்கும் முதலைக்கும் ஆயிரம் ஆண்டுகள் யுத்தம் நிகழ்ந்தது; கஜேந்திரம் உணவின்மையாலும் முதலை யால் பலவாண்டுகள் துன்புற்றமையாலும் எலும்பு மயமா யிளைத்து யாதும் செய்ய முடியாமல் அசைவற்றிருந்தது. பின்பு தெளிந்து துதிக்கையை உயர்த்தி பக்தியுடன் 'ஆதி மூலமே!" என்று அழைத்தது. திக்கற்றவர்க்குத் தெய்வமே துணையென்று உணர்ந்த அந்த யானை அழைத்த குரலை, பாற் கடலில் அரவணைமேல் அறிதுயில் செய்யும் நாராயணமூர்த்தி கேட்டு, உடனே கருடாழ்வான்மீது தோன்றி, சக்கரத்தை விட்டு முதலையைத்தடிந்து, கஜேந்திரத்திற்கு அபயந்தந்து அருள் புரிந்தனர். சிவபெருமான் தமக்குத் தந்த காத்தற் ெருழிலை மேற்கொண்ட நாராயணர் காத்தற் கடவுளாதலால், உடனே ஓடிவந்து கஜேந்திரனுடைய துன்பத்தை நீக்கி இன் பத்தை நல்கினர்.

"மதசிகரி கதறிமுது முதலே கவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு விசையாதிமூலமென
வருகருணே வரதன்" —திருவகுப்பு: (1)

யானே பொதுவாக அழைத்தபோது நாராயணர் வந்து காத்தருளிய காரணம், நாராயணர் தனக்குச் சிவபெருமான் கொடுத்தருளிய காத்தற்ருெழிலேத் தாம் செய்வது கடமை யாதலால் ஓடிவந்தனர். ஒரு தலேவன் நீ இந்த வேலேயைச் செய்யென்று ஒருவனுக்குக் கொடுத்துள்ளபோது, ஒருவன் தலேவனேயே அழைத்தாலும் தலேவன் கொடுத்த வேலே யைச் செய்வது அப்பணியாளன் கடமையல்லவா? தலே வனேத்தானே அழைத்தான்? நான் ஏன் போகவேண்டு மென்று அப்பணியாளன் வாளாவிருந்தால் தலேவனுல் தண்டிககப்படுவானல்லவா? ஆதலால் சிவபெருமான் தனக் குத் தந்த ஆக்ஞையை நிறைவேற்ற நாரணர் வந்தார் என் பது தெற்றென விளங்கும்.

## கருத்துரை

பரமசிவமூர்த்திக்குக் குடிலே மந்திரத்தை உபதேசித்த ஞானதேசிகரே! சூரனேக்கொன்று வானவர் துன்பத்தை நீக் கிய முருகப்பெருமானே! கஜேந்திரவரதராகிய கரு முகில் வண்ணரது மருகரே! செந்திலாதிப! மாதர் மயக்கத்தில் அடியேனுழலாது, தற்போதத்தை விட்டு, விழிநாசிவைத்து ஒருவழிப்பட்டு சிவயோகியாக அடியேன் அசைவற்று இருக் கத் திருவருள்புரிவீர்.

## 46

மங்கை சிறுவர் தங்கள் கிளேஞர்
வந்து கதற உடல்தீயின்
மண்டி எரிய விண்டு புனலில்
வஞ்ச மொழிய விழஆவி
வெங்கண் மறலி தன்கை மருவ
வெம்பி இடறு மொருபாச
விஞ்சை விளேயு மன்று னடிமை
வென்றி யடிகள் தொழவாராய்
சிங்க முழுவை தங்கு மடவி
சென்று மறமி னுடன்வாழ்வாய்
சிந்தை மகிழ அன்பர் புகழு
செந்தி லுறையு முருகோனே

எங்கு மிலகு திங்கள் கமல
மென்று புகலு முகமாதர்
இன்பம் விளைய அன்பி னணையு
மென்று மிளைய பெருமாளே.

## பதவுரை

சிங்கம் = சிங்கங்களும், உழுவை = புலிகளும், தங்கும் அடவி சென்று = வாழுகின்ற கானகத்தில் சென்று, மறமின் உடன் வாழ்வாய் = வேடப் பெண்ணாகிய வள்ளி தேவியுடன் வாழ்கின்றவரே! சிந்தை மகிழ அன்பர் புகழு = உள்ளம் மகிழ்ச்சியுடன் அன்பர்கள் துதி செய்கின்ற, செந்தில் உறையும் = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, முருகோனே = முருகக் கடவுளே! எங்கும் இலகு = எவ்விடத்திலும் விளங்குகின்ற, திங்கள் = சந்திரனையும், கமலம் என்று = தாமரையையும் ஒத்தது என்று, புகலும் முகமாதர் = உவமை கூறி புலவர்கள் புகழ்கின்ற திருமுகத்தை யுடைய தெய்வ யானையையும் வள்ளியையும், இன்பம் விளைய அன்பின் அணையும் = உயிர்களுக்கு இன்பம் விளையுமாறு அன்புடன் தழுவுகின்ற, என்றும் இளைய = எக்காலத்தும் இளமையுடன் இருக்கின்ற, பெருமாளே = பெருமை மிகுந்தவரே! மங்கை = மனைவி, சிறுவர் = மக்கள், தங்கள் கிளைஞர் = தமது உறவினர், வந்து கதற = வந்து கதறி அழ, உடல் தீயில் மண்டி எரிய = உடம்பானது நெருப்பில் சுடர் விட்டு எரிந்துகொண்டிருக்க, விண்டு = உறவினர்கள் சுடலையை விட்டு நீங்கி, புனலில் வஞ்சம் ஒழிய விழ = பந்தம் என்கின்ற மாயம் ஒழியுமாறு நீரில் குளிக்க, ஆவி வெம்கண் மறலி தன் கை மருவ = உயிரானது கொடிய கண்களையுடைய இயமனுடைய கரத்தில் சிக்கிக்கொள்ள, வெம்பி இடறும் = மனம் புழுங்கித் துன்பப் படும், ஒரு பாச விஞ்சை விளையும் அன்று = ஒரு பற்று எனப்படும் மாயக் கூத்து நிகழ்கின்ற அந்த நாளில், உன் அடிமை = தேவரீருடைய அடிமையாகிய சிறியேன், வென்றி அடிகள் தொழ = வெற்றி பொருந்தும் உமது திருவடி மலர்களைத் தொழுது உய்யும்படி வாராய் = வந்தருளுவீராக!

## பொழிப்புரை

சிங்கம் புலி முதலிய கொடிய விலங்குகள் உறைகின்ற கானகத்தில் சென்று வேடர் குல மகளாகிய வள்ளி பிராட்டியுடன் வாழ்கின்றவரே! அடியார்கள் உள்ளம் உவகையுறப் புகழ்ந்து பாடத் திருச்செந்தூரில் உறைகின்ற முருகக் கடவுளே! எங்கும் விளங்குகின்ற சந்திரனையுந் தாமரையையும் ஒத்தது என்று உவகை கூறிப் புலவர்கள் புகழ்கின்ற குளிர்ந்த திருமுகத்தையுடைய வள்ளி தெய்வயானை என்ற

இரு சக்திகளையும், உயிர்கள் தழைத்து இன்புறும் பொருட்டுத் தழுவுகின்ற என்றுமகலாத இளமையுடைய பெருமிதமுடையவரே! மனைவி மக்கள் உறவினர் முதலியோர் வந்து கதறியழுது புலம்ப, உடம்பு தீயில் நன்கு எரிந்துகொண்டிருக்க, உறவினர் அச் சுடலையை விட்டு அகன்று பந்தம் ஒழியுமாறு நீரில் முழுக, உயிரானது கொடுங் கண்களையுடைய இயமனுடைய கையிற் சிக்கிக்கொள்ள, மனம் புழுங்கி இடர்ப்படும் ஒரு பாசமாகிய மாய நாடகம் நிகழ்கின்ற அந்நாளில் உமது அடியேனாகிய நாயினேன் வெற்றி பொருந்தும் திருவடிகளைத் தொழுது உய்யுமாறு தேவரீர் வந்தருள வேண்டும்.

## விரிவுரை

**மங்கை :—**

மங்கை என்பது இங்கே மனைவியைக் குறிக்கின்றது. உயிர் பிரிகின்றபோது மனைவி பெரிதும் துன்பமுற்றுப் பதறிக் கதறி அழுது மேல் விழுந்து புலம்புவாள். ஏன் எனில் அவள் ஒருத்தியே மஞ்சளும் குங்குமமும் மலரும் இழக்கின்றாள் ஆதலின். கணவனார் பிரிந்தபின் மனைவி உயிர் இல்லாத உடம்பு போல் ஆகின்றாள். "மங்கை யழுது விழவே" என்று வேறொரு திருப்புகழிலும், "ஏழை மாதராள் மோதி மேல் விழ" என்று திருவிடைமருதூர்த் திருப்புகழிலும் அடிகளார் கூறுகின்றனர்.

**சிறுவர் :—**

சிறுவர்—புதல்வர்கள். ஆவி பிரியும்போது புதல்வர்களும், புதல்விகளும் மனம் வருந்தி கண்ணீர் சிந்தி கலங்கியழுவார்கள். "இரு கைத் தலைமேல் வைத்தழும் மைந்தர்" என்கின்றார் பட்டினத்துப் பிள்ளையார்.

**தங்கள் கிளைஞர் வந்து கதற :—**

அங்கும் இங்குமாகப் பரவியுள்ள மாமன் மைத்துனன் சகலன் முதலிய நெருங்கிய உறவினர்கள், உயிர் பிரிகின்ற செய்தியை யறிந்து ஓடோடியும் வந்து, மிக்க பரிதாபத்துடன் தலையில் அடித்துக்கொண்டு ஓ என்று வாய்விட்டுக் கதறியழுவர்.

**உடல் தீயின் மண்டி எரிய :—**

மிகவும் இனிய உணவுகளைக் காலந் தவறாது தந்து, நெடுங்காலமாக இந்த உடம்பை வளர்க்கின்றோம். ஆனால், இந்த உடம்பு உணவினால் நிலைபெறுவதில்லை. உண்ட உணவைச் செமிக்கச் செய்து அவ்வுணவின் சத்தை உடம்புக்குந் தந்து உடம்பைப் பாதுகாக்கும் தன்மையுடையது உடம்பில்

மறைந்துள்ள அக்கினியாகும். அந்த அக்கினிக்கு ஜாடராக்கினி என்று பேர். இந்தத் தீயால் உடம்பு நிலைக்கின்றது. இத் தீ அவிந்தால் உடம்பு பனிக்கட்டி போல் குளிர்ந்துவிடும். உயிர் பிரிந்து விடும்.

எனவே தீயினால் நிலைபெற்று வாழ்ந்த உடம்பை முடிவில் அந் நெருப்புக்கே உணவாக (ஆகுதியாக)த் தந்து விடுவது. இதற்கு "அந்தியேஷ்டி" என்று பேர். அந்திய இஷ்டி எனப்படும். இஷ்டி—யாகம். முடிவில் உடம்பையே நெருப்பிலிட்டுப் புரியும் யாகம். இப்படித் தகிக்கப்படுவதனால் இந்த உடம்பு தேகம் எனப் பேர் பெறுகின்றது.

**விண்டு புனலில் வஞ்சமொழிய விழ :—**

உடம்பு நெருப்பில் வேகின்றபோதுதான் உறவினருக்குத் துன்பம் மிகுதியாகப் பொங்கி எழும். கண்ணீர் அருவிபோல் வழியும்.

"அருங்கான் மருங்கே எடுங்கோள் சுடுங்கோள்
அலங்கார நன்றி தெனமுழ்கி
அகன்றுசையும் போய் விழும் பாழ் உடம்பால்
அலந்தேனை யஞ்சல் எனவேணும்"
—(பெருங்காரியம்) திருப்புகழ்.

"நீரில் படிந்துவிடு பாசத்தகன்று" —(இத்தாரணி) திருப்புகழ்.

எனவே, சுற்றத்தார் நீரில் முழுகியவுடன் பாசத்தையும் நேசத்தையும் விட்டு அவரவர் இருப்பிடம் போவார்கள்.

**ஆவி வெங்கண் மறலி தன்கை மருவ :—**

இவ்வாறு உடல் எரிய, உறவினர் நீரில் முழுகி இருப்பிடம் ஏக, நமது உயிரை இயமன் கொண்டு போகின்றான். அவன் கண்கள் நெருப்புப் பொறி சிந்திக்கொண்டு கொடுமையாக இருக்கும்.

"விழித்துப் புகையெழப் பொங்கு வெங் கூற்றன்"
—அலங்காரம். (2)

**வெம்பி இடறு மொருபாச விஞ்சை விளையுமன்று :—**

இதனால் "அடியேன் உள்ளம் வெதும்பித் துன்புறுகின்ற பாச நிலையில் மாய நாடகம் நிகழ்கின்ற நாள் என்றோ அன்று பெருமானே என்னைக் காத்தருள வேண்டும்" என்கினறார்.

**வென்றி யடிகள் தொழ வாராய் :—**

முருகா! மூவர் முதல்வா! அடியேன் காலன் வாய்ப்பட்டுக் கலங்குகின்றபோது வெற்றி பொருந்திய உமது திருவடி

யைத் தொழுது உய்யுமாறு எனக்கு முன் தோன்றி யருள வேண்டும்.

**சிங்க முழுவை தங்கு மடவி சென்று மறமி னுடன் வாழ்வாய் .—**

வள்ளியம்மையார் இருந்த காட்டில் இரவு பகலாக இரை தேடிக்கொண்டு கொடிய விலங்குகள் உலாவி வாழும்.

> "எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
> இரலைமரை இரவு பகல் இரைதேர் கடாடவியில்"
>
> —திருவகுப்பு. *(1)*

> "கரடிபுலி திரிகடிய வாரான கான்"
>
> —*(உறவின்முறை)* திருப்புகழ்.

இத்தகைய பொல்லாத காட்டிற்குச் சென்றார் முருகவேள்; ஏன்? வள்ளியம்மைக்கு அருள் புரியும் பொருட்டு.

கற்பக நாட்டில் வாழ்ந்த தெய்வயானையம்மையை மணந்த எம் பெருமான் காட்டில் வாழ்ந்த வள்ளியம்மையையும் மணந்தருளினான். நாட்டையும் காட்டையும் ஒன்றாகப் பார்க்க வேண்டும் என்பதை நமக்கு உணர்த்துகின்றான். அன்றியும் சுரமகளை மணந்த தேவாதி தேவன் நரமகளையும் மணந்தான்.

> "நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலம் கொடுக்கும் நலமே"

என்கின்றார் வள்ளல் பெருமானார்.

இந்தத் தத்துவத்தை உலகம் அறியும் பொருட்டு காமனைக் கடிந்த கனற்கண்ணிலே யிருந்து வந்த பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பாகிய முருகப் பெருமான் வள்ளியுடன் வாழ்கின்றான்.

> "தினை வனங்கிளி காத்த சவுந்தரி
> அருகு சென்றடி போற்றி மணஞ் செய்து
> செகமறிந்திட வாழ்க்கை புரிந்திடும் இளையோனே"
>
> —*(முனையழிந்தது)* திருப்புகழ்.

**சிந்தை மகிழ அன்பர்புகழு செந்திலுறையு முருகோனே :—**

அன்பர்கள் தங்கள் உள்ளம் உவக்க உருகி அன்பு பெருகி வேலவனைப் புகழ்கின்றார்கள். அங்ஙனம் அன்பர்கள் புகழுமாறு கடற்கரையில், பிறவிப் பெருங் கடலில் நெடுங் காலமாகத் தத்தளிக்கின்ற ஆன்மாக்களுக்கு இதுவே உய்வு பெறுவதற்குத் துறைமுகப் பட்டினம் என்று மக்கள் உணர்ந்து உய்யுமாறு எம்பெருமான் அங்கு எழுந்தருளியுள்ளான். ஆதி

சங்கரர், "யதாசந்நிதானம்" என்று தொடங்கும் பாடலில் புஜங்கத்துதியில் இவ்வாறு கூறியுள்ளார்.

**எங்கு மிலகு திங்கள் கமல மென்று புகலு முகமாதர் :—**

வள்ளியம்மை தெய்வயானையம்மை என்ற இரு அம்மைகளின் திருமுகங்கள் சந்திரனைப் போலவும், அன்றலர்ந்த தாமரை போலவும் குளிர்ந்திருக்கின்றன. பெரும் புலவர்கள் அத்திருமுகங்களை எங்குமிலகும் திங்கள் என்றும் பங்கயம் என்றும் புகழ்ந்து புகல்கின்றார்கள்.

**இன்பம் விளைய அன்பின் அணையும் :—**

முருகவேள் வள்ளி தெய்வானையைத் தழுவுவது தான் இன்புறும் பொருட்டன்று; அவன் ஞானத்தின் திருவுருவம். மன்மதனை எரித்த நெருப்புக் கண்ணிலிருந்து வந்தவன்.

எனவே, இறைவன் கருணையம்பிகையுடன் வாழ்வது உயிர்கள் இன்புறும் பொருட்டு. கண்ணாடியில் தெரியும் நிழல் அசையுமாறு தானே அசைகின்றான் ஒருவன். அதுபோல் இறைவன் உயிர்கள் நல்லறமாகிய இல்லறத்தில் வாழ்ந்து இன்புறும் பொருட்டுத்தான் தேவியுடன் வாழ்கின்றான். மாணவனுக்குக் கணக்குப் பாடஞ் சொல்லிக் கொடுக்கின்ற கணக்கு ஆசிரியர் தனது விரல்விட்டு கணக்கைச் சொல்வது போல் எனவுணர்க.

தென்பா லுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேல் பேதா யிருநிலமும்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. —திருவாசகம்.

**என்றுமிளைய பெருமாளே :—**

என்றும் இளமையுடன் இருக்கும் தெய்வம் எந்தை கந்தவேள்; அதனால் அப்பரமனுக்கு இளம்பூரணன் என்று ஒரு திருப் பெயருண்டு. 'என்றுமகலாத இளமைக்கார' என்கின்றார் மற்றொரு திருப்புகழில். எல்லோரும் விரும்புவது இளமையைத்தானே? முதுமையை ஒருவரும் விரும்புவதில்லை. விரும்பாதது மட்டும் அன்று; வெறுக்கவுஞ் செய்கின்றார்கள். அந்த இளமையை நமக்கு வழங்குகின்ற தெய்வம் முருகவேள்.

ஒரு மனிதனுக்குப் பெருந் துன்பத்தைத் தருவது முதுமைப் பருவம். முதுமையில் கிண்கிண் என்று இருமல் வந்து, மனித வாழ்க்கைக்கு இளைப்பாற்றி வைக்கும் துயிலைத் துறக்க வைக்கும். "இருமல் வந்தது தூக்க மொழிந்தது" என்கின்றார் மற்றொரு திருப்புகழில். கிழப் பருவத்தில் எல்

லோரும் வெறுத்து இகழ்வார்கள். எனவே முதுமைப் பருவம் மிகப் பெருங் கொடுந் துன்பத்தை விளைப்பது. அப்பருவம் வருமுன் இறைவன் இணையடி சேர்தல் வேண்டும்.

"இளமை கிழம்படுமுன் பதம் பெற உணர்வேனே" —திருப்புகழ்.

இந்த இளமையே ஒரு உருவாகக் கொண்டு திகழும் ஆனந்த மூர்த்தி முருகன்.

### கருத்துரை

வள்ளி மணவாளா! செந்திலாண்டவா! இளம்பூரணா! மரண வேதனை யுறும்போது உன் சரணத்தைத் தந்து அருள வேண்டும்.

## 47

மஞ்செ னுங்குழ லும்பிறை யம்புரு
வங்க ளென்சிலை யுங்கணை யங்கயல்
வண்டு புண்டரி கங்களை யும்பழி சிந்துபார்வை
மண்ட லஞ்சுழ லுஞ்செவி யங்குழை
தங்கவெண்டர ளம்பதி யும்பலு
மண்ட லந்திக ழுங்கமு கஞ்சிறு கண்டமாதர்

கஞ்சு கங்குர லுங்கழை யம்புய
கொங்கை செங்கிரி யும்பவ ளம்பொறி
கந்த சந்தன மும்பொலி யுந்துகில் வஞ்சிசேரும்
கஞ்ச மண்டுளி னின்றிர சம்புகு
கண்ப டர்ந்திட ரம்பையெ னுந்தொடை
கண்கை யஞ்சர ணஞ்செயல் வஞ்சரை நம்புவேனோ

சஞ்ச சஞ்சக ணஞ்சக டுண்டுடு
டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு
தந்த னந்தன திந்திமி சங்குகள் பொங்குதாரை
சம்பு வின்கும ரன்புல வன்பொரு
கந்த னென்றிடு துந்துமி யுந்துவ
சங்க ளங்கொளி ருங்குடை யுந்திசை விஞ்சவேகண்

டஞ்ச வஞ்சசு ரன்திர ளுங்குவ
டன்ற டங்கலும் வெந்துபொ ரிந்திட
அண்ட ரிந்திர னுஞ்சர ணம்புக வென்றவேளே
அம்பு யந்தண ரம்பைகு றிஞ்சியின்
மங்கை யங்குடில் மங்கையொ டன்புடன்
அண்ட ருந்தொழு செந்திலி லின்புறு தம்பிரானே.

## பதவுரை

சஞ்ச சஞ்சகணம் சகடுண்டுடு டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு தந்த னந்தனதிந்திமி சங்குகள் = சஞ்ச சஞ்சகணம் சகடுண்டுடு டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு தந்தனந்தன திந்திமி என்ற ஒலியை யுண்டாக்கி சங்குகளும், பொங்குதாரை = ஒலிக்கின்ற ஊதுகுழல்களும், சம்புவின் குமரன் = சுககாரணராகிய சிவபெருமானுடைய குமாரன் என்றும், புலவன் = அறிவினன் என்றும், பொரு கந்தன் என்றிடு துந்துமியும் = போர் வல்ல கந்தக் கடவுள் என்றும் ஒலிக்கின்றபேரிகையும், துவசங்கள் = கொடிகளும், அங்கு ஒளிரும் குடையும் = அவ்விடத்தில் ஒளி செய்கின்ற வெண் கொற்றக் குடையும், திசை விஞ்சவே கண்டு அஞ்ச = திசைகளில் மிகுந்து விளங்க அக்காட்சியைப் பார்த்து அஞ்சுமாறு, வஞ்ச அசுரன் திரளும் = வஞ்சனையைச் செய்யும் சூரபன்மனுடைய சேனையும், குவடு = கிரவுஞ்ச மலையும், அன்று அடங்கலும் வெந்து பொரிந்திட = அந்நாளில் எல்லாம் வெந்து சாம்பராகுமாறும், அண்டர் = தேவர்களும், இந்திரனும் = தேவர் கோமானும், சரணம் புக = தஞ்சம் புகுமாறும், வென்ற வேளே = வெற்றி பெற்ற செவ்வேட்பரமனே! அம்புயம் தண் அரம்பை = தாமரையும் குளிர்ந்த வாழையும் உடைய, குறிஞ்சியின் மங்கை = வள்ளியம்மையுடனும், அப் குடில் மங்கையொடு = அழகிய விண்ணுலக மாதாகிய தெய்வயானையுடனும், அன்புடன் அண்டரும்தொழு = அன்போடு தேவர்களும்வணங்குகின்ற, செந்திலில் இன்புறும் = திருச்செந்தூரில் மகிழ்கின்ற, தம்பிரானே = தனிப்பெருந் தலைவரே! மஞ்சு எ(ன்)னும் குழலும் = மேகத்தை யொத்த கூந்தலும், பிறை அம் புருவங்கள் என் சிலையும் = பிறைச் சந்திரனைப் போன்ற அழகிய புருவங்களாகியவில்லும், கணை = அம்பு, அம் கயல் = அழகிய மீன், வண்டு = வண்டு, புண்டரிகங்களையும் பழி = தாமரை என்ற இவைகளைப் பழித்து, சிந்து பார்வை = கடல் போன்ற அகன்ற கண்களும், மண்தலஞ் சுழலும் செவி அம்குழை = மண்ணுலகத்தவர் கலங்கும்படியான காதில் உள்ள அழகிய குழைகளும், தங்கு அ வெண்தரளம் பதியும் பலும் = தங்கியுள்ள அந்த வெளுத்த முத்துக்கள் பதித்தாற் போன்ற பற்களும், மண்டு அலம் திகழும் கமுகு = நெருங்கிய கலப்பையால் உழுது வளர்த்த பாக்கு

போன்ற, அம் சிறு கண்டம்=அழகிய கழுத்தும், மாதர் கம் சுகம் குரலும்=அழகிய நீர் போன்ற குளிர்ச்சியும் கிளி போன்ற மழலையும் உடைய குரலும், கழை அம்புய=மூங்கில் போன்ற அழகிய தோளும், கொங்கை செம்கிரி=செவ்விய மலை போன்ற தனங்களும், பவளம்=பவளமாலையும், பொறி=தேமலும், கந்த சந்தனமும்=நறுமணச் சந்தனமும், பொலியும் துகில்=விளங்குகின்ற ஆடையும், வஞ்சி=கொடி போன்ற இடையும், சேரும் கஞ்சம் மண்டு உளின் இரசம் புகு கண்=பொருந்திய தாமரையின் நிறைந்த உள்ளில் வெளிப்பட்ட இரசம் புகுந்த இடமும், படர்ந்த அரம்பையெனுந் தொடை=பரந்துள்ள வாழை போன்ற தொடையும், கண் கை அம்சரணம் செயல்=கண்கள், கரங்கள் அழகிய கால்கள் இவைகளையுங் கொண்டு மயக்கச் செயல் புரிகின்ற, வஞ்சரை நம்புவேனோ=பொது மகளிரை அடியேன் நம்பியலையக் கடவேனோ?

## பொழிப்புரை

சஞ்ச சஞ்சக ணஞ்சக டுண்டுடு டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு தந்தனந்தன திந்திமி என்ற சத்தத்துடன் சங்குகளும் தாரைகளும் "சிவகுமாரன், புலவர் கோமான், போரில் வந்த கந்தப் பெருமான்" என்று கூவியொலிக்கும் பேரிகைகளும், கொடிகளும், ஒளி செய்கின்ற குடைகளும், திசைகளில் மிகுதியாக விளங்க, அவைகளைக் கண்டு அஞ்சிய வஞ்சனை மிக்க சூரனுடைய சேனைக் கூட்டங்களும், கிரவுஞ்சமலையும், மற்ற யாவும் அந் நாளில் வெந்து பொடியாகுமாறு, தேவர்களும் இந்திரனும் அபயம் புக வென்று அருளிய செவ்வேட் பரம! தாமரையும் குளிர்ந்த வாழையும் உள்ள மலையில் வாழ்கின்ற வள்ளியம்மையுடனும், விண்ணுலக மங்கையாகிய தெய்வ யானையம்மையாருடனும், திருச்செந்தூரில் தேவர்களும் வணங்கும்படி, இன்புற்று எழுந்தருளியுள்ள தனிப்பெருந் தலைவரே! மேகம் போன்ற கூந்தலும் பிறைமதி போன்ற அழகிய புருவங்களும், அம்பு, அழகிய மீன், வண்டு, தாமரை, இவைகளை அழகினால் இகழ்கின்ற கடல் போன்ற கண்களும், உலகிலுள்ளோர் கண்டு மனஞ் சுழலுமாறு செய்கின்ற காதிலுள்ள அழகிய குழைகளும், பொருந்திய அந்த வெண்முத்துக்கள் போன்ற பற்களும், நெருங்கிய கலப்பையால் உழுது பயிர்செய்த பாக்கு போன்ற அழகிய கழுத்தும், அழகிய நீர் போன்ற குளிர்ச்சியும் கிளி போன்ற மழலையும் உடைய குரலும், மூங்கில் போன்ற தோளும், மலைபோன்ற தனங்களும், பவளமாலை, தேமல், மணம் பொருந்திய சந்தனம், அழகிய ஆடை இவைகளும், கொடி போன்ற இடையும், பொருந்திய தாமரையின் உட்புறத்திலிருந்து வெளிப்பட்ட இரசம் புகுந்துள்ள இடமும், அகன்ற வாழை போன்ற தொடையும், கண் கை பாதம் இவைகளும் கொண்டு செயல்

புரிகின்ற வஞ்சனை நிறைந்த பொது மாதரை அடியேன் நம்பி யுழலலாமோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் விலைமகளிருடைய முடி முதல் அடி வரையுள்ள அங்கங்களின் வர்ணனைகளை நான்கு அடிகளில் அடிகளார் கூறி அவைகளைக் கண்டு மயங்குதல் கூடாது என்று அறிவுறுத்துகின்றனர்.

**வஞ்சரை நம்புவேனோ?:—**

நம்புதல்—விரும்புதல். வஞ்சனைபுரிகின்ற பொது மகளிரை விரும்புதல் கூடாது. அது பிறப்பிறப்பை யுண்டு பண்ணும்.

**சம்புவின் குமாரன் :—**

சம்பு—சுககாரணன். இது சிவபெருமானுடைய நாமங் களில் சிறந்தது. ஆன்மாக்கள் எல்லாம் விரும்புவது துக்க நீக்கமும் சுகப்பேறுந்தானே. அவ்வாறு துன்பத்தை நீக்கி இன்பத்தை அருளவல்லான் சிவபெருமான்.

**புலவன் :—**

முருகப்பெருமான் புலவர்களுடைய தலைவன். "அருமறை தமிழ் நூல் அடைவே தெரிந்துரைக்கும் புலவோனே" என்று கூறுகின்றார் அருணகிரி நாதர். "அருங்கலாவிநோதன்." நக்கீரர், ஔவையார், பொய்யாமொழி முதலிய புலவர்கட்கு அருள்புரிந்து அவர்களுடன் ஆடல் புரிந்த அண்ணல். புலமை யில் தலைமைபெற விரும்புவோர் அப் பரமனை வழிபட்டால் அவன் திருவருளால் புலமை நிறையும். வரருசி என்ற ஒருவர் முருகனை வழிபட்டு வடமொழிப் புலமை பெற்றார் என்று அவருடைய வரலாறு கூறுகின்றது.

**கந்தனென்றிடு துந்துமி :—**

பேரிகையின் ஒலி, "சிவகுமாரா! புலவரேறே! கந்த வேளே!" என்று எழுகின்றது.

**அடங்கலும் வெந்து பொரிந்திட :—**

சூரபன்மனுடைய சேனைகள் கணக்கில் அடங்காதவை. "அலகிலவுணரைக் கொன்ற தோள்" என்கின்றார் மதுரைத் திருப்புகழிலே. அவை ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் நிறைந்து வந்தன. முருகவேள் அச் சேனைகள் சிலவற்றைக்

கணைகளால் கொன்ருர். உதிர வெள்ளம் ஆறுபோல் ஓடியது; பிணமலைகள் குவிந்தன. மேலுள்ள அண்டங்களிலிருந்து சேனைகள் வந்துகொண்டேயிருந்தன. அவ்வாறு வருகின்ற அசுர சேனைகளையும் பிணமலையையும் முருகப்பெருமான் கண்டு புன்னகை புரிந்தார். அந்தச் சிரிப்பில் தோன்றிய ஒரு சிறு நெருப்புப் பொரிபட்டு அத்தனையும் வெந்து சாம்பராயின.

"சினத்தையு முடற்சங் கரித்த மலைமுற்றும்
சிரித்தெரி கொளுத்தும் கதிர்வேலா"
—(சினத்தவர் முடிக்கும்) திருப்புகழ்.

**அம்புயந்தணரம்பை குறிஞ்சியின் மங்கை :—**

அப்புடம் தண் அரம்பை என்று பதம் பிரித்துக் கொள்க. அம்புயம் - தாமரை. தண் அரம்பை - குளிர்ந்த வாழை. இவைகள் நிறைந்துள்ள மலையின்கண் வாழ்கின்ற வள்ளிநாயகியின் கணவன்.

**குடில் மங்கை :—**

குடில்—ஆகாயம். விண்ணுலக மங்கை தெய்வயானை முருகவேள் மண்மகளையும் விண்மகளையும் ஒன்றுபோல் கருதி இருவரையும் மணந்து வாழ்கின்ருர். வள்ளிதேவி - இச்சா சக்தி; தெய்வயானை - கிரியா சக்தி; வேல் - ஞான சக்தி. இம் மூன்றையும் இறைவன் கொண்டிருக்கின்ருன். கண்ணுடியில் உள்ள நிழல் அசையும் பொருட்டு தான் அசைவதுபோல், அறிவு இச்சை செயல் என்ற மூன்றும், ஆன்மாக்களுக்குப் பொருந்துமாறு இறைவன் அவற்ருேடு பொருந்தியுள்ளான் என உணர்க.

## கருத்துரை

அசுரகுல காலரே! திருச்செந்தூர் முருகா! மகளிரது மாயையில் விழாது காத்தருள்வீர்.

## 48

மனைகனக மைந்தர் தமதழகு பெண்டிர்
வலிமைகுல நின்ற நிலையூர்பேர்
வளரிளமை தஞ்ச முனைபுனவ ளங்கள்
வரிசைதம ரென்று வருமாயக்
கனவுநிலை யின்ப மதனையென தென்று
கருதிவிழி யின்ப மடவார்தம்

கலவிமயல் கொண்டு பலவுடல்பு ணர்ந்து
கருவில்விழு கின்ற தியல்போதான்
நினையுநின தன்பர் பழவினைக ளைந்து
நெடுவரைபி ளந்த கதிர்வேலா
நிலமுதல் விளங்கு நலமருவு செந்தில்
நிலைபெற இருந்த முருகோனே
புனைமலர் புனைந்த புனமற மடந்தை
புளகஇரு கொங்கை புணர்மார்பா
பொருதுடனெ திர்ந்த நிருதர் மகுடங்கள்
பொடிபட நடந்த பெருமாளே.

## பதவுரை

நினையும் நினது அன்பர் = உமது திருவடியையே இடையறாது சிந்திக்கின்ற அடியார்களின், பழ வினை களைந்து = பழமையான சஞ்சித வினைகளை அகற்றி, நெடுவரை பிளந்த = நீண்ட மலையாகிய கிரவுஞ்சத்தைப் பிளந்த, கதிர்வேலா = ஒளி நிறைந்த வேலாயுதரே! நில முதல் விளங்கும் = பூதலத்தில் முதன்மை பெற்று விளங்குகின்றதும், நல மருவு செந்தில் = நன்மையுடையதுமாகிய திருச்செந்தூரில், நிலை பெற இருந்த = என்றும் நிலைமையாக வீற்றிருக்கின்ற, முருகோனே = முருகக் கடவுளே! புனைமலர் புனைந்த = அழகு செய்வதற்குரிய மலர்களை யணிந்திருக்கின்ற, புனமறமடந்தை = தினைப் புனத்தில் இருந்த வேடர் குலமகளின், புளக இருகொங்கை புணர் மார்பா = புளகிதமுடைய இரண்டு தனங்களையுந் தழுவுகின்ற திருமார்பினரே! பொருது உடன் எதிர்ந்த = போர்செய்து எதிர்த்து வந்த, நிருதர் மகுடங்கள் = அசுரர்களுடைய முடிகள், பொடிபட நடந்த = தூளாகுமாறு போருக்கு நடந்தருளிய, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! மனை கனக மைந்தர் = வீடு, பொன், மக்கள், தமது அழகு பெண்டிர் = தம்முடைய அழகான மனைவி முதலியோர், வலிமை குலம் = ஆற்றல் குலம், நின்ற நிலை ஊர் பேர் = தாம் நிற்கும் நிலைமை தாம் வசிக்கும் ஊர் பேர், வளர் இளமை = வளர்ச்சியுறும் இளமை, தஞ்சம் = தமக்குள்ள சார்பு, முனை = துணிவு, புனை வளங்கள் = அணிகலன்கள் முதலிய செல்வங்கள், வரிசை = மேம்பாடு, தமர் என்று வரும் = சுற்றத்தார் என்றெல்லாம் சொல்லப்படுகின்ற, மாய கனவு நிலை இன்பம் அதனை = கனவில் கண்டவைபோல் நிலையில்லாத இன்பத்தை, எனது என்று கருதி = என்னுடையது என்று நினைத்து, விழி இன்ப மடவார் தம் = கண்களால் இன்பத்தைத் தரும் மாதர்களுடைய, கலவி மயல் கொண்டு = புணர்ச்சியினால் வரும் மயக்கத்தைக் கொண்டு, பல உடல்

புணர்ந்து = பல சரீரங்களைச் சேர்ந்து, கருவில் விழுகின்றது இயல்போ தான் = மற்றொரு கருவில் விழுகின்றது தக்கது ஆமோ?

## பொழிப்புரை

உமது திருவடிகளை மறவாது கருதுகின்ற உத்தம அன்பர்களது பழ வினையாகிய சஞ்சிதக் குவியலை யகற்றி, கிரவுஞ்சமாகிய நீண்ட மலையைப் பிளந்த ஒளி மிகுந்த வேற்படையையுடையவரே! பூமியின்கண் முதன்மைபெற்று அருள் நலத்தோடு விளங்கும் திருச்செந்தூரில் நிலைபெற்று எழுந்தருளியுள்ள முருகக் கடவுளே! அழகு செய்யத் தக்க மலர்களை முடித்து தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளியம்மையாரது, பூரித்த இரு தனங்களைத் தழுவும் திருமார்பையுடையவரே! போர் புரிந்து எதிர்த்து வந்த அசுரர்களின் மணிமகுடங்கள் தூளாகுமாறு போருக்கு நடந்தருளிய பெருமிதமுடையவரே! வீடு, பொன், மைந்தர், அழகிய பெண்கள், வலிமை, குலம், தாம் நிற்கும் நிலை, ஊர், பேர், வளர்கின்ற இளமை, சார்புடைமை, துணிவு, அணிகலன், வளமைகள், மேம்பாடு, சுற்றம் என்பனவாதி இவைகளால் வருகின்ற நிலைபேறில்லாத கனவில் கண்ட பொருள் போன்ற இன்பத்தை எனது என்று எண்ணி, கண்களால் இன்பத்தைத் தருகின்ற பெண்களின் புணர்ச்சியின்பத்தைக் கொண்டு, பல மாதர்களைச் சேர்ந்து, அதனால் வினை மூண்டு கருவில் விழுவது தக்கதாமோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் அநித்தமான பொருள்களை நித்தம் என நினைத்து மாந்தர் மயங்கித் தியங்குவதைப் பற்றி அடிகளார் கூறுகின்றார்.

**மனைகனக......தமர்:—**

வீடு, பொன், புதல்வர், அழகிய மகளிர், வலிமை, குலம், நிலைமை, ஊர், பேர், இளமை, சார்பு, துணிபு, அணிகலன், வளமை, வரிசை, சுற்றம் இவைகள் யாவும் நிலைபேறில்லாதவை. உள்ளவைபோல் இருந்து அழிகின்றவை.

**மாய கனவுநிலை யின்பமதனை எனது என்று கருதி:—**

மாயம்—ஒன்றை மற்றொன்றாகக் காட்டுவது. அதாவது துன்பத்தை இன்பம்போல் காட்டி மயக்கஞ் செய்வது எனவே மாயையால் மயங்கி நிலையில்லா இன்பத்தை தனக்குச் சொந்தமாக நினைப்பது பிழை. அது புறப்பற்று. பற்று அற்றவர்க்கே வீடு பேறு உண்டாகும். இதுபற்றிப் பரிமேலழகர் திருக்குறள் உரையில் கூறுமாறு காண்க.

ஒழுக்கங்களை வழுவாது ஒழுக அறம் வளரும்; அறம் வளரப் பாவந் தேயும்; பாவந் தேய அறியாமை நீங்கும்.

அறியாமை நீங்க நித்த அநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழியுந்தன்மையுடைய இம்மை மறுமை இன்பங்களில் உவர்ப்பும் பிறவித் துன்பங்களும் தோன்றும்; அவை தோன்ற வீட்டின்கண் ஆசையுண்டாம்; அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாகிய யோக முயற்சி யுண்டாம். அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்ருகிய எனதென்பதும் அகப் பற்ருகிய யான் என்பதும் விடும்.

எனவே கனவு காண்பது போன்ற நிலையில்லாதவற்றை நிலைத்தவையாக மாந்தர் கருதி மயங்கி மடிகின்றனர். அப்படி நினைப்பது அறிவின்மையின் சிகரம் என்கின்ருர் திருவள்ளுவர்.

நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

இறைவனை யன்றி ஏனைய யாவும் அநித்தியமானவையே. ஆதலின் அவைகளை நமது சொந்தம் என்று கருதி யுழலக் கூடாது.

**விழியின்ப மடமாதர் :—**

பெண்கள் கண்களால் இனிது பார்த்து ஆடவர்க்கு இன்பம் ஊட்டுவர். மாதர் என்ற சொல்லுக்கு அழகு என்பது பொருள். அழகிய பெண்களுக்கு அது உரியதாயிற்று.

**பலவுடல் புணர்ந்து :—**

ஆசைக்கு அடிமையான ஆடவர் வாழ்க்கையில் ஒரு மனைவியுடன் வாழும் ஒழுக்கமின்றி, பல மாதர்களைத் தழுவி மயங்கித் தியங்கி மடிவர்.

**கருவில் விழுகின்ற தியல்போதான் :—**

ஆசையே பிறவியைத் தரும். ஆசையே அல்லலைத் தரும். ஆசையே அறிவை மயக்கும். சகல துக்கத்திற்கும் மூலம் ஆசைதான்.

அவாவென்ப எல்லா வுயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பம் அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். —திருக்குறள்.

இதனுல் ஆகாமிய வினை வளர்ந்து, அதனுல் மற்றும் ஒரு தாயாருடைய கருவில் விழுவர். ''அங்ஙனம் கருவுற்று அடி

யேன் அல்லல்படக்கூடாது. முருகா! கருவுருத் திருவையருள் வாய்" என்று சுவாமிகள் வேண்டுகின்றனர்.

**நினையு நினதன்பர் :—**

இறைவனையே இடையறாது அடியார்கள் நினைப்பார்கள். அந்த நினைவால் வேறு நினைவுகள் வரமாட்டா. விளக்குள்ள இடத்திற்த இருள் வராதொழியும். எனவே முருகனை நினைந்து உலக நினைவை மறக்க வேண்டும். நினைப்பவருடைய துன்பங் களை ஆண்டவன் களைகின்றான். "நினைவார் கின்னங்களையுங் க்ருபைசூழ் சுடரே!" என்பது அநுபூதி. அன்றியும் இறைவன், இடையறாது நினைப்பவர் மனத்தைத் தனக்கு உறைவிடமாகக் கொள்ளுகின்றான். நினைப்பவர் மனங் கோயிலாக் கொண் டவன்" என்று கூறினார் திருநாவுக்கரசு நாயனார்.

இவ்வாறு இறைவனை இடையறாது, பயன் கருதாது பக்தி யுடன் நினைந்து உருகுகின்ற அடியார்களுடைய சஞ்சிதமாகிய பழவினைகளை முருகப்பெருமான் அகற்றுகின்றான். இப்போது புரிகின்ற வினை ஆகாமியம்; நாம் துய்க்கின்ற வினை பிராரப் தம்; முற்பிறவிகளில் செய்து காலமும் கருவியும் கைகூடப் பெறாது குவிந்து கிடக்கும் வினைக்குவியல் சஞ்சிதம். இது பழவினை எனப்படும். "திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே" என்று திருஞானசம்பந்தர் கூறியருளி யதையும் இங்கு நோக்குக. ஆகவே முருகனை உருகிய உள்ளத் துடன் நினைத்து பழவினைகளை யகற்றுவோம்.

"பக்தி நெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்"
—திருவாசகம்.

**நெடுவரை பிளந்த கதிர்வேலா :—**

நெடுமை—நீளம்; வரை—மலை; கிரவுஞ்சகிரி; தாரகனுக்கு மாயையால் துணைபுரிந்து கிரவுஞ்ச மலைவடிவாக நின்ற ஒரு அரக்கன். தாரகனையும், அம் மலையையும் வேலால் குமரவேள் பிளந்தனர்.

**நலமருவு செந்தில் :—**

செந்தில் என்ற திருத்தலம், ஒரு கோடி முத்தம் தெள்ளிக் கொழிக்கும் கடற்கரையில் விளங்குவது. அத்தலம் இப் பூதலத்திற்கு முதன்மையாயது. கயிலைமலையனையது; பரம பதமாயது. அருள் நலம் மருவியது.

## கருத்துரை

செந்திலமர்ந்த திருமுருகரே! வள்ளிமணவாளரே! அநித் தியப் பொருள்களை நித்தியமென்று கருதாது பிறவித் துயரை யகற்ற அருள்புரிவீர்.

## 49

மாய வாடைதி மிர்ந்திடு கொங்கையில்
மூடு சீலைதி றந்தம ழுங்கிகள்
வாசல் தோறுந டந்துசி ணுங்கிகள்
பழையோர்மேல்

வால நேசநி னைந்தழு வம்பிகள்
ஆசை நோய்கொள்ம ருந்திடு சண்டிகள்
வாற பேர்பொருள் கண்டுவி ரும்பிக ளெவரேனும்

நேய மேகவி கொண்டுசொல் மிண்டிகள்
காசி லாதவர் தங்களை யன்பற
நீதி போலநெ கிழ்ந்தப றம்பிகள் அவர்தாய்மார்

நீலி நாடக மும்பயில் மண்டைகள்
பாளை யூறுக ளுண்டிடு தொண்டிகள்
நீச ரோடுமி ணங்குக டம்பிக ளுறவாமோ

பாயு மாமத தந்திமு கம்பெறு
மாதி பாரத மென்ற பெருங்கதை
பார மேருவி லன்று வரைந்தவ னிளையோனே

பாவை யாள்குற மங்கை செழுந்தன
பார மீதில ணைந்து முயங்கிய
பாக மாகிய சந்தன குங்கும மணிமார்பா

சீய மாயுரு வங்கொடு வந்தசு
ரேசன் மார்பையி டந்து பசுங்குடர்
சேர வாரிய ணிந்த நெடும்புயன் மருகோனே

தேனு லாவுக டம்ப மணிந்தகி
ரீட சேகர சங்கரர் தந்தருள்
தேவ நாயக செந்திலு கந்தருள் பெருமாளே.

### பதவுரை

பாயு மா மத தந்தி முகம் பெறும் ஆதி = பாய்கின்ற மிகுந்தமதங் கொண்ட யானையின் முகத்தையுடைய முதல்வரும், பாரதம் என்ற பெரும் கதை = மகாபாரதம் என்ற பெரிய இதிகாசத்தை, பார மேருவில் = பெரிய மேரு மலையில், அன்று வரைந்தவன் = அந்நாள் எழுதின

வருமான விநாயக மூர்த்தியின், இளையோனே = இளையவரே! பாவையாள் = பதுமை போன்றவளான, குற மங்கை = குறவர் மகள் வள்ளி பிராட்டியின், செழும் தனபார மீதில் = செழித்து கனத்த கொங்கைகளின் மீது, அணைந்து முயங்கிய = தழுவிக்கலந்ததனால், பாகம் ஆகிய சந்தன குங்குமம் = ஒருபாதி யளவில் சேர்ந்த சந்தனம் குங்குமப் பூ இவைகள் மணக்கும், அணிமார்பா = அழகிய திருமார்பை யுடையவரே! சீயமாய் உருவம் கொடு வந்து = சிங்கத்தின் உருவத்தைப் பூண்டு வந்து, அசுர ஈசன் மார்பை இடந்து = அசுரர் தலைவனாகிய இரணியனுடைய மார்பைப் பிளந்து, பசுங்குடர் = பசிய குடலை, சேரவாரி அணிந்த = ஒரு சேரவாரி மாலையாக அணிந்துகொண்ட, நெடும் புயன் = நீண்ட புயங்களையுடைய நாராயணரது, மருகோனே = திருமருகரே! தேன் உலாவு கடம்பம் அணிந்த கிரீட சேகர = தேன் ஒழுகும் கடப்ப மலர் மாலை தரித்த மகுடத்தையுடையவரே! சங்கரர் தந்து அருள் தேவநாயக = சிவபெருமான் பெற்றருளிய தெய்வ சிகாமணியே! செந்தில் உகந்து அருள் = திருச்செந்தூரில் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! மாயவாடை திமிர்ந்திடு = மயக்கத்தைச் செய்யும் வாசனைகள் பூசப்பட்ட, கொங்கையில் மூடு சீலை திறந்த மழுங்கிகள் = தனங்களில் மூடுகின்ற புடவையைத் திறக்கும் நாணம் அற்றவர்கள், வாசல் தோறும் நடந்து சிணுங்கிகள் = பலருடைய வீட்டு வாசல்கள் தோறும் சென்று சிணுங்குபவர்கள், பழையோர் மேல் = முன்னுள் தங்களுடன் பழகிய நேசர் மீது, வால நேசம் நினைந்து அழு வம்பிகள் = இளமையில் வைத்த நேசத்தை நினைத்து அழுகின்ற வம்புக்காரிகள், ஆசை நோய் கொள் மருந்து இடு சண்டிகள் = ஆசை நோயைத் தருகின்ற மருந்தை கொடுக்கின்ற கொடியோர்கள், வாறபேர் பொருள் கண்டு விரும்பிகள் = வருகின்றவர்களின் பொருளைப் பார்த்து ஆசைப்படுகின்றவர்கள், எவரேனும் நேயமே கவி கொண்டு சொல் மிண்டிகள் = யாராக இருப்பினும் தங்களின் அன்பைப் பாடல்களின் மூலமாய்ப் பாடிச் சொல்லுகின்ற கெட்டியான மனத்தினர்கள், காசு இலாதவர் தங்களை = பணம் இல்லாத ஏழைகளை, அன்பு அற = இரக்கம் இன்றி, நீதி போல நெகிழ்ந்த பறம்பிகள் = நீதியுடன் பேசுவது போல் பேசி நழுவவிட்ட மோசக்காரிகள், அவர் தாய்மார் = அவர்களுடைய தாயார்கள், நீலி நாடகமும் பயில் மண்டைகள் = நீலியின் நாடகம் நடிக்கின்ற வேசியர், பாளை ஊறு கள் உண்டிடு தொண்டிகள் = தென்னம், பனம்பாளையில் ஊறுகின்ற கள்ளைக் குடிக்கின்ற வேலைக்காரிகள், நீசரோடும் = இழிந்தவர்களுடனும், இணங்கு கடம்பிகள் = கூடுகின்ற தீயவர்களாகிய விலைமகளிரின், உறவு ஆமோ = நட்பு ஆகுமோ? ஆகாது.

## பொழிப்புரை

மிகுந்த மதம் பொழிகின்ற யானை முகமுடைய முதல்வரும், பாரதம் என்ற இதிகாசத்தைப் பெரிய மேருமலையில் அந்நாள் எழுதியருளியவரும் ஆகிய விநாயகப் பெருமானுக்கு இளையவரே! பதுமை போன்ற வள்ளியம்மையின் செழுமையான தனங்கள் மீது அணைந்து தழுவி அதனால் குங்கும சந்தனங்கள் பொருந்திய அழகிய திருமார்பினரே! சிங்க வடிவங் கொண்டு இரணியன் என்ற அசுரர் தலைவனுடைய மார்பைப் பிளந்து, பசிய குடரை ஒருசேர வாரியெடுத்து மாலையாகத் தரித்த நீண்ட புயத்தை யுடைய திருமாலின் திருமருகரே; தேன் பொழிகின்ற கடப்ப மலர்மாலை தரித்த திருமுடியை யுடையவரே! சிவபெருமான் பெற்றருளிய தெய்வ நாயகரே! திருச்செந்தூரில் மகிழ்ந்து உறைகின்ற பெருமிதம் உடையவரே! மயக்கத்தைப் புரிகின்ற வாசனையணிந்த தனங்கள்மீது மூடிய புடவையை விலக்குகின்ற நாணமற்றவர்களும், பலருடைய வீடுகட்கும் போய் மூக்கால் அழுது சிணுங்குபவர்களும், பழமையாகப் பழகியவர்மீது இளமையில் வைத்த அன்பை நினைத்து அழுகின்ற வம்பிகளும், ஆசையாகிய நோயை யுண்டாக்க மருந்தைத் தருகின்ற கொடியவர்களும், வருகின்றவர்களது பொருளைக் கண்டு ஆசைப்படுகின்றவர்களும், யாராக இருந்தாலும் நேசத்தைப் பாடல் மூலம் பாடிச் சொல்லுகின்ற கெட்டி மனத்தினரும், பொருள் இல்லாத வறியவரை அன்பின்றி, நீதி போல பேசி யகற்றுகின்ற மோசக்காரிகளும், அவர்களுடைய தாய்மார் போடுகின்ற நீலி நாடகத்தை நடிக்கின்ற வேசையரும், பாளையில் ஊறுகின்ற கள்ளைக் குடிக்கின்ற வேலைக்காரிகளும், இழிந்தவர்களுடனும் கூடுகின்றவர்களுமாகிய பரத்தையருடைய உறவு ஆகுமோ? ஆகாது.

## விரிவுரை

**மாயவாடை திமிர்ந்திடு கொங்கை :—**

மாயம்—மயக்கம். ஆண்களுக்கு மயக்கத்தைத் தரும் பொருட்டு விலைமகளிர் சிறந்த வாசனைப் பொருள்களைத் தமது மார்பிலணிந்து கொள்வர் எனக் கூறுகின்றனர்.

**மூடுசீலை திறந்த மழுங்கிகள் :—**

இளைஞர்களது உள்ளத்தைக் கவரும் பொருட்டு அம்மகளிர் தமது உடம்பின் மேல் உள்ள ஆடை விலகுமாறு செய்து நிற்பர் எனவும் கூறி அவர்களது சாகசத்தை அறிவுறுத்துகின்றார்.

**வாசல் தோறும் நடந்து சிணுங்கிகள் :—**

சிணுங்குதல்—மூக்கினால் அழுகின்றாற்போல் பேசி அசைதல், அவர்கள் பலருடைய வாசல்தோறும் சென்று சென்று தமது கண்வலை வீசி மயக்குவர்.

**ஆசைநோய்கொள் மருந்திடு சண்டிகள் :—**

மருத்துவர்கள் நோயைத் தணிக்க மருந்து தருவார்கள். இதுதான் உலக இயல்பு. இந்த இயல்புக்கு நேர்மாறாக இவ் விலைமகளிர் ஆசையாகிய நோய் உண்டாகும்பொருட்டு மருந்தைத் தருவார்கள். அம் மருந்தை உணவிலே கலந்தும், வெற்றிலையில் ஒளித்தும் தந்து, தம்மை யடைந்தார்கள் மீளா வண்ணம் புரிவார்கள்.

"கருப்பஞ்சாறொரு டரைத்துள உண்டைகள்
நிழற்கண் காண உலர்த்தி மணம்பல தடவாமேல்
நெருக்கும் பாயலில் வெற்றிலை யின்புறம்
ஒளித்தன் பாக அளித்து" —(நிறுக்குஞ்) திருப்புகழ்.

**வாறபேர் பொருள் கண்டு விரும்பிகள் :—**

வருகின்ற—என்பது வாற என்று மருவியது. வருகின்ற தனவந்தர்களின் செல்வத்தைக் கண்டு அச்செல்வம் முழுவதும் கவர்தல் வேண்டும் என்று கருதி அதற்குரிய வழிவகைகளைச் செய்வர்.

**எவரேனும் நேயமே கவிகொண்டு சொல் மிண்டிகள் :—**

யாராக இருப்பினும், (மிகக் கேவலமானவரேனும்) தம்பால் வந்தவர்களை இருத்தி, நீர் மன்மதன், இந்திரன், சந்திரன் என்று பதங்களை இன்னிசையுடன் பாடி மயக்குவர்.

**காசிலாதவர் தங்களை அன்பற நீதிபோல நெகிழ்ந்த பறம்பிகள் :—**

பணமில்லாதவர்களைப் பார்த்து, "நீர் இங்கு வருவது முறையன்று; உமது மனைவிக்குத் துரோகம் புரியக் கூடாது. என்ன இருந்தாலும் மனைவிதான் இம்மைக்கும் மறுமைக்குந் துணை. ஆகவே நீர் உமது மனைவியுடன் இருந்து குடித்தனம் புரிவதே நலம்" என்று நீதி நெறிகள் கூறுவதுபோல் கூறி யனுப்புவர். பறம்பிகள்—சிறிய மலைபோன்ற தனங்களையுடையவர்.

**அவர் தாய்மார் நீவி நாடகமும் பயில் மண்டைகள் :—**

விலைமகளிரின் தாய்மார்கள் மிகுந்த தந்திரமாக ஒரு நாடகம் போல் நடித்து, வந்தவர்களின் பொருளைப் பறிப்பார்

கள். பழையனூரில் நீலி என்ற ஒரு பேய், வணிகனுடைய மனைவிபோல வந்து அவன் உயிரை வாங்கியது. அதைக் குறித்து நீலி நாடகம் என்றனர்.

**பாளையூறு களுண்டிகள் :—**

தென்னை, பனை முதலிய மரங்களின் பாளைகளில் ஊறி வழிகின்ற கள்ளைக் குடித்து மதிமயங்குவர். கள்ளுண்டார் எத்துணைக் கொடிய செயல்களையுஞ் செய்யத் துணிவார். பாவங்கட்கு அஞ்சாத நிலையைக் கள் உண்டாக்கும். நஞ்சு கொல்லுமே யன்றி நரகத்தை நல்காது. கள் அறிவைக் கொன்று நரகத்தையும் நல்கும். ஆகவே நஞ்சினும் கொடியது கள். கள் குடித்தவர்க்கு "இவள் தாய்", "இவள் மனைவி" என்ற தெளிவு இருக்காதாம். தாய்க்கும் மனைவிக்கும் வேற்றுமை தெரியாது மதியை மயக்கும் கள், வேறு என்னதான் செய்யாது ?

"தாயிவள் மனைவி யென்னுந் தெளிவின்றேல் தருமமென்னும்"

என்பது கம்பர் வாக்கு.

கள்ளிலே புழுக்களும் வண்டுகளும் கொசுக்களும் வீழ்ந்து மடிந்து கிடக்கும். அவற்றை வடிகட்டியுண்பர். என்னே மதி ?

வஞ்சமுங் களவும் பொய்யும் மயக்கமும் மரபில் கொட்பும்
தஞ்சமென் றுரை நீக்குந் தன்மையுங் களிப்புந் தாக்கும்
கஞ்சமெல் லணங்குந் தீரும் கள்ளினால் அருந்தினாரை
நஞ்சமுங் கொல்வ தல்லால் நரகினை நல்காதன்றே. —கம்பர்.

**நீசரோடு மிணங்கிகள் :—**

குணத்தாலும் குலத்தாலும் ஒழுக்கத்தாலும் எத்துணை இழிந்தவர்களாயிருப்பினும் அவர்களுடன் கலந்து மகிழ்வர் பொதுமகளிர்.

**உறவாமோ :—**

இத்தகைய தீயவர்களுடைய உறவு புனிதமான மனித வாழ்க்கையைக் கெடுக்கும். நரகத்தையுங் கொடுக்கும். ஆதலின் அவர்களது உறவு ஆகாது.

**பாயுமாமத தந்தி முகம் பெறும் ஆதி :—**

யானையின் முகத்தில் கபாலத்திலும் காதுகளிலும் மதம் பொழியும்; கபோலமதம் கன்னமதம் என்பர். தந்தத்தையுடையது தந்தி. விநாயகர் யானைமுகம் உடையவர் என்பது பிரணவ சொரூபர் என்பதைக் குறிக்கும்.

யானை—அஃறிணை. விநாயகருடைய திருமேனியில் கழுத்துக்குக் கீழ் இடைக்கு மேல் உள்ள பகுதி தேவசரீரம். இடைக்குக் கீழே உள்ளது பூதசரீரம். இவை உயர்திணை. பூதகணம் தேவகணம் விலங்கு கணம், உயர்திணை அஃறிணை ஆகிய எல்லாமான திருவுருவம் விநாயகவடிவம். முதன்மையானவர்; முதற்கடவுள்; எந்தக் கருமம் புரிவோரும் வழிபடத் தக்கவர்.

**பாரத மென்ற பெருங்கதை பார மேருவில் அன்று வரைந்தவன் :—**

பாரதம் ஒரு பெரிய இதிகாசம். அதற்கு அறம் என்றும் ஜயம் என்றும் வேறு பேர்களும் உண்டு. அநேக தருமங்களைத் தன்னகத்தே கொண்ட ஒரு அறநூல் பாரதம். அரச தருமம், மோட்ச தருமம், ஆபத்தருமம், ஆச்சிரம தருமம் முதலிய பலப்பல தருமங்களை மிக விரிவாகக் கூறுகின்றது. இதனை ஊன்றிப் படிப்போர் திருந்தமுறுவர். அதனால்தான் வியாச முனிவர் சொல்ல, விநாயகர் மேருமலையில் எழுதியருளினர்.

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராஜன் மாபாரதஞ் சொன்ன நாள்
ஏடாக மாமேரு வெற்பாக வங்கூர் எழுத்தாணி தன்
கோடாகஎழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ.

—வரந்தருவார்.

**கருத்துரை**

விநாயகரது இளவலே! வள்ளிமணவாளா! திருமால் மருகா! செந்திற் கந்தா! விலைமகளிரது உறவு கலவாது ஆட்கொள்வாய்.

## 50

மான்போற்கண் பார்வை பெற்றிடு
மூஞ்சாற்பண் பாடு மக்களை
வாய்ந்தாற்பொன் கோடு செப்பெனு முலைமாதர்
வாங்காத்திண் டாடு சித்திர
நீங்காச்சங் கேத முக்கிய
வாஞ்சாற்செஞ் சாறு மெய்த்திடு மொழியாலே
ஏன்காற்பங் காக நற்புறு
பூங்காற்கொங் காரு மெத்தையில்
ஏய்ந்தாற்பொன் சாரு பொற்பண முதல்நீதா

ஈந்தாற்கன் றேர மிப்பென
ஆன்பாற்றென் போல செப்பிடும்
ஈண்டாச்சம் போக மட்டிக ளுறவாமோ

கான்பாற்சந் தாடு பொற்கிரி
தூம்பாற்பைந் தோளி கட்கடை
காண்பாற்றுஞ் சாமல் நத்திடும் அசுரேசன்

காம்பேய்ப்பந் தாட விக்ரம
வான்றோய்க்கெம் பீர விற்கணை
காண்டேர்க்கொண் டேவு மச்சுதன் மருகோனே

தீம்பாற்கும் பாகு சர்க்கரை
காம்பாற்செந் தேற லொத்துரை
தீர்ந்தார்க்கங் காளி பெற்றருள் புதல்வோனே

தீண்பார்க்குன் போத முற்றுற
மாண்டார்க்கொண் டோது முக்கிய
தேன்போற்செந் தூரில் மொய்த்தருள்
பெருமாளே.

## பதவுரை

கான்பால்=கானகத்திலே, சந்து ஆடு பொன்கிரி=சந்தனம் பூசிய பொன்மலை போன்ற தனங்களும், தூம்பால் பைந்தொளி=மூங்கில் போன்ற திரண்ட தோள்களும் உடைய சீதாதேவியின், கண்கடை காண்பான்=கடைக் கண் பார்வையைப் பெறும்பொருட்டு, துஞ்சாமல் நத்திடும்=தூக்கமேயின்றி ஆசை கொண்டிருந்த, அசுர ஈசன்=அசுரர் தலைவனாகிய இராவணனுடைய, காம்=தலைகளை, பேய் பந்து ஆட=பேய்கள் பந்துபோல் எறிந்து விளையாடுமாறு, விக்ரம=வீரமுள்ளதாய், வான்தோய்=வானத்திலும் தோயவல்லதாய்,கெம்பீர=அழகுள்ளதாய் விளங்கும், வில் கணை=வில்லிலிருந்து பாணத்தை, காண் தேர் கொண்டு ஏவும்=அழகிய தேர்மீது இருந்து ஏவிய, அச்சுதன்=ஸ்ரீராமருடைய, மருகோனே=திருமருகரே! தீம்பால்=இனிய பால், பாகு=காய்ச்சிய வெல்லம், சர்க்கரை=சீனி, காம்பால் செந்தேறல்=மூங்கிலிலிருந்து முற்றிய தேன், ஒத்து=இவைகளை நிகர்த்த இனியரும், உரை தீர்ந்தார்=சொற்களுக்கு எட்டாதவருமாகிய சிவமூர்த்தியும், கங்காளி=பார்வதியும், பெற்று அருள்=ஈந்தருளிய,புதல்வோனே=குமாரரே! தீண்பார்க்கு=திண்ணிய பூமியில், உன்போதம் முற்றுஉற=உமது திருவடிஞானம் முழுதும் பொருந்தப் பெற்ற, மாண்டார் கொண்டு=பெருமையுடையவர்களைக் கொண்டு, ஓது

முக்கிய = ஓதப் பெற்ற சிறந்தவரே! தேன் போல் செந்தூரில் மொய்த்து அருள் = அடியார் கூட்டங்கள் வண்டுகள்போல திருச்செந் தூரில் நெருங்க வைத்து அருள்கின்ற, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! மான்போல் கண்பார்வை பெற்றிடு மூஞ்சால் = மான் போன்ற கண்பார்வையுடைய முக அழகால், பண்பாடு மக்களை வாய்ந்தால் = பண்பாடுடைய ஆண்கள் கிடைத்தால், பொன் கோடு = தங்க மலையையும், செப்புஎனும் = சிமிழையும் ஒத்த, முலை மாதர் = தனங்களையுடைய பொதுமகளிர், வாங்கா திண்டாடு = தம்பால் வந்தவரைப் பிடித்துத் திண்டாட வைப்பதும், சித்திரம் நீங்கா = விசித்திரம் விலகாததும், சங்கேதம் = ஒரு குறிப்புடன் கூடிய தும், முக்கியம் = இன்றியமையாததும், வாஞ்சால் = ஆசை தரக்கூடிய தும், செம்சாறு = செவ்விய இனிய ரசம் போன்றதும், மெய்த்திடு = மெய் போன்றதுமான, மொழியாலே = சொற்களினால், ஏன் கால் பங்குஆக = என்னுடைய பக்கத்தில் வாரும் என்று அழைத்துச்சென்று, நற்பு உறு = நன்மை தரும், பூ கால் கொங்கு ஆரும் = பூவின் காற்றி னால் நறுமணம் நிறைந்த, மெத்தையில் = படுக்கையில், ஏய்ந்தால் = பொருந்தியவுடன், பொன்சாரு பொன் பணம் முதல் நீதா = பொன்னாலாகிய காசுகளை முதலில் நீ கொடு, ஈந்தாற்கு அன்றோ ரமிப்புஎன = அப்படி பணங்கொடுத்தவற்குத்தானே கூட்டுறவு என்று, ஆன்பால் தேன் போல செப்பிடும் = பசுவின்பாலும் தேனும் போலக் கூறுகின்றவரும், ஈண்டா சம்போக மட்டிகள் = அருகில் நெருங்காத போக மகளிருமாகிய பரத்தையருடைய, உறவு ஆமோ = நட்பு ஆகுமோ? ஆகாது.

## பொழிப்புரை

கானகத்திலே இருந்தவரும், சந்தனம் பூசிய தனங்களும், மூங்கில் போன்ற பசிய தோள்களும் உடையவருமான சீதா பிராட்டியாருடைய கடைக்கண் பார்வையின் பொருட்டு காம வெறிபிடித்து இரவுபகலாகத் தூங்காது இருந்த இராவண னுடைய தலைகளைப் பேய்கள் பந்து போல் எறிந்து ஆடுமாறு, வீரமும் விண்ணில் தோய்கின்ற கெம்பீரமும் உடைய வில்லி னின்று கணையை அழகிய தேரிலிருந்து ஏவிய ஸ்ரீராமபிரா னுடைய திருமருகரே! இனிய பால் பாகு சர்க்கரை மூங்கிலில் இருந்து வழிகின்ற தேன் இவைகள் போன்றவரும் உரைகட்கு எட்டாதவரும் ஆகிய சிவமூர்த்திக்கும் உமாதேவிக்கும் புதல் வரே! திண்ணிய நிலத்தில் உமது மெய்யுணர்வு முழுவதும் பெற்று மேம்பட்டவர்களைக் கொண்டு ஓதப் பெறுகின்ற சிறந் தவரே! வண்டுகள் போல் அடியார்கள் நிறைந்துள்ள திருச் செந்தூரில் உறைகின்ற பெருமிதம் உடையவரே! மான் போன்ற மிரண்ட விழிகளையுடைய முகத்தின் அழகால், தமக்கு உரிய ஆண்கள் கிடைத்தால், பொன்மலை சிமிழ்

போன்ற தனமுடைய பொதுமகளிர், அவர்களை வசஞ்செய்து திண்டாட வைப்பதும், விசித்திரமானதும், ஒரு குறிப்பை யுடையதும், முக்கியம் போன்றதும், ஆசையை வளர்ப்பதும், இனிய ரசம் போன்றதும், உண்மை போன்றதுமாகிய மொழி களால், என் அருகில் வாரும் என்று அழைத்து, நல்ல மலர்க் காற்றினால், மணம் நிறைந்த சயனத்தில் பொருந்தியவுடன் "முதலில் நீ பொற்காசைக் கொடு, பணம் தந்தவருக்குத்தானே கூட்டுறவு" என்று, பசுவின் பால் தேன் போன்ற சொற்களைச் சொல்லி நெருங்காமலேயே மருட்டிடும் போக மாதர்களின் உறவு ஆகுமோ? ஆகாது.

## விரிவுரை

இப்பாடலில் சுவாமிகள் முதற் பகுதி நான்கு அடிகளி லும் விலைமகளிருடைய சாகசங்களைக் கூறி, மக்கள் அந்த ஆசை நெறியில் செல்வது பிழை என்று அறிவுறுத்துகின் றனர்.

**மூஞ்சால் :—**

முகம்—என்பது மூஞ்சு என வழங்குகின்றது.

**ஏன் காற் பங்காக :—**

என்—என்பது ஏன் என சந்தத்துக்காக நீண்டது. ஆடவரை என் அருகில் வாரும் என அழைத்து இன்புறுத்து வர்.

**பூங்காற் கொங்காரு மெத்தை :—**

கால்—காற்று. மலர்க் காற்று. அன்றியும் கால் என் பதை தாள் எனக் கொண்டு பூவின்தாள் என்று கூறினும் அமையும்.

**ஆன்பாற் றென் போல :—**

ஆன்பால் தென்—இத்தொடரில் தேன் என்பது தென் எனக் குறுகியது.

**கான்பால் :—** அசோகவனம்.

**கட்கடை காண்பால் துஞ்சாமல் நத்திடும் அசுரேசன் :—**

சீதாபிராட்டியின் கடைக்கண் பார்வை தன்மீது விழுமோ என்று ஆசைப்பட்டு, மோக வெறியால் தூக்கத்தைத் துறந்து ஏக்கமுற்றுக் கிடந்தான் இராவணன்.

**காம் பேய் பந்தாட :—**

கம்—தலை. கம் என்பது காம் என நீண்டது.

**காண் தேர் :—**

காண்—அழகு. அழகிய இந்திரனுடைய தேரின்மீது ஸ்ரீராமர் ஆரோகணித்து இராவண வதம் புரிந்தார். இராமாயணத்தில் தேரேறு படலம் என்றே ஒரு பகுதி வருகின்றது.

**தீம்பால்**—இனிய பால்.

**காம்பால் செந்தேறல் :—**

தேறல்—தேன். காம்பு—மூங்கில். மூங்கிலில் தேன் கூடு கட்டி அதிலிருந்து வழிகின்ற தேன். இறைவன் பாலினும் இனியன்; பாகினும் இனியன்; கற்கண்டினும் இனியன்; தேனினும் இனியன். இன்னும் நாம் எதனை எதனை இனிமை என்று கருதுகின்ருேமோ அவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்ட இனியன் இறைவன்.

கனியினும் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க்குழல் பாவை நல்லாரினும்
தனிமுடிகவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்தார்க் கிடைமருதனே. —அப்பரடிகள்

**உரை தீர்ந்தார் :—**

உரைப்பார் உரைகட்கு எட்டாதவன் இறைவன். "மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே" என்கின்ருர் மணிவாசகர்.

"நால்வேதத்தப்பால் நின்ற
சொற்பதத்தார் சொற்பதமும் கடந்துநின்ற
சொலற்கரிய சூழலாய்" —அப்பர்.

**தீண்பார் :—**

திண் என்பது தீண் என நீண்டது. திண்ணிய பூமி.

**உன் போத முற்றுற மாண்டார் :—**

இறைவனுடைய திருவடி ஞானமுற்றும் எய்திய பெருமையுடையார். மாண்டார்—மாட்சிமை யுடையோர்.

## கருத்துரை

திருமால் மருகரே! சிவகுமாரரே! செந்திற் கந்தவேளே! பொதுமகளிரது உறவகல அருள் புரிவீர்.

## 51

முகிலா மெனு மளகங் காட்டி
மதிபோலுயர் நுதலுங் காட்டி
முகிழாகிய நகையுங் காட்டி அமுதூறு
மொழியாகிய மதுரங் காட்டி
விழியாகிய கணையுங் காட்டி
முகமாகிய கமலங் காட்டி மலைபோலே
வகையாமிள முலையுங் காட்டி
இடையாகிய கொடியுங் காட்டி
வளமானகை வளையுங் காட்டி இதமான
மணிசேர்கடி தடமுங் காட்டி
மிகவே தொழி லதிகங் காட்டு
மடமாதர்கள் மயலின் சேற்றி லுழல்வேனோ
நகையால்மத னுருவந் தீத்த
சிவனாரருள் சுதனென் றூர்க்கு
நலனேயரு ளமர்செந் தூர்க்கு ளுறைவோனே
நவமாமணி வடமும் பூத்த
தனமாதெனு மிபமின் சேர்க்கை
நழுவாவகை பிரியங் காட்டு முருகோனே
அகமேவிய நிருதன் போர்க்கு
வரவேசமர் புரியுந் தோற்ற
மறியாமலு மபயங் காட்டி முறைகூறி
அயிராவத முதுகின் தோற்றி
யடையாமென இனிதன் பேத்து
மமரேசனை முழுதுங் காத்த பெருமாளே.

### பதவுரை

நகையால்=புன்சிரிப்பால், மதன்=மன்மதனுடைய, உருவம்= உடம்பை, தீர்த்த=எரித்து அழித்த, சிவனார் அருள் சுதன் என்று=சிவ பெருமானுடைய திருக்குமாரர் என்று விளங்கி, ஆர்க்கும் நலனே அருள்=யாவர்க்கும் நன்மையே அருள் செய்து, அமர் செந்தூர்க்குள் உறைவோனே=விரும்புகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்ப வரே! நவமாமணி வடமும் பூத்த=சிறந்த ஒன்பது மணிகளாலாகிய

மாலை விளங்கும், தனமாது எனும் இபமின்=தனங்களையுடைய பெண்மணியாகிய தெய்வயானையின், சேர்க்கை நழுவா வகை பிரியம் காட்டு=கூட்டுறவை அகல விடா வண்ணம் அன்பு செய்யும், முருகோனே=முருகக் கடவுளே! அகம் மேவிய நிருதன்=அகங்காரங் கொண்ட சூரபன்மன், போர்க்குவர=போருக்கு வந்தவுடன், சமர் புரியும் தோற்றம் அறியாமலும்=அவனுடன் போர் புரியும் தன்மையறியாதபடி, அபயம் காட்டி முறைகூறி=அபயங் காட்டியாள வேண்டும் என்று முறையிட்டு, அயிராவத முதுகின் தோற்றி=வெள்ளை யானைமீது வந்து, அடையாம் என இனிது அன்பு ஏத்தும்=அடைக்கலம் என்று கூறி இனிமையுடனும் அன்புடனும் துதி செய்த, அமரேசனை முழுதும் காத்த=தேவேந்திரனை முழுமையுங் காத்தருளிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! முகிலாமெனும் அளகம் காட்டி=மேகம் போன்ற கூந்தலைக் காட்டி, மதிபோல் உயர் நுதலும்காட்டி=பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியைக் காட்டி, முகிழாகிய நகையும் காட்டி=முல்லை அரும்பு போன்ற பற்களைக் காட்டி, அமுதுஊறும் மொழி ஆகிய மதுரம் காட்டி=அமுது ஊறுகின்ற சொல்லாகிய இனிமையைக் காட்டி, விழி ஆகிய கணையும் காட்டி=கண்ணாகிய அம்பைக் காட்டி, முகம் ஆகிய கமலம் காட்டி=முகமாகிய தாமரையைக் காட்டி, மலைபோலே வகையாம் இளமுலையும் காட்டி=மலை போன்று உயர்ந்து ஒழுங்காயுள்ள இளமுலையைக் காட்டி, இடை ஆகிய கொடியும் காட்டி=இடையாகிய கொடியைக் காட்டி, வளம் ஆன கை வளையும் காட்டி=வளப்பம் மிகுந்த கைவளையல்களைக் காட்டி, இதம் ஆன மணிசேர் கடிதடமும் காட்டி=இன்பந் தருவதான அழகிய நாபியின் கீழ்ப்பகுதியைக் காட்டி, மிகவே தொழில் அதிகம் காட்டும்=மிகுதியாகத் தங்கள் சாகசத் தொழிலை அதிகம் காட்டுகின்ற, மடமாதர்கள் மயலின் சேற்றில்=விலைமாதர்களின் மயக்கமாகிய சேற்றிலே, உழல்வேனோ=அடியேன் அலையலாமோ?

## பொழிப்புரை

புன்சிரிப்பால் மன்மதனுடைய உடம்பை எரித்த சிவபெருமானுடைய திருக் குமாரராகத் திகழ்ந்து, அனைவர்க்கும் நலத்தையே நல்கி திருச்செந்தூரில் விரும்பி யுறைகின்றவரே! ஒன்பது மணிகளாலாகிய இரத்ன மாலையுடன் கூடிய தனங்களையுடைய தெய்வயானை யம்மையின் சேர்க்கையை அகல விடாது அன்பைக்காட்டி யருளும் முருகவேளே! அகங்கார மிகுந்த சூரபன்மன் போருக்கு வந்தவுடன், அவனுடன் போர் புரியுந் திறம் அறியாது அபயந் தரவேண்டும் என்று முறையிட்டு, ஐராவத யானை மீது வந்து அடைக்கலம் என்று இனிமையாகவும் அன்பாகவும் துதித்த இந்திரனை முழுவதும் காத்தருளிய பெருமிதம் உடையவரே! மேகம் போன்ற

கூந்தலைக்காட்டி, பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியைக் காட்டி, முல்லையரும்பு போன்ற பற்களைக் காட்டி, அமுதம் ஊறுகின்ற மொழியாகிய இனிமையைக் காட்டி, கண்ணாகிய கணையுங் காட்டி, முகமாகிய தாமரையைக் காட்டி, மலை போன்ற ஒழுங்குடைய இளந் தனத்தைக் காட்டி, இடையாகிய கொடியைக் காட்டி, வளப்பமான கை வளையலைக் காட்டி, இனிமை மிகுந்த அழகிய கடிதடத்தைக் காட்டி, மிகுந்த தமது சாகசத் தொழிலை யதிகமாகக் காட்டுகின்ற விலைமாதர்களுடைய மயக்கமாகிய சேற்றில் அடியேன் அலையலாமோ?

## விரிவுரை

**நகையால் மதனுருவந் தீத்த சிவனார்:—**

சிவபெருமானுடைய மோன நிலையைக் கலைக்கும் பொருட்டு மன்மதன் மலர்க்கணை தூவினான். கண்ணுதற் கடவுள் சிறிது புன்னகை புரிந்து தமது நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்தார். உடனே மன்மதன் சாம்பலாகி விட்டான். ஆசையை விளைவிக்கின்றவன் மன்மதன்; ஆசைக்கு அவனே மூலப் பொருள்; ஆசையாகிய மரத்தின் ஆணிவேர் அவன். அந்த ஆசையின் மூலப் பொருளைப் பெருமான் ஞானக்கினியால் அழித்துவிட்டான். எனவே, ஞானத் தீயால் ஆசையை யழிக்கவேண்டும் என்பது விளங்குகின்றது.

**ஆர்க்கும் நலனே யருள் :—**

முருகவேள் யாவர்க்கும் அருள்புரிகின்ற கருணாமூர்த்தி:

> "யார்வேண்டினாலும் கேட்ட பொருளீயும்
> த்யாகாங்க சீலம் போற்றி" —(நாகாங்க) திருப்புகழ்.

வைதாரையும் வாழவைக்கும் வரதன்.

**அமரேசனை முழுதுங் காத்த பெருமானே :—**

இந்திரன் சூரபன்மனால் நாடிழந்து, வீடிழந்து, அரசிழந்து, ஆண்மை யிழந்து, மகனை யிழந்து பெருந் துன்பமுற்றான். முருகக் கடவுள், அவன் பொருட்டு, சூராதி யவுணரையழித்து, அவனுக்குப் பொன்னுலக வாழ்வைத் தந்து எல்லா நலன்களையும் அருளி யுதவினார். ஆகவே, முழுவதும் காத்தருளினார் என்று அடிகள் கூறினார்.

**மயலின் சேற்றில் உழல்வேனோ ? :—**

மாதர் மயக்கம், அழகிய சேற்றுக்கு நிகரானது. சேற்றில் விழுந்தவன், நாற்றத்தாலும் வழுக்குதலாலும் துன்புறுவான்.

இந்தச் சேற்றைவிட்டு விலக அருணகிரியாருக்கு ஆண்டவன் அருள் புரிந்தான். "பிரபஞ்சமென்னும் சேற்றைக் கழிய வழி விட்டவா" என்கின்ருர் சுவாமிகள் கந்தரலங்காரத்தில். மைய லாகிய சேற்றைக் கடக்க முருகன் திருவடி ஊன்று கோலாகும். அத் திருவடித் துணையால் மாதர் மயலை யகற்றி முத்திக்கரை சேரலாம்.

## கருத்துரை

திருச்செந்தூரில் மேவு குமாரக் கடவுளே! இந்திரனை யாண்ட இறைவரே! மாதர் மயலில் விழாவண்ணம் காத்தருள் வீர்.

## 52

முலைமு கந்தி மிர்ந்த கலவை யுந்து லங்கு
முறுவ லுஞ்சி வந்த கனிவாயும்
முருக விழ்ந்து திர்ந்த மலர்க ளுஞ்ச ரிந்த
முகிலு மின்ப சிங்கி விழிவேலும்

சிலைமு கங்க லந்த திலத முங்கு ளிர்ந்த
திருமு கந்த தும்பு குறுவேர்வும்
தெரிய வந்து நின்ற மகளிர் பின்சு ழன்று
செயல ழிந்து ழன்று திரிவேனோ

மலைமு கஞ்சு மந்த புலவர் செஞ்சொல் கொண்டு
வழிதி றந்த செங்கை வடிவேலா
வளர்பு னம்ப யின்ற குறம டந்தை கொங்கை
மணிவ டம்பு தைந்த புயவேளே

அலைமு கந்த வழ்ந்து சினைமு திர்ந்த சங்க
மலறி வந்து கஞ்ச மலர்மீதே
அளிக லந்தி ரங்க இசையுடன்து யின்ற
அரிய செந்தில் வந்த பெருமாளே.

## பதவுரை

மலைமுகம் சுமந்த புலவர் = மலையின் கண்ணுள்ள குகையில் அடை பட்ட புலவராகிய நக்கீரரது, செம்சொல் கொண்டு = செவ்விய சொல்லாகிய திருமுருகாற்றுப்படையை ஏற்றுக்கொண்டு, வழி திறந்த = மலையைப் பிளந்து வழிதிறந்துவிட்ட, செங்கை வடிவேலா = சிவந்த திருக்கரத்தில் கூரிய வேலையுடையவரே! வளர்புனம் பயின்ற =

வளர்கின்ற தினைப்புனத்தில் காவல் புரிந்திருந்த, குறமடந்தை=குறவர் குலமகளாகிய வள்ளியம்மையின், கொங்கை மணி வடம் புதைந்த=தனபாரங்களில் உள்ள இரத்தின மணிமாலை யழுந்திய, புயவேளே=திருப்புயங்களையுடைய குமாரவேளே! அலைமுகம் தவழ்ந்து=கடலின் அலைகளிலே தவழ்ந்து, சினை முதிர்ந்த சங்கம்=கருமுதிர்ந்த சங்குகள், அலறி வந்து=மிக ஒலித்து வந்து, கஞ்ச மலர் மீது=தாமரை மலரின் மீது, அளிகலந்து இரங்க=வண்டுகள் மொய்த்து ஒலிக்க, இசையுடன் துயின்ற=அந்த இசையைக் கேட்டுக் கொண்டே துயில் புரிகின்ற, அரிய செந்தில் வந்த=அருமையான திருத்தலமாகிய திருச்செந்தூரில் வந்து எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! முலை முகம் திமிர்ந்த கலவையும்=கொங்கையின் மீதுபூசப்பட்ட சந்தனமும், துலங்குமுறுவலும்=விளங்குகின்ற பற்களும், சிவந்த கனிவாயும்=சிவந்த கொவ்வைக் கனியனைய வாயும், முருகு அவிழ்ந்து உதிர்ந்த மலர்களும் சரிந்த முகிலும்=நறுமணம் அவிழ்ந்து உதிர்ந்த மலர்கள் சரிந்துள்ள மேகம் போன்ற கூந்தலும், இன்ப சிங்கி விழி வேலும்=இன்பமும் நஞ்சும் அமைந்த வேல் போன்ற கண்ணும், சிலைமுகம் கலந்த திலதமும்=வில் போன்ற நெற்றியில் உள்ள பொட்டும், குளிர்ந்த திருமுகம் ததும்பு குறுவேர்வும்=குளிர்ந்த அழகிய முகத்தில் நிரம்பி வெளிப்பட்ட சிறு வியர்வையும், தெரிய வந்து நின்ற=தெரியுமாறு வந்து நின்ற, மகளிர் பின் சுழன்று=பொது மாதர்களின் பின்னே சுழன்று, செயல் அழிந்து உழன்று திரிவேனோ=என்னுடைய செயல் அழிந்து அலைந்து அடியேன் திரியலாமோ?"

## பொழிப்புரை

மலையின்கண் குகையில் அடைபட்ட நக்கீரருடைய செவ்விய சொல்லாகிய திருமுருகாற்றுப்படையை ஏற்றுக்கொண்டு, அம்மலையைப் பிளந்து வழி திறந்து விட்ட கூரிய வேலை சிவந்த கரத்தில் கொண்டவரே! வளர்கின்ற தினைப் புனத்தில் காவல் புரிந்த குறவர் குலமகளாகிய வள்ளி பிராட்டியின் தனங்களின் மீதுள்ள இரத்தின மணிமாலைகள் அழுந்திய திருப்புயத்தை யுடையவரே! கடலின் அலையின் மீது தவழ்ந்து ஒலித்துக்கொண்டு சூல் முதிர்ந்த சங்குகள் வந்து தாமரை மலர் மீது சேர்ந்து, அங்கே வண்டினங்கள் இனிது ஒலிக்க அந்த இசையைக் கேட்டு துயில்கின்ற அருமைத் தலமாகிய திருச்செந்தூரில் வந்து எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! கொங்கையின் மீது பூசப்பட்ட சந்தனமும், விளங்குகின்ற பற்களும், சிவந்த கொவ்வைப் பழம் போன்ற வாயும், நறுமணம் வெளிப்பட்டு உதிர்ந்த மலர்கள் நிறைந்த கரியமுகில் போன்ற கூந்தலும், இன்பமும் நஞ்சும் ஒருங்கே யமைந்த வேல்போன்ற கண்ணும், வில்போன்ற நெற்றியில்

தீட்டிய பொட்டும், குளிர்ந்த அழகிய முகத்தில் ததும்புகின்ற சிறு வியர்வையும், தெரியுமாறு வந்து முன்னே நிற்கின்ற பொதுமகளிரது பின்னே சென்று சுழன்று, என் செயல் அழிந்து அலைந்து அடியேன் திரியக் கடவேனோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் பொதுமகளிரது உறவு அற்று உய்வு பெற்று நலமுறுமாறு அடிகளார் கூறுகிறார்.

**இன்பசிங்கி விழி வேலும் :—**

சிங்கி—குளிர்ந்து கொல்லும் நஞ்சு. மகளிருடைய கண் பார்வையில் இரு தன்மைகள் உள; ஒன்று மயக்கமாகிய நோய் செய்யும்; மற்றொன்று அந் நோயைத் தணிக்கும் மருந்தாகி இன்பத்தைத் தரும்.

இருநோக் கிவள்உண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கு ஒன்றுஅந்நோய் மருந்து. —திருக்குறள்.

**சிலைமுகங் கலந்த திலதமும் :—**

சிலை—வில். இங்கே வில் போன்ற நெற்றியைக் குறிக்கின்றது. உவம ஆகு பெயர். நெற்றியிலே அம்மகளிர் பலப்பல நிறமுடன் கூடிய பொட்டினை அழகுறத் தீட்டி நிற்பர். அப்பொட்டும் ஆடவரை மயக்கும்.

**மகளிர் பின் சுழன்று செயலழிந் துழன்று திரிவேனோ? :—**

பிறப்புக்கு விதை அவா; ஒவ்வொரு அவாவும் ஒவ்வொரு பிறப்பை நல்கும். பெண்ணவா பெருந்துன்பத்தைத் தரும். இதிலும் பொதுமகளிர் உறவு திருவையும் தெளிவையும் உருவையும் அழிக்கும்.

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப்பட்டார் தொடர்பு. —திருக்குறள்.

கள்ளைப்போல் அறிவை மயக்குந்தன்மை விலைமகளிர் உறவு. அதனால் திருவள்ளுவர் "வரைவின் மகளிர்" என்ற அதிகாரத்துக்குப் பின் "கள்ளுண்ணாமை" என்ற அதிகாரத்தை அமைத்தனர். விலைமாதருடைய மெல்லிய தோள்கள், அறிவில்லாத மூடர்கள் அழுந்துகின்ற நரகம் என்றும் வள்ளுவனார் கூறுகின்றார்.

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர் ஆழும் அளறு.

ஆதலின் அம்மகளிர் பின் சென்று அவமே அலைந்து திரியாது, ஆன்றோர் பின் சென்று மாந்தர் உய்தல் வேண்டும்.

"திகழ்மாதர் பின்செருமி அழிவேனோ"
—(சிவஞான புண்டரிக) திருப்புகழ்.

**மலைமுகஞ் சுமந்த புலவர் செஞ்சொல் கொண்டு வழிதிறந்தசெங்கை வடிவேலா :—**

இந்த அடி நக்கீரருடைய வரலாற்றைத் தெரிவிக்கின்றது. கீரம்—சொல்; நக்கீரர்—நல்ல இனிய சொற்களையுடையவர். இவர் கடைச் சங்கத்து நாற்பத்தொன்பது புலவர்களில் தலைமை பெற்றவர். அஞ்சா நெஞ்சும் ஆழ்ந்த அறிவும் உறுதியும் உடைய நல்லிசைப் புலவர்.

சிவ பூசையில் வழுவியவரை ஒன்றுகூட்டி ஆயிரம் என்ற எண்ணிக்கையானவுடன் உண்ணுகின்ற ஒரு பெண் பூதம் இருந்தது. அதன் பேர் கற்கிமுகி. அப்பூதம் ஆங்காங்கு பூசையில் மனந்திரிந்து வழுவியவர்களை யெல்லாம் கொண்டுபோய் ஒரு பெரிய மலைக் குகையில் அடைத்து வைத்து, அவர்கட்கு உணவுந் தந்து கொண்டிருந்தது. 999 பேர் சேர்ந்திருந்தனர். இன்னும் ஒருவர் குறைவு. அந்தப் பூதம் மற்றொருவரைத் தேடிக் கொண்டிருந்தது.

நக்கீரர் ஒரு சமயம் தலயாத்திரை மேற்கொண்டு சென்றார். ஒரு தளக்கரையில் சிவபூசை செய்துகொண்டிருந்தார். அப்பூதம் அங்கு வந்து சேர்ந்தது. ஒரு இலையை உதிர்த்தது. அந்த இலை பாதி நீரிலும் பாதி நிலத்திலுமாக வீழ்ந்தது. நீரில் வீழ்ந்த பாதி மீனாகவும், நிலத்தில் விழுந்த பாதி பறவையாகவும் மாறியது. பறவை நிலத்துக்கும் மீன் நீருக்குமாக இழுத்துப் போர் புரிந்தன; இந்த அதிசயத்தைக் கண்ட நக்கீரர் பூசையில் மனம் பதியாது அதனையே நோக்கி நின்றார். பூசையில் வழுவிய அவரை எடுத்துக்கொண்டுபோய் பூதம் குகையில் அடைத்துவிட்டது. இப்போது ஆயிரம் என்ற எண்ணிக்கை முற்றியது. இனி அவர்களை உண்ணுவதற்குப் பூதம் எண்ணியது. ஆனால், பூதம் குளித்துவிட்டுத்தான் உண்ணும். குளிக்கச் சென்றது பூதம்.

அந்த முன்னமேயே அடைபட்டிருந்தோர் அனைவரும் "பாவி! நீயல்லவா எங்கட்கு எமனாக வந்தனை; நீ வராமல் இருந்தால் பூதம் எம்மை இப்போது உண்ணமாட்டாதே; பால் பழம் முதலிய உணவுகளைத் தந்து எம்மைக் கொழுக்க வைத்தது பூதம். இனி அப் பூதம் வந்து எம்மை விழுங்குமே? என் செய்வோம்" என்று கூறி வருந்தி வாய் விட்டுப் புலம்பினார்கள். நக்கீரர் அவர்களுடைய அவல நிலையைக் கண்டு இரங்கினார். "நீவிர் அஞ்சற்க. முன் இலக்கத்தொன்பது பேர்

அடைபட்ட கிரவுஞ்சம் என்ற பெருமலையை வேலால் பிளந்த எம்பெருமான் இருக்கின்றான். அப் பரமனைப் பாடினால் அவன் வேல் நமக்குத் துணை புரியும்'' என்று கூறி, முருகவேளை நினைந்து உருகினார். "மலையைப் பிளந்த கருணை மலையே! மன்னுயிர்களைக் காக்கும் மயிலேறிய மாணிக்கமே! இப்போது எம்மைக் காத்தருள்வாய்'' என்று வேண்டினார்.

'உலகம் உவப்ப' என்று தொடங்கித் திருமுருகாற்றுப் படை என்ற இனிய பாடலைப் பாடினார். தேனும் பாலும் கற்கண்டும் ஒவ்வாத இனிய சுவையுடைய அத் திருப்பாடலைச் செவிமடுத்த செந்தமிழ்க் கடவுளாகிய எந்தை கந்தவேள், தமது திருக்கரத்தில் விளங்கும் வேலை விடுத்தருளினார். அவ் வேல் மலையையும் கற்கிமுகி என்ற பூதத்தையும் பிளந்து, நக்கீரரையும் அவருடன் சேர்ந்த மற்றையோரையுங் காத்தருளியது.

"அருவரை திறந்துவன் சங்க்ராம கற்கிமுகி
அபயமிட அஞ்சலென் றங்கீரனுக்குதவி'' —திருவகுப்பு. (6)

ஓராயிரம் பேரை வருடத்தில் ஒருநாளில்
உண்கின்ற கற்கி முகிதான்
ஒன்று குறை யாகியிடும் அன்று நக்கீரர்வர
ஓடிப் பிடித் தவரையும்
காராய குன்றத் தடைத்துரிய நியதிக்
கடன் துறை முடிக்க அகலக்
கருதி முருகா றவர் உரைத்தருள நீலக்
கலாப மயில் ஏறி யணுகிப்
பேரான குன்றந் திறந்திவுளி முகியைப்
பிளந்து நக்கீரர் தமையும்
பெரியவேல் கொண்டு புனல் கண்டுசுனை மூழ்கிப்
பிரான் முகலி நதியின் மேவச்
சீராய திருவருள் புரிந்தகர னூராளி
சிறுதேர் உருட்டி யருளே
செய செயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டி யருளே.
—திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்.

**அலைமுகந் தவழ்ந்து சினைமுதிர்ந்த சங்கம் அலறி வந்து கஞ்ச மலர் மீதே அளிகலந்திரங்க இசையுடன் துயின்ற :—**

திருச்செந்தூரில் கடல் ஒழியாது ஆரவாரத்துடன் அலைகள் வீசிய வண்ணம் இருக்கின்றது. கருமுதிர்ந்த சங்குகள் அந்த அலையினால் எடுத்து எறியப் பெற்று, அதனால் வருந்தின. மெல்லத் தவழ்ந்து வந்து கரையில் உள்ள குளங்களில்

மலர்ந்துள்ள தாமரை மலர்களாகிய கட்டிலில் படுத்தன. பாவம்! அவை நிறை கருப்பம் உடையவை. அலைகளால் மோதப்பட்ட வருத்தம். அங்கே தேனையுண்ண வந்த வண்டுகள், இனிது ரீங்காரஞ் செய்தன. அந்த இன்னிசையைக் கேட்டு இசையில் மயங்கி முத்து மணிகளைக் கருவில் கொண்ட சங்குகள் அப்படியே உறங்கிவிட்டன.

என்ன அழகான இயற்கை வருணனை! பிறவிப் பெருங் கடலில் நெடுங்காலமாக அலைப்புண்ட ஆன்மாக்களும், திருச் செந்தூர் வந்து முருகன் திருவடித் தாமரையில் அடியவர் பாடும் இனிய துதிப்பாடல்களாகிய இன்னோசையைக் கேட்டு இன்பத்துயில் புரிவர் என்ற குறிப்பை இது நமக்கு உணர்த்துகின்றது.

"கத்துந் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்தில்
கான்ற மணி"

(தரங்கம்—அலை, வாலுகம்—மணல், கான்ற—ஈன்ற) என்று பகழிக்கூத்தரும் கூறுகின்றார்.

## கருத்துரை

நக்கீரருக்கு அருளிய வேலாயுதரே! செந்திற் குமாரரே! விலைமாதருடைய உறவு அற அருள்புரிவீர்.

## 53

மூப்புற்றுச் செவி கேட்பற் றுப்பெரு
மூச்சுற் றுச்செயல் தடுமாறி
மூர்க்கச் சொற்குரல் காட்டிக் கக்கிட
மூக்குக் குட்சளி யிளையோடும்

கோப்புக் கட்டியி ணுப்பிச் செற்றிடு
கூட்டிற் புக்குயி ரலையாமுன்
கூற்றத் தத்துவ நீக்கிப் பொற்கழல்
கூட்டிச் சற்றருள் புரிவாயே

காப்புப் பொற்கிரி கோட்டிப் பற்றலர்
காப்பைக் கட்டவர் குருநாதா
காட்டுக் குட்குற வாட்டிக் குப்பல
காப்புக் குத்திர மொழிவோனே

வாய்ப்புற் றத்தமிழ் மார்க்கத் திட்பொருள்
வாய்க்குச் சித்திர முருகோனே
வார்த்தைச் சிற்பர தீர்த்தச் சுற்றலை
வாய்க்குட் பொற்பமர் பெருமாளே.

## பதவுரை

காப்பு பொன்கிரி கோட்டி=பூமி நிலைத்து நிற்கக் காவலாய் விளங்கும் பொன்மேருகிரியை வில்லாக வளைத்து, பற்றலர்=பகைவராகிய முப்புரத்தாருடைய, காப்பை=அரண்களை, கட்டவர்=அழித்தவராகிய சிவபெருமானுடைய, குருநாதா=குருமூர்த்தியே! காட்டுக்குள் குறவாட்டிக்கு=கானகத்தில் வள்ளிபிராட்டிக்கு, பல காப்பு குத்திரம் மொழிவோனே=பலவாறுக என்னைக் காத்தருள் என்று மாய வார்த்தைகளை யுரைத்தவரே! வாய்ப்பு உற்ற=நல்ல வாய்ப்புடைய, தமிழ் மார்க்க திண் பொருள்=தமிழின் அகப்பொருள் துறையின் உறுதியான பொருளை, வாய்க்கு=உண்மையிதுவே என்று, சித்திர=அழகுறத் தெளிவுபடுத்திய, முருகோனே=முருகக் கடவுளே! வார்த்தை சிற்பர=சொல்லுக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டவரே! தீர்த்த சுற்று அலைவாய்க்குள்=புனிதமான தீர்த்தத் துறைகள் சுற்றியுள்ள கடலின் கரையில், (செந்திமாநகரில்) பொற்பு அமர்=அழகாக அமர்ந்துள்ள, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! மூப்பு உற்று=கிழப் பருவத்தை யடைந்து, செவி கேட்பு அற்று=காது கேட்கும் தன்மையற்று, பெருமூச்சு உற்று=பெருமூச்சு விட்டுக் கொண்டு, செயல் தடுமாறி=செயல்கள் தடுமாற்றத்தையடைந்து, மூர்க்க சொல் குரல் காட்டி=கொடிய கோபத்துடன் கூடிய சொற்களின் குரலை வெளிப்படுத்தி, கக்கிட மூக்குக்கு உள்சளி இளையோடும்=வெளிப்படுகின்ற மூக்குச் சளியும் நெஞ்சுக் கோழையும், கோப்பு கட்டி=ஒன்று சேர்ந்து, இளு பிச்சு ஏற்றிடு=துன்பமாகிய பைத்தியத்தை உண்டாக்கும், கூட்டில் புக்கு உயிர் அலையா முன்=இந்த உடலில் புகுந்து என் உயிர் அலைவதற்கு முன்னம், கூற்ற தத்துவம் நீக்கி=இயமன் வந்து துன்புறுத்தும் உண்மைச் செயலைய கற்றி, பொன் கழல் கூட்டி=உமது அழகிய திருமலரடியில் சேர்த்து, சற்று அருள் புரிவாயே=சிறிது அருள்புரிவீர்.

## பொழிப்புரை

உலகிற்குக் காவலாக அமைந்துள்ள பொன்மேரு கிரியை வில்லாக வளைத்து (தேவர்களுடைய) பகைவராகிய முப்புரத்தாருடைய அரண் மதிலையழித்த சிவபிரானுடைய குருநாதரே! கானகத்தில் வாழ்ந்த வள்ளிபம்மையிடம் "என்னைக் காப்பாற்றுவாய்" என்று குறையிரப்பது போன்ற வஞ்ச

மொழிகளைப் புகன்றவரே! நலம் பல வாய்த்த தமிழின் அகப் பொருட் சூத்திரத்தின் உண்மையுரை இது என்று தெளிவு படுத்திய அழகிய முருகக் கடவுளே! சொல்லுக்கும் அறிவுக் கும் எட்டாதவரே! புனித தீர்த்தத்துறைகள் சூழ்ந்துள்ள கடற்கரையின் கண் திருச்செந்தூரில் அழகுடன் அமர்ந்துள்ள பெருமிதம் உடையவரே! முதுமைப் பருவம் அடைந்து, காது கேளாது பெருமூச்சுவிட்டுக் கொண்டு, செயல்கள் தடு மாற்றமுற்று கோபச் சொற்களைப் பேசி, மூக்கில் சளியும் கோழையும் ஒன்றுகூடி வெளிப்பட துன்பத்தினுல் பித்தம் ஏறச் செய்யும் இவ்வுடம்பில் புகுந்து உயிர் அலைவதற்கு முன்னம் இயமவாதனையைத் தவிர்த்து, உமது பொற்பாத கமலத்துள் சேர்த்துச் சிறிது அடியேற்கு அருள்புரிவீர்.

## விரிவுரை

**மூப்புற்று :—**

உடம்பெடுத்த நமக்கு மிகுந்த துன்பத்தைத் தருவது முதுமைப் பருவம்; அம்மா! அதை நினைத்தால் மனம் பதைக் கும். கண் பார்வை குன்றும்; செவி மந்தமாகும்; நடக்கவோ நிற்கவோ இயலாது; உண்ட உணவு செரிக்காது. ஆசை யும் வளர்ந்து நிற்கும். வீட்டில் உள்ளவர்கள் அவமதிப்பார் கள். இருமல முதலிய நோய்கள் வந்து இடர்ப்படுத்தும். கருவி கரணங்கள் யாவும் நம்முடன் ஒத்துழைக்கமாட்டா. உயிர் வாழ்விலேயே பெருந் துன்பத்தைத் தருகின்ற காலம் அந்த மூப்புப் பருவம்.

"ஐவிளக்கு மூப்பு மரணுதிகளை நினைத்தால்
அடிவயிற்றை முறுக்காதோ ?" —வள்ளலார்.

அதனுல் அடிகளார் ஒரு திருப்புகழில் "இளமை கிழம் படுமுன் பதம் பெற அருள்வாயே" என்று ஆண்டவனிடம் விண்ணப்பங் கொடுக்கின்றுர். இந்த மூப்பிலே விளையுங் கொடுமைகளைச் சுவாமிகள் அடியில் வரும் திருப்புகழ்ப் பாடலில் சித்திரிக்கின்றுர்.

"முனையழிந்தது மேட்டி குலைந்தது
வயது சென்றது வாய்ப்ப லுதிர்ந்தது
முதுகு வெஞ்சிலை காட்டி வளைந்தது பிரபையான

முகமிழிந்தது நோக்கு மிருண்டது
இருமல வந்தது தூக்கமொழிந்தது
மொழி தளர்ந்தது நாக்கு விழுந்தது அறிவேபோய்

நினைவயர்ந்தது நீட்டல் முடங்கலும்
அவசமும்பல ஏக்கமு முந்தின
நெறிமறந்தது மூப்பு முதிர்ந்தது பலநோயும்

நிலுவை கொண்டது பாய்க்கிட கண்டது
சல மலங்களி னுற்ற மெந்தது
நிமிஷ மிங்கினி யாச்சுன் முன்பினி தருள்வாயே''

பெருமூச்சுற்று :—

மூப்பிலே இயல்பாகவுள்ள காப்பினால் பெருமூச்சு வரும்.

செயல் தடுமாறி :—

என்ன என்ன நாம் இயல்பாகச் செய்துகொண்டிருந்தோமோ அச்செயல்கள் யாவும் அக்காலே தடுமாறிவிடும்.

மூர்க்கச் சொற்குரல் காட்டி :—

முதுமைப் பருவமடைந்தவர் அடிக்கடி கோபிப்பர். மேலும் நோயின் துன்பமும் அக் காபத்தீயில் நெய்விட்டு அதிகப்படுத்தும். சினக்கனல் சுர்விட்டு அடுத்தவர்கள் மீது பாய்ந்து சுடும். அதன் அடையாளமாக சுடுசொற்கள் எரிமலைபோல் வெளிப்படும்.

மூக்குக்குட் சளியிளையோடும் கோப்புகட்டி :—

சளி மூக்கிலும் கோழை நெஞ்சிலும் மிகுந்து இவை யொன்றுபட்டு கொய் கொய் என்று நுரைந்து வெளிப்படும். அருகில் உள்ளார்க்கு மிகுந்த அருவருப்பை யுண்டாக்கும். வாயில் வரும் கோழையைத் துப்பினும் அது கீழே விழுந்த துடன் அமையாது வீணையின் தந்திபோல் வாயில் நீண்டு விகாரப்படுத்தும். ஈளை என்பது இளை என வந்தது.

இளைப்பிச் சேற்றிடும் கூட்டில் :—

இளை பிச்சு ஏற்றிடும் கூடு எனப் பிரிக்க. இளை—இன்னல்; துன்பம். பிச்சு—பித்தம். ஏற்றிடும்—அதிகப்படுத்தும். கூடு —உடம்பு; துன்பத்தைத் தரும் பித்தம் ஏறி வருத்தும் இந்த உடம்பு. இதில் உயிர் கிடந்து எப்போது இதைவிட்டுப் போவோம் என்று ஏங்கும். "அவ்வாறு அலையா முன்னம் ஆண்டவனே என்னைக் காத்தருள்வாய்" என்று அடிகளார் வேண்டுகின்றனர்.

கூற்றத்தத்துவ நீக்கிப் பொற்கழல் கூட்டச் சற்றருள் புரிவாயே :—

தத்துவம்—உண்மை. "இயமன் வருவது தவிர்க்கமுடியாத உண்மை. அதனைத் தவிர்த்து அடியேனை உனது காவிக் கமலக் கழலுடன் சேர்த்துச் சிறிது அருள்புரிவாய்" என்று முறையிடுகின்றார்.

காப்புப் பொற்கிரி கோட்டி குருநாதா :—

பூதலத்துக்கு நடு தூணாக ஆதாரமாக இருப்பது மேரு மலை. அதனைத் திரிபுர தகன காலத்தில் சிவபெருமான் வில்லாகப் பிடித்து வளைத்தார்.

"மாமேரு பூதரத் தநுப்பிடித்" —(ஆறுதைஞான) திருப்புகழ்.

பற்றலர்—பகைவர். பேருடைய பகைவர்களாகிய முப்புர அசுரர்கள். கட்டல்—அழித்தல். முப்புரத்தைச் சிரித்து எரித்த சிவபெருமானுடைய குருநாதர் முருகர். மும்மலங்களை எரித்த பெருமானுக்கு குருவானவர்.

**காட்டுக்குட் குற வாட்டிக்குப்ப காப்புக் குத்திர மொழிவோனே :—**

ஞானபண்டிதன் வள்ளிபிராட்டியை ஆட்கொள்ளும் பொருட்டுக் காட்டிற்குச் சென்று, "நான் உன்னை நம்பித் தஞ்சம் புகுந்தேன்; நீ என்னைக் காத்தருள்" என்பனவாதி பலப்பல நய மொழிகளைக் கூறினான். அவையத்தனையும் உண்மையன்று. திருவிளையாடலே. ஆதலால் குத்திரம் —வஞ்சனை என்று கூறிஞர்.

மாரனை எரித்த கண் விழியிலிருந்து ஞான ஜோதியாக வந்தவர் குமாரமூர்த்தி. அவர் திருவடியைச் சிந்திப்பார்க்கே ஆசாபாசம் அகலும். அம்மையை ஆட்கொள்வான் வேண்டி அம்மையிடம் குறையிரந்து நிற்பார் போல் நடித்து அம்மைக்கு அருள்புரிந்தார். இதுவே வள்ளித் திருமணத்தின் இரகசியம்.

**வாய்ப்புற்றத் தமிழ் மார்க்கத்திட் பொருள் வாய்க்குச் சித்திர :—**

தமிழ், எல்லாவிதமான நலங்களும் வாய்க்கப் பெற்றது. மதுரையில் எழுந்தருளிய சொக்கலிங்கப் பெருமான் இத் தமிழில் அகப் பொருள் சூத்திரம் அறுபது தந்து அருளினர். "இறையனர் அகப் பொருள்" என்ற அந்நூலுக்கு சங்கப் புலவர்கள் உரைகண்டார்கள். தாம் தாம் கண்ட உரையே சிறந்தது என்று கலாம் விளைத்தார்கள்.

அப்போது முருகவேள், செட்டி மகனுகிய உருத்திர சன்மர் மூலம் நக்கீரர் உரையே சிறந்தது என்று தெளிவு படுத்தி யருள் புரிந்தார். இந்த வரலாற்றை இந்த அடி குறிப்பிடுகின்றது.

"ஏராரு மாட கூட மதுரையில்
மீதேறி மாறி யாடு மிறையவர்
ஏழேழு பேர்கள் கூற வருபொரு ளதிகாரம்
ஈடாய வூமர்போல வணிகரில்
ஊடாடியால வாயில் விதிசெய்த
லீலா விசார தீர வரதர குருநாதா"
—(சீரான) திருப்புகழ்.

**வார்த்தைச் சிற்பர :—**

"மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே" என்றபடி சொல்லுக்கும் சிந்தனைக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டவன் இறைவன்.

**தீர்த்தச் சுற்றலைவாய் :—**

திருச்செந்தூரில் சுவாமி சந்நிதிக்கு நேரேயுள்ள கடல் வதனாரம்ப தீர்த்தம். மேலும் கந்தித் துறை, சித்தித்துறை எனப் பலப்பல தீர்த்தத்துறைகள் அக் கடலில் உள. ஒவ்வொன்றிலும் ஆடுவார் ஒவ்வொரு பயனையடைவர்.

**கருத்துரை**

சிவகுருவே! வள்ளிமணவாளா! செந்திலாண்டவ! யமவாதனையின்றி நின்பதமலரில் சேர்த்தருள்வாய்.

## 54

மூளும்வினை சேர மேல்கொண்டிடு மைந்து
பூதவெகு வாய மாயங்கள் தானைஞ்சில்
மூடிநெறி நீதி யேதுஞ்செ யாபஞ்சி யதிபார
மோகவினை வான போகஞ்செய் வனண்டர்
தேடஅரி தாய ஞேயங்க ளாய்நின்ற
மூலபர யோக மேல்கொண்டி டாநின்ற துளதாகி
நாளுமதி வேக கால்கொண்டு தீமண்ட
வாசியன லூடு போயொன்றி வானின்க
ணாமமதி மீதி லூறுங்க லாஇன்ப அமுதூறல்
நாடியதன் மீது போய்நின்ற ஆநந்த
மேலைவெளி யேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற
தொருநாளே
காளவிட மூணி மாதங்கி வேதஞ்சொல்
பேதைநெடு நீலி பாதங்க ளால்வந்த
காலன்விழ மோது சாமுண்டி பாரம்பொ டனல்வாயு
காதிமுதிர் வான மேதங்கி வாழ்வஞ்சி
ஆடல்விடை யேறி பாகங்கு லாமங்கை
காளிநட மாடி நாளன்பர் தாம்வந்து தொழுமாது
வாளமுழு தாளு மோர்தண்டு ழாய்தங்கு
சோதிமணி மார்ப மாலின்பி னானின்சொல்
வாழுமுமை மாத ராள்மைந்த னேயெந்தை
யிளையோனே

மாசிலடி யார்கள் வாழ்கின்ற வூர்சென்று
தேடிவிளை யாடி யேயங்ங னேநின்று
வாழுமயில் வீரனே செந்தில் வாழ்கின்ற
பெருமாளே.

## பதவுரை

காள விடம் ஊணி=ஆலகாலம் என்னும் கொடிய விடத்தை யருந்தியவரும், மாதங்கி=மதங்க முனிவருக்குப் புதல்வியாக அவதரித்தவரும். வேதம் சொல் பதை=வேதங்களால் புசழப்படுகின்றவரும், நெடுநீலி=பெருந்தகைமையுடைய துர்க்காதேவியும். வந்த காலன் விழ=(மார்க்கண்டேயரைப் பற்றும்பொருட்டு) வந்த இயமன் இறந்துவிழுமாறு, பாதங்களால் மோது சாமுண்டி=திருவடிகளால் உதைத்து வீழ்த்திய காளயம்மையும், பார்=மண், அம்பொடு=நீருடன், அனல்=தீ, வாயு=காற்று, கா(ந்)தி முதிர்வானம்=(சந்திர சூரியர் உடுக்கள் இருந்து பிரகாசிலிப்பதால்) பேரொளி மிகுந்துள்ள ஆகாயம் ஆகிய ஐம்பெரும் பூதங்களிடத்தில், தங்கி வாழ்வஞ்சி=அந்தர்யாமியாக இருந்து இயக்கும் கொடியைப் போன்றவரும், ஆடல் விடையேறி=(சிற்றவியோமத்தில்) அநவரத ஆனந்தத்தாண்டவமியற்றுபவரும் தரும விடைமேல் வருபவருமாகிய சிவபெருமானது, பாகங் குலாவுமங்கை=இடப்பாகத்தில் இன்புடன் எழுந்தருளியுள்ளவரும், காளி நடம் ஆடி=பத்ரகாளியாக நின்று சிவமூர்த்திக்கு எதிரில் நிருத்தம் செய்தவரும், நாள் அன்பர் தாம் வந்து தொழுமாது=நாள்தோறும் மெய்யன்புடைய அடியார்கள் தமது சந்நிதிக்குவந்து வழிபட்டு வணங்கப் பெறுகின்றவரும், வாளம் முழுது ஆளும்=சக்ரவாளகிரியால் சூழப்பட்டுள்ள உலக முழுவதையும் காத்து அருள் புரியும், ஓர் தண்துழாய்=ஒப்பற்றதும் குளிர்ச்சி பொருந்தியதுமாகிய துளபமாலையும், சோதிமணி=ஒளி விடும்படியான இரத்தினமணிமாலையும், தங்கு மார்ப=பொருந்தியுள்ள திருமார்பையுடைய, மாலின் பி(ன்)னாள்=திருமாலுக்கு இளையவரும், இன் சொல் வாழும் உமை மாதராள்=இனிய சொற்கள் நிலையாக வாழும் இன்பவடிவுடைய உமாதேவியாருமாகிய பரமேசுவரியாரது, மைந்தனே=திருக்குமாரரே!, எந்தை இளையோனே=எமது பிதாவாகிய எண்டோளீசரது இளைய புதல்வரே!, மாசு இல் அடியார்கள்=குற்றமில்லாத மெய்யடியார்கள், வாழ்கின்ற ஊர் தேடி சென்று=உறைகின்ற ஊருக்குத் தேடிச்சென்று, விளையாடி=ஆங்கு பற்பல அருள் திருவிளையாடல்களைச் செய்து, அங்ஙனே நின்று வாழும் மயில்வீரனே=அவ்வூரிலேயே நிலையாக எழுந்தருளியிருக்கும் மயில்மிசைவரும் வீரமுடைவரே! செந்தில் வாழ்கின்ற பெருமாளே=திருச்செந்திலம்பதியில் (அடியார்

பொருட்டு) எழுந்தருளியுள்ள பெருமையிற் சிறந்தவரே!, மூளும் வினைசேர=(தீயைப்போல்) மூண்டு பண்டைவினைகள் (பக்குவப் பட்டு) ஒருங்கே வந்துசேர, மேல்கொண்டிடா ஐந்துபூத=(அதனால் உயர்ந்து எழுந்திராநின்ற மண் புனல் அனல் காற்று விண் என்ற ஐம்பெரும் பூதங்களின், வெகுவாய மாயங்கள் தாம் நெஞ்சில்மூடி= பற்பலவிதமான மாயைகள் அடியேனது உளத்தில் வந்து நன்கு மூடப்பெற்று, நெறி நீதி ஏதும் செயா=பத்திநெறிக்குரிய அறச் செயல் ஒன்றேனும் செய்யாமல், வஞ்சி அதிபார=பெண் காதலால் மிகுந்த பாரத்தைத் தாங்கி, மோக நினைவான போகம் செய்வேன்= ஆசை மனத்தனாகி அசுத்த போகத்தை நுகருகிற நான், அண்டர் தேட அரிது ஆய=தேவர்களும் தேடித் தெரிந்துகொள்வதற்கு, அரிய வாகிய, ஞேயங்களாய் நின்ற-மெய்யுணர்வால் நுணுகி அறியப்படு கின்றவையாய் விளங்கும், மூலபரயோகம் மேல்கொண்டிடா நின்று அது உளது ஆகி=முதன்மையான அனுபவயோகத்தில் முனைந்து நின்று அதனிடத்திலேயே (அசைவற்று) இருப்பதாகி, நாளும் அதி வேக கால்கொண்டு=நாள்தோறும் மிகவும் வேகமாக எழும் பிராண வாயுவைக் கொண்டு, தீ மண்ட=மூலக்கனல் மண்டி எழுந்திருக்க, வாசி அனலூடு போய் ஒன்றி=பிராணவாயுவானது (சுழுமுனை நாடியின் வழியே) அவ்வக்கினியுட்சென்று பொருந்தப் பெற்று, வானின்கண்=பிரமரந்திரத்திற்கு அப்பாலுள்ள ஆகாயத்தில், நாம மதிமீதில் ஊறுங் கலா இன்ப அமுதூறல் நாடி=புகழ்பெற்ற பூரண சந்திரனிடத்திலிருந்து பொழியும் அமிர்தகலையென்னும் இனிய அமிர்தப்பொழிவை நாடி, அதன்மீதுபோய்=அச்சந்திர மண்டலத் தில் சென்று, நின்ற ஆனந்த மேலை வெளியேறி=நிலைபெற்றுள்ள ஆனந்தப்பெருவெளியின்மீது ஏறியமர்ந்து, நீ இன்றி நான் இன்றி நாடி=நீ நான் என்ற பிரிவற்றிருக்கும் அத்துவித முத்தியைஉணர்ந்து, இ(ன்)னும் வேறுதான் இன்றி வாழ்கின்றது ஒருநாளே=மேலும் பிற பொருள்களும் தோன்றாத மனமிறந்த சுகவாழ்வில் வாழ்கின்ற ஒரு நாள் அடியேனுக்கு உண்டாகுமா?

## பொழிப்புரை

(திருப்பாற்கடலில் தோன்றி மாலயனாதிவானவர்களுக்குத் துன்பத்தை நல்கிய) ஆலாகலவிடத்தை உண்டவரும், மதங்க முனிவருக்கு (அவர் செய்த தவங் காரணமாக) புதல்வியாகத் திருவவதாரம் புரிந்தவரும், வேதங்களால் புகழப்படுகின்ற வரும், பெரிய துர்க்கையாக அவதரித்தவரும், (மார்க்கண் டேயரைப் பற்ற) வந்த கூற்றுவன் உயிர் துறந்து வீழும் வண்ணம் திருவடியால் உதைத்து வீழ்த்தியவரும், காளியும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு (சந்திர சூரியரால்) பிரகாசிக் கின்ற ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களில் அந்தர்யாமியாக

உறைபவரும், கொடியைப் போன்றவரும் (ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு) ஆனந்தத் தாண்டவம் புரிபவரும் தரும விடையின் மீது எழுந்தருளி வருபவருமாகிய சிவபிரானுடைய இடப்புறத்தில் குலவிக் கொண்டிருப்பவரும், பத்ரகாளியாகி சிவமூர்த்திக்கு எதிராக நின்று நிருத்தஞ் செய்தவரும், நாள் தோறும் அன்பர்களால் தொழப் பெற்றவரும், சக்கரவாளகிரி சூழ்ந்த உலக முழுவதையும் காப்பவரும் ஒப்பற்றதும் குளிர்ச்சியுடையதுமாகிய துளப மாலையைத் தரித்துக் கொண்டிருப்பவரும், ஒளி வீசுகின்ற இரத்தினமணி மாலைகள் தங்கியுள்ள திருமார்பையுடையவருமாகிய திருமாலினது சகோதரியும், இனிய மொழிகளுக்கு உறைவிடமாகிய உமா தேவியும் ஆகிய சிவகாமசுந்தரியாரது திருக்குமாரரே! உலகங்களுக்குத் தந்தையாகிய சிவபெருமானுக்கு இளைய புதல்வரே! குற்றமில்லாத மெய்யடியார்கள் வசிக்கின்ற ஊருக்கு அவர்களைத் தேடிச் சென்று அவ்வடியாருடன் பற்பல அற்புத அருட்டிரு விளையாடல்களைப் புரிந்து அவ்வூரி லேயே நிலைத்து இருந்து வாழுகின்ற மயில் வீரரே! திருச் செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமானே! (பயனைத் தருவதற் குப் பக்குவப்பட்டு தீயைப்போல்) மூண்டு பண்டை வினைகள் ஒருங்கே வந்து சேர, அதனால் வலிந்து எழுந்திரா நின்ற ஐம் பெரும் பூதங்களின் அநேக விதமான மாயைகள் அடியே னுடைய உள்ளத்தில் வந்து நன்கு மூடப்பெற்று, செந்நெறிக் குரிய அறச்செயல்களில் ஒன்றேனும் செய்யாமல், பெண்ணா சையால் மிக்க பாரத்தைத் தாங்கி, ஆசை மனத்தனுகி அற்ப சுகத்தை அனுபவிக்கின்றேன்; இத்தகைய அடியேன், தேவர் களுந் தேடி யுணர்தற்கரியதும், மெய்யறிவால் உணர்தற் பாலதுமாய் விளங்கும் முதன்மையாகிய அனுபவ சிவயோகத் தில் சிறந்து நின்று அசைவற்றிருப்பதாகி, நாள்தோறும் மிக வேகமாக வரும் பிராண வாயுவைக் கொண்டு மூலக்கனலை எழுப்பி, (சுழுமுனை நாடி வழியே) சென்று, அந்த சந்திர மண்டலத்திலுள்ள பூரண சந்திரன் பொழியும் அமிர்த இன்ப கலையின் பொழிவை நாடி, அவ்வமிர்த மண்டலமாகிய மேலை வெளியிலேறி அங்கு "நீ, நான்" என்ற வேற்றுமையின்றி அத்துவிதமாகக் கலந்து இருந்து, மேலும் பிறபொருளும் தோன்று வண்ணம் பரமசுகப் பெருவாழ்வில் வாழும் நாள் ஒன்று (அடியேனுக்கு) உண்டாகுமோ?"

## விரிவுரை

**மூளும் வினை :—**

முற்பிறப்புக்களில் செய்த பழைய வினைகள் பக்குவப் படாமலிருந்து உரிய காலத்தில் அனுபவிப்பதற்குப் பரிபக்குவ மடைந்து, மிகவும் வேகமாகத் தன்னையுடையவனிடம் விரைந்து வந்து சேரும். அவ் வினையானது, தீ விரைந்து

மூண்டு எரிப்பது போல் மூண்டு உடையானை எரிக்கும். அவன் எவ்வுழியிருப்பினும் அவனைத் தேடி வந்தடையும். "பல பசுக்களுக்கு இடையில் ஒரு கன்றை விட்டால் அது எப்படித் தன் தாய்ப் பசுவை விரைந்து நாடியடையுமோ அப்படியே பழ வினையும் தன்னைச் செய்தவனைத் தவருமல் அடையும்" என்ருர் நாலடியார்.

பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

"பிறப்பதற்கு முன்செய்த தீவினையோ
இங்ஙனே வந்து மூண்டதுவே" —பட்டினத்தார்.

வினை சடம் ஆதலின் தானே வந்தடையாது; இறைவன் அருளாணை செலுத்த வரும் என்றுணர்க.

**ஞேயங்கள் :—**

அறியப்படு பொருள்கள்.

**பரயோக :—**

பொறிபுலன்களின் சேட்டைகளற்று சமாதி மஞேலைய முற்று ஜீவபாவமொழிந்து வெறுந்தாஞய் நிலைத்து நிற்கின்ற நிலை.

**கால்கொண்டு தீமண்ட :—**

அவமே கழிகின்ற பிராண வாயுவை கழியவிடாமல், அஜபா மந்திரத்துடன் கும்பகம்புரியில், மூலக்கனலை எழுப்பிக் கொண்டு அடைபட்டிருக்கின்ற சுழுமுனை நாடிவழியே அவ் வாயு செல்லும்.

"சூலம் பெற வோடிய வாயுவை
மூலந் திகழ் தூண்வழியே அளவிட வோடி"
—(மூலங்கிள) திருப்புகழ்.

"நாலுசதுரத்த பஞ்சறை மூலகமலத்தி லங்கியை
நாடியின டத்தி மந்திர பந்தியாலே" —திருப்புகழ்.

**மதிமீதிலூறுங் கலா இன்ப அமுதூறல் :—**

சந்திரமண்டலத்தில் சென்று அங்கு சதா ஊறுகின்ற அமிர்த தாரையை சகோர பட்சியைப் போல் பானஞ்செய்து பசி தாகமற்று சித்திர தீபம்போல் சிவயோகிகள் அசைவற்றிருப்பர்.

**ஆனந்தமேலை வெளியேறி :—**

*சிறிதுகூடத் துன்பமே யில்லாத தூய வெளியில் சென்றவர் இன்ப மயமாக இருப்பர்.*

ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததோ ரானந்தத் தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப்பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா ! முகமாறுடைத் தேசிகனே.

—*அலங்காரம்.* (8)

**நீயின்றி நானின்றி :—**

*சீவான்மாவானது இருவினையொப்பு மலபரிபாகமுற்ற போது அருள் பதிந்து சிவத்தோடு இரண்டறக் கலந்து ஏகப் பெருவெறு வெளியில் கரை கடந்த இன்பப் பெரு வெள்ளத்தில் அழுந்தி ஏக சொரூபமாய் நிற்கும். அந்நிலையில் சிவமும் சீவனும் வேற்றுமையின்றிக் கதிரொளியும் கண்ணொளியுங் கலந்தது போல் கலந்து விளங்கும்.*

"இருவினையும் மலமுமற இறவியொடு பிறவியற
ஏகபோகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையருள்"

—(*அநுகுருனி*) *திருப்புகழ்.*

*சீவன் சிவனாகிப் பூரணமுற்ற அந்நிலையைச் சொல்லாலும் எழுத்தாலும் விளக்க முடியாது; அனுபவித்துணரற்பாலது. அந்நிலையை யடைந்த அனுபவ மெய்ஞ்ஞானப் பெரியார்கள் கூறிய அருட்பாக்களை உற்று நோக்குக.*

"நாமொழிந்து சிவமானவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"

—*திருவாசகம்.*

சீவ னெனச் சிவனென்ன வேறில்லை
சீவனார் சிவனாரை யறிகிலர்
சீவனார் சிவனாரை யறிந்த பின்
சீவனார் சிவ னாயிட் டிருப்பரே.

நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலா தற்பதம்
தானென்று நானென்ற தத்துவ நல்கலால்
தானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே. —*திருமந்திரம்.*

அதுவிது வென்றும் அவன் நானே என்றும்
அதுநீயே யாகின்ற யென்றும்—அதுவானேன்
என்றுந் தமையுணர்ந்தா ரெல்லாம் இரண்டாக
ஒன்றாகச் சொல்வாரோ வுற்று. —*திருக்களிற்றுப்படியார்.*

நானெனவும் நீயெனவும் இருதன்மை நாடாமல் நடுவே சும்மா
தானமரும் நிலையெனவே சத்தியம் சத்தியம் —தாயுமானுர்.

**காளவிடமூணி :—**

சிவமும் சத்தியும் பொன்னும் ஒளியும்போல், மலரும் மணமும் போல் தாதான்மியமாதலால் விடமுண்டதை சத்தியின் மேல் ஏற்றிக் கூறினுர்.

**மாதங்கி :—**

மதங்க ரிஷி சத்தியை மகளாகப் பெறவேண்டிப் பெருந்தவமிருந்து அத்தவத்தின் பயனுக அம்பிகையை மகளாகப் பெற்ருர்; அதனுல் அம்பிகைக்கு இப் பெயருண்டாயிற்று.

**வேதஞ் சொல் :—**

வேதங்களைத் திருவாய் மலர்ந்தவர் என்றும் பொருள் படும்.

**பாதங்களால் வந்த காலன்விழ மோது சாமுண்டி :—**

சிவபக்தராகிய மார்க்கண்டேயரைப் பற்றவந்த இயமனை முக்கட் பெருமான் சத்தியின் பாகமாகிய இடத்திருவடியால் உதைத்த குறிப்பை யுணர்த்துகிருர்.

**பாரம்பொ……வானமே தங்கி வாழ்வஞ்சி :—**

பஞ்ச பூதங்களில் நிறைந்து விளங்குவது சத்தியேயாம்; இதனுல் யாவும் சத்திமயமே எனப் புலப்படுத்துகின்ருர்.

**மாசிலடியார்கள் :—**

நெஞ்சிற் கரவைக் கொண்டு, வெளித் தோற்றத்தில் அடியார் போல் நடிப்பதாகிய குற்றம் இல்லாத மெய்யடியார்கள்.

**வாழ்கின்றவூர்……அங்ஙனே நின்று :—**

அத்தகைய மெய்த்தொழும்பர் உறையும் உறைவிடத்திற்கு, மறைக்கும் எட்டாத மயூரவாகனப் பெருமாள் தாமே வலிந்து தேடிச் சென்று, அரிதிற் றவம்புரிவார்க்குங் காட்டாத தமது அருள் திருமேனி புலனுமாறு காட்டி, அவ்வடியாருடன் கலந்து பற்பல அற்புத அருள் விளையாடல்களைப் புரிந்து, அவ் வடியருடனேயே புறத்தும் அகத்தும் பிரியாதுறைவார்.

"இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க"
—மணிவாசகனுர்.

திருமாலொடு திசைமுகனும் தேடித் தேடித் தெரிசிக்க முடியாத முழு முதற்கடவுள் அடியாரைத் தேடி வருவது

அவரது திருவருளின் எளிமையை யுணர்த்துகிறது. அளப்பரிய அருட் கடலாகிய அப்பரம பிதா தன்னை உள்ளபடியே நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழும் நல்லன்பரைத் தேடி வந்து அவருடன் வாழ்கின்றான் என்றால் அபபிதாவின் கருணையை என்னென்று வியப்பது?

## கருத்துரை

உமாதேவியாரது திருக்குமாரரே! சிவ புதல்வரே! அடியாருடன் வாழும் மயில் வீரரே! செந்திலதிப! பண்டை வினையால் அழியும் அடியேன், சிவயோக சாதனையில் நின்று. மூலக் கனலை எழுப்பி, அமிர்தபானஞ் செய்து, ஆனந்த மேலைப் பெருவெளியிற் சென்று, அங்கு நீ நான் என்ற வேற்றுமையின்றி அத்துவித முத்தியையடைந்து சிவானந்தப் பெருவாழ்வில் சிவபோகத்தைத் துய்க்கும் ஒரு நாள் அடியேனுக்கு உண்டோ?

## 55

வஞ்சங்கொண் டுந்திட ராவண
னும்பந்தென் திண்பரி தேர்கரி
மஞ்சின்பண் புஞ்சரி யாமென வெகுசேனை

வந்தம்பும் பொங்கிய தாகஎ
திர்ந்துந்தன் சம்பிர தாயமும்
வம்புந்தும் பும்பல பேசியு மெதிரேகை

மிஞ்சென்றுஞ் சண்டைசெய் போதுகு
ரங்குந்துஞ் சுங்கனல் போலவெ
குண்டுங்குன் றுங்கர டார்மர மதும்வீசி

மிண்டுந்துங் கங்களி னலெத
கர்ந்தங்கங் கங்கர மார்பொடு
மின்சந்துஞ் சிந்திநி சாசரர் வகைசேர

வுஞ்சண்டன் தென்றிசை நாடிவி
ழுந்தங்குஞ் சென்றெம தூதர்க
ளுந்துந்துந் தென்றிட வேதசை நிணமூளை

உண்டுங்கண் டுஞ்சில கூளிகள்
டிண்டிண்டென் றுங்குதி போடவு
யர்ந்தம்புங்கொண்டுவெல்மாதவன் மருகோனே

தஞ்சந்தஞ் சஞ்சிறி யேன்மதி
கொஞ்சங்கொஞ் சந்துரை யேயருள்
தந்தென்றின் பந்தரு வீடது தருவாயே
சங்கங்கஞ் சங்கயல் சூழ்தட
மெங்கெங்கும் பொங்கம காபுநி
தந்தங்குஞ் செந்திலில் வாழ்வுயர் பெருமாளே.

## பதவுரை

வஞ்சம் கொண்டும்=வஞ்சக நினைவு கொண்டவனாய், திட= உறுதியுடைய, ராவணனும்=இராவணன், பந்து என் திண் பரி= பந்துபோல் வேகமாகச் செல்லுகின்ற வலிமையுடைய குதிரை, தேர்= தேர், கரி=யானை, மஞ்சின் பண்பும் சரியாம் என=மேகம்போல் திரண்டு வருகின்ற, வெகு சேனை=மிகுந்த சேனைகளுடன், வந்து= போர்க்களத்திற்கு வந்து, அம்பும் பொங்கியதாக=அம்பின் கூட்டம் நிறைந்து எழ, எதிர்ந்தும் தன் சம்பிரதாயமும்=எதிர்த்துத் தனது ஆற்றலைப் பற்றியும், வம்பும் தும்பும் பல பேசியும்=வீண் வார்த்தைகளும் இழிவான சொற்களும் பல பேசி, எதிரே கை மிஞ்ச என்றும்= எதிரில் சேனைகள் மிகுதி என்று கூறி, சண்டை செய் போது=போரிடும்போது, குரங்கும் துஞ்சும் கனல் போலவெ=குரங்குகளும் எதிர்த்து அணைகின்ற நெருப்புப்போல் சினந்து, குண்டும் குன்றும் கரடு ஆர்மரம் அதும் வீசி=கல்குண்டுகளையும் சிறு மலைகளையும் கரடு முரடான மரங்களையும் பிடுங்கி வீசி, மிண்டும் துங்கங்களினாலே= நெருங்கிய அந்த மலைகளினாலே, தகர்ந்து=நொறுங்கி, அங்கம்= உடம்பு, கம்=தலை, கரம்=கை, மார்பொடு=மார்பு இவைகள், மின் சந்தும் சிந்தி=ஒளியுடைய உடற்பொருத்தங்களையும் சிதறச்செய்து, நிசாசரர் வகை சேரவும்=இரவில் உலாவுகின்ற அசுரர்களுடைய இனங்கள் முழுவதும், சண்டன் தென்திசையை நாடி விழுந்து=யமனுடைய தென்திசையை நாடிவிழவும், அங்கும் சென்று எம தூதர்கள்=அந்த இடத்திலும் எமதூதர்கள் போய், உந்து உந்து உந்து என்றிட=தள்ளு தள்ளு தள்ளு என்று கூறுமாறு, சில கூளிகள்=சில பேய்கள், நிணம் மூளை உண்டும் கண்டும்=மாமிசம் மூளை யிவைகளை உண்டும் பார்த்தும், டிண் டிண்டென்றும் குதிபோடவும்=டிண்டிண் டென்ற ஓசையுடன் கூத்தாடவும், உயர்ந்த அம்புங்கொண்டு வெல்= சிறந்த அம்புகளைக் கொண்டு வென்ற, மாதவன்=இராமருடைய, மருகோனே=மருமகரே! சங்கம்=சங்குகளும், கஞ்சம்=தாமரைகளும், கயல் சூழ்=மீன்களும் நிறைந்த, தடம் எங்கு எங்கும் பொங்க=குளங்கள் பல இடங்களிலும் விளங்குகின்ற, மகா புநிதம் தங்கும்=மிகுந்த பரிசுத்தம் பொருந்திய, செந்திலில் வாழ்வு உயர்=

திருச்செந்தூரில் எழுந்தருளி மேன்மையுடன் வீற்றிருக்கும், பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! தஞ்சம் தஞ்சம்=அடைக்கலம்; அடைக்கலம்; சிறியேன் மதி கொஞ்சம்=சிறியேனுடைய அறிவு அற்பம்; அற்பம்; துரையே=தலைவரே! அருள் தந்து=உமது திருவருளைப் பாலித்து, இன்பம் தரு வீடு அது என்று தருவாயே=இன்பத்தைத் தருகின்ற முத்தியை அடியேனுக்கு எந்நாள் தருவீரோ?

## பொழிப்புரை

வஞ்சனையும் திடமும் உடைய இராவணன், பந்து போல் விரைந்து செல்லும் வலிய குதிரைகள், தேர், யானை, மேகம் எழுந்தது போன்ற பல சேனைகளுடன் வந்து கணைகளைச் சொரிந்து கொண்டு எதிர்த்து, தனது ஆற்றலைப் பற்றியும் வீண் பேச்சும் இகழுரையும் பேசி அவன் எதிரே சேனைகள் மிகுந்து நிற்க நாள் முழுவதும் போர் புரியும் போது, குரங்குகள் மிகுந்த நெருப்பைப்போல் கொதித்து எழுந்து கல் குண்டுகளையும் குன்றுகளையும், கரடு முரடான மரங்களையும், பேர்த்து எறிந்து, மிகுந்த மலைகளினால் நொறுங்கிய உடம்பு தலை கை இவைகளுடன் ஒளி விடுகின்ற உடற் கீல்களையும் சிதற வைத்து, அந்த அரக்கருடைய கூட்டம் முழுவதும், இயமனுடைய தென்திசையை நாடி விழவும், யம தூதர்கள் அங்குஞ் சென்று தள்ளு தள்ளு என்று கூறும்படி, மாமிசம் மூளை இவைகளை சில பேய்கள் தின்றும் பார்த்தும், டிண்டிண் டென்று கூத்தாட, உயர்ந்த பாணத்தை விடுத்துக் கொன்று வென்ற ஸ்ரீராமருடைய திருமருகரே! சங்குகளும் தாமரைகளும் மீன்களும் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்துள்ள, பெரிய தூய்மையான செந்திமா நகரின் கண் வாழ்ந்து உயர்ந்துள்ள பெருமிதம் உடையவரே! அடியேன் உமக்கே அடைக்கலம்; அடைக்கலம். சிறியேனுடைய அறிவு மிகவும் அற்பமானது; ஆதலால் அருள்தந்து இன்ப மயமான முத்தி நலத்தை என்று எனக்கு அருளுவீரோ?

## விரிவுரை

**வஞ்சங் கொண்டும் திடராவணன் :—**

இராவணன் வஞ்சனையுடையவன் என்று அருணகிரிநாதர் கூறுகின்றார். இராவணன் சீதையைச் சிறைபிடித்தது பிழையன்று என்றும், தன் தங்கை சூர்ப்பணகையை இலட்சுமணன் மூக்கறுத்தபடியால் பழிக்குப்பழி வாங்கும் பொருட்டுச் சீதையைச் சிறை பிடித்தான். ஆகவே அது வீரச் செயல் என்றும், இராவணன் சீதையைச் சிறை பிடித்தானே யன்றி பத்து மாத காலமாக அவளைத் தீண்டாமல் இருந்ததுவே அவன் பெருந்தன்மைக்கு அறிகுறி என்றும் வாதிக்கின்றவர்களும் உண்டு.

இராவணன் தன் தங்கை சூர்ப்பணகையின் மூக்கரிந்த இராம லட்சுமணரைப் பழிக்குப் பழிவாங்க நினைத்திருப்பானு யின், "இன்ன நேரத்தில் நான் வருவேன்" என்று ஒரு அறிக்கை மூலம் எச்சரிக்கை தந்து, அதுபடி சென்று, போர் புரிந்து, இராம லட்சுமணரை வென்று, சீதையைச் சிறையெடுப்ப தல்லவா வீரச் செயல்? அதுதானே வீரர்கட்கு முறை? அப் படிக்கு இன்றி, மான் அனுப்பி, மான் பின்னே இராம லட்சு மணர்கள் சென்றபின், சன்னியாச வடிவில் வந்து, அன்னங் கேட்டு, அன்னமிட வந்த சீதையைக் கன்னமிட்டனன். இரா மர் இல்லாத போது ஒரு பெண்மணியைச் சிறை செய்வது என்ன முறை? ஆகவே, ராவணன் செய்தது வீரச் செயல் அன்று. காம மயக்கத்தால் புரிந்த வஞ்சனைச் செயல் என வுணர்க.

**பந்தென் திண்பரி :—**

பந்து என் திண்பரி. பந்துபோல் விரைந்து எழுந்து பாய் கின்ற வேகமுள்ள குதிரைகள். பரித்தல்—தாங்குதல். போர் வீரனைத் தாங்கிச் செல்வதால் குதிரை பரி என்ற பேர் பெற் றது.

**மஞ்சின் பண்புஞ் சரியாமென வெகுசேனை :—**

மேகம் பந்தி பந்தியாக எழுவதுபோல், பலவகைப்பட்ட சேனைகள் அணிவகுத்து வந்தன.

**தன் சம்பிரதாயமும் வம்புந் தும்பும் பல பேசி :—**

இராவணன் சேனைகளுடன் போருக்கு வந்து எதிர்த்து, தனது பராக்கிரமத்தைப் பற்றிப் பெருமையாகப் பேசி வம்பு வார்த்தைகளும் இகழ்ச்சி யுரைகளும் பேசித் தனது சிறுமை யைப் புலப்படுத்தினான்.

**எதிரே கை மிஞ்சென்றும் :—**

கை—சேனை. சேனைகள் மிகுதியாக வந்து போர் புரிந்தன.

**வெல் மாதவன் மருகோனே :—**

திருமால் இராமராக அவதரித்து, இராவணாதி அவுணரை வென்றனர். வெற்றி என்பது ஸ்ரீராமருக்கு மிகவும் உரியது. அவருடைய கணை வெற்றி பெறாது மீளாது. அதனால்—ஸ்ரீராம ஜெயம் என்று குறிக்கின்ற வழக்கம் ஏற்பட்டது.

**தஞ்சம் தஞ்சம் :—**

தஞ்சம்—அடைக்கலம். ஆன்மாக்களாகிய நாம் இறைவ னிடம் அடைக்கலம் புகவேண்டும். தஞ்சம் புகுந்தாருக்கு

முருகன் அருள் புரிவான். "தஞ்சத்தருள் சண்முகன்" என்று கந்தரநுபூதியில் கூறுகின்றனர்.

**சிறியேன்மதி கொஞ்சம் கொஞ்சம் :—**

ஆன்மாக்களின் அறிவு அறிவிக்க அறிவது; சிற்றறிவு. இறைவன் முற்றறிவுடையவன். கதிரொளி துணை செய்யக் கண்ணொளி ஒரு பொருளைக் காண்பதுபோல், இறைவனுடைய அருளறிவு துணை செய்தால்தான் ஆன்ம அறிவு பொருளையறியும். ஆன்ம அறிவு தெளிவு இல்லாதது; விட்டு விட்டு அறிவது; ஏகதேச அறிவு. மின்மினி ஒளியைப் போன்றது.

**மகா புனிதந் தங்கும் செந்தில் :—**

திருச்செந்தூர் கயிலைமலைக்குச் சமானமானது. மிகுந்த பரிசுத்தமானது. பிறவிப் பெருங்கடலில் அழுந்தி கரைகாணாது பல்லூழி காலமாக உழலும் ஆன்மாக்கட்கு முத்திக்கரை போன்றது. வந்து வழிபட்டோர்க்கு எல்லா நலன்களும் வழங்குவது.

### கருத்துரை

திருமாலின் மருகரே! செந்திலாண்டவரே! அடியேன் உமது அடைக்கலம். முத்தி வீட்டைத் தந்து அருள்புரிவீர்.

## 56

வஞ்சத் துடனொரு நெஞ்சிற் பலநினை
வஞ்சிக் கொடியிடை மடவாரும்
வந்திப் புதல்வரும் அந்திக் கிளைஞரு
மணடிக் கதறிடு வகைகூர

அஞ்சக் கலைபடு பஞ்சிப் புழுவுடல்
அங்கிக் கிரையென உடன்மேவ
அண்டிப் பயமுற வென்றிச் சமன்வரும்
அன்றைக் கடியிணை தரவேணும்

கஞ்சப் பிரமனை அஞ்சத் துயர்செய்து
கன்றச் சிறையிடு மயில்வீரா
கண்டொத் தனமொழி அண்டத் திருமயில்
கண்டத் தழகிய திருமார்பா

செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்திற் பதிநகர் உறைவோனே
செம்பொற் குலவட குன்றைக் கடலிடை
சிந்தப் பொரவல பெருமாளே.

## பதவுரை

கஞ்ச பிரமனை அஞ்ச=தாமரை மலரிலிருக்கும் பிரமனை அஞ்சுமாறு, துயர் செய்து=துன்பத்தைச் செய்து, கன்ற=அவன் மனம் நோவ, சிறை இடும்=சிறைச் சாலையில் அடைத்த, அயில் வீரா=வேலாயுதத்தை யுடைய வீர மூர்த்தியே! கண்டு எத்தன மொழி=கற்கண்டுக்குச் சமானமுடைய மொழி பேசும், அண்ட திருமயில்=தேவகுலத்து அழகிய மயில் போன்ற தெய்வயானையம்மையின், கண்டு அழகிய திருமார்பா=பார்வை பாய்கின்ற அழகிய திருமார்பை யுடையவரே! செம் சொல் புலவர்கள் சங்க=செவ்விய சொற்களை யுடைய புலவர்களின் குழுவினது, தமிழ் தெரி=தமிழை ஏற்று அருள்கின்ற, செந்தில்பதி நகர்=திருச்செந்தூர் என்ற திருநகரில், உறைவோனே=உறைபவரே! செம்பொன் குல வட குன்றை=செம் பொன்னுய்ச் சிறந்து வடக்கே இருந்த கிரவுஞ்ச மலையை, கடல் இடை சிந்த=சமுத்திரத்துக்கு நடுவில் சிதறுமாறு, பொரவல=போர் செய்யவல்ல, பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! வஞ்சத் துடன்=வஞ்சனையுடன், ஒரு நெஞ்சில் பல நினை=நெஞ்சமாகிய ஒன்றில் பல வேறு சிந்தனைகளை யுடையவரும், வஞ்சி கொடி இடை=வஞ்சிக் கொடிபோன்ற இடையை யுடையவருமாகிய, மடவாரும்=பெண்களும், வந்தி புதல்வரும்=வணங்குகின்ற புதல்வர்களும், அந்தி கிளைஞரும்=நெருங்கிய சுற்றத்தாரும், மண்டி கதறிடு வகை கூர=ஒன்றுபட்டு கதறியழுகின்ற செயல் மிகுதியாகவும், அஞ்ச கலைபடு=உடலின் அம்சங்கள் கலைபட்டுப் போகின்ற, பஞ்சிப் புழுவுடல்=பஞ்சுபோன்ற புழுக்கள் நிறைந்த இந்த உடம்பானது, அங்கிக்கு இரை என உடன் மேவ=நெருப்புக்கு உணவென்று உடனே செல்லும் படியும், அண்டி பயம் உற=நெருங்கி அஞ்சுமாறும், வென்றி சமன் வரும்=வெற்றிபொருந்திய இயமன் வரும், அன்றைக்கு=அந்த நாளில், அடியிணை தரவேணும்=தேவரீருடைய சரண கமலங்கள் இரண்டையும் தந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

தாமரை மலரில் உறைகின்ற பிரமன் அஞ்சுமாறு அவனுக்குத் துயர் புரிந்து அவன் மனம் நோவச் சிறையில அடைத்த வேலை ஏந்திய வீர மூர்த்தியே! கற்கண்டையொத்த

இனிய மொழியை யுடைய தேவமாதாகிய அழகிய மயிலை போன்ற தெய்வயானையம்மையின் கண்பார்வை பாய்கின்ற திருமார்பினரே! செவ்விய சொற்களையுடைய புலவர்களின் கூட்டம் புகல்கின்ற தமிழைச் சூடிக்கொண்டு செந்திலம்பதி யென்ற திருநகரில் உறைகின்றவரே! செம் பொன்னிறத்துடன் வடக்கே நின்ற கிரவுஞ்ச மலையைக் கடலில் சிந்தியழியுமாறு போர் புரிவதில் வல்ல பெருமிதம் உடையவரே! வஞ்சனையுடன் நெஞ்சில் பல நினைவுகளுடன் கூடிய வஞ்சிக்கொடி போன்ற இடையுடைய பெண்களும், வணங்குகின்ற மைந்தர்களும், நெருங்கிய சுற்றத்தார்களும் ஒன்றுபட்டு கதறுகின்ற செயல் அதிகப்படவும், உறுப்புக்கள் பிரியும்படியான பஞ்சு போன்ற இந்த புழுத்த உடம்பு நெருப்புக்கு இரையாகும்படி உடனே செல்லவும், நெருங்கியஞ்சுமாறும் வெற்றியை யுடைய இயமன் வருகின்ற அந்நாளில் உமது இரு திருவடிகளைத் தந்தருள வேண்டும்.

## விரிவுரை

**வஞ்சத்துடன் ஒரு நெஞ்சிற் பல நினை வஞ்சிக் கொடியிடை மடவாரும் :—**

பெண்களில் சிலர் குடும்பத்தில் பல வஞ்சனைகளைப் புரிவதும், பல்வேறு நினைவுகளைக் கொண்டு உழல்வதுமாக இருப்பர். இதனை இங்கே சுவாமிகள் குறித்தனர்.

**வந்திப் புதல்வர் :—**

வந்தித்தல்—வணங்குதல். வணங்குகின்ற புதல்வர்கள்.

**அந்தி கிளைஞரும் :—**

அந்தி—நெருக்கம். நெருங்கிய உறவினர்கள்.

**வகை கூர :—**

வகை—செயல்; கூர—மிகுதிப்பட.

**அஞ்சக் கலை படு :—**

அஞ்சம்—அம்சம் (உறுப்பு). பல உறுப்புக்களும் கலைந்து போகின்றன.

**பஞ்சிப் புழுவுடல் :—**

பஞ்சுபோல் நிலை குலைவதும், புழுக்கள் நிறைந்ததுமான இந்த உடம்பு முடிவில் எரிக்கப்படும்.

**சமன் வரும் அன்றைக் கடியிணை தரவேணும் :—**

இயமன் வருகின்ற அந்நாள் வந்து அடியேனுக்குத் திருவடிகளைத் தரவேண்டும்.

**கண்டொத்தன மொழி :—**

தெய்வயானையம்மையாருடைய திருமொழி கற்கண்டைப் போல் இனிக்கும் தன்மையது.

**கண்டத் தழகிய :—**

கண் தத்து எனப் பதச் சேதம் செய்க. தத்துதல்—தாவிச் செல்லுதல். தெய்வயானை யம்மையாருடைய பார்வை முருக வேள் மீது வேகமாகப் பாய்ந்து செல்லுகின்றது.

**செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி செந்தில் :—**

செஞ்சொற்களையுடைய சங்கப் புலவர்கள் திருச்செந் தூரைச் சிறப்பித்துப் பாடியிருக்கிறார்கள்.

"உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச் சீரலைவாய்" —நக்கீரர்

"திருமணி விளக்கி னலைவாய்ச் செருமிகு சேஎய்" —பரணர்.

"வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை"
—மதுரை மருதன் இளநாகனார்.

"நெடுவேல் திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்"
—தொல்காப்பியம்.

"சீர்கெழு செந்திலும் நீங்கா இறைவன்" —இளங்கோவடிகள்.

## கருத்துரை

பிரமனைச் சிறை செய்த செந்திற் குமரா! இயமன் வரும் நாளில் வந்து தேவரீரது திருவடியிணையைத் தந்தருள வேண்டும்.

## 57

வந்து வந்து முன்த வழ்ந்து
வெஞ்சு கந்த யங்க நின்று
மொஞ்சி மொஞ்சி யென்ற மழுங்கு முந்தையோடு
மண்ட லங்கு லுங்க அண்டர்
விண்ட லம்பி ளந்தெ ழுந்த
செம்பொன் மண்ட பங்க ளும்ப யின்றவீடு
கொந்த ளைந்த குந்த ளந்த
ழைந்து குங்கு மந்த யங்கு
கொங்கை வஞ்சி தஞ்ச மென்று மங்குகாலம்

கொங்க டம்பு கொங்கு பொங்கு
பைங்க டம்பு தண்டை கொஞ்சு
செஞ்ச தங்கை தங்கு பங்க யங்கள்தாராய்

சந்த டர்ந்தெ ழுந்த ரும்பு
மந்த ரஞ்செ ழுங்க ரும்பு
கந்த ரம்பை செண்ப தங்கொள் செந்தில்வாழ்வே

தண்க டங்க டந்து சென்று
பண்க டங்க டர்ந்த இன்சொல்
திண்பு னம்பு குந்து கண்டி றைஞ்சுகோவே

அந்த கன்க லங்க வந்து
கந்த ரங்க லந்த சிந்து
ரஞ்சி றந்து வந்த லம்பு ரிந்தமார்பா

அம்பு னம்பு குந்த நண்பர்
சம்பு நன்பு ரந்தரன்த
ரம்ப லும்பர் கும்பர் நம்பு தம்பிரானே.

## பதவுரை

சந்து = சந்தன மரம், அடர்ந்து எழுந்து அரும்பு மந்தரம் = நெருக்கமாகத் தோன்றி அரும்புவிடும் மந்தாரம், செழும் கரும்பு = செழுமையான கரும்பு, கந்த அரம்பை = கிழங்குடன் கூடிய வாழை முதலியவைகள், செண்பதம்கொள் = ஆகாய மட்டும் வளர்ந்து ஓங்கியுள்ள, செந்தில் வாழ்வே = திருச்செந்தூரில் வாழ்பவரே! தண்கடம் கடந்து சென்று = குளிர்ந்த கானகத்தைத் தாண்டிப் போய், பண்கள் தங்கு அடர்ந்த இன்சொல் = பண் இசைகள் தங்கி நெருங்கியுள்ள இனிய மொழிகளை யுடைய (வள்ளியம்மையின்), திண்புனம் புகுந்து = வலிய தினைப்புனத்திற் சென்று, கண்டு இறைஞ்சு கோவே = அவ்வம்மையைக் கண்டு வணங்கிய தலைவரே! அந்தகன் கலங்க வந்து = இயமன் அஞ்சுமாறு வந்து, கந்தரம் கலந்த = குகையில் சேர்ந்த, சிந்துரம் சிறந்து வந்து = தெய்வயானை யம்மை சிறப்புடன் நெருங்கி, அலம் புரிந்த மார்பா = திருப்தியுடன் பொருந்தும் திருமார்பினரே! அம்புனம் புகுந்த நண்பர் = அழகிய வனத்தில் வாழும் முனிவர்களும், சம்பு = சிவ மூர்த்தியும், நன் புரந்தரன் = நல்ல தேவேந்திரனும், தரம் பல் உம்பர் = உயர்ந்த பலதேவர்களும், கும்பர் = அகத்தியரும், நம்பு = விரும்புகின்ற, தம்பிரானே = தனிப்பெருந்தலைவரே! வந்து வந்து முன் தவழ்ந்து = அடிக்கடி முன்னே தவழ்ந்து வந்து, வெம் சுகம் தயங்க நின்று = விரும்பத் தக்க இன்பம் விளங்க நின்று, மொஞ்சி

மொஞ்சி என்று அழும்=பாச்சி பாச்சி என்று அழுகின்ற, குழந்தை யோடு=குழந்தையும், மண்தலம் குலுங்க=பூதலம் தாங்க முடியாது குலுங்குமாறு, அண்டர்விண்தலம்பிளந்து எழுந்த=தேவர்கள்வாழும் விண்ணுலகம் வரை தாவி எழுந்த, செம்பொன் மண்டபங்களும்= சிவந்த பொன்னுலாகிய மண்டபங்களும், பயின்ற வீடு=பழகிய வீடும்,கொந்து அளைந்த குந்தளம் தழைந்து=பூங்கொத்துக்கள் தழு வியகூந்தல் தழைந்து, குங்குமம் தயங்கு கொங்கை=குங்குமப் பூவுடன் விளங்கும் தனங்களுடன் கூடிய, வஞ்சி=வஞ்சிக்கொடி யனைய மனைவியும், தஞ்சம் என்று=அடைக்கலம் என்று கூற, மங்கு காலம்= இறக்கும்போது, கொங்கு=கோங்கு மலரும், அடம்பு= அடம்பு என்ற கொடிப்பூவும், கொங்கு பொங்கு பை கடம்பு=வாசனை மிகுந்த பசிய கடப்ப மலரும், தண்டை=தண்டையும், கொஞ்சு செம் சதங்கை=இனிமையாக ஒலிக்கின்ற செவ்விய சதங்கையும், தங்கு= தங்கி அழகு செய்கின்ற, பங்கயங்கள் தாராய்=பாததாமரை மலர் களைத் தந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

சந்தன மரம், நெருக்கமாக வளர்ந்து அரும்பு விடும் மந்தார மரம், செழித்துள்ள கரும்பு, கிழங்குடன் கூடிய வாழை முதலிய மரங்கள் ஆகாயம் வரை வளர்ந்துள்ள திருச்செந்தூர் என்னுந் திருத்தலத்தில் வாழ்கின்றவரே! குளிர்ந்த வனத்தைக் கடந்து போய், பலவித பண் இசைகள் தங்கிய இனிய சொற் களைப் பேசும் வள்ளிபிராட்டி யிருந்த திண்ணிய தினைப்புனத் தில் சென்று அவ்வம்மையாரைக் கண்டு வணங்கிய தலைவரே! இயமன் கலங்குமாறு வந்து குகையில் சேர்ந்த தெய்வயானை யம்மை சிறப்புடன் நெருங்கி வந்து திருப்தியுடன் தழுவிய திருமார்பை யுடையவரே! அழகிய கானகத்தில் வாழும் முனி வர்களும், சிவமூர்த்தியும், நல்ல இந்திரனும், உயர்ந்த பல தேவர்களும், அகத்திய முனிவரும் விரும்புகின்ற தனிப்பெருந் தலைவரே! அடிக்கடி முன்னே தவழ்ந்து வந்து, விரும்புகின்ற இன்பத்துடன் நின்று, பாச்சி பாச்சி என்று அழுகின்ற குழந் தையும், மண்ணுலகமே குலுங்குமாறு, தேவர்கள் வாழும் விண்ணுலகம்வரை ஓங்கி உயர்ந்த சிவந்த பொன் மண்டபங் களும், பழகிய வீடும் மலர்க்கொத்துக்களுடன் கூடிய கூந்தல் தழைந்து, குங்குமப்பூ பூசிய தனங்களுடன் வஞ்சிக் கொடி போன்ற மெல்லிய மனையாளும் அடைக்கலம் என்று கூறி வருந்த, உயிர் பிரியுந் தருணத்தில், கோங்குமலர், அடம்பு மலர், நறுமண மிகுந்த பசிய கடப்பமலர், தண்டை, இனிது ஒலிக்கும் சதங்கை என்ற இவைகளுடன் கூடிய தாமரைத் தாள்களைத் தந்து அருளுவீர்.

## விரிவுரை

**வந்து வந்து முன் தவழ்ந்து :—**

குழந்தைகள் தாய் தந்தையரது முன்னே தங்கச் சிலை களைப்போல் அழகாகத் தவழ்ந்து வந்து உள்ளத்தில் உவகைத் தேனை ஊட்டும்.

**மொஞ்சி மொஞ்சி என்று அழும் :—**

மொஞ்சி—முலை. தாய்ப்பாலை விரும்பி குழந்தை அழுவ தைக் குறிக்கின்றது.

**மண்டலங் குலுங்க......மண்டபம் :—**

சிறந்த மண்டபம் மிக உயரமாகப் புதுக்கி அதில் தனவந் தர்கள் வாழ்வர். அம் மண்டபத்தின் பாரத்தினால் பூதலங் குலுங்குகின்றது என்றும், விண்ணுலகம் கிழிபடுகின்றது என்றும் உயர்வு நவிற்சியாக அடிகள் உரைக்கின்றனர். எத் துணைப் பெரிய வீட்டிலும் அரண்மனையிலும் வாழ்ந்தாலும், அங்கும் இயம தூதுவர் வந்தே தீருவர்.

**தஞ்சமென்று மங்கு காலம் :—**

மனைவி மக்கள் முதலியோர், "அந்தோ! நீர் போகின்றீரே? எங்களுக்கு வேறு யார் ஆதரவு? நீரே எமக்குத் தஞ்சம்; இனி நாங்கள் எவ்வாறு வாழ்வோம்? எமக்குத் துணையேது?" என்று கூறிப் புலம்பியழுவார்கள். அவ்விதம் அவர்கள் விம்மி விம்மி யழுது புலம்ப உயிர் பிரியும்.

**கொங்கடம்பு :—**

கோங்கு—என்பது கொங்கு என வந்தது. அடம்பு—ஒரு கொடிப்பூ. கொங்கடம்பு என்பது கொங்கு அடம்பு எனப் பிரிக்கப்பட்டது.

**கடம்பு :—**

முருகனுக்குப் பிரியமான மலர் கடம்பு; நறுமணம் வீசுவது.

'உருள்பூந் தண்தார் புரளு மார்பினன்' —திருமுருகாற்றுப்படை.

'பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும் அணிவோனே'.
—(மலரணி) திருப்புகழ்.

**சந்தடர்ந்தெழுந் தரும்பு மந்தரம் :—**

சந்து அடர்ந்து எழுந்து அரும்பு மந்தரம் எனப் பதச் சேதஞ் செய்க. சந்து—சந்தனம். மந்தாரம் என்பது மந்தரம் என வந்தது.

**கந்தரம்பை :—**

கந்தம்—கிழங்கு. அரம்பை—வாழை. கிழங்குடன் கூடிய வாழை.

**சேண்பதங்கொள் :—**

சேண் என்பது செண் என்று சந்தத்தை நோக்கிக் குறுகி நின்றது. சேண்—ஆகாயம். ஆகாயம்வரை ஓங்கி வளமை யுடன் வளர்ந்த அழகிய சோலைகள் சூழ அழகாகத் திகழ் கின்றது திருச்செந்தூர்.

**தண்கடம் :—**

குளிர்ந்த காடு. கடம்—காடு. "கடத்திற் குறத்திப்பிரான்" எனவரும் கந்தலரங்காரத்தையுங் காண்க.

**பண்கடங் கடர்ந்த இன்சொல் :—**

பண்கள் தங்கு அடர்ந்த இன்சொல் என்று பதப்பிரிவு புரிக. இனிய பண்கள் தங்கி நெருங்கிய இன்னுரைகள் பேசு கின்றவர் வள்ளியம்மை. அருணகிரிநாதர் வள்ளியம்மையின் இன்சொல்லைக் குறித்துப் பல இடங்களில் பாராட்டிக் கூறி யிருக்கின்றார்.

> "பாகுகனிமொழி மாதுகுறமகள்" —(பாதிமதி) திருப்புகழ்.
>
> "தேனென்று பாகென்று உவமிக்கொணு மொழித் தெய்வவள்ளி"
> —அலங்காரம். (9)

**அந்தகன் கலங்க வந்து :—**

தெய்வயானையம்மை முருகனை மணக்குமாறு ஐராவதத் தின்மீது எழுந்தருளி திருப்பரங்குன்றத்துக்கு வந்தபோது அந்த வேகத்தைக் கண்டு இயமனும் அஞ்சினன்.

**கந்தரம் கலந்த சிந்துரம் :—**

கந்தரம்—குகை. சிந்துரம்—யானை. திருப்பரங்குன்றத்தி லுள்ள குகையில் தெய்வயானையம்மை வந்தனர். இன்றும் திருப்பரங்குன்றத்தில் குகைக் கோயிலில் ஒருபுறம் நாரதரும் மற்றொரு புறம் தெய்வானை யம்மையும் வீற்றிருக்க முருகவேள் அடியார்கட்குக் காட்சி யளிக்கின்றார்.

**அலம் புரிந்த மார்பா :—**

அலம்—திருப்தி. தெய்வயானை யம்மை திருப்தியுடன் தழுவுகின்ற திருமார்பை யுடையவர் முருகர்.

**அம்புனம் புகுந்த நண்பர் :—**

அழகிய வனத்தில் நின்று தவம் புரிகின்ற நட்புடையவர்களாகிய தவமுனிவர்கள்.

**சம்பு :—**

சம்பு—சுககாரணர். சிவமூர்த்தி.

**புரந்தரன் :—**

புரங்களை வென்ற இந்திரன்.

**தரம்பலும்பர் :—**

தரம்—உயர்வு. உயர்வுடைய பலதிறப்பட்ட தேவர்கள். தேவர்களில் வசுக்கள் மருத்துக்கள் ஆதித்தர்கள் உருத்திரர்கள் இப்படிப் பல பிரிவுகள் உண்டு.

**கும்பர்— :**

கும்பத்தில் பிறந்தபடியால் அகத்தியருக்கு இப் பெயர் அமைந்தது.

## கருத்துரை

செந்திற்குமரா! வள்ளி மணவாளா! தெய்வகுஞ்சரி கணவா! மரணமடையுநாளில் உமது சரணமலர் தந்து ஆண்டருள்வீராக.

## 58

வரியார் கருங்கண் மடமாதர்
மகவாசை தொந்த மதுவாகி
இருபோது நைந்து மெலியாதே
இருதாளி னன்பு தருவாயே
பரிபால னஞ்செய் தருள்வோனே
பரமேசு ரன்ற னருள்பாலா
அரிகேச வன்றன் மருகோனே
அலைவா யமர்ந்த பெருமாளே.

## பதவுரை

பரிபாலனம் செய்து அருள்வோனே=உலகங்களையெல்லாம் காத்தருள் புரிகின்றவரே! பரம ஈசுரன் தன் அருள் பாலா=மேலான தலைவராகிய பெருமானுடைய திருக்குமாரரே! அரிகேசவன் தன்மருகோனே=பாவத்தை நீக்குபவரும் கேசி என்ற அரக்கனைக் கொன்ற

வருமாகிய நாராயணமூர்த்தியின் மருகரே! அலைவாய் அமர்ந்த = திருச்செந்தூரில் விரும்பி எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! வரி ஆர் கருங்கண் மடமாதர் = வரிகளையுடைய கரிய கண்களும் மடமையும் உடைய பெண்களின் மீதும், மகவு = குழந்தைகளின் மீதும், ஆசை தொந்தம் அது ஆகி = ஆசைவைத்து அவர்களுடன் உறவுடையவனாகி, இரு போதும் நைந்து = இரவும் பகலும் உள்ளம் வருந்தி, மெலியாதே = மெலிந்து போகா வண்ணம், இருதாளில் அன்பு தருவாயே = தேவரீருடைய இரண்டு திருவடிகளின் மீது உண்டாகும் அன்பைத் தந்தருள்வீர்!

## பொழிப்புரை

எல்லா உலகங்களையும் காத்தருள்பவரே! பெருந்தலைவராகிய சிவமூர்த்தியின் திருக்குமாரரே! பாவநாசகரும், கேசியைக் கொன்றவருமாகிய திருமால் மருகரே! திருச்செந்தூரில் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! வரிகளையுடைய கரிய கண்களும், மடமையும் உடைய மனைவியர் குழந்தைகள்மீது ஆசை வைத்து அவர்களுடன் உறவு கொண்டு இரவும் பகலும் உள்ளம் நலிந்து உடல் மெலிந்து அடியேன் துன்புறுவண்ணம், தேவரீர் திருவடிகளில் வைக்கும் அன்பை அருள்புரிவீர்.

## விரிவுரை

**வரியார்கருங்கண்......தொந்தமதனாலே.—**

மனைவி மக்கள்மீது ஆசைகொண்டு அவர்களுடன் நேசம் வைத்து பாசபந்தமுடன் உழல்வர்.

> "உலகபசுபாச தொந்த மதுவான
> உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
> மலசல சுவாச சஞ்ச லமதாலென்
> மதிநிலை கெடாம லுன்ற னருள்தாராய்" —திருப்புகழ்.

மனைவியிடத்தும் மக்களிடத்தும் ஆசை வைக்கக்கூடாது. ஆனால் வெறுக்கவும் கூடாது. மனைவியிடம் அன்பும், மக்களிடம் கருணையும் இருக்கவேண்டும். ஆசை வேறு, அன்பு வேறு. பயன்கருதிவைக்கும் பற்று ஆசையெனப்படும். கடமை பற்றி வைக்கும் பற்று அன்பு எனப்படும். தோன்றி மறையும் உடம்புக்குச் சிறிது காலம் துணையாக நிற்பவர் மனைவி முதலியோர். உயிர்க்கு என்றென்றும் துணையாக நிற்பவர் இறைவர். ஆதலின் அவரைப் பற்றி நின்றோரே உய்வு பெறுவர்.

> "மனைமக்கள் சுற்ற மெனுமாயா
> வலையைக் கடக்க அறியாதே

வினையிற் செருக்கி யடிநாயேன்
விழலுக் கிறைத்து விடலாமோ" —திருப்புகழ்.

**இருபோது நைந்து மெலியாதே :—**

இருபோது—இரவு பகல்; அன்றி இம்மை மறுமை எனினும் அமையும். மனைவி மக்களைக் குறித்து எண்ணி எண்ணி உள்ளம் நொந்து, உடல் மெலிவர். அதனால் உயிரினும் இனியனாய் உயிர்க்குயிராய் நின்று உறுதுணைபுரியும் உத்தமனும் வித்தக வேலாயுதனைக் கருதி உய்வுபெறுவோமாக.

**இருதாளினன்பு தருவாயே :—**

நான் என்ற அகப்பற்று அற்ற இடம் ஒரு திருவடி. எனது என்ற புறப்பற்று அற்ற இடம் ஒரு திருவடி. ஆன்மாக்கள் அத் திருவடிகள் இரண்டினையும் பற்றினால் மற்றப் பற்றுக்கள் தாமே விலகும். தூங்கினவன் கைப்பொருள் தானே நழுவுவது போல் என்க.

**பரிபாலனஞ் செய்தருள்வோனே :—**

உலகங்களை யெல்லாம் பரம கருணையால் காக்கும் கடவுள் கந்தவேள். பரிபாலனம்—அரசாட்சி. தேவச் சொர்க்கச் சக்கிரவர்த்தியாதலின் அகிலாண்டங்களை யெல்லாம் ஆறுமுகத்தரசு ஆட்சி புரிகின்றனர்.

"காக்கக் கடவிய நீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா.

**பரமேசுரன் :—**

ஈசுரன்—தலைவன்; பரம—பெரிய; மாபெருந் தலைவன்.

## கருத்துரை

காக்கும் கடவுளே ! அரனார் புதல்வரே ! மால் மருகரே ! செந்தூர் மேவிய தேவ தேவரே ! மனைமக்கள் என்ற பாச பந்தத்தினால் சிறியேன் மெலியாமல் உமது சரணாரவிந்தத்தின் மீது இடையறாது வளரும் அன்பைத் தருவீர்.

## 59

விந்ததி னூறி வந்தது காயம்
வெந்தது கோடி யினிமேலோ
விண்டுவி டாம லுன்பத மேவு
விஞ்சையர் போல அடியேனும்

வந்துவி நாச முன் கலி தீர
வண்சிவ ஞான வடிவாகி
வன்பத மேறி யென்கலை யாற
வந்தருள் பாத மலர்தாராய்
எந்தனு ளேக செஞ்சுட ராகி
யென்கணி லாடு தழல்வேணி
எந்தையர் தேடு மன்பர்ச காய
ரெங்கள் சுவாமி யருள்பாலா
சுந்தர ஞான மென்குற மாது
தன்றிரு மார்பி லணைவோனே
சுந்தர மான செந்திலில் மேவு
கந்தசு ரேசர் பெருமாளே.

## பதவுரை

எந்தன்உள் = அடியேனுடைய உள்ளத்துள், ஏக செம்சுடர் ஆகி = ஒப்பற்ற செழும் சோதியாக விளங்கி, என் கணில் ஆடு = அடியேனுடைய கண்களில் ஆடல் புரிகின்ற, தழல்வேணி = நெருப்பு நிறமான சடைமுடியையுடைய, எந்தையர் = எமது பிதாவும், தேடும் அன்பர் சகாயர் = அன்பினால் தேடுகின்ற அடியவர்கட்கு உதவுபவரும், எங்கள் சுவாமி = எமக்கு உடையவருமாகிய சிவபெருமான், அருள்பாலா = அருளிய குமாரரே! சுந்தர = அழகும், ஞான = அறிவும், மென்குற மாது தன் = மென்மையும் உடைய வள்ளி பிராட்டியாரது, திரு மார்பில் அணைவோனே = திருமார்பில் தழுவுபவரே! சுந்தரம் ஆன செந்திலில் மேவு = அழகிய திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, கந்த = கந்தப் பெருமானே, சுர ஈசர் பெருமாளே = தேவர் தலைவர்களுக்குப் பெருமையின் மிகுந்தவரே! விந்ததின் ஊறி வந்தது காயம் = சுக்கிலத்தில் ஊறி வந்தது உடம்பு, வெந்தது கோடி = நெருப்பில் வெந்தது கோடிக்கணக்கானவை, இனிமேலோ = இனியாவது, விண்டு விடாமல் = உம்மைவிட்டு நீங்காமல் இருக்கும் பொருட்டு, உன்பதம் மேவும் விஞ்சையர் போல = தேவரீருடைய திருவடியை விரும்புகின்ற புலவரைப் போலே, அடியேனும் வந்து = அடியேனும் நன்னெறிக்கு வந்து, விநாசமுன் கலிதீர = பெரிய அழிவும், பழைய வினை யென்ற கேடும் நீங்கும்படி, வண் சிவஞான வடிவு ஆகி = வளமையான ஞானத்தின் வடிவை யடைந்து, வன்பதம் ஏறி = வலிமையான பதவியை யடைந்து, என் கலை ஆற = எனது பிறப்பாலாகிய களைப்பு தீருமாறு, வந்து அருள்பாத மலர் தாராய் = அடியேன் முன் எழுந்தருளி திருவருள்மயமான உமது திருவடியைத் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

அடியேனுடைய உள்ளத்துள் ஒப்பற்ற செழுஞ் சோதி யாய் விளங்கி, எனது கண்களிலும் நடனம் புரிகின்றவரும், பொன்போன்ற சடையுடையவரும், எமது பிதாவும், தேடு கின்ற அடியவர்க்கு உதவுபவரும், எங்கள் சுவாமியுமாகிய சிவபெருமான் பெற்றருளிய குமாரரே! அழகும் அறிவும் மென்மையும் படைத்த வள்ளியம்மையின் திருமார்பில் பொருந்துபவரே! அழகான திருச்செந்தூரில் எழுந்தருளிய தேவர் தலைவர்கட்கும் பெருமிதமானவரே! சுக்கிலத்தில் ஊறி வந்த சரீரம் நெருப்பில் வெந்தழிந்தது எத்தனையோ கோடி முறை; இனியாவது உமது பற்றைவிடாது. உமது பதமலரை விரும்புகின்ற புலவர்களைப்போல் அடியேனும் நன்னெறிக்கு வந்து, அழிவும் முன்வினையும் தீரும்பொருட்டு, வளமையான ஞானவடிவு பெற்று, நிலைத்த பதவியை யடைந்து, எனது பிறப்பிறப்பாலாகிய இளைப்பு நீங்குமாறு அடியேன் முன் வந்து, அருள்மயமான பதமலரைத் தந்து அருளுவீராக.

## விரிவுரை

**விந்ததினூறி வந்தது காயம் வெந்தது கோடி :—**

ஆடவனுடைய சுக்கிலத்திலே ஊறி வந்தது இந்த உடம்பு. தீயினுள் எரிந்தது எத்தனையோ கோடி முறை. தகிக்கப்படுவ தால் உடம்பு தேகம் எனப்பட்டது. வேளை தவறாமல் உயர்ந்த உணவையுண்டு உண்டு வளர்த்த இந்த அரிய உடம்பு முடிவில் நெருப்புக்கு இரையாகின்றது. இவ்வாறு வெந்தழியக் கூடிய இந்த வீணுடலை ஓம்பும் பொருட்டு சூதும் வாதும் பொய்யும் களவும் புரிந்து தடுமாறுகின்றனர் மக்கள். இங் ஙனம் வறிதே யழிகின்ற மாந்தருக்கு அடிகளார் நினைவூட்டு கின்றார்.

**விண்டுவிடாமல் :—**

இறைவனுடைய நினைவிலிருந்து விலகாமல் இருக்க வேண் டும். இடையறாத தியானத்தை இது குறிக்கின்றது.

**உன்பத மேவு விஞ்சையர் :—**

விஞ்சையர் :—புலவர்; விஞ்சை—வித்தை. வித்தையை யுடையவன் வித்துவான். புலவர்கள் இறைவன் திருவடி யையே விரும்புவார்கள். அதுவே அறிவு பெற்றதற்குப் பயன்.

**வந்து :—**

அருள் நெறிக்கு வந்து ஆன்மாக்கள உய்யவேண்டும். அவாய் நிலையாக அருள் நெறியைக் குறிக்கின்றது.

**விநாச முன்கலி தீர :—**

விநாசம்—மிகுந்த அழிவு. வி என்ற உபசர்க்கம் மிகுதியைத் தெரிவிக்கின்றது. விஞ்ஞானம் என்பதுபோல். முன் கலி—முற்பிறப்பில் செய்த தீவினை காரணமாக வரும் கேடு. பெரிய அழிவையும், வினைக் கேட்டையும் தீர்க்கும்பொருட்டு, ஆன்மா அறிவு வடிவாக வேண்டும்.

**வன்பதமேறி :—**

வலிய நிலைத்த பதவியை அடைதல்.

**என் களை ஆற :—**

இறப்பதும் பிறப்பதுமாக ஓயாது மாறி மாறி வருகின்றதனால் ஆன்மா களைத்துவிடுகின்றது. அந்தப் பிறவியின் களைப்பு தீரும் பொருட்டு இறைவனுடைய திருவடி நீழலையடைந்து ஆன்மா இன்புறுதல் வேண்டும்.

"எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" —திருவாசகம்.

"மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடு உற்றேன்"
—திருவாசகம்.

**எந்தனுள் ஏக செஞ்சுடராகி :—**

மாலயனாதி வானவர்க்கும் எட்டாத இறைவன் அருணகிரிநாதருடைய உள்ளத்துள் ஒப்பற்ற ஒளிவடிவாகி நின்று அருள்புரிகின்றார். இதனால் அவருடைய தவ வலிமை வெளிப்படுகின்றது.

**என் கணிலாடு :—**

இனி இறைவன் அருணகிரிநாதருடைய கண்களில் விளங்கி நடம் புரிகின்றாராம். உத்தம ஞானிகள் கண்ணை விட்டு இறைவனுடைய அருட்காட்சி விலகாது.

"கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான்
காளத்தியான் அவன் என் கண்ணுளானே" —அப்பர்.

"ஆறு திருஎழுத்தும் கூறுநிலைகண்டு
நின்தாள் புகழுநர் கண்ணுட் பொலிந்தோய்" —கல்லாடம்.

வரங்கொண்ட உமைமுலைப்பால் மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும் பன்னிரண்டு கண்மலரும்
சிரங்கொண்ட மறையிறைஞ்சும் சேவடியும் செந்தூரன்
கரங்கொண்ட வேலும் என்றன் கண்ணைவிட்டு நீங்காவே.
—திருச்செந்திற்கலம்பகம்.

கற்புடைய மாதர்கட்கும் கணவனுர் கண்ணிலே நின்று காட்சி தருவர். ஒரு பெண்மணியைத் தோழி நோக்கி, "நீ ஏன் கண்ணுக்கு மை தீட்டுவதில்லை" என்று வினவினுள்.

"என் கணவனுர் கண்களில் இருக்கின்ருர். மை தீட்டினுல் அவர் மறைவார் என்று மை தீட்டேன்" என்ருள்.

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து. —திருக்குறள்.

அநுமான் சீதையை அசோக வனத்தில் பார்த்துவிட்டு, ஸ்ரீ ராமரிடம் போய் "எம்பெருமானே! என் அன்னை ஜானகியின் கண்ணிலும் நீ யிருக்கின்ருய்; அவருடைய கருத்திலும் நீ இருக்கின்ருய். அவர் வாக்கிலும் நீ யிருக்கின்ருய்" என்று கூறுகின்ருர்.

"கண்ணிலும் உளைநீ தையல் கருத்திலும் உளைநீ வாயின்
எண்ணிலும் உளைநீ"

**தேடும் அன்பர் சகாயர் :—**

ஆண்டவனையே சதா தேடித் திரிகின்ற அடியாருக்கு உதவி புரிகின்ருன் இறைவன்.

**எங்கள் சுவாமி :—**

சுவாமி—உடையவர். எமக்கே சொந்தமான தெய்வம் என்கின்ருர்.

**சுந்தரஞான மென்குறமாது :—**

வள்ளியம்மையார் முற்பிறப்பில் திருமாலின் கண்மலரில் தோன்றிய சுந்தரவல்லி என்பதை இது குறிக்கின்றது. மேலும் அவள் ஞானம்பிகை. 'ஞானகுறமாதை' என்கின்ருர் இராமேசுரந் திருப்புகழில்.

## கருத்துரை

சிவகுமாரரே! வள்ளி மணவாளரே! செந்திலாண்டவரே! என் பிறவிக் களையாறத் திருவடி மலரைத் தருவீர்.

## 60

வெஞ்ச ரோருக மோகடு நஞ்ச மோகய லோநெடு
விந்ப சாகர மோவடு வகிரோமுன்
வெந்து போனபு ராதன சம்ப ராரிபு ராரியை
வென்ற சாயக மோகரு விளையோகண்

தஞ்ச மோயம தூதுவர் நெஞ்ச மோவெனு மாமத
சங்க மாதர்ப யோதர மதில்சூழ்கும்
சங்கை யோவிரு கூதள கந்த மாலிகை தோய்தரு
தண்டை சேர்கழ லீவது மொருநாளே

பஞ்ச பாதக தாருக தண்ட னீறெழ வானவர்
பண்டு போலம ராவதி குடியேறப்
பங்க யாசனர் கேசவ ரஞ்ச லேயென மால்வரை
பங்க நீறெழ வேல்விடு மிளையோனே

செஞ்ச டாடவி மீமிசை கங்கை மாதவி தாதகி
திங்கள் சூடிய நாயகர் பெருவாழ்வே
செண்ப காடவி நீடிய துங்க மாமதிள் சூழ்தரு
செந்தில் மாநகர் மேவிய பெருமாளே.

## பதவுரை

பஞ்சபாதக தாருக தண்டன் = ஐம்பெரும் பாதகங்களையும் புரியும் தாரகாசுரனாகிய எமன், நீறு எழ = பொடியாகப் போகவும், வானவர் = தேவர்கள், பண்டுபோல் அமராவதி குடி ஏற = முன்னிருந்த படியே அமராவதியென்னும் தங்கள் நகரில் குடியேறவும், பங்கய ஆசனர் = தாமரைப் பீடத்தில் வாழும் பிரமதேவனும், கேசவர் = திருமாலும், அஞ்சலே என = அஞ்சாதீர்கள் என்று (தேவர்கட்குத் துணிவு) கூறவும், மால்வரை பங்க நீறு எழ = மாயையில் வல்ல கிரவுஞ்சமலை பங்கப்பட்டுப் பொடியாகப் போகவும், வேல் விடும் = வேலாயுதத்தை விடுத்தருளிய, இளையோனே = இளங் குமாரரே! செம் சடை அடவி மீமிசை = சிவந்த சடையாகிய காட்டின்மீது, கங்கை = கங்கா நதியையும், மாதவி = குருக்கத்தியையும், தாதகி = ஆத்தி மலரையும், திங்கள் = சந்திரனையும், சூடிய நாயகர் பெருவாழ்வே = தரித்துள்ள தலைவராகிய சிவபெருமானுக்குப் பெரிய வாழ்வாகிய குழந்தையே! செண்பக அடவி நீடிய = செண்பக வனங்கள் நிறைந்துள்ள, துங்க மாமதிள்சூழ் தரு = உயர்ந்த சிறந்த திருமதில்கள் சூழ்ந்துள்ள, செந்தில் மாநகர் மேவிய = திருச்செந்தூர் என்னுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிகுந்தவரே! கண் = பொதுமகளிருடைய கண்கள், வெம் சரோருகமோ = விரும்பத்தக்க தாமரை மலரோ? கடு நஞ்சமோ = கொடிய விடமோ? கயலோ = கயல் மீனோ? நெடு இன்ப சாகரமோ = நீண்ட இன்பக் கடலோ?, வடுவகிரோ = மாம் பிஞ்சின் பிளவோ? முன் வெந்து போன = முன் வெந்து சாம்பரான

வனும், புராதன = பழமையானவனும், சம்பர அரி = சம்பரன் என்ற அசுரனை யழித்தவனும் ஆகிய மன்மதன், புராரியை வென்ற சாயகமோ = புரத்தை எரித்த சிவமூர்த்தியை வெல்லும் பொருட்டு விடுத்த அம்போ? கருவிளையோ = காக்கண மலரோ? தஞ்சமோ = யாவரும் அடைக்கலம் புகும் இடமோ?, யம தூதுவர் நெஞ்சமோ = இயமனுடைய தூதர்களின் நெஞ்சமோ?' எனும் மாமத சங்க மாதர் = என்னும்படியான அழகும் கர்வமும் உடைய கூட்டமாகவுள்ள பொது மகளிரது, பயோதரம் அதில் மூழ்கு = தனங்களில் முழுகுகின்ற, சங்கை ஒவ = எண்ணங்கள் ஒழிய, கூதள கந்த மாலிகை தோய்தரு = கூதாள மென்கின்ற வாசனை பொருந்திய மாலை சூடியுள்ள, இருதண்டை சேர் கழல் ஈவதும் = இரண்டு தண்டைகள் சேர்ந்துள்ள உமது திருவடி மலரைத் தந்து காப்பதும், ஒருநாளே = ஒருநாள் உளதாகுமோ?

## பொழிப்புரை

ஐம்பெரும் பாவங்களைப் புரிகின்றவனும், இயமனைப் போன்றவனுமாகிய தாரகன் என்னும் கொடிய அசுரன் சாம்பராகியழியுமாறும், தேவர்கள் முன்போல் தங்களுடைய அமராவதி நகரில் குடியேறுமாறும், தாமரைப் பீடத்தில் வாழும் பிரம்ம தேவனும், நாராயணரும், அஞ்சுகின்ற அமரரைப் பார்த்து அஞ்சாதீர்கள் என்று கூறும்படியும், மயக்கத்தைச் செய்கின்ற கிரவுஞ்ச மலை கெட்டு சாம்பராகுமாறும் வேலாயுதத்தை விடுத்தருளிய இளம்பூரணரே! சிவந்த சடைமுடியின்மீது, கங்கா நதியையும் குருக்கத்தி மலரையும் ஆத்திமலரையும், பிறைச் சந்திரனையும் முடித்துள்ள தலைவராகிய சிவபெருமான் தந்த திருப்புதல்வரே! செண்பக வனங்கள் நிறைந்துள்ளதும், உயர்ந்த சிறந்த திருமதில்கள் சூழ்ந்துள்ளதுமாகிய திருச்செந்தூர் என்னுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! பொது மாதருடைய கண்கள் விரும்பத் தகுந்த தாமரை மலரோ? கொடிய நஞ்சமோ? பெரிய இன்பக் கடலோ? மாம்பிஞ்சின் பிளப்போ? முன்னாளில் வெந்துபோனவனும் பழமையானவனும், சம்பரன் என்ற அசுரனையழித்தவனும் ஆகிய மன்மதன் முப்புரம் எரித்த சிவபிரானை வெல்லுமாறு ஏவிய அம்போ? கருநிறமுள்ள காக்கண மலரோ? யாவரும் அடைக்கலம் புகும் இடமோ? இயமதூதருடைய நெஞ்சந்தானோ? என்று கூறுகின்ற அழகும் கர்வமும் உடைய கூட்டமாக இருக்கும் பொதுமகளிருடைய தனங்களில் முழுகுகின்ற எண்ணங்கள் ஒழியுமாறு கூதாள மலரின் வாசனை பொருந்திய மாலையுடன் கூடிய தண்டையணிந்துள்ள உமது இரு திருவடிகளையும் அடியேனுக்குத் தந்தருளுகின்ற நாள் ஒன்று உளதோ?

## விரிவுரை

**வெஞ்சரோருகமோ ? :—**

காமுகர்கள், தாம் காதலித்த ஒருத்தியின் கண்களை இன்ன இன்ன பொருளோ? என்று உவமை கூறி இன்புறுவர்.

இங்கே பொதுப் பெண்களுடைய கண்களை அவர்களை விரும்புவோர் கூறும் வகைகளை அடுக்கடுக்காக அடிகளார் கூறுகின்றனர். இவற்றுள் முதலாவதாக எல்லோராலும் விரும்பப்படுகின்ற தாமரை மலரோ? என்றனர். இது குளிர்ச்சியைக் குறிக்கின்றது.

**கடுநஞ்சமோ ? :—**

மேலும் அவர்கள் கண் கொல்லும் கொடுமையும் உடையது ஆதலின் கொடிய நஞ்சமோ? என்றனர்.

**கயலோ ? :—**

கயல் மீன் நீரில் புரள்வதுபோல் அம் மகளிர் விழியும் இருபுறத்தும் புரண்டு மயக்கத்தைப் புரியும்.

**வடுவகிரோ ? :—**

வடு - மாம்பிஞ்சு. இதனைப் பிளந்தால் உள்ளே அதன் விதை கருமணியையும், அதைச் சூழ்ந்துள்ள பகுதி கண்ணின் வெண்மைப் பகுதியையும் ஒத்து கண்போல் காட்சி தரும். அதனால் பெண்களின் கண்களை மா வடு என்று புலவர்கள் உவமை கூறுவர்.

'வடுக்கண் கூர் கூந்தலாளை' —கம்பர்.

**முன் வெந்துபோன புராதன சம்பராரி :—**

சம்பரன் என்ற அசுரனைக் கொன்றதனால் மன்மதனுக்குச் சம்பராரி என்ற ஒரு பேர் அமைந்தது. அவன் சிவபிரான் மீது கணைபொழிந்து வெந்து அநங்கன் ஆயினான். அவனுடைய மலர்க் கணையோ? என்றனர்.

**தஞ்சமோ ? :—**

இத்தகைய கண்களையுடைய அம் மகளிர், ஆடவர்கள் அடைக்கலம் புகும் இடமோ? என்று அத்துணை மிகுந்த அன்புகொள்வர்.

**இயம தூதுவர் நெஞ்சமோ:—**

இயமனுடைய தூதுவர்கள் தயவு தாட்சண்யம் இன்றி உயிரைப் பறிப்பர்; அதுபோல் பொது மகளிரும் ஆடவ

ருடைய பொருளை ஈவு இரக்கமின்றிப் பறிப்பர். அதனுல் இயம தூதருடைய நெஞ்சம் போன்றவர் என்றனர்.

**மாமத சங்க மாதர் :—**

மா—அழகு; மதம்—கர்வம்; சங்கம்—கூட்டம். அழகும் கர்வமும் உடைய கூட்டமான அம்மகளிருடைய உறவில் ஈடுபட்டு ஆடவர் இடர்ப்படுவர்.

**சங்கையோவிரு :—**

சங்கை ஓவ இரு என்று பதப்பிரிவு செய்க. சங்கியை என்ற சொல் சங்கை என மருவியது. சங்கியை—கணக்கு.

**கூதள கந்த மாலிகை தோய்தரு :—**

முருகப்பெருமான் அணிகின்ற மலர்களில் கூதாளமலரும் ஒன்று. 'கூதாள' என்று கந்தரநுபூதியிலும் குறிப்பிடுகின்ருர்.

"அடியென முடியிற் கொண்டகூதள
மென வனசரியைக் கொண்ட மார்பென
அறுமுக மெனநெக் கென்பெலாமுரு கன்புருதோ"
—(அலகிலவுணரை) திருப்புகழ்.

**பஞ்சபாதக தாருக தண்டன் :—**

தாரகாசுரன் ஐம்பெரும் பாவங்களையும் புரிந்து அமரர்களை மிகவும் அலலற் படுத்தினுன். கள், கொலை, சூது, காமம், களவு என்பன ஐம்பெரும் பாதகங்கள்.

"நீதி நெறி யேயழித்த தாருகனை" —(கேதகைய) திருப்புகழ்.

"பாவ நிறத்தின் தாருகவர்க்கம்" —(காவியுடுத்தும்) திருப்புகழ்.

தண்டன்—இயமன். தாரகாசுரன் இயமனைப் போன்றவன். வேலினுல் எம்பெருமான் அவனைப் பொடியாகச் செய்தருளினுர்.

**வானவர் பண்டுபோல் அமராவதி குடியேற :—**

தேவர்கள் தங்கள் நகரமாகிய அமராவதியில் முன்னிருந்தபடி சுகமாகக் குடிபுகுந்து உய்வு பெறச் செய்தருளினுர்.

**பங்கயாசனர் கேசவர் அஞ்சலே யென :—**

சூராதியவுணர்களைக் கண்டு அமரர்கள் அனைவரும் அஞ்சி நடுநடுங்கினுர்கள். அப்போது, பிரம்மதேவரும்

நாராயணரும் தேவர்களை நோக்கி, "நீங்கள் அஞ்ச வேண்டாம். கந்தப் பெருமான் இவர்களை அழித்து நமக்கு அருள்புரிவார். அவர் வேலுண்டு. எனவே அஞ்சற்க" என்று தேறுதல் கூறினார்கள்.

திருமால் கூறிய பாடல் :—

சூரனே முதலோர் தம்மை இமைப்பினில் தொலைக்க வுன்னின்
மூரலால் அடுவன் கொண்ட முனிவினால் அடுவன் வாய்மைச்
சீரினால் அடுவன் நாட்டச் செய்கையால் அடுவன் என்றால்
நேரிலா முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற் பாலார்.

—கந்தபுராணம்.

**மால்வரை பங்க நீறெழ வேல்விடும் :—**

வரை - மூங்கில். இங்கே மூங்கில் இருக்கின்ற மலையைக் குறிக்கின்றது. இடவாகு பெயர். மால் - மயக்கம். நெடுங் காலமாக முனிவர்கட்கும் தேவர்கட்கும் கிரவுஞ்சன் என்ற அசுரன் மலை வடிவாக நின்று குகைபோல் வழிகாட்டி அதில் நுழைந்தாரை மயக்கிக் கொல்வான். இவ்வசுரன் தாரகாசுர னுக்கு நண்பன். இந்த அசுரன் கிரவுஞ்சப் பறவை போன்ற வடிவுடைய மலையாக நின்று இலக்கத்தொன்பான் வீரர்களை யும் பூத வீரர்களையும் மயக்கினான். கந்தவேள் வேலை விடுத்து தாருகனையும் கிரவுஞ்ச மலையையும் பொடிபடுத்தி யருளினார். பங்கம் - கேடு.

**செஞ்சடாடவி :—**

சிவபெருமானுடைய சடைமுடி அவருடைய பற்றற்ற நிலையையும் தனிப்பெருந் தலைமையையுந் தெரிவிக்கின்றது.

**கங்கை :—**

கங்கைமாநதியை முடித்தது அவருடைய ஆற்றலை அறிவிக்கின்றது. (45-ம் பக்கம் பார்க்கவும்.)

**திங்கள் :—**

சந்திரனை முடித்தது கருணையின் மிகுதியைக் குறிக் கின்றது. (முதல் தொகுதி 9-ம் பக்கம் பார்க்கவும்.)

## கருத்துரை

வேலையுடைய இளங்குமார மூர்த்தியே! சிவபுத்திரரே! செந்திற் கடவுளே! மாதர் மயக்கத்தினின்று மீளுமாறு உமது திருவடியைத் தந்தருளுவீர்.

## 61

அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையுமுடை யவனரவ தண்டச் சண்டச் சமனோலை
அதுவருகு மளவிலுயி ரங்கிட் டிங்குப்
பறைதிமிலை திமிர்தமிகு தம்பட் டம்பற்
கரையவுற வினரலற வுந்திச் சந்தித் தெருவூடே
எமதுபொரு ளெனுமருளை யின்றிக் குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட் டுண்கைக்
கிளையமுது வசைதவிர இன்றைக் கன்றைக் கெனநாடா
திடுககடி தெனுமுணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனவகலு நெறிகருதி நெஞ்சத் தஞ்சிப் பகிராதோ
குமுதபதி வகிரமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலசடை பவுரிகொடு தொங்கப் பங்கிற் கொடியாடக்
குலதடினி அசையஇசை பொங்கப் பொங்கக்
கழலதிர டெகுடெகுட டெங்கட் டெங்கத்
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத் தொகுதீதோ
திமிதமென முழவொலிமு ழங்கச் செங்கைத்
தமருகம ததிர்சதியொ டன்பர்க் கின்பத்
திறமுதவு பரதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா
திரளுமணி தரளமுயர் தெங்கிற் றங்கிப்
புரளஎறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரசல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே.

### பதவுரை

குமுதபதி வகிர் = ஆம்பல் மலருக்குப் பதியாகிய சந்திரனது பிறை, அமுது சிந்த சிந்த = தனது அமிர்த கிரணங்களை மிகவும்பொழி

யவும், சரண பரிபுர=திருவடியி லணிந்துள்ள சிலம்பானது, சுருதி கொஞ்ச கொஞ்ச=வேத வசனங்களை இனிமையுடன் ஒலிக்கவும், குடில சடை=வளைவுடைய சடையானது, பவுரி கொடு தொங்க= அந்தத் திருநடனத்திற் கிணங்க அசைந்து (அழகுடன்) தொங்கவும், பங்கில் கொடியாட=ஒரு பக்கத்தில் கொடியனைய சிவகாமசுந்தரியா டவும், குலதடினி அசைய=மேன்மை பொருந்திய கங்காநதி அசைய வும், இசை பொங்க பொங்க=இனிய பாடல்களின் ஒலியும் வாத்திய ஒலியும் மிகுதியாக சப்திக்கவும், கழல் அதிர=பாதத்திலணிந்துள்ள வீரகண்டாமணி அதிர்ந்து ஒலிக்கவும், டெகுடெகுட டெங்கட் டெங் கத் தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத் தொகு தீ தோ திமிதம் என முழவொலி முழங்க=இத்தகைய தாளவரிசையுடன் மேள வொலிகள் முழங்கவும், செம் கை=சிவந்த கரத்திலுள்ள, தம ருகம் அது அதிர் சதியொடு=உடுக்கையானது உதிரும் தாளவொத் துடனும், அன்பர்க்கு இன்ப திறம் உதவும்=(ஆனந்தத்திருநடனம் புரிந்து) அன்பு செய்யும் அடியார்க்கு என்று மழியாத இன்ப நலனை வழங்கும், பரதகுரு=பரத நாடகத்திற்கு ஆசிரியராகிய சிவபெரு மான், வந்திக்கும்=வணங்குகின்ற, சற்குருநாதா=ஞானசிரியரே! திரளு மணிதரளம்=உருட்சியாகத் திரளும் முத்து மணிகள், உயர் தெங்கில் தங்கி புரள=உயர்ந்து வளர்ந்துள்ள தென்னை மரங்களின் மீது தங்கிப் புரளுமாறு, எறி திரை=அம்முத்துக்களை வீசி எறிகின்ற அலைகளையுடையதும், மகர சங்க=மகர மீன்களின் கூட்டத்தையுடை யதும், துங்க=தூய்மையுடையதும், திமிர=இருள்போல் கருநிறத்தை யுடையதும் ஆகிய, சலநிதி தழுவு=சமுத்திரமணைந்துள்ள, செந்தில் கந்த=செந்திலம் பதியில் வாழுகின்ற கந்தப் பெருமானே, பெரு மாளே=பெருமையின் மிக்கவரே! அமுது உததிவிடம் உமிழு=பாற் கடலிற்றோன்றிய ஆலகாலவிடத்தைக் கக்கும்,செம் கண்=சிவந்த கண் களையும். திங்கள் பகவின் ஒளிர்=சந்திரனது பிளவைப் (பிறை)போற் பிரகாசிக்கின்ற, வெளிறு எயிறு=வெண்மையான பற்களையும், துஞ் சல் குஞ்சி தலையும் உடையவன்=சுருளுகின்ற தன்மையுடைய மயிர்க் குடுமியோடு கூடிய தலையையும் உடையவனாகிய, அரவ தண்ட= பேரொலியுடன் வந்து உயிர்களை காலாந்தரத்தில் தண்டிக்கும்,சண்ட சமன் ஓலை அது வருகும் அளவில்=வேகத்தையுடைய கூற்றுவனது ஓலையானது வருகின்ற காலத்தில், உயிர் அங்கிட்டு=ஆவி இயமனுல கிற் செல்ல, இங்கு=உடலிருக்கும் இவ்விடத்திலே, பறை=பறை வாத்தியங்களும், திமிலை=பம்பையும், திமிர்தமிகு தம்பட்டம்=ஒலி மிகுந்த தம்பட்டமென்கிற வாத்தியமும், பல் கரைய=பலவிதமாக ஒலிக்கவும், உறவினர் அலற=உறவின் முறையோர் துன்புற்றுக் கதறி அழவும், எமது பொருள் எனும் மருளை இன்றி=எம்முடைய பொருள் என்னும் மயக்கமின்றி, குன்றி பிளவு அளவு=குன்றி மணி

யிற் பாதியாகிலும், தினையளவு = தினையரிசி யளவாகிலும், பங்கிட்டு உண்கைக்கு இளைய ஏழைகளுக்குப் பங்கிட்டுத்தந்து உண்ணவேண்டிய அறவழியில் நின்றும் இளைத்து, முது வசை தவிர = லோபி என்ற பழமையான வசைச் சொல் நீங்குமாறு, இன்றைக்கு அன்றைக்கு என நாடாது = இன்றைக்கு அறம் புரிவது நாளைக்குப் புரிவது என்று எண்ணாது, இடுககடிது எனும் = விரைந்து வறிஞர்க்குப் பிச்சை யிடு என்று (அறிஞர்) உரைக்கும் உரைகளால் ஏற்படும், உணர்வுபொன்றிக் கொண்டிட்டு = அறிவு அழிந்துபோய், உந்தி சந்தி தெருவூடே = (பிணத்தை) எடுத்துக்கொண்டு பல தெருக்கூடும் சந்திகளின் வழியாக, டுடுடுடு = என அகலும் = டுடுடுடுடு என்ற பறை ஒலியுடன் கொண்டுபோகின்ற, நெறி கருதி = மார்க்கத்தை நினைத்து, நெஞ்சத்து அஞ்சி = மனத்தில் இவ்வாறு நாமும் ஒரு நாளைக்குச் செல்ல வேண்டிவரும் என்று பயந்து, பகிராதோ = ஏழைகளுக்கு என் வருவாயில் பங்கிட்டு தருமம் புரியமாட்டேனோ ?

## பொழிப்புரை

குமுத மலருக்குப் பதியாகிய சந்திரனது பிறை தனது அமிர்த கிரணங்களை மிகவும் பொழியவும், திருவடியிலணிந்துள்ள சிலம்பானது வேத வொலியைச் செய்யவும், வளைவுடைய சடை அத் திருநடனத்திற்கிணங்க அசைந்து தொங்கவும், ஒரு பக்கத்தில் கொடியிடையுடை சிவகாமசுந்தரி ஆடவும், மேன்மை பொருந்திய கங்கா நதி அசையவும், பாடல்கள் வாத்தியங்களின் இனிய ஒலி மிகுதியாகப் பொங்கவும், பாத கமலத்திலுள்ள வீரகண்டாமணி அதிர்ந்து ஒலிக்கவும், டெகு டெகுட டெங்கட் டெங்க தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத் தொகுதீதோ திமிதம் என்று முழவுகள் முழங்கவும், சிவந்த கரத்திலுள்ள உடுக்கையின் தாளவொத்துடனும், ஆநந்த நிருத்தம் புரிந்து அன்பர்களுக்கு என்று மகலாத இன்ப வீட்டை வழங்கும் பரத நாடகத்திற்கு ஆசிரியராகிய சிவபெருமான் சிஷ்யபாவ மூர்த்தியாக இருந்து வணங்கி வழிபாடு செய்யும் ஞானசிரியரே ! உருட்சியாகத் திரளும் முத்து மணிகள் உயர்ந்த தென்னைமரத்தில் தங்கிப் புரளுமாறு வீசி எறிகின்ற அலைகளையுடையதும், மகர மீன்களின் கூட்டத்தை யுடையதும், பரிசுத்தமானதும், இருள்போற் கருநிறத்தை யுடையதுமாகிய சமுத்திர மணந்துள்ள திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள கந்தமூர்த்தியே ! பெருமையிற் சிறந்தவரே ! பாற்கடலில் தோன்றிய ஆலகாலவிடத்தைக் கக்கும் (கோபத்தினால்) சிவந்த கண்களையும், பிறைச் சந்திரனைப் போல் ஒளி செய்யும் வெண்ணிறமுடைய பற்களையும், சுருண்டுள்ள மயிர்க் குடுமியுடன் கூடிய தலையையும் உடையவனும், பேரொலியுடன் வந்து உயிர்களைக் காலாந்தரத்தில் வினைக்கேற்பத் தண்டிப்பவனும் வேகமுடையவனுமாகிய இயமனது ஒலை வரு

கின்ற காலத்தில் உயிர் இயமலோகஞ் செல்ல, உடல் மட்டு முள்ள இவ்விடத்தில் பறை, பம்பை, ஒலியுடைய தம்பட்டம் முதலிய பலவிதமான வாத்தியங்கள் ஒலிக்கவும், உறவினர் ஓவென்று கதறியழவும், எமது பொருள் என்ற மயக்கமின்றி, குன்றிமணியில் பாதியாகிலும் தினையரிசியளவாகிலும் ஏழை களுக்குப் பகிர்ந்து உண்ணுவதற்கு இளைத்து, லோபி என்ற பழமையான வசைமொழி நீங்குமாறு இன்று அறஞ் செய் வோம், நாளை செய்வோம் என எண்ணாது விரைந்து தருமஞ் செய் என்று அறிஞர் அறிவுரைகளால் ஏற்படுகின்ற அறிவு அழிந்து, பிணத்தை எடுத்துக்கொண்டு தெருக்கள் கூடுகின்ற சந்திவழியாக டுடுடுடு என்ற பறை யொலியுடன் வீணே போகின்ற மார்க்கத்தை நினைந்து நினைந்து, இவ்வாறு வறிதே ஒருநாள் அழிவு வருவது நிச்சயமென்று பயந்து பொருள் உள்ள போதே சிறிதாவது பகிர்ந்தளிக்க மாட்டேனோ?

## விரிவுரை

**அழுதுதழி விடமுமிழு செங்கண் :—**

கூற்றுவனுடைய கண்கள் மிகவும் பயங்கரத்தை விளை விக்குமாறு கொடிய விடத்திற்கு நிகரான நெருப்புக்களைப் பொழியும். கூற்றுவனுக்கு இரண்டு உருவம் உள; ஒன்று புண்ணிய சீலர்களுக்கு, அருள்மேனி, ஒன்று பாவிகளுக்கு அச்சத்தைத் தரும் கோர வடிவு இவ்விரண்டில் பாவமுடை யோர்க்கு மிகவும கோர வடிவுடன் தோன்றும் போது அக் கண்களில் அனல் சொரியும்.

"எரிமுண்டதென்ன
விழித்துப்புகையெழப் பொங்கு வெங்கூற்றன்"
—அலங்காரம். (2)

**தண்டம் :—**

அறப்பால் மூன்றனுள் ஒன்று; அஃது ஒழுக்கத்தினும் வழக்கத்தினுந் திறம்பினோரை அவற்றின் நெறியே நிற்கு மாறு இறைவன் தண்டித்தலாம். இத்தொழிலை இயமன் மேற்கொண்டிருக்கிறான். அறநெறி வழுவி மறநெறி சென் றோர்க்குக் கூற்றுவன் தனது தூதுவர்களால் பற்பல துன்பங் களை விளைவிப்பன்.

**சமன் ஓலை :—**

ஆன்ம லாபத்தை யடைதற் பொருட்டுத் தோன்றிய நாம் ஆவி யீடேறும் வழியைக் கருதாமல், வறிதே வாணாளை வீணாக்கிக் கொண்டிருந்தால் கூற்றுவன் ஓலையை எடுத்துக் கொண்டு வந்து உயிரைக் கொண்டு போகின்றான். அவ் வோலை வருவதற்கு முன் இறைவன் திருவருளைப் பெறுவ

தற்கு மிகமிக விரைந்து முயலுதல் வேண்டும். இயமன் ஓலை காட்டிக் கொண்டு போவான் என்பதை அடியில் வருந் திருவாக்காலுணர்க.

"காலமாச்சு வருகென ஓலைகாட்டி யமபடர்
காவலாக்கி யுயிரது கொடுபோமுன்
காமவாழ்க்கை பொடிபட ஞானம்வாய்த்த கழலிணை
காதலாற் கருதுமுணர் தருவாயே"
—(ஆலமேற்ற) திருப்புகழ்.

**பறை திமிலை......கரைய :—**

ஆவி போன உடம்பை பற்பல பறை வாத்தியங்களுடன் ஈமதேசங் கொண்டுபோய்ச் சுடுவர். இப்பறை வாத்தியங்களை ஒருவர் இறந்தவுடன் மூன்று முறை முழக்குவர்.

சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யெறிப பறையினை—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுண் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து. —நாலடியார்.

இவ்வளவு அற்ப காலத்திலழியும் நிலையற்ற வாழ்வைப் பெரிதென்றெண்ணி மதிமயங்கி, இறந்து படுவோரைக் கண்டும் தெளிவடையாது, மணம் புரிந்து கொண்டு சுகம் உண்டு உண்டு உண்டு என்னும் சிற்றறிவுடையார்க்கு அறிவைப் புகட்டுவது போல் ஒலிக்கிறது பறை.

கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண் டென்னு முணர்வினாற் சாற்றுமே
டொண்டொண்டொண் டென்னும் பறை. —நாலடியார்.

**எமது பொருளெனு மருளை யின்றி :—**

செல்வமானது நீர்மேற் குமிழிபோல் நிலையற்றதாதலால் அதனை உள்ளபோதே அறவழியிற் செலவழித்தல் வேண்டும். செல்வம் வந்தபோது அதன் நிலையாமையை யுணர்தல் வேண்டும். அருமைப் பத்தினியானவள் அருகிலிருந்து அறுசுவை யுண்டிகளை ஊட்ட, அதனை மறு கவளம் வேண்டாமென்னும் பெருஞ் செல்வராயிருந்தோரும் ஏழைகளாய் ஓரிடத்தில் போய் கூழை யிரப்பர் என்று சொன்னால் செல்வம் நிலையுடையதென்று எண்ணற்பாலதோ? அநேக செல்வர்கள் தாமும் உண்ணாது பிறருக்கும் உதவி செய்யாது பணங் காக்கும் பூதம் போல வறிதே யழிவர்; என்னே பேதைமை? "நம்மைக் காட்டிலும் அறிவும் ஆற்றலும் உடையவர்களெல்

லாம் ஏழையா யிருக்கிறார்களே? நமக்கு மட்டும் செல்வம் உண்டானதற்குக் காரணமென்ன? "கொடுத்து வைத்த புண்ணியவான்" என்கிறார்களே? எப்போது கொடுத்து வைத்தோம்? "முந்தின பிறவியில் ஏழைகளுக்குக் கொடுத்து வைத்தோம்; அதன் புண்ணியத்தால் இப்போது பெருஞ் செல்வராய் இருக்கிறோம்; இப்போதும் கொடுத்து வைத்தால்தானே இனி வரும் பிறவியிலும் சுகமே வாழ்வோம்; நாம் எந்தப் பொருளை ஏழைக்குத் தருகிறோமோ அதுதான் நம்முடைய பொருள், எவ்வளவு பொருள் அறவழியில் செலவழிக்கிறோமோ அவ்வளவும் மறுமைக்கு வந்து துணை செய்யும்" என்று ஒவ்வொருவரும் தனியே இருந்து சிறிது நேரம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பிறக்கும் பொழுது கொண்டு வந்ததில்லை, இறக்கும் பொழுது கொண்டு போகிறதுமில்லை. எனவே இடையில் வந்த பொருள்; அது சிவபெருமானால் கொடுக்கப்பட்டது; அதனை அரன்பணியிலும் அடியார் பணியிலும் செலவழித்தல் வேண்டும். அங்ஙனஞ் செலவழிக்காது காவல் புரிந்து கொண்டிருந்தால் செல்வம் விரைவிலழியும். தேனீயானது மிகவும் துன்புற்றுஅலைந்துசிறிதுசிறிதாகத்தேனைச் சேர்த்து வைத்துத் தானும் உண்ணாமல் பிறருக்கும் வழங்காமல் காத்துக் கொண்டிருக்கிறது; பின்னர் என்ன ஆகிறது? பிறரால் அத்தேன் கவரப்பட்டு, தேனீ வீணே வருந்தி யழிகிறது. அது போல் அறஞ் செய்யாதான் செல்வமழியு மென்றுணர்க.

உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கெடாஅது
வைத்தீட்டினா ரிழப்பர் வான்றோய் மலைநாட
உய்த்தீட்டுந் தேனீக் கரி.
—நாலடியார்.

"சுழித்தோடு மாற்றிற் பெருக்கானது செல்வம்"
—அலங்காரம். (36)

"தேரிற் கரியிற் பரியிற் றிரிபவர் செல்வ மெல்லாம்
நீரிற் பொறியென் றறியாத பாவி நெடு நெஞ்சமே"
—அலங்காரம். (49)

"நில்லாது செல்வம் பார்க்குமிடத் தந்த மின்போலு மென்பர்"
—அலங்காரம். (66)

குன்றிப்பிளவளவு தினையளவு பங்கிட்டு :—

பெருந் தருமங்களைப் புரிவதற்குப் போதிய செல்வமில்லாதோரும் தமது தகுதிக்குத் தக்கவாறு சிறிதாவது அறம் புரிதல் வேண்டும். இதனை வலியுறுத்துதற்காகவே "இயல்வது கரவேல்" என்ற அமுத மொழி யெழுந்தது. ஒவ்வொரு நாளும்

நமது வருவாயில் ஒரு சிறிதாவது அறத்திற் செலவழிந்ததா என்று இரவிற் படுக்கும் போது சிந்தித்தல் வேண்டும்.

ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும் வாயெல்லாம் செயல். —திருக்குறள்.

"தவிடி ளுர்ப்பத மெனினு மேற்பவர்
தாழா தீ யேன்" —(கவடுகோத்தெழு) திருப்புகழ்.

"வறிஞர்க்கென்றும் நொய்யிற்பிள வளவேனும் பகிர்மின்கள்"
—அலங்காரம். (18)

"சிறுமிக்குமர நிகர்வீர் பகிரச் சிதையுபிர்த்துச்
சிறுமிக்குமர சரணமென்னீ ருய்விர்" —கந்தர் அந்தாதி. (97)

இதன் பொருள் :— சிறு-சிறிதான, உமிக்கும்-குற்றுமியையாயினும், பகிர மர நிகர்வீர்-பிறர்க்கிட்டுண்ண மனங்கூடாமல் மரம் போன்றிருப்பவரே! சிதை-அழிந்து போவதும், உயிர்-பிராணனுக்கு, துச்சில்-ஒதுக்கிடமுமாகிய இவ்வுடலின் கண், துமி-ஒரு தும்மலுண்டாகுங் காலையினும், குமர-குமரனே. சரணம்-உனக்கடைக்கலம், என்னீர்-என்று சொல்வீர், உய்விர்-பிழைப்பீர்கள்.

இன்றைக்கு அன்றைக்கு என நாடாது இடுக :—

அறிஞர் அறமொழியைக் கேட்பதனாலும், அறிவு நூல்களைப் படிப்பதாலும், அறஞ்செய்ய வேண்டுமென்ற எண்ணம் உண்டாகும். அங்ஙனம் உண்டாயின் உடனே அறத்தைச் செய்ய வேண்டும். இன்று புரிவோம், நாளை புரிவோம் என்றிருத்தல் கூடாது. ஏனெனில் மறுகணம் இருப்போம் என்பது என்ன நிச்சயம். யாம் இளையோம், முதுமையில் அறம் புரிவோமென்னில் இளமையில் அழிதலுங் கண் கூடு. முற்றிய கனி யுதிர்வதோடு முதிராத பிஞ்சுகளும் உதிர்ந்து வீழ்வதைக் காண்கிறோமல்லவா? ஆதலால் யாக்கை நிலையாமையை யுணர்ந்து, அறம்புரிய வேண்டுமென்ற எண்ணம் உண்டான போதே விரைந்து தருமஞ்செய் என்றனர்.

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. —திருக்குறள்.

இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் —றெண்ணி
யொருவுமின் தீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா ரறம்.

மற் றறிவா நல்வினை யாமிளையம் மென்னாது
கைத்துண்டாம் போதே கரவா தறஞ்செய்மின்
முற் றியிருந்த கனியொழியத் தீ வளியால்
நற்கா யுதிர்தலு முண்டு. —நாலடியார்.

டுடுடுடு......எனவகலு நெறிகருதி செஞ்சத்தஞ்சிப் பகிராதோ :—

ஆன்றோர் அறமொழிகள், அறிவு நூல்கள் இவைகளைக் கொண்டு யாக்கை, இளமை, செல்வ நிலையாமைகளை யுணர வில்லையெனின், தினந்தோறும் இறந்தவரைப் பறையொலி யுடன் கொண்டு போவதைக் கண்டாவது நெஞ்சம் அஞ்ச வேண்டாமோ ? இறந்தோரை அலங்கரித்து அழுகையொலி யுடன் ஈமதேசத்திற்குக் கொண்டு போகப் பார்க்கிறோமல் லவா ? அதைக் கண்டும் ஆசையில் அழுந்தலாமா ? நாம் நெடு நாளைக்கிருப்போமென்று எண்ணுவது எவ்வளவு மதியீனம் ? சற்று சிந்தியுங்கள். நன்கு எண்ணிப் பார்த்து மனம் பதைக்க வேண்டும்; "அந்தோ ! இதுகாறும் அறஞ் செய்யா தொழிந் தோமே ? நாமும் இப்படி ஒரு நாள் இறப்போமல்லவா ? இத் துணைச் செல்வத்தையும் விட்டுப் போய்விடுவோமே ? நமக்கு இப்போதிருக்கிற பெயரையொழித்து பிணம் என்ற பெயரிட் டுப் பறையொலியுடன் கொண்டுபோய்த் தீக்கிரையாக்குவரே? அதற்குள் விரைந்து தருமஞ் செய்து இகபர சௌபாக்கியத் தைப் பெறவேண்டுமென்று" நினைத்து நினைத்து நெஞ்சம் அஞ்சிப் பகிர்ந்தளிக்க வேண்டும்.

குமுதபதி......பரதகுரு :—

சிவபெருமானது திரு நடனத்தின் பெருமை : இதன் வர லாற்றைத் திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 93ஆம் பக்கத் தில் காண்க.

திரளுமணிதரள......எறிதிரை :—

செந்திலம்பதி கடற்கரையில் கண்கவருங் கவினுடைய தாகத் திகழ்வதால் ஆங்குள்ள தென்னை மரங்கள் மீது தங்கிப் புரளுமாறு கடலலைகள் மிக உயர்ந்தெழுந்து முத்துக்களைக் கொழிக்கின்றன.

"ஒருகோடி முத்தம்
தெள்ளிக் கொழிக்குங்கடற் செந்தில் மேவிய சேவகனே"
—அலங்காரம். (106)

கருத்துரை

ஆனந்தக் கூத்தாடும் அரனார் வந்திக்கும் குருநாதரே! செந்தில் மேவிய கந்தப் பெருமானே ! கூற்றுவன் ஓலை வர,

அடியேனுயிர் எமபுரமேக இங்கு பறை முதலிய ஒலிகளுடன் எனதுடலை ஈமதேயத்திற்குக் கொண்டு போகும் மரணயாத்திரையை எண்ணிப் பயந்து ஏழைகளுக்குத் தருமம் செய்ய மாட்டேனே?

## 62

கொடியனைய இடைதுவள அங்கமும் பொங்கஅங்
குமுதஅமு திதழ்பருகி யின்புறுஞ் சங்கையன்
குலவியணை முகிலளக முஞ்சரிந் தன்பினின்
பண்புலாவக்

கொடியவிரல் நகநுதியில் புண்படுஞ் சஞ்சலன்
குனகியவ ருடனினிது சம்ப்ரமங் கொண்டுளங்
குரலழிய அவசமுறு குங்குணன் கொங்கவிழ்ந்
தொன்றுபாய்மேல்

விடமனைய விழிமகளிர் கொங்கையின் பன்புறும்
வினையனியல் பரவுமுயிர் வெந்தழிந் தங்கமும்
மிதமொழிய அறிவில்நெறி பண்பிலன் டுஞ்சகன்
செஞ்செநீடும்

வெகுகனக வொளிகுலவும் அந்தமன் செந்திலென்
றவிழவுள முருகிவரு மன்பிலன் தந்திலன்
விரவுமிரு சிறுகமல பங்கயந் தந்துகந் தன்புருதோ

படமிலகு மரவினுட லங்கமும் பங்கிடந்
துதறுமொரு கலபியிசை வந்தெழுந் தண்டர்தம்
பகையசுர ரனைவருடல் சந்துசந் துங்கதம்
சிந்தும்வேலா

படியவரு மிமையவரும் நின்றிறைஞ் செண்குணன்
பழையஇறை யுருவமிலி யன்பர்பங் கன்பெரும்
பருவரல்செய் புரமெரிய விண்டிடுஞ் செங்கணன்
கங்கைமான்வாழ்

சடிலமிசை யழகுபுனை கொன்றையும் பண்புறுந்
தருணமதி யினகுறைசெய் துண்டமுஞ்
செங்கையொண்

சகலபுவ னமுமொழிக தங்குறங் கங்கியும்
பொங்கிநீடும்

சடமருவு விடையரவர் துங்கஅம் பங்கினின்
றுலகுதரு கவுரியுமை கொங்கைதந் தன்புறுந்
தமிழ்விரக வுயர்பரம சங்கரன் கும்பிடுந்
தம்பிரானே.

## பதவுரை

படம் இலகும் அரவின் உடல் அங்கம்=படம் விளங்கப் பெற்ற பாம்பினது உடலின் அவயவங்கள், பங்கு இடந்து=கூறுபடுமாறு பிளந்து, உதறும்=காலாலும் மூக்காலும் எடுத்து உதறுகின்ற, ஒரு கலபி மிசை வந்து எழுந்து=ஒப்பற்ற மயிலின்மீது எழுந்தருளி வந்து, அண்டர்தம் பகை=தேவர்களது பகைவர்களாகிய, அசுரர் அனைவர் உடல்=இராக்கதர்கள் எல்லோருடைய உடல்களும், சந்து சந்தும் கதம்=கை கால் இடை முதலிய ஒவ்வொரு சந்துகளும் வேறு பட்டழிய, சிந்தும் வேலா=சிதறச்செய்த வேற்படையை யுடைய வரே! படியவரும்=மண்ணுலகத்தார்களும், இமையவரும்=தேவர்களும், நின்று இறைஞ்சும்=தமது சந்நிதியில் பக்தியுடன் நின்று வணங்குகின்ற, எண்குணன்=எட்டு அருட் குணங்களையுடையவரும், பழைய இறை=முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம் பொருளாக விளங்குந் தனிப்பெருந்தலைவரும், உருவம் இலி=தனக்கென ஓர் உருவமும் இல்லாதவரும், அன்பர் பங்கன்=தம்முடைய மெய்யன்பர்களுக்கு அருந்துணையாயிருப்பவரும், பெரும் பருவரல் செய்=உலகங்களுக்கு மிகவுந் துன்பத்தைச் செய்த, புரம் எரிய முப்புரங்களும் வெந்து நீறுகுமாறு, விண்டிடுஞ் செம் கணன்=அக்கினியை வெளியாக்கிய சிவந்த அக்கினி நேத்திரத்தையுடையவரும், கங்கை மான் வாழ்=மானுக்கு நிகரான கங்காதேவி வாழுகின்ற,சடிலமிசை=சடைமுடியின்மீது, அழகு புனை கொன்றையும்=அழகு பொருந்திய கொன்றைமலரும், பண்புஉறும்=சிறப்பு பொருந்திய, தருண மதியின குறைசெய் துண்டமும்=இளஞ் சந்திரனது குறைவு பெற்ற துண்டமாகிய பிறையும், ஒண் செங்கை=ஒளிபெற்ற சிவந்த கரத்தில், சகல புவனமும் ஒழிகத=எல்லா உலகங்களையும் நீருக்கும் வலியுடன், அங்கு உறங்கு அங்கியும்=அக் கரமலரில் தனது வலியடங்கியிருக்கும் அக்கினியும், பொங்கி நீடும்=பொலிவுபெற நிலைத்துள்ள, சடம் மருவு விடையர் அவர்=திருமேனியையுடைய இடப வாகனத்தையும் உடையவருமாகிய சிவபெருமானது, துங்க அம் பங்கில் நின்று= தூய்மை பொருந்திய அழகிய இடது பாகத்தில் நிலை பெற்று இருந்து, உலகு தரு=உலகங்களையெல்லாம் ஈன்றருளியவரும், கவுரி=பொன் நிறத்தையுடையவரும், உமை=உமாதேவியுமாகிய மலைமங்கை, கொங்கை தந்து அன்பு உறும்=திருமுலைப்பால் தந்து அன்பு கொள்

ளும், தமிழ் விரக=செந்தமிழிற் சமர்த்தரே!, உயர் பரம=உயர்ந்த பெரிய பொருளே!, சங்கரன் கும்பிடும்=சிவபெருமான் (பிரணவோபதேசம் பெறும்பொருட்டு) வணங்குகின்ற, தம்பிரானே=எப்பொருட்கு மிறைவரே!, கொடி அனைய இடை துவள=கொடியைப் போல் மெலிந்துள்ள இடையானது அசைந்து வாடவும், அங்கமும் பொங்க=உயிரின்புறுவதுடன் சரீரமும் புளகமடையவும், அம் குமுத இதழ் அமுதுபருகி=அழகிய குமுத மலரையொத்த இதழிற் பெருகும் அமிர்தத்தைப் பருகி, இன்பு உறும் சங்கையன்=இன்பமடையும் வழக்க முடையவன், முகில் அளகமுஞ் சரிந்து=மேகத்தையொத்த கருங்கூந்தலும் (துகிலும்) சரிந்து, குலவி அணை=கொண்டாடி மருவுதலால் உண்டாகின்ற, அன்பினின் பண்புஉலாவ=அன்பின் குணம் மிகுதியாக, கொடிய விரல் நகநுதியில்=கொடுந் தொழிலையுடைய விலைமகளிரது நகநுனியினால், புண்படுஞ் சஞ்சலன்=புண்படுகின்ற துன்பத்தையுடையவன், குனகி அவருடன்=சிணுங்கிப் பேசும் அம் மாதருடன், இனிது சம்ப்ரமங்கொண்டு=இனிமையாகச் சந்தோஷத்தையடைந்து, உளம்குரல் அழிய=உள்ளம் மயக்கத்தையும் குரல் தழுதழுத்தலையும் அடைந்து அழிய, அவசம் உறு=மயக்கத்தையடையும், குங்குணன்=குறுகிய குணத்தையுடையவன், கொங்கு அவிழ்ந்து ஒன்று பாய்மேல்=மலர்களின் மகரந்தப் பொடி சிந்திப் பொருந்தியுள்ள பாய்மீது, விடம் அனைய=கொடிய ஆலகால விடத்திற்கு நிகரான, விழிமகளிர்=கண்களையுடைய பொதுமகளிரது, கொங்கை இன்பு அன்பு உறும்=தனங்களின் இன்பத்தையடைய அன்பு கொள்ளும், வினையன்=தீவினையையுடையவன், இயல்பரவும் உயிர் அங்கமும் வெந்து அழிந்து=நற்குணம் மிகுதற்குத் தகுதியுடைய உயிரும் உடலும் காமாக்கினியால் வெந்து தன்னிலையினின்றும் அழிந்து, மிதம் ஒழிய=அளவு கெட, அறிவு இல் நெறி பண்பில்=அறிவு இல்லாத தீய வழியின் விதத்தில். அண்டும் சகன்=பொருந்தியுள்ள உலக மாயையுடையவன், செம் செய்நீடும்=செம்மையான வயல்கள் நிலைத்துள்ளதும், வெகு கனக ஒளிகுலவும் அந்தமன்=மிகுந்த பொற்பிரகாசம் வீசும் அழகு நிலைபெற்றதுமான, செந்தில் என்று=திருச்செந்தில் என்று கூறி, அவிழ உளம் உருகிவரும் அன்பு இலன்=கல்போன்ற தன்மை நீங்கி நெகிழ்ந்து உள்ளம் உருகி அச் செந்திமா நகரத்தைத் தெரிசிக்க வருகின்ற அன்பில்லாதவன், தந்து இலன்=பிறருக்குக் கொடுக்கும் இயல்பில்லாதவன், (இத்தகைய அடியேனுக்கு), விரவும் இரு சிறு கமல பங்கயம்=சிவஞானங் கலந்துள்ள தாமரையனைய இரண்டு சிறிய திருவடிகளையும், உகந்து தந்து அன்பு உறாதோ=அடியேனுக்கு விரும்பிக்கொடுத்து தேவரீரது திருவுள்ளம் அன்பு செய்யாதோ?

## பொழிப்புரை

பணுமகுடத்துடன் விளங்கும் பாம்பினது உடலின் அங்கங்கள் கூறுபட்டுப் பிளக்குமாறு (பாதத்தாலும் மூக்காலும் எடுத்து) உதறுகின்ற ஒப்பற்ற மயிலின் மிசை எழுந்தருளி வந்து, தேவர்களது பகைவர்களாகிய அசுரர்கள் அனைவருடைய உடல்களும் கை கால் கழுத்து இடை முதலிய சந்துகளும் பூட்டுவிட்டுச் சிந்தும்படிச் சிதறச் செய்த வேற்படையை யுடையவரே! மண்ணுலகத்தவர்களும் விண்ணுலகத்தவர்களும் சந்நிதியில் நின்று வணங்கும் எட்டு அருட்குணங்களை யுடையவரும், அநாதி பரம்பொருளும், எப்பொருட்கு மிறைவரும், தனக்கென ஓர் உருவமுமில்லாதவரும், அன்பர்களிடம் துணையாகப் பொருந்தியுள்ளவரும், உலகிற்குப் பெருந்துன்பத்தைச் செய்த முப்புரங்களும் எரியுமாறு தீப்பொறியைச் சிந்திய சிவந்த அக்கினி நேத்திரத்தையுடையவரும், மான்போன்ற பார்வையுடைய கங்காதேவி வாழுகின்ற சடா முடியின்மீது அழகு பொருந்திய கொன்றை மலரும் குணத்தாலுயர்ந்த இளம்பிறைச் சந்திரனும், ஒளிபெற்ற சிவந்த கரத்திலே சகல லோகங்களையும் நீறுக்கும் வலியுடன் அமைதியோடிருக்கின்ற அக்னியும், பொலிவுடன் நிலைபெற்றுள்ள மேனியையுடைய இடபதேவரும் உடைய சிவபெருமானது பரிசுத்தம் பொருந்திய அழகிய வாமபாகத்தில் இருந்துகொண்டு எல்லா வுலகங்களையும் ஈன்றருளியவரும், பொன்னிறத்தை யுடையவருமாகிய உமாதேவியார் திருமுலைப்பால் உண்டு அன்புகொள்ளும் தமிழறிவுடையவரே! உயர்ந்த பரம்பொருளே! பிரணவோபதேசம் பெறும்பொருட்டு சிவபெருமான் வணங்குகின்ற தனிப்பெருந் தலைவரே! கொடியையொத்த இடை யசைந்து வாடவும், இன்புறுவதுடன் உடல் புளகிக்கவும், அழகிய குமுத மலரையொத்த இதழிற் பெருகும் அமிர்தத்தைப் பருகி இன்பத்தையடையும் வழக்கத்தையுடையவனும், மேகத்தையொத்த கூந்தலும் துகிலும் சரியக் குலாவியணைகின்றதால் அன்பின் குணம் மிகுதியாக விலைமகளிரது கொடிய விரல் நகநுனியில் புண்படுகின்ற துன்பத்தை யுடையவனும், சிணுங்கிப் பேசுகின்ற அம் மகளிருடன் இனிமையாக மகிழ்ந்துகொண்டு உள்ளமும் குரலும் மாறுபட்டழிய மயக்கத்தை யடையும் குறுகிய குணத்தை யுடையவனும், மலர்களின் மகரந்தப்பொடி சிந்திப் பொருந்தியுள்ள பாயலின் மிசை கொடிய விடத்திற்கு நிகரான விழிகளையுடைய மாதர்களின் தனபாரங்களின் இன்பத்தில் அன்புறும் தீவினையை யுடையவனும், நற்குணமடைதற்கு யோக்கியமான உயிரும் உடலும் வெந்தழிந்து தத்தம் நிலைகெட அறிவற்ற வழியிற் சேர்ந்துள்ள உலக மாயையுடையவனும், செம்மையான வயல்கள் நிலைத்துள்ளதும் மிகுந்த பொன்னொளியை வீசுவதும் அழகு நிலைபெற்றதுமாகிய திருச்செங்

தூர் என்று கூறி நெஞ்சம் நெகிழ்ந்து உருகி அத் திருத்தலத்தைத் தெரிசிக்கவரும் அன்பில்லாதவனும், தருமஞ்செய்யாதவனுமாகிய அடியேனுக்கு, சிவஞானமயமாகிய தேவரீரது இளமையாகிய பாத தாமரைகள் இரண்டையும் விரும்பிக் கொடுத்து தேவரீரது திருவுளம் அன்பு செய்யாதோ ?

## விரிவுரை

**"கொடியனை......பண்பிலண்டுஞ்சகன்"**

இம் மூன்றடிகளும் மதன நூலின் செயல்களை யுரைக்கின்றன. செஞ்செய்ய என்பது கடை குறைந்து செஞ்செயென்று யிற்று.

**"செந்திலென்• றவிழவுள முருகிவரு மன்பிலன்"—**

ஆறுமுகப்பெருமான் அடியார்பொருட்டு திருக்கோயில் கொண்டு எழுந்தருளிய திருத்தலங்களுள் திருச்செந்தூர் தலையாக விளங்குவது. கடற்கரையில் காட்சிக்கினியதாய்க் காண்பார் கண்களையுங் கருத்தையும் ஒருங்கே கவருங் கவினுடையது. குமாரக் கடவுள் சூராதி யவுணரைக் கொன்றருளுவான் இலக்கத்தொன்பான் வீரர்களுடன் வந்து தங்கி, வீரவாகுதேவரைத் தூது அனுப்பி, தேவர் குழாம் சூழ வீற்றிருந்தருளிய மேன்மையுடையது. பாண்டியன் மகளாகிய அங்க சுந்தரிக்குக் குதிரை முகத்தை மாற்றி மனித முகத்தை நல்கிய மகிமையுடையது. குமரகுருபரருடைய ஊமைத் தன்மையைத் தவிர்த்து தெய்வவாக்கை வழங்கி அவராற் கந்தர் கலிவெண்பாவால் துதிக்கப்பெற்றது.

இத்தகைய பற்பல அற்புதங்களை யுடைய இத் திருத்தலத்தின் திருநாமத்தைக் கூறியவுடனே அத் தலத்தின் பெருமைகளும், அத் தலத்தில் எழுந்தருளிய ஆண்டவனது அருட் குணங்களும் நினைவுக்கு வர, அதனால் மனங்குழைந்து உருக வேண்டும். நெஞ்சக்கனகல்லு நெகிழ்ந்துருகி வழிபடுவார்க்கே பிறவி நோய் நீங்கி என்று மழியா இன்பம் எளிதிற் கிடைக்கும்.

"உருகுமடியவர் இருவினை யிருள்பொரும்
உதய தினகர இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே"
—(பகிர நினைவொரு) திருப்புகழ்.

"பஞ்சாயுதக்கடவுள் மருகன்மறவாதவர் நினைப்பவைமுடிக்குமவன்
உருகுமடியா ரிருவினைத்தொகை யறுக்குமவன்"
—திருவகுப்பு. (6)

**தந்திலன் :—**

சாத்திர ஆராய்ச்சியில்லாதவன் என்று பொருள் கூறுவாருமுளர். தந்திலன் :— தந்து - நூல். அறிவை விசாலப்படுத்தி அஞ்ஞானத்தை நீக்குவது அறிவு நூல்களேயாம். அவ்வறிவு நூல்களாவன : சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய பதினுன்கு சித்தாந்த சாத்திரங்களும், தேவார திருவாசக திருப்புகழாதி பனிரெண்டு திருமுறைகளேயாம். மனிதனுகத் தோன்றிய ஒவ்வொருவரும் இவற்றை வாங்கி பூசைப்பேடகத்தில் வைத்து மலரிட்டுப் பூசித்து அன்புடன் ஓதுதல்வேண்டும்.

**படமிலகு மரவினுடல்......உதறுமொரு கலபிமிசை :—**

மயில் பாம்பை யெடுத்து இரண்டாகக் கிழித்து உதறுகிறது என்பதன் தத்துவம்; பாம்பு என்பது வினை; மயில் என்பது விந்து; பாம்பு எவ்வாறு ஒருவனை ஓடிவந்து தீண்டுமோ அவ்வாறு வினை அதனைச் செய்தானை எத்தேயத்தும் எக்காலத்தும் எந்நிலையிலும் தொடர்ந்து வந்து தீண்டும். ஆயிரம் பசுக்களின் நடுவில் ஓர் இளங்கன்றை விட்டுவிட்டால் தாய்ப்பசுவை அக் கன்று எவ்வாறு தேடியடையுமோ, அவ்வாறே தொல்லைப் பழவினையும் தன்னைச் செய்த ஒருவனை இறைவன் ஆணையால் வந்து அடையும். மற்ருென்று சூழினும் தான் முந்துறும் பெருவலியுடையது ஊழ்வினை; அது இரு கூருயுளது; நல்வினை தீவினை என. அதனையடக்கியாளும் பெருவலியுடையது விந்து தத்துவம்.

**பகையசுரர்......சிந்தும்வேலா :—**

வேல் என்பது சிவஞானம்; அசுரர் என்பதில், சூரன் - ஆணவம், சிங்கமுகன் - கன்மம், தாரகன் - மாயை; இம் மூவசுரர்களே மும்மலங்கள்; ஏனைய அசுரர்கள் காமம் குரோதம் முதலியவைகளாம். இவைகளை யழிக்க வல்லது சிவஞானம் ஒன்றேயாம். அச் சிவஞானமாகிய வேற்படையையுடையவர் முருகக் கடவுள் ஒருவரேயாம். அதனுலன்ருே அப் பெருமானை "ஞான பண்டித ஸ்வாமீ நமோ நம" என்ருர் நம் பரமாசிரியர்.

"இச்சா ஞான க்ரியா சக்திரூப சக்திதரம் பஜே"
—குமாரதந்திரம்.

**எண்குணன் :—**

சிவபெருமானுக்கு எட்டு அருட்குணங்களுள. அவை யாவன: தன்வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், இயற்கையுணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி

னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பி லின்பமுடைமை.

"தன்வயத்தவன் தூயவுடம்பினன்
தானியற்கை யுணர்வின னுகுதல்
பன்னுமுற்ற வுணர்த லியல்பினன்
பாசநீங்குதல் பேரருளாகுதல்
மன்னுமீறில வாற்றலுடைமையும்
வரம்பி லின்பமுமாகிய வெண்குணம்".

இவற்றை வடநூலார்,

"ஸர்வஜ்ஞதாத்ருப்தி ரநாதிபோத; ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தசக்தி;
அநந்த சக்திஸ்ச நிராமயாத்மா விசுத்ததேஹஸ்சசிவத்வ மேதி"

என்பர்.

**பழைய இறை :—**

சிவபெருமான் ஆதியில்லாத அநாதி பரம்பொருள்; "ஆதிமத்யாந்த விஹீநமேகம் - விபும்" எனத் தெரிவிக்கிறது. பஞ்சருத்ரோபநிஷதங்களில் ஒன்றுய யஜுர்வேத கைவல்யம். இதனைத் தமிழ் வேதம் "ஆதியுமந்தமுமில்லா அரும்பெருஞ்சோதி" என விளக்குகிறது. "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருள்" என்றதையும் "அநாதியாயைந்தொழிற்கும் அப்புறமாயன்றே மநாதிகளுக் கெட்டா வடிவாய்" என்றதையும் உய்த்துணர்க.

**உருவமிலி :—**

தனக்கென ஓர் உருவமில்லாதவர் ஆன்மாக்களுக்காக உருவத்தையடைகின்றனர். உருவமில்லாதமுழுமுதற்கடவுள் ஆன்மகோடிகளை உய்விக்கும் பேரருட் பெருக்கால் ஆன்மாக்கள் எந்த எந்த வகையாகச் சிந்திக்கிறுர்களோ அந்த அந்தஉருவத்தை யடைகின்றனர். "சிந்தாமணிக்கு ஒரு நிறமுமில்லை; அதனருகில் எந்த எந்த நிறப்பொருளுளவோ அந்த அந்த நிறத்தையடைகிறது. அதுபோல் எந்த எந்த ரூபமாகச் சாதகன் நினைக்கின்ருனே அந்த அந்த சமயம் அவனுக்கு அந்த அந்த ரூபத்தைச் சிந்தாமணியைப்போல் சிவபெருமான் அடைகிறுர்" என்னும் பொருள்தரும் பிரபல பிரமாணத்தைக் காண்க.

"ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ"

—மாணிக்கவாசகனுர்.

யேந யேநஹி ரூபேண ஸாதகஸ் ஸம்ஸ்மரேத் ததா
தஸ்ய தந்மயதாம் யாதி சிந்தாமணிரிவேஸ்வர :
—சர்வசுரோத சாரசங்கிரகம்.

"ஆரொருவருள்குவா ருள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்"
—அப்பர் தேவாரம்.

இக் கருத்தை நம் காரைக்காலம்மையார் விளக்குவதைக் காண்க.

நூலறிவுபேசி நுழைவிலா தாந்திரிக
நீல மணிமிடற்ற னீர்மையே—மேலுலகத்
தெக்கோலத் தெவ்வுருவா யெத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத் தவ்வுருவே யாம்.

அன்பர் பங்கன் :—

சிவமூர்த்தி தமது திருவடியை வழிபடும் அன்பர்கட்குத் துணையாக இருந்து அருள்புரிகின்றார் என்பதனை.

"பாண்டியன்முன் சொல்லிவந்த் பாணன் பொருட்டடிமை
வேண்டி விறகெடுத்து விற்றனையே—ஆண்டொருநாள்
வாய்முடியாத் துன்புகொண்ட வந்திக்கோ ராளாகித்
தூய்முடிமேல் மண்ணுஞ் சுமந்தனையே—ஆய்துயர
மாவகஞ்சேர் மாணிக்க வாசகருக்காய் குதிரைச்
சேவகன்போல் வீதிதனிற் சென்றனையே—மாவிசையன்
வில்லடிக்கு நெஞ்சம் விரும்பியதல் லாலொருவன்
கல்லடிக்கு முள்ளங் களித்தனையே—மல்லலுறும்
வில்வக்கிளை யுதிர்த்த வெய்ய முசுக்கலையைச்
செல்வத் துரைமகனாய்ச் செய்தனையே—சொல்லகலின்
நீளுகின்ற நெய்யருந்த நேரெலியை மூவுலகும்
ஆளுகின்ற மன்னவனா யாக்கினையே—கோளகல
வாய்ச்சங்கு நூலிழைத்த வாய்ச்சிலம்பி தன்னையுயர்
கோச்செங்கட் சோழனெனக் கொண்டனையே—ஏச்சறுநல்
ஆறடுத்த வாகீசர்க் காம்பசியைக் கண்டுகட்டுச்
சோறெடுத்துப் பின்னே தொடர்ந்தனையே—கூறுகின்ற
தொன்மைபெறுஞ் சுந்தரர்க்குத் தோழனென்று பெண்பரவை
நன்மனைக்குந் தூது நடந்தனையே"
—திருவருட்பிரகாசவள்ளல்.

மதியினைக்குறைசெய் துண்டமும் :—

சந்திரனைத் தரித்த வரலாற்றைத் திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 9-வது பக்கத்திற் காண்க.

**தமிழ்விரக :—**

முருகப்பெருமான் ஏனைய மொழிகளுக்குப் பொதுக் கடவுளாகவும், தமிழ்மொழிக்குச் சிறப்புக் கடவுளாகவும் விளங்குகின்றனர். மதுரையில் நாற்பத்தொன்பது புலவர்களுடன் தாமுமொருவராயிருந்து தமிழாராய்ந்ததும், அகத்தியருக்குத் தமிழைப் போதித்ததும், நக்கீரருக்கும் அருணகிரிநாதருக்கும் தமிழால் அடியெடுத்துக் கொடுத்ததும், இதனை விளக்கும். "செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே" என்ற திருப்புகழாலுந் தெளிக. திருப்புகழாகிய தமிழ் வேதத்தை முருகப்பெருமான் மனமகிழ்ந்து தரித்துக்கொள்ளுகின்றார்.

"விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபல முடனேத மகிழ்வோனே"
—(வரிக்கலையி) திருப்புகழ்.

தெய்வயானை யம்மையாரது இனிய கலவியின்பத்தினும் நக்கீர தேவர் பாடிய திருமுருகாற்றுப்படை யென்னும் செந்தமிழ்ப் பிரபந்தத்தில் மிகவும் பிரிய முடையவராயிருக்கின்றனரென அருணகிரியார் கந்தரந்தாதியில் உரைக்குமாறு காண்க.

"கைமா மயில் செவ்வி நக்கீரர் சொற் றித்தித்ததே"

முருகவேள் செந்தமிழ்ப்பிரியர் என்பதனை "முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்" என்ற கந்தரலங்காரத் திருவிருத்தம் உணர்த்துவதையுங் காண்க.

"தண்டரள மணிமார்ப செம்பொனெழில் செறிரூப
தண்டமிழின் மிகுநேய முருகேசா"
—(அண்டர்பதி) திருப்புகழ்.

## கருத்துரை

மயிலின் மிசை எழுந்தருளிவந்து அசுரரை அழித்த வேலாயுதரே! சிவபெருமானது இடப்புறத்து வீற்றிருக்கும் உமாதேவியார் திருமுலைப்பால் தந்து அன்புகொள்ளும் தமிழ் விரக! பெரிய பொருளே! சங்கரன் கும்பிடுந் தம்பிரானே! பொதுமகளிரது மாயா வலையிற்சிக்கி, அவரது இன்பத்தையே பரமசுகமெனக் கருதி அறிவில்லாத நெறியில் செல்பவனும் திருச்செந்தூர் என்று உருகாதவனும் ஆகிய அடியேனுக்குத் தேவரீரது சீரடிக்கமலத்தைத் தந்தருளத் தமது திருவுளம் சிந்திக்க வேண்டும்.

## 63

அம்பொத் தவிழித் தந்தக் கலகத்
தஞ்சிக் கமலக் கணையாலே
அன்றிற் குமனற் றென்றற் குமிளைத்
தந்திப் பொழுதிற் பிறையாலே

எம்பொற் கொடிமற் றுன்பக் கலனற்
றின்பக் கலவித் துயரானுள்
என்பெற் றுலகிற் பெண்பெற் றவருக்
கின்பப் புலியுற் றிடலாமோ

கொம்புக் கரிபட் டஞ்சப் பதுமக்
கொங்கைக் குறவிக் கினியோனே
கொன்றைச் சடையர்க் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே

செம்பொற் சிகரப் பைம்பொற் கிரியைச்
சிந்தக் கறுவிப் பொரும்வேலா
செஞ்சொற் புலவர்க் கன்புற்ற திருச்
செந்திற் குமரப் பெருமாளே.

### பதவுரை

கொம்பு கரி பட்டுஅஞ்ச = தந்தங்களையுடைய யானை எதிர்ப்பட்டதைக்கண்டு அஞ்சிய, பதும கொங்கை குறவிக்கு இனியோனே = தாமரை மொட்டு போன்றுள்ள தனங்களையுடைய குறமகளாகிய வள்ளியம்மையாருக்கு இனிமையானவரே! கொன்றை சடையர்க்கு = கொன்றை மலரணிந்த சடைமுடியுடைய சிவபெருமானுக்கு,ஒன்றை தெரிய = ஒரு மொழியாகிய பிரணவ மந்திரத்தின் உட்பொருள் தெரியுமாறு, கொஞ்சி தமிழை பகர்வோனே = மழலை மொழியுடன் கொஞ்சி தமிழ் மொழியால் எடுத்து உபதேசித்தவரே! செம்பொன் சிகர பைம்பொன் கிரியை = பொன்னாலாகிய கொடுமுடியுடைய பசும்பொன் போன்ற நிறமுடைய கிரவுஞ்ச மலையை, சிந்த கறுவி பொரும்வேலா = அது துகள்படுமாறு சினந்து போர் புரிந்து வேலைவிடுத்தவரே! செஞ்சொல் புலவர்க்கு அன்புற்ற = செந்தமிழ் பேசும் சிறந்த புலவர்கட்கு அன்பு செய்கின்ற, திருச்செந்தில் குமர = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! பெருமாளே = பெருமையின் மிக்கவரே! அம்பு ஒத்த விழி =

கணைபோன்ற கூர்மையுடைய கண்களையுடையபெண்கள், தந்தகலக = பேசுகின்ற அவர்மொழிகளால், அஞ்சி = பயந்தும்,கமல கணையாலே = மன்மதனுடையதாமரைப்பூங்கணையாலும்,அன்றிற்கும் = அன்றிற்பற வைக்கும்,அனல்தென்றற்கும் இளைத்து = நெருப்பு வீசுவதுபோல் துன் புறுத்தும் தென்றல் காற்றுக்கும் இளைப்புற்று,அந்திப்பொழுதில் பிறை யாலே = மாலைப்பொழுதில் தோன்றும் சந்திரனாலும்வாடி, எம்பொன் கொடி = எமது பொற்கொடி போன்ற புதல்வி, மன் துன்ப கலன் அற்று = பெரிய துன்பத்தைத்தயும் ஆபரணங்களை நீக்கி, இன்ப கலவி துயர் ஆனாள் = இன்பத்தைத் தரும் கலவியைக்கருதி பெருந் துன்பத்தையடைந்தாள்; பெண் பெற்றவருக்கு = பெண்ணைப் பெற்ற வர்க்கு, உலகில் என் பெற்று = உலகத்திலே என்னதான் பெற்றாலும் என்ன பயன்? இன்ப புலி உற்றிடலாமோ = இன்பத்துடன் தேவரீர் அவளைத் தழுவி அணைத்திடலாமோ ?

## பொழிப்புரை

தந்தங்களையுடைய யானை எதிர்ப்பட்டதைக் கண்டு அஞ்சிய தாமரையரும்பு போன்ற தனங்களையுடைய வள்ளி யம்மையாருக்கு இனிய கணவரே! கொன்றை மலரணிந்த சிவமூர்த்திக்கு ஒரு மொழியாகிய ஓங்காரத்தின் உட் பொருளை மழலை மொழியால் கொஞ்சித் தமிழ்ச் சொற்களால் விரித்து உரைத்து உபதேசித்த குருநாதரே! செய்ய தமிழ் மொழியில் வல்ல புலவர்கட்கு அன்பு செய்யும் திருச்செந் தூரில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! பெருமிதம் உடையவரே! கணை போன்ற கண்களையுடைய பெண்கள் கூறும் வசை மொழியாகிய அலரினால் அஞ்சியும், மதனன் விடும் தாமரைப் பூங்கணையாலும், அன்றில் என்ற பறவைக் கும், அனல்போல் வெப்பமாகின்ற தென்றல் காற்றுக்கும் இளைப்புற்றும், மாலையில் தோன்றும் சந்திரனால் துன்புற்றும் எனது பொற்கொடி மிக்க துன்பத்தைத்தரும் அணிகலங்களைக் கழற்றி யெறிந்தும், இன்பத்தைத் தரும் கலவியைக் கருதிக் கவல்கின்றாள்; பெண் பெற்றவர்கட்கு உலகில் என் பெற்று என்ன பயன்? இன்பத்துடன் அவளைக் கலந்து அருள்புரிவீர்.

## விரிவுரை

இப் பாடல் நற்றாயிரங்கல் என்ற துறையாக எழுந்தது. பழங்காலத்தில் பண்டைத் தமிழர்களிடையே களவு மணம் நிகழ்ந்த பின்னர் கற்பு மணம் நிகழும். தன் மகள் ஒரு தலைவனைக் காதலித்து, அதனால் எய்திய காதல் நோயால் தென்றலையும் அன்றிலையும் திங்களையும் கண்டு வருந்தி வாடி நின்றபோது புதல்வியின் நிலைமைக்குத் தாய் வருந்தும் தன்மையில் வருவது "நற்றாயிரங்கல்" என்ற துறை.

**அம்பொத்த விழி :—**

அம்பொத்த விழி என்பது அன்மொழித் தொகையாக விழியையுடைய மகளிரைக் குறித்தது. பெண்களுடைய கண்கள் மிகவும் கூர்மையாக வாள் போலவும் கணை போலவும் இருக்கும். எதிர்ப்பட்டார் நெஞ்சத்தை வெட்டிப் பிளக்கும். ஒரு பெண் ஒரு காதலனைக் காதலித்திருக்கும்போது உள்ளதையறியாத ஊர்ப் பெண்கள் பலவாறு அப் பெண்ணைப் பற்றிப் பேசித் தூற்றுவர். அதற்கு அலர் என்று பேர். அம் மொழி காதலியின் உள்ளத்தை வருத்தும்.

அம்பொத்த விழி என்ற சொற்றொடர் இயல்பாக வர வேண்டியது "அம்பொத்த விழித்" என்று சந்தத்தைக் கருதி வல்லொற்று வந்தது.

**தந்தக் கலகத் தஞ்சி :—**

முன்னே கூறியவாறு ஊரவர் கூறும் பழியுரைக்குத் தலைவி அஞ்சுவள்.

**கமலக் கணையாலே :—**

மன்மதனுக்கு ஐம்பெருங் கணைகள். தாமரைப்பூ, மாம்பூ, முல்லைப்பூ, அசோகம்பூ, நீலோற்பலப்பூ, என்ற மலர்கள். தாமரைப்பூ - நினைப்பூட்டும்; மாம்பூ - பசலை நிறந் தரும்; அசோகம் - உணர்வை நீக்கும்; முல்லை - படுக்கச் செய்யும்; நீலோற்பலம் - கொல்லும். தலைவனை நாடிய தலைவிக்கு அந் நினைவை அதிகப்படுத்துவது மன்மதன் விடுகின்ற தாமரைப் பூங்கணை.

நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணர்வு நீக்கும் அரவிந்தம்—வனத்திலுறு
முல்லை இடைகாட்டும் மாதே முழுநீலம்
கொல்லுமதன் அம்பின் குணம். —இரத்தினச் சுருக்கம்.

**அன்றிற்கும் :—**

பறவைகளில் அன்றில் சிறந்தது. ஆண் பறவையும் பெண் பறவையும் ஒருபோதும் பிரியாது வாழும் இயல்புடையவை. பிரிந்தால் உயிர் துறந்துவிடும். அதனால் பிரிவுத் துன்பத்திற்கு உவமையாக அன்றிலை உரைப்பர். அவைகள் ஒன்றி வாழ்வதைக் காணும் தலைவி தான் தலைவனைப் பிரிந்திருக்கும் தன்மை குறித்து வருந்துவள்.

**அனல் தென்றல் :—**

பிரிந்துறையும் தலைவன் தலைவியர்க்குத் தென்றல் மிகுந்த வெப்பத்தைத் தரும். எல்லோர்க்கும் இனிமையான தென்றல்

காற்று பிரிந்த காதலன் காதலிக்குப் பெருந் துன்பத்தைத் தரும்.

**அந்திப் பொழுதில் பிறையாலே :—**

மாலையில் தோன்றும் மதி மற்றவர்க்குத் மகிழ்ச்சியைத் தரும். காதலர்க்கு வேதனையைத் தரும்.

"ஏ சந்திரனே! நீ கொடியவனல்லவே! யாரையுங் கொன்றதில்லையே! நீ அமிர்தத்துடன் பாற்கடலில் பிறந்தனையே? அதுவும் ஒரு பெண்ணுடன் பிறந்தனையே? இத்தகைய நலமுடைய நீ என்னை வருத்திச் சுடலாமோ?" என்று அன்னை ஜானகி வருந்துகின்றாள்.

கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
வடுவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றுலெனைச்
சுடுதியோ கடல் தோன்றிய திங்களே.

**என் பொற்கொடி மற்றுன்பக் கலனற்று :—**

என்னுடைய பொற்கொடி போன்ற புதல்வி பெரிய துன்பத்தைத் தரும் அணிகலன்களை யகற்றிவிட்டாள். கணவனைப் பிரிந்திருக்கின்றபோது அணிகலன்கள் சுமையாகவும் வேதனை தருவதாகவும் இருக்கும்.

**இன்பக்கலவித் துயராளுள் :—**

"முருகா! உன்னை மருவி மகிழும் பேரின்பமாகிய பெரு வாழ்வு கிட்டவில்லையே என்ற பெருந்துயரால் என் மகள் வாடுகின்றாள்."

**என் பெற்றுலகில் பெண் பெற்றவருக்கு :—**

பெண்ணைப் பெற்றவர்கட்கு உலகிலே என்ன என்ன நலன்களைப் பெற்றாலும் அவைகளால் மகிழ்ச்சி வரமாட்டா. நல்ல மணவாளன் தன் புதல்விக்கு எய்திலன்றி உள்ளம் உவகையுறாது.

**இன்பப்புலி யுற்றிடலாமோ :—**

புல்லி என்ற சொல் புலி என வந்தது. இன்பத்துடன் என் புதல்வியைப் புல்லி மகிழ்ச்சியைத் தருவீர். அவ்வாறு பொருந்தலாமோ?

**கொம்புக்கரிபட்டஞ்சப் பதுமக் கொங்கைக் குறவிக்கினியோனே :—**

தந்தங்களையுடைய யானை வடிவுடன் விநாயகர் வந்து நின்றவுடன் வள்ளியம்மை அஞ்சி முருகனைத் தஞ்சம் புகுந்த

னர் என்ற வரலாறு உலகறிந்தது. பிரணவ தெரிசனம் பெற்றவுடன் பாசபந்தம் நீங்கிய ஆன்மா சிவத்தை மருவியது என்பது அதன் உட்கிடை.

**கொன்றைச் சடையர் :—**

கொன்றை ஐந்து இதழ்களுடைய மலர். அது திரு ஐந்தெழுத்தைக் குறிக்கும். பஞ்சாக்கரத்திற்குரிய பரம்பொருள் சிவபெருமான். கொன்றைமலர் அவர் ஒருவரே அணிவதற்கு உரியது. சடையர் என்றமையால் அவர் விருப்பு வெறுப்பு இல்லாதவர் என்பதையும், தவக்கோலமுடையார் என்பதையும் உணர்தல் வேண்டும். "பின்றாழ்சடையான்" என்கின்றார் அப்பர் பெருமான். வணங்கத்தக்கவர் சடைமுடியுடைய சிவபெருமான் எனவுணர்க.

**ஒன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழைப் பகர்வோனே :—**

ஒரு மொழியாகிய ஓங்கார மந்திரத்தின் உட்பொருளை குமாரக்கடவுள் தன் தந்தையாருக்கு மழலை மொழியால் கொஞ்சிக் கொஞ்சிச் செந்தமிழ்மொழியால் விரிவுரை செய்து விளக்கியருளினார். எனவே திருக்கைலையில் சிவனும் முருகனும் பேசிக்கொள்ளும் மொழி தமிழ் என்பது இதனால் விளங்குகின்றது. தமிழால் என்ற சொல் இரண்டாம் வேற்றுமை பெற்றது. இதனால் தமிழின் பெருமை அளவிடற்கரியது. தெய்வத் தமிழ் தீஞ்சுவையுடையது. அதன் மாண்பு மிகப்பெரியது. அதன் இனிமை கல்லையுங் கரைக்கும்.

**செம்பொற் சிகரப் பைம் பொற்கிரி :—**

கிரவுஞ்சன் என்ற அசுரன் பொன் மலைபோல் மாயையால் நின்று தீமை புரிந்தான். அம் மலையை ஆறுமுகப் பெருமான் வேலினால் அழித்தனர். "பொன்னஞ் சிலம்பு புலம்ப வரும் எங்கோன்" என்று அலங்காரத்திலும் கூறுகின்றார்.

**செஞ்சொற் புலவர்க் கன்புற்ற திருச்செந்தில் :—**

பகழிக்கூத்தர் முதலிய பல புலவர்களை ஆதரித்த தலம் செந்திலம்பதியாகும். தமிழ்மணங் கமழ்வது; தமிழ்த்தெய்வம் தனியரசு புரிவது. திருச்செந்தூரின் பெருமையைப் புலவரே யறிவர்.

## கருத்துரை

வள்ளி மணவாளரே! சிவகுருவே! மலை பிளந்த வேலரே! செந்திலாண்டவரே! தேவரீரை நினைந்து வருந்தும் என் புதல்வியை மணந்து அருள்புரிவீர்.

## 64

கொங்கைப் பணையிற் செம்பொற் செறிவிற்
கொண்டற் குழலிற் கொடிதான
கொன்றைக் கணையொப் பந்தக் கயலிற்
கொஞ்சுக் கிளியிற் றுறவான

சங்கத் தொனியிற் சென்றிற் கடையிற்
சந்திப் பவரைச் சருவாதே
சந்தப் படியுற் றென்றற் றலையிற்
சந்தப் பதம்வைத் தருள்வாயே

அங்கப் படைவிட் டன்றைப் படுகைக்
கந்திக் கடலிற் கடிதோடா
அந்தப் பொழிலிற் சந்துத் தலையுற்
றஞ்சப் பொருதுற் றொழியாதே

செங்கைக் கதிருற் றொன்றக் கடலிற்
சென்றுற் றவர்தற் பொருளானாய்
சிந்தைக் கனிவைத் தந்தப் பொழிலிற்
செந்திற் குமரப் பெருமாளே.

### பதவுரை

அங்கு அப்படை விட்டு = அங்கு அந்தச் சேனைகளைவிட்டு நீங்கி, அன்று படுகை அந்தி கடலில் கடிது ஓடா = அந்நாளில் நீர்நிலையாகிய (வீரமகேந்திரத்திற்கு இடையில்) சந்தியாகவுள்ள கடலைக் கடந்து விரைந்து சென்று, அந்த பொழிலின் = அந்த நாடாகிய மகேந்திரபுரியில், சந்து தலையுற்று = தூதாகச் சென்று, அஞ்ச பொருது = அவுணர்கள் அஞ்சுமாறு போர் செய்து, உற்று ஒழியாதே = அவர்களுக்கு அஞ்சி நீங்காமல், செங்கை கதிர் உற்று ஒன்ற கடலில் சென்று உற்றவர் = சிவந்த கிரணங்களை யுடைய சூரியனைப்போல் கடல் கடந்துபோய் வந்தவரான வீரவாகுதேவருடைய, தற்பொருள் ஆனாய் = ஆன்மார்த்தப் பொருளாக விளங்குபவரே! சிந்தை கனி வைத்து = உள்ளத்தில் கனிவு கொண்டு, அந்த பொழிலில் = அழகிய சோலை சூழ்ந்த, செந்தில் குமர = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! பெருமாளே = பெருமையின் மிக்கவரே! கொங்கை பணையில் = பருத்த தனபாரங்களுடனும், செம்பொன் செறிவில் = சிவந்த பொன்னாற் செய்த அணிகலன்களுடனும், கொண்டல் குழலில் = மேகம் போன்ற கரியகூந்தலுடனும், கொடிது ஆன = கொடுமையுடன், கொன்றைகணை ஒப்பு =

வலிமையாகத் தைக்கின்ற அம்புக்கு நிகரானதும், அந்த கயலில் = அழகிய மீன் போன்றதுமாகிய கண்களுடனும், கொஞ்சுகிளியிற்று உறவு ஆன = கொஞ்சுகின்ற கிளிபோல் பேசி அதற்கு உறவு கொண்ட, சங்க தொனியில் = சங்கம் போன்ற இனிய குரலுடனும், இல் கடையில் சென்று = தங்கள் வீட்டின் வாயிலிற் சென்று, சந்திப்பவரை சருவாதே = தம்பால் வருபவர்களைச் சந்தித்துக் கலக்கும் பொது மகளிருடன் சேராமல், சந்தபடிஉற்று = சுகநிலையைப் பெற்று உய்ய, என்றன் தலையில் = அடியேனுடைய தலைமீது, சந்த பதம் வைத்து அருள்வாயே = அழகிய திருவடியைச் சூட்டி அருள்புரிவீர்.

## பொழிப்புரை

அங்கு அச் சேனைகளை விட்டு நீங்கி இடையே நின்ற கடலைக் கடந்து விரைந்து சென்று வீரமா மகேந்திரபுரிக்குத் தூதாகச் சென்று அங்குள்ள அசுரர் அஞ்சப் போர் செய்து, அவர்களிடம் தோல்வியுறாமல் சிவந்த கதிருடைய சூரியனைப் போல் விளங்கி மீண்டுங் கடலைக் கடந்து வந்த வீரவாகு தேவருடைய வழிபடு மூர்த்தமாய் விளங்குபவரே! திருவுள்ளத்தில் கனிவு கொண்டு அழகிய சோலை சூழ்ந்த திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! பெருமையின் மிக்கவரே! பருத்த தனங்களுடனும், செம்பொன்னாலாகிய ஆபரணங்களுடனும், கரிய மேகம்போன்ற கூந்தலுடனும், கொடுமையான வலிமையுடன் தைக்கின்ற அம்பு போன்றதும் அழகிய மீன் போன்றதுமாகிய கண்களுடனும், கொஞ்சுகின்ற கிளி போல் பேசி உறவு செய்கின்ற சங்கநாதம் போன்ற இனிய மொழிகளுடனும் தமது வீட்டின் வாயிலின்முன் வந்து நின்று அங்கு வரும் ஆடவரை மயக்கும் விலைமகளிருடன் இணங்காமல பேரின்ப நிலை பெற்று உய்ய அடியேனுடைய தலைமீது அழகிய திருவடியை வைத்து அருள்புரிவீர்.

## விரிவுரை

**கொங்கைப் பணையில்......சருவாதே :—**

"தம்பால் நாடி வருபவரை தலைவாயிலில் நின்று இன்னுரை கூறி கண்கள் கூந்தல் முதலிய அழகிய உறுப்புக்களால் இன்புறுத்திப் பொருள் பறிக்கும் பொதுமகளிர் வசப்படா திருக்கவேண்டும்" என்று இந்த மூன்று அடிகளால் அடிகளார் கூறுகின்றனர்.

**சந்தப் படியுற்று :—**

படி—உலகம், சந்தப்படி—அழகிய இன்ப வுலகம். முத்தி யுலகம்.

**என்றன் தலையில் சந்தக் கழல் வைத்தருள்வாயே :—**

அயனார் நமது தலையில் எழுதும் கையெழுத்து அறுமுகனார் திருவடிபட்ட மாத்திரத்தில் அழிந்துபோகும்.

"கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே"
—கந்தரலங்காரம். (40)

இறைவனுடைய திருவடி சென்னியில் சூடப் பெறுவதே பேறுகளுள் சிறந்த பேறு ஆகும். திருநாவுக்கரசு சுவாமிகள் விண்ணப்பஞ் செய்ய சிவபெருமான் அவருடைய சென்னியிலே மாலும் அயனுங் காணாத மலரடியைத் திருநல்லூரிலே சூட்டியருள்புரிந்தார்.

நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரில்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கி மகிழ்ந் தெழும்போதில்
"உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்" என்றவர்தம்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினார் சிவபெருமான்.
—பெரியபுராணம்.

"நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்" —அப்பர்.

அதுபோல் முருகவேள்பால் அருணகிரிநாதர் என் சென்னிமிசை திருவடி சூட்டியருளும் என்று இப்பாடலில் விண்ணப்பஞ் செய்கின்றார். அதுபடி சூட்டினாரோ? எனின், சூட்டியருளினார். அதனை அடியில் வரும் அருணகிரிநாதர் அமுதவாக்குகளினால் அறிக.

"இபமுகவனுக் குகந்த இளையவ மருக்கடம்ப
எனது தலையிற் பதங்கள் அருள்வோனே"
—(களபமுலை) திருப்புகழ்.

"சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும்படி தந்தது சொல்லுமதோ
வீடுஞ்சுரர் மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே."
—அநுபூதி. (44)

அளவற்ற மாதவத்தின் பயனாக அருணகிரிநாதருக்கு அத் திருவடிப் பேறு கிடைத்தது. முருகன் திருவடி வேதாகமங்களுக்கும் எட்டாததன்றோ? சென்னிமிசைச் சூட்டப்பெற்ற அருணையடிகளின் பெருமை யளவிடற்கரியது.

**அங்கப்படை விட்டு :—**

திருச்செந்தூரில் திருவேலிறைவன் எழுந்தருளி, அரச தருமத்தின்படி சூரபன்மன்பால் ஒரு தூது அனுப்பி தேவரைச் சிறை விடுமாறு அறவுரை பகர வேண்டும்; அவன் அச் சொற்

களைக் கேட்டுத் திருந்தவில்லையானால் பின்னர் தண்டிப்போம் என்று கந்தவேள் கருதி, அக் கருத்தினை மாலயனாதி வானவர் பால் உரைத்தருளினார்.

பிரமதேவர் முருகக் கடவுளைத் தொழுது, "எங்களை ஆள வந்த இளம் பூரணரே! வாயுதேவனுங்கூட பேராற்றல் படைத்த சூரபன்மன் வாழும் வீரமகேந்திரபுரிக்குச் சென்று திரும்புதல் முடியாது. நாங்கள் அனைவரும் சூரன்பால் பணி விடை புரிபவர்கள். அஞ்சா நெஞ்சுடன் அவன் எதிர் நின்று அறவுரை பகரும் ஆற்றல் எமக்கு இல்லை. இதோ இங்கு இருக்கும் வீரவாகுதேவர் ஒருவரே தூது சென்று திரும்ப வல்லவராவார்" என்றனர்.

மெல்லென வுலவைக் கோனும் வீரமா மகேந்திரத்தில்
செல்லரி தெனக்கும் அற்றே செய்பணி நெறியா லன்றி
ஒல்லையில் அங்கண் ஏகி ஒன்னலர்க் கடந்து மீள
வல்லவன் இளைய வீர வாகுவே யாகும் என்றான்.

ஆறுமுகப் பெருமான் அதுகேட்டு அது நன்று என்று "அமரர்களைச் சிறை விடுமாறு சூரபன்மன்பால் சென்று அற வுரை பகர்ந்து வருக" என்று வீரவாகுதேவரைப் பணித்தருளி னார்.

வெற்றிவேற் பெருமான்பால் விடைபெற்ற வீரவாகுதேவர் இரு தோளும் ஒரு வாளும் உடையராய்ப் புறப்பட்டுக் கடல் கடந்து பேருருவுடன் செல்வாராயினார். இடையில் இலங்கை யைக் காவல் புரிந்த வீரசிங்கனையும் அதிவீரனையும் அங்குள்ள சேனைகளையும் அழித்து வீரமகேந்திரம் புகுந்தனர்.

சிறைச்சாலையில் ஆற்றுவாருந் தேற்றுவாருமின்றித் தவித்துக் கிடந்த இந்திரன் புதல்வனாகிய சயந்தனைத் தேற்றி, சூரபன்மன் வீற்றிருந்த அரசவை புகுந்து, முருகவேள் கருணை யால் அங்கு வந்த மணித்தவிசின்மீது வீற்றிருந்து, சூரபன் மனை நோக்கி அமரர்களைச் சிறை விடுமாறு நல்லுரைகளும், முருகவேளின் முழுமுதற் றன்மைகளும் கூறியருளினார். அது கேட்டு சூரன் திருந்தினானில்லை. தன்னுடன் போர் புரிய வந்த அசுரர்களையும், சூரபன்மனுடைய கடைசி மகன் வச்சிரவாகு வையும் பிறரையும் கொன்று அங்குள்ள வேரத்தைப் பிடுங்கி நகரை அழித்துவிட்டு மீண்டுங் கடலைக் கடந்து செந்திமா நக ரஞ் சேர்ந்து கந்தநாயகனை வணங்கினார். "மூடர்கள் திருந் தார்" என மொழிந்தார். (வேரம்—செய்குன்று)

இதனை எட்டு வரிகளில் இங்கு அடிகளார் கூறியருளி னார்.

அந்திக்கடல் :—

திருச்செந்தூருக்கும் வீரமகேந்திரபுரிக்கும் இடையிலே உள்ள கடல்.

அந்தப்பொழில் :—அழகிய வீரமகேந்திரபுரி.

சந்து :—தூது சென்று.

அஞ்சப் பொருது :—பகைவர் அஞ்சுமாறு போர் செய்து.

ஒழியாதே :—அவர்கள்பால் தோல்வியுறுமல்.

சென்றுற்றவர் :—வீரவாகுதேவர்.

தற்பொருள் ஆனாய் :—அவர் வணங்குகின்ற ஆன்மார்த்தப் பொருளாக விளங்குவோன்.

## கருத்துரை

வீரவாகுதேவர் போற்றும் வேலவரே! செந்திலாண்டவரே! அடியேன் சென்னிமேல் திருவடி சூட்டி அருள் புரிவீர்.

## 65

புகரப் புங்கப் பகரக் குன்றிற்
புயலிற் றங்கிப் பொலிவோனும்
பொருவிற் றஞ்சச் சுருதிச் சங்கப்
பொருளைப் பண்பிற் புகல்வோனும்
திகிரிச் செங்கட் செவியிற் றுஞ்சத்
திகிரிச் செங்கைத் திருமாலும்
திரியப் பொங்கித் திரையற் றுண்டுட்
டெளிதற் கொன்றைத் தரவேணும்
தகரத் தந்தச் சிகரத் தொன்றித்
தடநற் கஞ்சத் துறைவோனே
தருணக் கொங்கைக் குறவிக் கின்பத்
தையளித் தன்புற் றருள்வோனே
பகரப் பைம்பொற் சிகரக் குன்றைப்
படியிற் சிந்தத் தொடும்வேலா
பவளத் துங்கப் புரிசைச் செந்திற்
பதியிற் கந்தப் பெருமாளே.

## பதவுரை

தகரத்து அந்த=தகர வித்தாகிய அழகிய, சிகரத்து ஒன்றி=வேத சிரோமுடியாம் பேரிடத்தைப் பொருந்தி, தட நல் கஞ்சத்து உறைவோனே=நல்ல இடமாகிய இதய கமலத்தில் உறைகின்றவரே! தருணகொங்கை குறவிக்கு=இளமையான தனபாரங்களையுடைய வள்ளியம்மையாருக்கு, இன்பத்தை அளித்து=பேரின்பத்தை வழங்கி, அன்பு உற்று அருள்வோனே=அவர்மீது அன்பு கொண்டு அருள் புரிந்தவரே! பகர பைம்பொன் சிகர குன்று=ஒளியை யுடைய பசும் பொன் சிகரங்களையுடைய கிரவுஞ்ச மலை, படியில் சிந்த=இப்பூமியின் கண் பொடிபடுமாறு, தொடுவேலா-தொடுத்தருளிய வேலாயுதத்தை யுடையவரே! பவள துங்க புரிசை=பவளம் போன்ற சிவந்த தூய மதில் சூழ்ந்த, செந்தில் பதியில் கந்த=திருச்செந்தூர் என்ற திருத் தலத்தின் கண் எழுந்தருளிய கந்த, பெருமாளே=பெருமையில் மிகுந் தவரே! புகர=புள்ளிகளையுடையதும், புங்க=தூய்மையுடையதும், பகர=அழகியதுமாகிய, குன்றில்=மலைபோன்ற வெள்ளையானை மீதும், புயலில்=மேகத்தின்மீதும், தங்கிப் பொலிவோனும்=தங்கிப் பொலிகின்ற தேவேந்திரனும்,பொருவில்=இணையில்லாததும்,தஞ்சம் =எல்லாக் கலைகளுக்கும் புகலிடமானதும் ஆகிய, சுருதி சங்கப் பொருளை=வேதத் தொகுதிகளின் பொருள்களை, பண்பின் புகல்வோனும்=முறையுடன் மொழிபவராகிய பிரமதேவரும், கிரி=மலை போன்றதும், செம்கட்செவி=செம்மைப் பண்புடையதுமாகிய ஆதி சேடன்மீது, துஞ்சு=அறிதுயில் புரிகின்ற, அத் திகிரி செங்கை திருமாலும்=அந்த சக்ராயுதத்தை ஏந்திய சிவந்த கரமலரையுடைய நாராயண மூர்த்தியும், திரிய=நமக்கு இவ்வுபதேசப் பொருள் கிடைக்கவில்லையே என்று உள்ளம் வருந்தி (இங்குமங்குமாகத்) திரியவும், பொங்கி=உவகை மிகுந்ததும், திரை அற்று=உள்ளத்தில் எழும் பல எண்ண அலைகள் அகன்றும், உண்டு=சிவாநுபவத்தை யுட்கொண்டும், உள் தெளிதற்கு=உள்ளம் தெளியுமாறும், ஒன்றை தர வேணும்=ஒரு மொழியை அடியேனுக்கு உபதேசித்தருளவேணும்.

## பொழிப்புரை

தகர வித்தையும் அழகிய வேத சிரசுமாகிய பெரிய இடத்தைப் பொருந்தி இதய கமலமாகிய நல்ல இடத்தில் உறைகின்றவரே! இளமுலை நாயகியாகிய வள்ளி பிராட்டியாருக்குப் பேரின்பத்தை வழங்கி அவர்மீது அன்பு வைத்து, அருள் புரிந்தவரே! ஒளியுடைய பசும்பொன் போன்ற சிகரங்களை யுடைய கிரவுஞ்ச மலை இப் பூமியில் பொடிபடுமாறு வேலாயுதத்தை விடுத்தருளியவரே! பவளம் போல் சிவந்து தூய்மையாக விளங்கும் திருமதில் சூழ்ந்த செந்திலம்பதியில் எழுந்

தருளியுள்ள பெருமையின் மிக்கவரே! புள்ளிகளை யுடையதும் பரிசுத்தமானதும் மலை போன்றதுமாகிய ஐராவதம் என்ற வெள்ளை யானை மீதும், மேகத்தின் மீதும் விளங்குகின்ற இந்திரனும், சமானமில்லாததும், கலைகளுக்குப் புகலிடமானது மான வேதத்தின் தொகுதிக்குப் பொருள் கூறுகின்ற நான் முகக் கடவுளும், மலையை யொத்ததும், செம்மைப் பண்புடையதும் கண்ணையே காதாகவுடையதுமாகிய சர்ப்ப அரசின் மீது அறிதுயில் புரிகின்றவரும், சக்கரத்தைத் தாங்கிய செங்கையை யுடையவருமாகிய நாராயணரும், (நமக்கு இவ்வுபதேசப் பொருள் கிடைக்கவில்லையே யென்று வருந்தித்) திரியவும், உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கவும், எண்ண அலைகள் ஓயவும், சிவாநுபவத்தையுண்டு உள்ளம் தெளிவு பெறவும் ஒப்பற்ற ஒரு மொழியை அடியேனுக்கு உபதேசித்து அருள் புரிய வேண்டும்.

## விரிவுரை

இப்பாடலில் முருகப் பெருமானை பிரணவ உபதேசம் புரிய வேண்டும் என்று அருணகிரிநாதர் வேண்டுகின்ருர். ஆனல், அது அத்துணை எளிதாகக் கிடைப்பதன்று; இந்திரனும் பிரமனும் மாலும் அவ்வுபதேசப் பொருளை நாடித் திரிகின்ருர்கள். ஆகவே அவர்களுக்கும் கிடைக்கப் பெருத அம் மோன எழுத்தின் பொருளை எளியேனுக்கு உபதேசித்தருளும் என்று குறிப்பிடுகின்ருர்.

**புகரப்புங்கப் பகரக்குன்று :—**

புள்ளிகளையுடைய தூய ஐராவதம். இது இந்திரனுடைய வாகனம். பாற்கடலில் அமுதத்துடன் தோன்றியது. சிவபெருமானை வழிபட்டது.

**புயலில் திரிவோனும் :—**

இந்திரனுக்கு மேகமும் ஒரு வாகனம். எனவே ஐராவதத்தின் மீதும் மேகத்தின் மீதும் உலாவுகின்ற இந்திரன்.

**பொருவில் தஞ்சச் சுருதி :—**

சுருதி—வேதம். காதால் கேட்கப்படுவதால் வேதம் சுருதி எனப் பெற்றது. வேதத்தை எழுதிப் படிக்கும் வழக்கம் கிடையாது. எழுதிப் படித்தால் உதாத்த அனுதாத்த சுரங்கள் வரமாட்டா. அதனல் குரு மூலங் கேட்டே படிக்க வேண்டும். தஞ்சம்—புகலிடம். ஏனைய கலைகளுக்கு வேதமே புகலிடமாயது. பொரு—சமானம். வேதம் சமானமில்லாதது.

**பொருளைப்பண்பில் புகல்வோன் :—**

வேதத்தின் பொருளை நன்கு உரைப்பவர் பிரமதேவர். அதனல் அவருக்கு வேதன் என்ற பேர் உண்டாகியது.

**திகிரி செங்கட்செவி :—**

கட் செவி—பாம்பு. கண்ணையே காதாக உடையது பாம்பு. ஆதலின் இப்பேர் பெற்றது. இங்கு ஆதிசேடனைக் குறிக்கின்றது. மலைபோன்ற பெரு வடிவையுடைய சிறந்த அரவம். அவர் நாகராஜா. அவர் மீது திருமால் பள்ளிகொண்டிருக்கின்றார்.

**திகிரிச் செங்கைத் திருமால் :—**

திருமால் திருவீழிமிழலையில் சிவபெருமானை நாடோறும் ஆயிரம் தாமரை மலர்களால் அர்ச்சித்து, ஒருநாள் ஒரு மலர் குறைதலும் கண்மலரை யெடுத்து அர்ச்சித்துப் பெற்ற ஆயுதம் சக்ராயுதம். திகிரி—சக்ராயுதம்.

**திரிய :—**

இந்திரன், பிரமன், திருமால் இம்மூவரும் பிரணவத்தின் பொருள் தெரியாது திகைத்து அதனைப் பெறும்பொருட்டுத் திரியவும்.

**பொங்கி :—**

"கிடைக்கப் பெறாத பொருள் கிடைத்ததே என்று உள்ளத்தில் ஆனந்த வெள்ளம் பொங்கி எழ"

**திரையற்று :—**

"பற்பல எண்ணங்களாகிய அலைகள் அற்று உள்ளந் தெளிய"

**உண்டு :—**"சுகாநுபவமாகிய இன்பத் தேனைப் பருகி"

**உள்தெளிய :—**

"அதனால் உள்ளத்தில் உள்ள கலக்கம் நீங்கி சுத்தமான பளிங்குபோல் தெளிவடைய"

**ஒன்றைத் தரவேணும் :—**

ஒரு மொழியாகிய ஓம் என்னும் தனி மந்திரத்தினை உபதேசிக்க வேணும்.

**தகரத்தந்தச் சிகரத் தொன்றித் தடநற்கஞ்சத் துறைவோனே :—**

ஆன்மாக்களின் இதய தாமரைக்கு நடுவே ஞானமயமாக ஒலியுடன் கூடி விளங்கும் ஆகாயம் தகராலயம்—தகராகாசம் எனப்பெறும். அதன் நடுவே சுத்த பளிங்குபோன்ற பரமான்மா வசிக்கின்றது. இதையறிகின்ற வித்தைக்குத் தகரவித்தை யென்ப்படும். இந்த வித்தையை யறிந்தவரே வீடுபெறுவர். சிவயோகநிலை முழுவதும் கைவந்த ஔவையார் இதனையே

தமது நீதிநூல் முடிகின்ற போது, "வித்தை விரும்பு" "வீடு பெறநில்" என்று குறிப்பாகக் கூறியருளினர்.

அணோரணீயாந் மஹதோ மஹீயா
நாத்மாஸ்ய ஜந்தோ: நிஹிதோ குஹாயாம்
தமக்ரதும் பச்யதி வீதசோகோ
தாது : ப்ரஸாதாந் மஹிமாநமீசம்.

"அணுவிலும் அணுவாய்ப் பெரிதிலும் பெரிதாயுள்ள (பரம) ஆன்மா இந்த செந்துவினுடைய இருதய குகையிலுள்ளது; தன்னுடைய மகிமைக்கு ஏதுவாயுள்ள அதனைக் கன்மநீக்கமுள்ளோன் தனக்கு ஆதாரமான ஈசனது பிரசாதத்தினல் சோகமில்லாதவனுய்க் காண்கின்றனன்" என்பது இதன் பொருள்.

"அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம்
வேச்மதஹரோஸ்மிந் நந்தராகாசஸ்
தஸ்மிந் யதந்தஸ் ததந்வேஷ்டவ்யம்
தத்வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம்"

என்பது சாமவேத சாந்தோக்ய உபநிடதம் (8-1-1.)

இதன் பொருள் :—பிரமபுரம் என்னும் இதிலே தகர புண்டரீக வீடுளது. இதிலே தகராகாசமுள்ளது. இந்த ஆகாசத்திற்குள்ளே யுள்ளது நாடற்பாற்று; அறியற்பாற்று.

தஹரம் விபாப்மம் பரவேச்மபூதம்
யத்புண்டரீகம் புரமத்ய ஸம்ஸ்தம்
தத்ராபி தஹரம் ககநம் விசோகஸ்
தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்.

என்பது தைத்திரீயாருணசாகை. (12-16)

இதன் பொருள் :—சிறிதாயும், பாவமிலதாயும், பரமான்மாவிற்குச் சிறந்த வீடாயும் இருக்கின்ற இதய கமலம் எதுவோ, அதனில் சோகமிலதாய் தகராகாசமுளது; அதன் உள்ளுளது உபாசிக்கத்தக்கது.

இத்தகைய வேதோபநிடத வாக்குகளினுல் உயிர்கள் தோறும் உள்ள இதயபுண்டரீக வீட்டிலுள்ள தகராகாசத்தில் விளங்கும் பரம்பொருள் குமாரமூர்த்தி யென உணர்க.

## கருத்துரை

தகராலய மூர்த்தியே! வள்ளிமணவாளா! செந்திற் குமரா! மூவரும் அறியாத முதன் மொழிப் பொருளை அடியேனுக்கு உபதேசித்தருளுவீர்.

## 66

அளக பாரம லைந்துகு லைந்திட
வதனம் வேர்வுது லங்கிந லங்கிட
அவச மோகம்வி ளைந்துத ளைந்திட — அணைமீதே

அருண வாய்நகை சிந்திய சம்ப்ரம
அடர்ந கா நுதி பங்கவி தஞ்செய்து
அதர பானம ருந்திம ருங்கிற — முலைமேல்வீழ்ந்

துளமும் வேறுப டும்படி ஒன்றிடு
மகளிர் தோதக இன்பின்மு யங்குதல்
ஒழியுமாறுதெளிந்துளம் அன்பொடு — சிவயோகத்

துருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
உபய சீதள பங்கய மென்கழல் — தருவாயே

இளகி டாவளர் சந்தன குங்கும
களப பூரண கொங்கை நலம்புனை
இரதி வேள்பணி தந்தையும் அந்தண — மறையோனும்

இனிது ருதெதிர் இந்திரன் அண்டரும்
ஹரஹ ராசிவ சங்கர சங்கர
எனமி காவரு நஞ்சினை யுண்டவர் — அருள்பாலா

வளர்நி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவி ரோதமி டுங்குல சம்ப்ரமன்
மகர வாரிக டைந்தநெ டும்புயல் — மருகோனே

வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமைமாநகர் செந்திலில் வந்துறை — பெருமாளே.

### பதவுரை

இளகிடா வளர் சந்தனம்=தளர்ச்சியின்றி வளர்கின்ற சந்தன மரத்தின் கட்டையைத் தேய்த்து அதனால் வந்த குழம்பும், குங்கும களப பூரண=குங்குமப் பூவின் கலவையும் நிறைந்த, கொங்கை நலம் புனை=தனபாரங்களினால் நலம் பெற்ற, இரதி வேள்பணி தந்தையும்=இரதிதேவியின் கணவனாகிய மன்மதன் தொழுகின்ற பிதாவாகிய

திருமாலும், அந்தண மறையோனும் = தணிந்த சிந்தையுடைய பிரம தேவனும், இனிது உருது எதிர் இந்திரன் = இனிமை யடையாது வருந்தி எதிர்வந்த இந்திரனும், அண்டரும் = தேவரும், ஹரஹரா சிவ சங்கர சங்கர என = ஹரஹரா சிவ சங்கரா சங்கரா என்று துதி செய்ய, மிகா வரு நஞ்சினை உண்டவர் = மிகுதியாக வந்து ஆலகால விடத்தை யுண்ட சிவபெருமான், அருள்பாலா = அருளிய புதல்வரே! வளர் நிசாசரர் தங்கள் சிரம் பொடிபட = ஆற்றலினால் வளர்ந்த அசுரர்களுடைய தலைகள் துகளாகும்படி, விரோதம் இடும் குலசம்ப்ரமன் = பகை கொண்டவரும் மேன்மையுடையவரும் பெருஞ் சிறப்புடையவரும், மகரவாரி கடைந்த நெடும்புயல் = மகர மீன்கள் வாழுகின்ற கடலைக் கடைந்தவரும், நீண்ட நீலமேகம் போன்றவருமாகிய நாராயண மூர்த்தியின், மருகோனே = திருமருகரே! வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும் = வளர்கின்ற வாழையும் மஞ்சள் செடியும் இஞ்சியும், இடைவிடாது நெருங்கிய = எப்போதும் அடர்ந்து திகழ்கின்ற, மங்கல = மங்கல மிக்க, மகிமைமாநகர் = மகிமை நிறைந்த சிறந்த திருநகரமாகிய. செந்திலில் வந்துறை = திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கின்ற, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! அளகபாரம் அலைந்து குலைந்திட = பெருத்த கூந்தல் இப்படியும் அப்படியுமாக அலைந்து அதன் கட்டு குலைவு பெறவும், வதனம் வேர்வு துலங்கிட நலங்கிட = முகத்தில் வேர்வை தோன்றி மாசு பெறவும், அவச மோகம் விளைந்து தளைந்திட = மதிமயங்குமாறு மோகம் பிறந்து கட்டுப்படுத்தவும், அணை மீதே = பஞ்சணை மீதில், அருண வாய் நகை சிந்திய சம்ப்ரம = சிவந்த வாயினின்றும் புன்னகை தோன்றி அதில் வெளிப்பட்ட களிப்புடன் கூடி, அடர் நகாநுதி பங்கவிதஞ் செய்து = நெருக்கமாக நகநுனியால் குறி யுண்டாகுமாறு செய்து, அதரபானம் அருந்தி = இதழமுதையுண்டு, மருங்கு இற முலை மேல் வீழ்ந்து = இடையற்றுப் போகுமாறு தனங்களின்மீது வீழ்ந்து, உளமும் வேறுபடும்படி ஒன்றிடு = உள்ளமும் திரியும்படி சேர்கின்ற, மகளிர் தோதக இன்பின் முயங்குதல்ஒழியுமாறு பொதுமாதர்களின் வஞ்சனைநிறைந்த இன்பத்தில் முழுகுதல் நீங்குமாறு, தெளிந்து உள்ளம் = உள்ளமானது தெளிவு பெற்று, அன்பொடு = அன்பு மேலிட்டு, சிவயோகத்து உருகு = சிவயோகத்தில் நிலைபெற்று உள்ளம் உருகுகின்ற, ஞான பரம்பர தந்திர அறிவினோர் கருது = ஞானமும் மேலான ஆகம அறிவும் படைத்த ஆன்றோர்கள் தியானிக்கின்றதும், அம் கொள் சிலம்பு அணி = அழகிய சிலம்பை அணிவதுமாகிய, உபய சீதள பங்கயமென் கழல் தருவாயே = குளிர்ந்த தாமரை போன்ற மெல்லிய இரு பாதங்களையும் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

தளர்ச்சியின்றி வளர்ச்சியுற்ற சந்தன மரத்தின் குழம்பும் குங்குமப்பூவின் கலவையும் நிறைந்த தனபாரங்களினால் நலம்

பெற்ற இரதிதேவியின் கணவனுகிய மன்மதன் தொழுகின்ற பிதாவாகிய திருமாலும், தணிந்த சிந்தையுடைய நான்முகக் கடவுளும், இனிய சுகம் பெருது கவன்ற இந்திரனும் இமைய வரும், "ஹரஹரா! சிவா! சங்கரா! சங்கரா!" என்று துதி செய்ய, அவர்கள் பொருட்டு, மிகுதியாக வந்த ஆலகால விடத்தை யுண்டு அருள்புரிந்த சிவபெருமான் அருளிய திருக் குமாரரே! வலிமையால் வளர்ந்த அரக்கர்களின் தலைகள் பொடிபடுமாறு பகைகொண்ட மேன்மையும் சிறப்பும் உடைய வரும், மகர மீன்கள் வாழுங் கடலைக் கடைந்தவரும் நீலமேக வண்ணரும் ஆகிய நீண்ட மாயவனது மருகரே! வளர்கின்ற வாழையும் மஞ்சளும் இஞ்சியும் எந்நாளும் நெருங்கி விளங்கு கின்ற மங்கலமும் மகிமையும் மிகுந்த செந்திமா நகரில் வந்து எழுந்தருளியிருக்கின்ற பெருமிதம் உடையவரே! கூந்தல் அலைந்து குலையவும், முகத்தில் வேர்வை தோன்றி மாசுறவும், மதிமயங்குமாறு மோகங்கொண்டு கட்டுப்படுத்தியும் பஞ்சணை மீதில் சிவந்த வாயில் புன்னகை புரிந்தும் மிக்க மகிழ்ச்சியுடன், நகநுனியால் அடையாளங்களை உண்டாக்கியும், இதழமுதம் அருந்தியும் இடை வருந்த தனங்களின் மீது வீழ்ந்து உள்ள மும் வேறுபடுமாறு சேர்கின்ற பொது மகளிரது வஞ்சனை நிரம்பின இன்பத்தில் முழுகுஞ் செயல் முற்றிலும் ஒழியும்படி, உள்ளந் தெளிவு பெற்று, அன்பு கொண்டு, சிவயோக நிலையில் நின்று உருகுகின்ற ஞானமுடையவரும் மேலான சிவாகமங் களில் தெளிவு பெற்ற அறிஞருமாகிய ஞானிகள் தியானிக் கின்றதும், அழகிய சிலம்பை யணிந்திருப்பதும், குளிர்ந்த தாமரை போன்றதுமாகிய மென்மையுடைய இரு சரணங் களையும் அடியேனுக்குத் தந்தருளுவீர்.

## விரிவுரை

இத் திருப்புகழில் எட்டு வரிகள் மகளிர் மயலின் தன்மை யைக் கூறுகின்றன. அது ஒழியவேண்டுமாஞல் ஞானபண்டித னுடைய திருவருள் துணை புரியவேண்டும்.

**தெளிந்துளம் அன்பொடு:—**

காமாதி குற்றங்களால் உள்ளம் கலங்கியுள்ளது. கலங் கிய உள்ளத்தில் உண்மை விளங்காது. கலங்கிய தண்ணீ ரில் சந்திர சூரிய பிரதிபிம்பம் தெரியாது. கலங்கிய நீரைத் தேற்ருங் கொட்டையிட்டுத் தெளிய வைப்பர். அதுபோல் முருகன் திருவடித் தியானத்திஞல் உள்ளத்தைத் தெளிய வைக்க வேண்டும்.

**சிவயோகத் துருகு ஞான பரம்பர தந்திர அறிவினேர்:—**

முன் கூறியவாறு தெளிவு பெற்றவர்க்குச் சிவயோக உணர்வு வரும். ஞானிகள் அதில் நிலைத்து நின்று அவிச்

சின்ன தாரையாக இடையருது இறைவன் திருவடியை நினைத்து உருகிய உள்ளத்துடன் திகழ்வார்கள். அவர்கட்கு மிக மேலான சிவாகம வுணர்ச்சியும் உண்டாகும். அதனுல் சிவமே பொருள் எனவுணர்ந்து சிவமாந் தன்மையைப் பெறுவர். இத்தகைய அருள் ஞானிகள் கருதுகின்ற திருவடி முருகன் திருவடி.

"திரோத மலமாறு மடியார்க ளருமாதவர்
தியானமுறு பாதம் தருவாயே"
—(அவாமரு) திருப்புகழ்.

**உபயசீதள பங்கய மென்கழல் :—**

இறைவனுடைய திருவடிகள் கிரியாசக்தி ஞானசக்தியென வுணர்க. அதன் நிழல் "மாசில் வீணையும் மாலை மதியமும் வீசு தென்றலும் வீங்கிள வேனிலும், மூசுவண்டறை பொய்கையும்" போல குளிர்ந்திருக்கும். அக்குளிர்ச்சியினுல் பிறவிக் கோடை வெப்பந் தணியும்.

**இளகிடாவளர்......நஞ்சினையுண்டவர் :—**

மாலயனுதி வானவர்கள் துதி செய்து வேண்ட, சிவபெருமான் ஒருவரும் அணுக முடியாத மிகப் பெரும் வெப்பத்துடன் வெளிப்பட்ட ஆலகால விடத்தையுண்டு அருள் புரிந்தார்.

**வளர் நிசாசரர் :—**

அசுரர்கள் ஆற்றலினுல் வளர்ச்சியுற்றவர்கள். இரவில் சஞ்சரிப்பவர்கள். அதனுல் நிசாசரர் எனப்பட்டனர். நிசி—இரவு; சரர்—சஞ்சரிப்பவர்.

**சிரம் பொடிபட விரோதமிடும் குல சம்பிரமன் :—**

இந்திராதி இமையவர்க்கு என்றும் இடர் விளைவித்துக் கொண்டிருந்த முரன், மதுகைடவர் முதலிய பற்பல அசுரர்களுடைய தலை பொடிபடுமாறு திருமால் வதைத்தனர். திருமாலுக்குச் சுரரும் அசுரரும் மக்களேயாயினும் மெலியவராகிய அமரரை வலியவராகிய அசுரர் வருத்தியபோது பாரபட்சமில்லாத காத்தற் கடவுளாகிய திருமால் அமரர் பொருட்டு அசுரரைப் பகைத்து அவர்களை அழித்தனர்.

மெலிந்த மகனை வலிந்த மகன் அடிப்பானுயின் இருவருக்கும் பிதா அடிபடுகின்ற புதல்வன் பக்கம் சேர்ந்து அகாரணமாக அடித்த மற்றொரு மகனைத் தண்டிப்பார். அதனுல் இருவருக்கும் பிதாவாகிய அவருக்கு பாரபட்ச பாவம் எய்தாது. இந்த நியாயத்தை இங்கு உய்த்து உணர்க.

**வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும் இடைவிடாது நெருங்கிய மங்கல :—**

முருகவேள் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் நல்ல வளமையுள்ளதாக அமையும். அங்கே எல்லா வளங்களும் மங்கலமும் பெருகும்.

## கருத்துரை

சிவகுமாரரே! திருமால் மருகரே! செந்திலாண்டவரே! மாதர் மையலில் ஆழாது அடியேனுக்கு ஞானிகள் தியானிக்கும் திருவடியைத் தந்தருள்வீர்.

## 67

கமல மாது டனிந்திரை யுஞ்சரி
சொலவொ ணுதம டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையி லங்கையி லிருபோதேய்
களவு நூல்தெரி வஞ்சனை யஞ்சன
விழியின் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியி லிந்துமு கந்தனின் மருளாதே

அமல மாகிய சிந்தைய டைந்தகல்
தொலைவி லாதஅ றம்பொரு ளின்பமு
மடைய வோதியு ணர்ந்துத ணந்தபின் அருள்தானே
அறியு மாறுபெ றும்படி யன்பினி
னினிய நாதசி லம்புபு லம்பிடு
மருண வாடக கிண்கிணி தங்கிய அடிதாராய்

குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பரை யம்பிகை
குடிலை யோகினி சண்டினி குண்டலி யெமதாயி
குறைவி லாளுமை மந்தரி யந்தரி
வெகுவி தாகம சுந்தரி தந்தருள்
குமர மூஷிக முந்திய ஐங்கர கணராயன்

மமவி நாயக னஞ்சுமிழ் கஞ்சுகி
அணிக ஜானன விம்பனொ ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தரு ளிளையோனே

வளரும் வாழையு மஞ்சளு மிஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

## பதவுரை

குமரி=என்று மகலாத இளம் பருவத்தையுடைய கன்னிப் பெண்ணும், காளி=கரிய நிறத்தையுடையவளும், பயம் ஹரி=அடியவர் பயத்தை நீக்குபவளும், சங்கரி=ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்ப வளும், கவுரி=பொன்னிறத்தை யுடையவளும், நீலி=நீல நிறத்தை யுடையவளும், பரம்பரை=பெரிய பொருள்களுக்கெல்லாம் பெரிய பொருளாக வீற்றிருப்பவளும், அம்பிகை=உலகமாதாவும், குடிலை=சுத்தமாயையும், யோகினி=யோகினி யென்னுந் தெய்வமாக இருப்ப வளும், சண்டினி=பாவிகளுக்குக் கொடியவளாகத் திகழ்பவளும், குண்டலி=குண்டலி சத்தியும், எமது ஆயி=எங்கள் தாயும், குறைவு இலாள்=குறைவில்லாதவளும், உமை=உமாதேவியும், மந்தரி=சுவர்க்கலோகத்தை யருள்பவளும், அந்தரி=முடிவில்லாதவளும், வெகுவித ஆகம சுந்தரி=பலவகைப்பட்ட சிவாகமங்களால் துதிக்கப் படும் கட்டழகுடையவளுமாகிய பார்வதிதேவியார், தந்தருள்=பெற் றருளிய, குமர=புதல்வரும், மூஷிகம் உந்திய ஐங்கர=பெருச்சாளி யின்மீது எழுந்தருளியவரும் ஐந்து கரங்களையுடையவரும், கணராயன்=கணங்களுக்கெல்லாந் தலைவரும், மம விநாயகன்=எமது விநாயகக் கடவுளும்,நஞ்சு உமிழ் கஞ்சுகி=விஷத்தைக் கக்கும் சர்ப்பத்தை, அணி கஜ ஆனன=ஆபரணமாகத்தரித்துக்கொண்டுள்ள யானை முகத் தையுடையவரும், விம்பன்=ஒளியை யுடையவரும், ஒரு அம்புலி மவுலியான்=ஒப்பற்ற பிறைச் சந்திரனைச் சடைமுடியில் தரித்துக்கொண் டுள்ளவருமான விநாயகமூர்த்தி, உறு சிந்தை உகந்து அருள்=மிகவும் மனமகிழ்ந்து அருளத்தக்க, இளையோனே=இளைய பிள்ளையாரே! வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும்=(நீர்வளத்தால்) செழித்து வளர்ந்துள்ள வாழையும் மஞ்சளும் இஞ்சியும், இடைவிடாது நெருங் கிய=இடைவெளியின்றி நெருங்கியுள்ளதும், மங்கல=மங்கலத்தை யுடையதும், மகிமை=மகிமையுடையதும், மா நகர்=பெரிய நகரமு மாகிய, செந்திலில் வந்து உறை=செந்திலம்பதியில் (அடியார் பொருட்டு) வந்து எழுந்தருளியுள்ள, பெருமாளே=பெருமையின்மிக்க வரே!, கமல மாதுடன்=தாமரைமீது வாழுகின்ற வாணிதேவியுடன், இந்திரையும்=இலக்குமியையும், சரிசொல ஒணாத=அழகில் நிக ரென்று சொல்லுதற்கொணாத பேரழகுடைய, மடந்தையர்=மாதர் களுடைய, சந்தன களப சீதள கொங்கையில்=சந்தனத்தையும் கலவைச் சாந்தையும் பூசிக்கொண்டுள்ள குளிர்ந்த தனங்களின்மீதும்,

அம் கையில் = அழகிய கரங்களிலும், இருபோது ஏய் = இரவுபகலாகிய இரு வேளைகளிலும் பொருந்தியிருந்து, களவு நூல்தெரி = மதன நூல் களைத் தெரிந்தும், வஞ்சனை = வஞ்சனையைச் செய்வதுமாகிய, அஞ்சன விழியில் = மை தீட்டிய கண்களிலும், மோகித கந்த சுகந்தரு = மோகத்தை யுண்டுபண்ணுவதும் வாசனையுடையதும் சுகத்தைத்தருவ துமாகிய, கரிய ஓதியில் = கரிய நிறத்தையுடைய கூந்தலிலும், இந்து முகந்தனில் = சந்திரனைப் போன்ற முகத்திலும், மருளாதே = அவை களைக்கண்டு மயக்கத்தை யடையாமல், அமலம் ஆகிய சிந்தை யடைந்து = மலம் நீங்கிய பரிசுத்தமாகிய சிந்தையையடைந்து, அகல் தொலைவு இலாத = விசாலமானதும் அழிவில்லாததுமாகிய, அறம் பொருள் இன்பமும் = அறம் பொருள் இன்பம் என்கின்ற புருஷார்த் தங்களும், அடைய ஓதி உணர்ந்து = என்னை வந்து அடையும்படி அறிவு நூல்களை ஓதியுணர்ந்து, தணந்தபின் = ஆசைகளின் கட்டுநீங்கியபின், அருள்தானே அறியுமாறு பெறும்படி = தேவரீரது திருவருளின் எளி மையைத் தானுகவே அறியும் வழியை அடியேன் அடையுமாறு, இனியநாத சிலம்பு புலம்பிடு = இனிமையான ஓசையையுடைய சிலம்பு சப்திக்கின்றதும், அருண = சிவந்த நிறத்தையுடையதும், ஆடக கிண் கிணி தங்கிய = பொன்னுலாகிய சதங்கைகள் அணியப்பெற்றதுமாகிய, அடி அன்பினின் தாராய் = திருவடியை அன்போடு தந்தருள்வீர்.

## பொழிப்புரை

என்றும் இளமையாகவே இருக்கும் கன்னிப்பெண்ணும், துர்க்கையும், அடியவர்களது பயத்தை யகற்றுபவளும், ஆன்மாக்களுக்கு இன்பத்தை வழங்குபவளும், பொன் னிறத்தை யுடையவளும், நீல நிறத்தையுடையவளும், பராத் பரியும், உலக மாதாவும், சுத்தமாயையும், யோகினியென்னுந் தேவதையாக இருப்பவளும், பாவிகளுக்குப் பயத்தையுண்டு பண்ணுபவளும், குண்டலிசத்தியும், ஆன்மாக்களாகிய எங்க ளுடைய அன்னையும், குறைவில்லாதவளும், உமாதேவியும், சுவர்க்கலோகத்தை நல்குபவளும், முடிவில்லாதவளும், பல வகைப்பட்ட சிவாகமங்களால் துதிக்கப்படுகின்ற கட்டழ குடையவளுமாகிய பார்வதியம்மையார் பெற்றருளிய குமார ரும், பெருச்சாளியின்மீது எழுந்தருளி வருபவரும், ஐந்து திருக்கரங்களையுடையவரும், கணங்களுக்குத் தலைவரும், எமது விநாயக மூர்த்தியும், விஷத்தைக் கக்கும் பாம்பை யாபரணமாகத் தரித்துக் கொண்டவரும், யானை முகத்தை யுடையவரும், ஒப்பற்ற பிறைச் சந்திரனைத் தரித்த சடா மவுலியை யுடையவருமாகிய மகா கணபதி மிகவும் மகிழ்ந் தருளுகின்ற இளைய பிள்ளையாரே! நீர்வளத்தால், வாழையும் மஞ்சளும் இஞ்சியும் இடைவிடாது நெருங்கியுள்ளதும், மகிமை யும் இலக்குமிகரமும் உடையதுமாகிய திருச்செந்தூர் என்னும்

பெரிய தலத்தில் அடியார் பொருட்டு வந்து எழுந்தருளியுள்ள பெருமையின் மிக்கவரே! கலைமகளும் மலர்மகளும் நிக ரென்று சொல்லுதற்கொண்ணாத பேரழகுடைய மகளிரது சந்தனக் கலவைச் சாந்துகளையணிந்துள்ள குளிர்ந்த தன பாரங்களிலும், அழகிய கரங்களிலும், இரவு பகலாய்ப் பொருந்தியிருந்து மதன நூல்களை யுணர்ந்து வஞ்சனையைச் செய்யும் மைதீட்டிய கண்களிலும், மோகத்தைத் தருவதும் பரிமளத்தையுடையதும் சுகத்தைத் தருவதுமாகிய கரிய கூந் தலிலும், சந்திரனையொத்த முகாரவிந்தத்திலும் மயக்கத்தை யடையாமல், மலநீங்கிய பரிசுத்தமான சிந்தையை யடைந்து, பரந்துள்ளதும் அழிவற்றதுமாகிய அறம்பொருள் இன்பம் என்ற புருஷார்த்தங்களை அடைய அறிவு நூல்களை ஓதி யுணர்ந்து (ஆசைக்கட்டுகளினின்றும்) நீங்கியபின், தேவரீர் திருவருளைத் தானாகவே அறியும் வழியை அடையுமாறு இனிய நாதங்களோடு கூடிய சிலம்புகள் ஒலிப்பதும், சிவந்த நிறத்தோடு கூடியதும், பொன்னாலாகிய கிண்கிணிகளை யணிந்துள்ளதுமாகிய திருவடிகளை அடியேனுக்கு அன்புடன் தந்தருள்வீர்.

## விரிவுரை

**அமலமாகிய சிந்தை :—**

ஆணவ அழுக்கு நீங்கப்பெற்ற படிகம் போன்ற தூய மனத்தை யடைந்தவர்க்கே இறைவன் திருவடிப்பேறு உண் டாகும். அத்தகைய அமலமாகிய சிந்தையடைந்தவர்க்கு அறம் பொருள் இன்பமாகிய புருஷார்த்தங்களுண்டாகும்.

**இனிய நாத சிலம்பு :—**

முருகப் பெருமான் ஒருவராலும் எதிர்க்கவொண்ணாத சூராதி யவுணர்களையழித்த வீரமூர்த்தியாதலால் அவருடைய திருவடிகளில் வீரச்சிலம்புகள் இனிமையாக ஒலித்துக்கொண் டிருக்கின்றன.

**குமரி :—**

உமாதேவியார் எல்லா உலகங்களையும் ஈன்றும், என்றும் குமரியாகவே விளங்குகின்றனர்.

**பயங்கரி :—**

அடியாரது பயத்தை யகற்றுபவர்.

"இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபடர் எனதுயிர் கொளவரின்
யானேங்குதல் கண்டெதிர் தானேன்றுகொளுங்குயில்"

—திருவகுப்பு. (2)

**எமதாயி :—**

ஆன்மாக்களையெல்லாம் ஒருங்கே ஈன்ற உலகமாதா வாதலால் எங்கள் தாய் என்றனர்.

"உதரகமலத்தினிடை முதியபுவனத்ரயமும்
உகமுடிவில் வைக்கும் உமையாள்" —திருவகுப்பு. (1)

**வெகு விதாகம சுந்தரி :—**

சகல வேதாகம மந்திர வடிவாய் அம்பிகை விளங்குகின்றார்.

"தமருக பரிபுர வொலிகொடு நடநவில்
சரணிய சதுர்மறை
தாதாம்புய மந்திர வேதாந்த பரம்பரை" —திருவகுப்பு. (2)

"அக்ஷர லக்ஷ ஜபத்தர் க்ரமத்திடு
சக்ர தலத்தி த்ரியக்ஷி சடக்ஷரி" —திருவகுப்பு. (6)

**சிந்தையுகந்தருள் இளையோனே :—**

விநாயகப் பெருமான் தமது தம்பியாகிய குமாரக் கடவுளை மனமகிழ்ந்து தழுவி இன்புறுவர் என்பதனை திருப்போரூர்ச் சந்நிதிமுறையில் சிதம்பர சுவாமிகள் கூறுமாறு காண்க.

ஆதரவா யடியவர்க் கருள்சுரக்கு மைங்கரத்தோன் அன்பு கூர்ந்து
மாதவமே எனவழைத்துப் புயத்தணைக்கத் திருவுளத்து மகிழும் கோவே
ஏதமுறு தடியேனைக் காத்தளிப்ப துன்கடனு மிசைப்ப தென்னே
போதமலர் கற்பகமே போரூர்வா ழாறுமுகப் புனித வேளே.

## கருத்துரை

உமாதேவியாரருளிய விநாயகப் பெருமானது இளைய சகோதரரே! செந்தில் வாழும் பெருமானே! பெண்களது அவயவங்களில் மயங்காது, தூய சிந்தையடைந்து, புருஷார்த்தங்களைப் பெற்று, தேவரீரது திருவருளையடையுமாறு இனிய நாத சிலம்பு புலம்பிடும் திருவடித் தாமரையைத் தந்தருள்வீர்.

## 68

அவனிபெ றுங்தோட் டம்பொற்
குழையட ரம்பாற் புண்பட்
டரிவையர் தம்பாற் கொங்கைக் கிடையேசென்

றணைதரு பண்டாட் டங்கற்
றுருகிய கொண்டாட் டம்பெற்
றழிதரு திண்டாட் டஞ்சற் றொழியாதே

பவமற நெஞ்சாற் சிந்தித்
திலகுக டம்பார்த் தண்டைப்
பதயுக ளம்போற் றுங்கொற் றமுநாளும்

பதறிய அங்காப் பும்பத்
தியுமறி வும்போய்ச் சங்கைப்
படுதுயர் கண்பார்த் தன்புற் றருளாயோ

தவநெறி குன்றுப் பண்பிற்
றுறவின ருந்தோற் றஞ்சத்
தனிமல ரஞ்சார்ப் புங்கத் தமராடி

தமிழினி தென்காற் கன்றிற்
றிரிதரு கஞ்சாக் கன்றைத்
தழலெழ வென்றோர்க் கன்றற் புதமாகச்

சிவவடி வங்காட் டுஞ்சற்
குருபர தென்பாற் சங்கத்
திரள்மணி சிந்தாச் சிந்துக் கரைமோதும்

தினகர திண்டேர்ச் சண்டப்
பரியிட றுங்கோட் டிஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே.

### பதவுரை

தவநெறி குன்று பண்பில் = தவநெறியில் குறைவு இல்லாத சிறந்த பண்பினையுடைய, துறவினரும் தோற்று அஞ்ச = துறவிகளும் தோல்வியுற்று அஞ்சுமாறு, தனிமலர் அஞ்சு ஆர் புங்கத்து அமர் ஆடி = ஒப்பற்ற ஐந்து மலர்கள் நிறைந்த குவியலைக்கொண்டு போர் புரிந்து, தமிழ் இனி தென் கால் கன்றில் திரிதரு = தமிழ் போன்ற இனிமையுடைய இளமை பொருந்திய தென்றல் காற்றின் மீது ஏறி உலாவு

கின்றவனும், கஞ்சா கன்றை = திருமகள் புதல்வனும் ஆகியமன்மதனை, தழல்எழ வென்றூர்க்கு அன்று = நெருப்பு எழ எரித்துவென்ற சிவபெருமானுக்கு அந்நாளில், அற்புதமாக சிவவடிவம் காட்டும் = அற்புதமான பேரின்ப உண்மைப் பொருளை எடுத்துக் காட்டி உபதேசித்த, சற்குருபர = உத்தமமான குருநாதரே ! தென்பால் = தென் திசையில், சங்க திரள்மணி சிந்தா சிந்து கரைமோது = சங்குகளின் கூட்டங்கள் முத்து மணிகளைச் சிந்துகின்ற கடலானது கரையில் மோதுகின்றதும், தினகர திண்தேர் = சூரியனுடைய வலிமை மிக்க தேரிலுள்ள, சண்டபரி இடறும் கோட்டு இஞ்சி = வேகமுள்ள குதிரைகள் இடறுகின்ற சிகரங்களுடைய மதில் சூழ்ந்துள்ளதுமான, திருவளர் செந்தூர் = மேன்மை வளர்கின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, கந்த = கந்தப் பெருமானே ! பெருமாளே = பெருமையின் மிக்கவரே ! அவனி பெறும் தோட்டு அம் குழை அடர் = பூமியை விலை மதிக்கும்படியான உயர்ந்த தோடாகிய அழகிய பொன்குழை விளங்கும் செவிவரை நீண்டுள்ள, அம்பால் புண்படட்டு = கண்களாகிய கணைகளால் புண்பட்டு, அரிவையர் தம்பால் கொங்கைக்கு இடையே சென்று = பெண்களுடைய தனங்களுக்கு இடையில் சென்று, அணைதரு பண்டாட்டம் கற்று = தழுவுகின்ற பழைய காமலீலைகளைக் கற்றுக்கொண்டு, உருகிய கொண்டாட்டம் பெற்று = உள்ளம் உருகிய பெரு மகிழ்ச்சியைப் பெற்று, அழிதரு திண்டாட்டம் சற்று ஒழியாதே = பின்னர் அழிவையடைகின்ற திண்டாட்டம் கொஞ்சமும் விலகாமல் இருந்து வருத்துகின்றது; பவம் அற நெஞ்சால் சிந்தித்து = பிறப்பு ஒழிய வேண்டி மனதில் நன்கு சிந்தனை செய்து, இலகு கடம்பு ஆர் = அழகிய கடப்ப மலர்கள் நிறைந்து, தண்டை = தண்டையணிந்து விளங்கும், பத யுகளம் போற்றும் கொற்றமும் = இருதிருவடிகளை வணங்கும் உறுதியும், நாளும் பதறிய அங்காப்பும் = நாள்தோறும் (தேவரீருடைய திருவருளை நாடிப்) பதறுகின்ற விருப்பமும், பக்தியும் = அன்பும், அறிவும் = அறிவும், போய் = இல்லாமல் விலகி, சங்கை படு துயர் கண்பார்த்து அன்புற்று அருள்வாயே = அடியேன் துன்பத்தில் வருந்துவதைத் தேவரீர் திருக்கண்களால் பார்த்தருளி அன்புவைத்துக் காப்பாற்றுவீர்.

## பொழிப்புரை

தவநெறியில் தளர்ச்சியில்லாத நற்பண்புடைய துறவிகளும் தோல்வியுற்று அஞ்சுமாறு ஒப்பற்ற ஐந்து வகையான [illegible] செய்து தமிழ் போன்ற மலர்க் கணைகளைப் பொழிந்து [illegible] ஆரோகணித்து [illegible] இனிய தென்றல் காற்றின்மீது ஆரோகணித்து [illegible] திருமகள் புதல்வனாகிய மன்மதன் நெருப்புற்று எரியுமாறு வென்றசிவபெருமானுக்கு, அந்நாளில் அற்புதமாக, பேரின்பப் பொருளை எடுத்துக் காட்டி உபதேசித்த நல்ல குருபரரே !

தென் திசையில் சங்குகள் முத்துமணிகளைச் சொரிகின்ற கடல் கரையில் மோதுவதும், சூரியனுடைய வலிமை மிக்க தேரில் பூட்டிய வேகமுள்ள குதிரைகள் இடறுகின்ற சிகரங்களோடு கூடிய மதிலையுடையதும் மேன்மை வளர்வதுமாகிய திருச் செந்திலம்பதியில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுளே! பெருமிதமுடையவரே! பூமண்டலத்தை விலை மதிக்கத்தக்க தோடாகிய அழகிய பொற்குழையுடன் கூடிய காது வரை நீண்டுள்ள கண்களாகிய கணைகளால் புண்பட்டு, விலைமகளிர் பால் அவருடைய தனங்களுக்கு இடையே சென்று தழுவுகின்ற பழமையான இன்ப லீலைகளைக் கற்று உருகும்படியான மகிழ்ச்சியைப் பெற்று, அதனால் அழிவடைகின்ற துன்பமானது சிறிதும் நீங்காமல், பிறப்பு நீங்கும்படி மனதில் சிந்தித்து, அழகிய கடப்ப மலர் நிறைந்த தண்டையணிந்த உமது திருவடிகள் இரண்டையும் போற்றுகின்ற உறுதியும், நாள் தோறும் திருவருள் பெறுவதில் பெரு விருப்பும், பக்தியும் ஞானமும் போய், துன்புறுகின்ற நிலைமையை தேவரீர் திருக்கண்ணால் பார்த்தருளி அன்பு வைத்துக் காப்பாற்றுவீர்.

## விரிவுரை

**அவனி பெருந் தோட்டம் பொற் குழை :—**

விலைமகளிர் அணிகின்ற தோடு நல்ல விலையுயர்ந்ததாக உலகத்தை விலைமதிக்கத்தக்கதாக இருக்கும் என்று கூறுகின்றது. இது உயர்வு நவிற்சியணி என வுணர்க. "அவனி பெறும் தோடு அம் பொன் குழை" எனப் பதப்பிரிவு செய்க. குழை என்பது தானியாகு பெயராகச் செவியைக் குறிக்கின்றது எனினும் பொருந்தும்.

**குழையடர் அம்பாற் புண்பட்டு :—**

காதுவரை நீண்ட கண்களால் ஆடவர் புண்படுவர். இங்கு அம்பு என்பது உவம ஆகுபெயராகக் கண்ணைக் குறிக்கின்றது.

**அழிதரு திண்டாட்டஞ்சற் றொழியாதே :—**

பொதுமகளிர் வலைப்பட்டு நிலைகுலையும் தன்மை ஒழியவில்லையே என்றும் அதை யொழிப்பது மிகவும் கடினமானது என்றும் குறிப்பிடுகின்றார். "அநுபவம் இது சற்றும் விடவோ இயலாதியலாதே" என்று 'உமையெனும்' என்ற திருப்புகழில் கூறுகின்றார்.

**பவமற நெஞ்சாற் சிந்தித்து :—**

நாம் எண்ணுகின்ற எண்ணங்கட்கு அளவில்லை. "உண்பது நாழி உடுப்பது நான்கு முழம் எண்பது கோடி நினைந்து

எண்ணுவன" என்பார் ஔவையார். எண்ணுகின்ற எண்ணங்களில் தலையாய எண்ணம் பிறவிப் பிணியைத் தொலைக்கும் நெறி இது எனத் தீரக்குறித்து நிற்பதுவேயாகும். இப்படிப் பிறவியகலும் வழியைப் பற்றிச் சிந்திப்பவனே கடைத்தேறுவான்.

**பதயுகளம் போற்றுங் கொற்றமும் :—**

முருகனுடைய திருவடியை யன்றி வேறு ஒன்றையும் பொருளாக எண்ணாத வீர வுணர்ச்சி.

**நாளும் பதறிய அங்காப்பும் :—**

அங்காப்பு—வாய்பிளத்தல். திருவருளை நாடி அது கிடைக்கும் நாள் என்றோ என்று ஏங்கி வாய் பிளந்து நிற்றல். இது திருவருளைப் பெறுவதில் உள்ள ஏக்கத்தைக் குறிக்கின்றது.

**பக்தியும் அறிவும் போய் :—**

இறைவனை யடைவதற்குரிய நெறிகள் பலவாயினும் அவற்றுள் தலைசிறந்தவை பக்தியும் ஞானமும் என்ப. பக்தி என்பது அன்பு; அறிவு—ஞானம். "உருவாய் அருவாய் உளதாய்..." இல்லை — "உருதுஞ் செயல் தந்து உணர்வு என்று அருள்வாய்" என்பது கந்தரநுபூதி. உருதுவது பக்தி, உணர்வது ஞானம்.

"உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே" —அப்பர்.

இங்கு உறவு என்பது பக்தியைக் குறிக்கின்றது.

பெண்மயல் மீறிய ஒருவனுக்கு இறைவன் திருவடியில் உறுதியும், அருள்தாகமும், பக்தியும், ஞானமும் விலகிப் போகும்.

**சங்கைப்படுதுயர் கண்பார்த்தன்புற் றருள்வாயே :—**

இவ்வாறு ஆசை நோய்வாய்ப்பட்டு நற்குணங்கள் நீங்கப் பட்டு வேதனைப்படும் அடியேனை "முருகா! நின் கடைக் கண்ணால் பார்த்தருளிக் காத்தருளல் வேண்டும்" என்று அருணகிரிநாதர் வேண்டுகின்றார்.

நம்மிடத்தில் என்ன என்ன குறைகள் உளவோ அவற்றையெல்லாம் உணர்ந்து இறைவனிடம் கூறி முறையிட்டால் இறைவன் அக்குறைகளை யகற்றி யருள்புரிவான். மண்ணில் விதை யிட்டால் முளைப்பது போல், இறைவனிடத்தில் விண்ணப்பித்தால் அவ்விண்ணப்பத்தை இறைவன் நிறைவேற்றி

வைப்பான், பல்வேறு குறைகளையுடைய ஆன்மாக்கள் எப்படி எப்படி முறையிட வேண்டுமோ அந்தந்த வண்ணமாகப் பற்பல விண்ணப்ப வடிவில் அருணகிரியார் பற்பல பாடல்களைப் பாடியருளினர். அத்தனையும் நம் பொருட்டே எனவுணர்க.

**தவநெறி குன்றாப் பண்பில் துறவினர்:—**

தவநெறியில் ஒரு சிறிதும் குறைவுபடாத இனிய பண்புடைய துறவிகள். காசிபர், விசுவாமித்திரர் போன்ற முனிவர்கள்.

**துறவினருந் தோற்றஞ்ச :—**

கடுந் துறவிகள் கூட மதிமயங்குமாறும் உறுதியில்வழுவுமாறும் மலர்க்கணைகளைச் சொரிந்து மன்மதன் வெற்றி பெறுவன். தேவரும் முனிவரும் பிறரும் மன்மதனுடைய கணைகளுக்கு ஆற்றாது தோற்று அலைந்தனர்.

**தனிமலர் அஞ்சார்ப்புங்கத் தமராடி :—**

தனிமலர் அஞ்சு ஆர் புங்கத்து அமர் ஆடி. ஒப்பற்ற மலர்க்கணைகள் ஐந்துங் குவிந்த குவியலைக் கொண்டு மன்மதன் போர் புரிவான். ஆர்—நிறைவு; புங்கம்—கூட்டம்.

**தமிழினி தென்காற் கன்றிற் றிரிதரு :—**

தமிழ்—இனிமை. இனி—இனிமை. கடைக்குறை. தென் காற் கன்று—இளந் தென்றல் காற்று. மன்மதன் தென்றல் காற்றில் ஆரோகணித்து உலாவுவான்.

"இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்" —நிகண்டு.

**கஞ்சாக் கன்று :—**

கஞ்சை—திருமகள். கஞ்சம்—தாமரை; தாமரை மலரில் வாழ்வதனால் இலக்குமி கஞ்சை எனப்பட்டனள். இலக்குமியின் மகன் மன்மதன். இவன் சிவபெருமானது தவநிலையை மாற்றுதற்கு முயன்றபோது அவருடைய அனற் கண்ணால் எரிந்து, இரதி வேண்ட உய்ந்து அநங்கனாயினான்.

**சிந்துக்கரை மோதும் :—**

சிந்து—கடல். கடலின் அலைகள் வந்து திருமதிலின் மீது மோதுவதால் திருச்சீரலைவாய் எனப்படும்.

**தினகர தின்டேர்ச் சண்டப் பரியிடறுங் கோட்டிஞ்சி :—**

தினகரன்—சூரியன். தினம்—நாள்; கரம்—செய்வது; நாளைச் செய்கின்றவன் சூரியன். சூரியனுடைய தேரில் பூட்டி

யுள்ள வேகமிக்க குதிரைகள் இடறும் அளவுக்கு உயர்ந்த சிகரங்களுடன் கூடிய திருமதில்.

இஞ்சி—மதில். இது உயர்வு நவிற்சியணி. உயர்ந்த மதில் என்பது பொருள்.

**திருவளர் செந்தூர் :—**

திருமகள் கடாட்சம்—மேன்மை—பெருமை முதலிய யாவும் எப்பொதும் வளர்ந்து கொண்டேயிருக்கும் திருத்தலம் திருச்செந்தூர்.

## கருத்துரை

சிவகுருவே! செந்திலாண்டவரே! மாதர் மயலுற்று பக்தி ஞானமின்றி வருந்தும் அடியேனை அருட் பார்வையால் ஆண் டருளுவீராக.

## 69

தொடரிய மன்போற் றுங்கப்
படையவ ளேங்தோட் டுந்துட்
டரையிள குந்தோட் கொங்கைக் கிடுமாயத்

துகில்விழ வுஞ்சேர்த் தங்கத்
துளைவிர குஞ்சூழ்த் தண்டித்
துயர்விளை யுஞ்சூட் டின்பத் தொடுபாயற்

கிடைகொடு சென்றீட் டும்பொற்
பணியரை மென்றேற் றங்கற்
றனையென இன்ருேட் டென்றற் கிடுமாதர்க்

கினிமையி லொன்ருய்ச் சென்றுட்
படுமன முன்ருட் கன்புற்
றியலிசை கொண்டேத் தென்றுட் டருவாயே

இடிதுத வங்கூர்க் குஞ்சற்
புருடரும் மைந்தேக் கம்பெற்
றுயர்வுற நின்ருர்த் தங்கட் கிணையேயும்

நிகரில்ம தன்தேர்க் குன்றற்
றெரியில்வி ழுந்தேர்ப் பொன்றச்
சிறிதுநி னைந்தாட் டங்கற் றிடுவார்முன்

திடமுறு அன்பாற் சிந்தைக்
கறிவிட முஞ்சேர்த் தும்பர்க்
கிடர்களை யும்போர்ச் செங்கைத் திறல்வேலா
தினவரி வண்டார்த் தின்புற்
றிசைகொடு வந்தேத் திஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே.

## பதவுரை

நெடிது தவம் கூர்க்கும்=நீண்ட தவத்தை மிகுதியாகப் புரியும், சற்புருடரும்=உத்தம மனிதர்களும், நைந்து ஏக்கம் பெற்று அயர்வு உற=உள்ளத்தின் உறுதி நலிந்து ஏக்கமுற்றுத் தளர்ச்சி யடையும்படி, அங்கண் நின்று ஆர்த்து கணை ஏவும்=அவ்விடத்தில் நின்று ஆரவாரம் புரிந்து மலர்க்கணைகளை விடுகின்ற, நிகர் இல் மதன்=சமானமில்லாத மன்மதனுடைய, தேர் குன்று அற்று எரியில் விழுந்து ஏர் பொன்ற= மலைபோன்ற தேர் ஒடிந்து நெருப்பில் விழுந்து அழகு அழியுமாறு, சிறிது நினைந்து ஆட்டம் கற்றிடுவார் முன்=சற்று நினைந்து திருவிளையாடலைப்புரிந்த சிவபெருமானுடைய திருமுன், திடமுறு அன்பால்= உறுதியுள்ள அன்புடன், சிந்தைக்கு அறிவிடமும் சேர்த்து=சிவமூர்த்தியின் திருவுள்ளத்தில்[ஓம் என்னும் தனி மந்திரத்தின் உட்பொருளை] உபதேசித்து, உம்பர்க்கு இடர் களையும் போர்=தேவர்களது துன்பம் நீங்குமாறு போர்புரிந்த, செங்கை திறல் வேலா=சிவந்த திருக்கரத்தில் வேலை ஏந்தியவரே! தினவரி வண்டு ஆர்த்து இன்புற்று=நாடோறும் இசைப் பாட்டுக்களை வண்டுகள் ஒலித்துமகிழ்ச்சியடைந்து, இசை கொடுவந்து ஏத்து=இசையோடு வந்து துதிக்கின்றதும், இஞ்சி=திரு மதில்கள் சூழ்ந்திருப்பதும், திருவளர்=மேன்மை வளர்கின்றதுமாகிய; செந்தூர் கந்த=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள கந்தப் பெருமானே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தொடர் இயமன் போல்=தொடர்ந்து வருகின்ற கூற்றுவனைப்போல், துங்க படையை வளைந்து ஒட்டும்=வெற்றியுடைய (காமனுடைய) ஆயுதங்களை வளைத்துச் செலுத்துகின்ற, துட்டரை=துட்டர்களாகிய மாதர்களும், இளகும் தோள்=தழைத்துள்ள தோள்மீதும், கொங்கைக்கு இடு=தனங்களின்மீதும் இட்டுள்ள, மாய துகில் விழவும்=மாயத்தைத்தரும் ஆடை சரிந்து விழவும், அங்கத்து சேர்த்து=மீளவும் அதை எடுத்து உடம்பில் சேர்த்து, உளை விரகும் சூழ்த்து=வருத்தஞ் செய்கின்ற சூழ்ச்சிகளைச் செய்து, அண்டி துயர்விளையும்=நெருங்கி வந்து துன்பத்தை விளைவிக்கும், சூட்டு இன்பத்தொடு=புதிய இன்பத்துடன், பாயல் கிடைகொடு சென்று=படுக்கையில் கொண்டுபோய், ஈட்டும் பொன் பணியரை=பொன்னுபரணங்களைச் சேர்க்கின்றவர்களும்,

(தமக்கு இணங்காதவரை நோக்கி), மென்தேற்றம் கற்றனை என=மெல்ல தெளிவு கற்றுவிட்டனை போலும் என்று கூறி, இன்று ஓடு என்று=இன்றே ஓடிப்போ என்றும் சொல்லி, அற்கிடு மாதர்க்கு=அன்பு சுருங்குபவருமாகிய விலைமகளிர்கட்கு, இனிமையில் ஒன்றாய்ச் சென்று=இனிமையுடன் ஒன்றுபட்டுச் சென்று, உட்படுமனம்=உட்படுகின்ற மனமானது, உன்தாட்கு அன்புற்று=தேவரீருடைய திருவடிகட்கு அன்புகொண்டு, இயல் இசைகொண்டு ஏத்துஎன்று=இயல் இசை என்ற தமிழினைக் கொண்டு துதிப்பாயாக என்று, உள் தருவாயே=உள்ளத்தைத் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

நீண்ட தவத்தை மிகுதியாகச் செய்யும் உத்தம மனிதருங் கூட உள்ளம் நொந்து ஏங்கி உறுதி குலைந்து தளர்வுறுமாறு, அவ்விடத்தில் ஆரவாரித்து நின்று மலர்க்கணைகளை ஏவும் ஒப்பற்ற மன்மதன், மலை போன்ற தேருடன் அழிந்து நெருப்பில் விழுந்து அழகுடன் அழியும்படி சிறிது நினைந்து திருவிளையாடலைப் புரிந்த சிவபெருமான் திருமுன் உறுதியுடன் அன்போடு அவர் திருவுள்ளம் மகிழ பிரணவோபதேசம் புரிந்து, தேவர்களின் துன்பம் நீங்கும்படி போர் புரிந்த வலிமையுடைய வேலாயுதத்தைச் சிவந்த திருக்கரத்தில் ஏந்தியவரே! தினந்தோறும் இசைப்பாட்டுகள் பாடும் வண்டுகள் ஒலித்து இன்பமுடன் இசையோடு வந்து துதிக்கின்றதும், திருமதில்கள் சூழ்ந்ததும் மேன்மை வளர்கின்றதுமாகிய திருச்செந்தூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளே! பெருமிதமுடையவரே! தொடர்கின்ற இயமனைப்போல் வந்து காமனது ஆயுதங்களை வளைத்துச் செலுத்தும் துட்டர்களும், வளப்பமான தோள் மீதும் தனங்களின் மீதும் உள்ள மாயத்தைச் செய்யும் ஆடையானது அகன்று விழவும், மீளவும் எடுத்து உடம்பில் சேர்த்து, உள்ளம் உளையுமாறு வஞ்சனைச் சூழ்ச்சிகளைச் செய்து நெருங்கி, துன்பத்தை விளைவிக்கும், புதிய இன்பத்துடன் கூடிய படுக்கையிற் கொண்டுபோய்ச் சேகரிக்கின்ற பொன் ஆபரணங்களை யுடையவர்களும், (தமக்கு இணங்காதவரைப் பார்த்து) "மெல்ல தெளிவு பெற்றனை போலும்; இன்றே ஓடிப்போ?" என்று கூறி விரட்டி அன்பு சுருங்குபவர்களுமாகிய பொதுமகளிரிடம் இனிமையுடன் ஒன்றுபட்டுச் சென்று அவர் வசப்படுகின்ற மனமானது தேவரீருடைய திருவடிகளிடம் அன்புற்று இயலிசைத் தமிழால் ஏத்துக என்று அடியேனுக்கு உளப்பண்பை அருளுவீராக.

## விரிவுரை

இப்பாடலில் பொதுமகளிரின் இயல்புகளை எடுத்துக் கூறுகின்றனர்; அவர் வலைப்பட்டார் மீளும் பொருட்டும்,

மற்றையோர் அவ் வலைப்படாதிருக்கும் பொருட்டும். ஆன்றோர்க்கு அது கடன் என்று உணர்க. திருவள்ளுவரும் தாம் பாடியருளிய சுருங்கிய அறநூலாகிய திருக்குறளிலே "வரைவின் மகளிர்" என்று அதிகாரம் அமைத்து அவர்களது நட்பு ஏற்படாவண்ணம் தடுத்தருளுகின்றார்.

**தொடரியமன்போல் :—**

இயமன் உயிர்களைத் தொடர்வதுபோல் பொதுமகளிர்களும் இளைஞர்களைத் தொடர்வார்கள். இயமன் தொடர்ந்த உயிர்கட்கு உய்வில்லை. அதுபோல் பொதுமகளிரால் தொடரப்பட்ட ஆடவர்கட்கும் உய்வில்லை. மிகப் பெரிய அபாயமான தொடர்பு என உணர்க.

**துங்கப்படையை வளைந்தோட்டும் துட்டரை :—**

துங்கம்—வெற்றி ; தங்கள் சாகச வித்தைகளால் மன்மதனுடைய கணைகளைச் செலுத்தி ஆடவரை மயக்குவர். அதனால் துட்டர் என்றார். துட்டருக்கு என்று வருவித்துக் கொள்ளவும், சந்தத்தை நோக்கி நான்காம் வேற்றுமை உருபு மயங்கி இரண்டாம் வேற்றுமை உருபு பெற்று வந்தது.

எட்டாவது வரியிலும் இதே வண்ணம் "பொற்பணியரை" என்று வருகின்றது. அங்கேயும் இதேபோல் "பொற்பணியற்கு" என்று கொள்ளவும்.

**இளகுந்தோட் கொங்கைக் கிடுமாயத் துகில்விழ :—**

பொதுமகளிர் வீதிகளில் நின்று இளைஞரை மயக்கும் பொருட்டு துகில் சரிய நிற்பர்.

**சேர்த்து அங்கத்து :—**

அப்படிச் சரிந்த ஆடையை எடுத்து மறைப்பர். இப்படி பல மாயம் புரிவர். அதனால் "மாயத்துகில்" என்றார்.

**உளைவிரகுஞ் சூழ்த்தண்டி :—**

உளைதல்—வருந்துதல். விரகு—வஞ்சனை. சூழ்தல்—ஆராய்ந்து செய்தல். அண்டுதல்—நெருங்குதல். ஆடவர் மனம் வருந்துமாறு பல வஞ்சனைகளைப் புரிந்து நெருங்குவர்.

**துயர் விளையுஞ் சூட்டின்பம் :—**

மனிதர்களுக்குத் துயரத்தை விளைவிக்கும் புதிய இன்பம். சூடு என்பது புதுமையைக் குறிக்கின்றது. அம்மகளிர் புதுப் புது வண்ணமாக நடந்து தம்மை யடைந்தோர்க்கு இன்பத்தைத் தருவர்.

**பாயற்கிடை கொடு சென்றீட்டும் பொற்பணியரை :—**

சயனத்தில் கொண்டு சென்று இங்கிதமாகப் பொருள் பறிப்பர். நல்லறம் புரியாதார் செல்வம் அல்வழியில் செல்லு மென வுணர்க. அப்படிச் சேகரித்த செல்வத்தைக் கொண்டு அளவற்ற பொன்னுபரணங்களைப் பூண்டு மேலும் மேலும் பலரை விரும்புவர்.

"நம்பனடியார்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்"

**மென்றேற்றங் கற்றனை என :—**

அம்மயலிலிருந்து தெளிந்தவர்களை அரைக்கணமும் தம் பால் இருக்கவிடாது, "மெல்ல தெளிவு பெற்றாய் போலும்" "இன்றே ஓடு" என்று கூறி விரட்டிவிடுவர்.

**அற்கிடு மாதர் :—**

அற்குதல்—குறைதல். அனபு சுருங்குவர்.

**இளமையி லொன்றாய் :—**

இத்தகைய விலைமகளிரிடம் சென்று அவருடன் கலந்து ஒன்றுபடுவர்.

**உட்படு மனம் :—**

அம் மையலில் உட்பட்டு மனம் அலமரும். அவ்வாறு அலையாவண்ணம் திரும்பி நல்வழிப்படவேண்டும் என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றனர்.

**அன்புற்று இயலிசை கொண்டேத் தென்றுட் டருவாயே :—**

இறைவன் திருவடிக்கு அன்பு செய்து, ஆனந்தத் தேன் சொரிகின்ற இறைவனுடைய இணையடிகளை இயலிசைகள் என்ற நல்ல தமிழினுல் பாடிப் பரவிப் பரகதி பெற வேணும். "அப்படி உய்யும்படி முருகா அருள்புரிவாய்" என்று உளங் கனிந்து சுவாமிகள் வேண்டுகின்றனர்.

தமிழ், இயல், இசை, நாடகம் என மூவகைப்படும். இவற்றுள் முதலில் நிற்கும் இயலிசைகளால் ஏத்தி நலம்பெற வேணும் என்று குறிப்பிடுகின்றனர். தமிழால் பாடி வழிபடும் அடியவர் உள்ளத்தில் இறைவன் கோயில் கொண்டிருப்பான்.

"செந்தமிழ் மலர் தூவிய வஞ்சமிலாதத போதனர்
சிந்தையெனா ராலய மாகிய சீமானே"
—திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்.

**நெடிது தவங்கூர்க்குஞ் சற்புருடர் :—**

இந்த ஆறுவரிகளில் சிவபெருமான் மன்மதனை எரித்ததை எடுத்து இயம்புகின்றார். மன்மதனுடைய திறனையும் சிறப்பிக்கின்றார். நீண்ட தவஞ் செய்து பலகாலும் பயிற்சியுற்ற மாதவரையும் மதனன் மயக்குவன். அதற்குச் சான்று காசிபர், விஸ்வாமித்திரர் முதலியோர் எனவுணர்க. கூர்தல்—மிகுதல்.

**நைந்தேக்கம் பெற்றயர்வுற :—**

திடமனம் பெற்றாரும் உறுதியிழந்து நொந்து வெந்து ஏங்கி இளைப்புற மன்மதன் மலர்க்கணைகளைச் சொரிவான்.

**நின்றார்த் தங்கட் கணையேவும் :—**

நின் று ஆர்த்து அங்கண் எனப் பதப்பிரிவு செய்க. அங்கு நின் று ஆரவாரித்து கணைகளை யேவுவன்.

**நிகரில் மதன் :—**

மயக்குந் தொழிலில் தனக்கு நிகரில்லாதவன் மன்மதன்.

**தேர்க்குன்றற்றெரியில் விழுந்தேர்ப் பொன்ற :—**

"தேர் குன்று அற்று எரியில் விழுந்து ஏர் பொன்ற"

குன்றம் போன்ற தேர் அற்று எரியில் விழுந்து அழகு அழிய மன்மதன் தன் தேருடனும் வில்லுடனும் நெருப்பில் விழுந்து எரிந்தான்.

**சிறிது நினைந் தாட்டங் கற்றிடுவார் :—**

மதனன் எரியுமாறு சிவபெருமான் சிறிதே நினைந்தருளினார். அதுவும் ஒரு திருவிளையாடல் காரணமாக என அறிவிக்கின்றார். கற்றிடுவார் என்பது செய்தார் என்ற பொருளில் வந்தது.

**திடமுறு அன்பால் சிந்தைக் கறிவிடமுஞ் சேர்த்து :—**

தந்தையார்க்கு உபதேசிக்க வந்த குழந்தை திடமுடனும் அன்புடனும் இருந்து தந்தைக்கு ஓங்காரத்து உட்பொருளை அறிவித்து உபதேசித்தது.

**தினவரி வண்டார்த்து :—**

வரி—பாடல். நாள்தோறும் வண்டுகள் தேனுண்டு நல்ல இனிய ஒலியுடன் பாடும்.

**இன்புற்றிசையுடன் வந்தேத்து :—**

வண்டுகள் அப்படிப் பாடுவதனுல் இன்பத்தை யடைந்து கோயிலின் மதில்புறத்தில் வந்து ஏத்துகின்றன.

இசை பாடுகின்றவர்கட்கும் இன்பத்தை நல்கும், கேட்கின்றவர்கட்கும் இன்பத்தை நல்கும். இங்கு வண்டுகள் வந்து பாடுகின்றன என்பது அடியார்கள் செந்திலில் வந்து பாடிப் பரவுகின்ருர்கள் என்பதைக் குறிக்கின்றது.

இஞ்சி :—மதில். செந்தில் மாநகர்த் திருக்கோயிலில் உயர்ந்த மதில்கள் மிகவும் அழகாக இருக்கும் திறனைக் குறிப்பிடுகின்ருர்.

**திருவளர் செந்தூர் :—**

சதா செந்திலில் மேன்மையான அறம் கலை பண்பு முதலியவைகள் மேலும் மேலும் வளர்ந்துகொண்டேயிருக்கின்றன.

**கந்தப் பெருமாளே :—**

கந்தனுகிய பெருமாளே—சுப்ரமண்ய மூர்த்தம் பதினுறு. அதில் கந்தமூர்த்தம் என்பது ஒன்று. ஒரு திருமுகமும், இரு புயங்களும் கொண்டது. அரையில் கோவணம் கொண்டு, வலக்கரத்தில் தண்டை ஊன்றி, இடக்கரத்தைத் தொடையில் வைத்து செம்மேனியுடன் விளங்குகின்ற திருவுருவம். கந்தமூர்த்திக்குத் தியான சுலோகம் வருமாறு :

கல்பத்ருமம் ப்ரணமதாம் கமலாருணபம்
ஸ்கந்தம் புஜத்வயம் அநாமயம் ஏகவக்த்ரம்
காத்யாயநீ ஸுதமஹம் கடிபத்ததாம கௌபீன
தண்டதர தக்ஷிணஹஸ்த மீடே.

—குமாரதந்திரம்.

## கருத்துரை

சிவகுருவே ! செந்தில் மேவிய கந்தக்கடவுளே ! அடியேன் மாதர் மயக்குருது இயலிசைத் தமிழால் உம்மைப் பாடி உய்ய அருள் புரிவீர்.

## 70

அனிச்சங் கார்முகம் வீசிட மாசறு
துவட்பஞ் சானத டாகம்வி டாமட
அனத்தின் தூவிகு லாவிய சீறடி மடமாதர்

அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
அழுத்தும் பாவியை ஆவியி டேறிட நெறிபாரா

வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கண் டாணவ மானநிர் மூடனை
விடக்கன் பாய்நுகர் பாழனை யோர்மொழி பகராதே

விகற்பங் கூறிடு மோக விகாரனை
அறத்தின் பாலொழு காதமு தேவியை
விளித்துன் பாதுகை நீதர நானருள் பெறுவேனோ

முனைச்சங் கோலிடு நீலம கோததி
அடைத்தஞ் சாதஇ ராவண னீள்பல
முடிக்கன் றோர்கணை யேவு மிராகவன் மருகோனே

முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் காநதி தாதகி கூவிள
முடிக்குஞ் சேகரர் பேரரு ளால்வரு முருகோனே

தினைச்செங் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வேகணி யாகிய
திறற்கந் தாவளி நாயகி காமுறும் எழில்வேலா

சிறக்குந் தாமரை யோடையில் மேடையில்
நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
திருச்செந் தூர்வரு சேவக னேசுரர் பெருமாளே.

### பதவுரை

முனை சங்கு ஓலிடு = போருக்குரியசங்குகள்ஓவென்று ஒலிக்கும், நீல மகா உததி = நீலநிறத்தையுடைய பெரிய சமுத்திரத்தை, அடைத்து = (வாநர வீரர்களைக் கொண்டு) அணை புதுக்கி, அஞ்சாத இராவணன் நீள் பல முடிக்கு = பகைவர்களுக்குப் பயப்படாத இராவணனது உயர்ந்த மணிமகுடந்தரித்த பல தலைகளையும் அறுப்பதற்கு, அன்று ஓர் கணை ஏவும் = அந்நாளில் ஒரே ஒரு அம்பினை விடுத்த, இராகவன் =

இரகு வம்சத்தி லவதரித்த இராமபிரானது, மருகோனே = மருமகனாக விளங்குபவரே! மூளைக்கும் சீத நிலாவொடு = திருப்பாற் கடலிலே தோன்றும் குளிர்ந்த பிறைச் சந்திரனையும், அரா = பாம்பையும், விரி திரை கங்கா நதி = விசாலமானதும் அலைகளை யுடையதுமாகிய கங்கா நதியையும், தாதகி = ஆத்திமலரையும், கூவிளம் = வில்வத்தையும், முடிக்கும் சேகரர் = தரித்துக்கொண்டுள்ள சடாமகுடத்தையுடைய சிவபெருமானது, பேர் அருளால் வரு = பெருங்கருணையால்அவதரித்த, முருகோனே = முருகப் பெருமானே, தினை செம் கானக = தினைப்பயிர் விளையும் செழிப்பாகிய காட்டகத்தில் வாழுகின்ற, வேடுவர் ஆனவர் = வேடுவர்களானவர்கள், திகைத்து அந்தோ என(ஏ = அசை) = புதிதாக முளைத்ததால் "இது ஏது?" என்று பிரமித்து "ஐயோ! என் செய்வோம்" என்று கூற, கணி ஆகிய = வேங்கை மரமாகி நின்ற, திறல் கந்தா = வலிபொருந்திய கந்தப் பெருமானே! வள்ளி நாயகி காமுறும் = வள்ளி நாயகியார் கண்டு அன்புறும், எழில் வேலா = கட்டழகுடைய வேலாயுதரே! சிறக்கும் தாமரை ஓடையில் = மலர்களுக்குள் சிறப்புற்றிருக்குந் தாமரை ஓடைகளிலும், மேடையில் = உயர்ந்த உப்பரிகைகளிலும், நிறக்கும் சூல் வளை = நல்ல நிறம் பொருந்திய சினை கொண்ட சங்குகள், பால் மணி வீசிய = பால் போன்ற வெண்ணிறமுடைய முத்துக்களை எறிகின்ற (கடற்கரையிலுள்ள), திருச்செந்தூர் வரு = திருச்செந்திலம்பதியில் அடியார் பொருட்டு எழுந்தருளி வருகின்ற, சேவகனே = வீரரே!, சுரர் பெருமாளே = தேவர்களால் வணங்கப்படும் பெருமையிற் சிறந்தவரே!, அனிச்சம் = அனிச்ச மலரும், கார் முகம் வீசிட மாசு அறு துவள் பஞ்சு = பஞ்சடிக்கும் வில்லினாலடிக்க கடினமாகிய குற்றமுடையவைகள் நீங்கப் பெற்ற மெல்லிய பஞ்சும், ஆன தடாகம் விடா மட அனத்தின் தூவி = அன்பு மிக்கதான தடாகத்தை விட்டு நீங்காத அழகிய (நடையுடைய) அன்னப் பறவையின் மெல்லிய இறகும், குலாவிய சிறு அடி = மிகவும் மிருதுவாக விளங்குவதால் கொண்டாடுகின்ற சிறிய பாதங்களையுடைய, மட மானார் = அழகிய மானைப் போன்ற மகளிரது, அருக்கன்போல் = சூரியனைப்போல், ஒளி வீசிய = பிரகாசிக்கின்ற, மா மரகத பைம்பூண் அணி = சிறந்த மரகத மணிகள் பதித்த பசுமை நிறம் பொருந்திய ஆபரணங்களை யணிந்துள்ள, வார் முலைமேல் = இரவிக்கையோடு கூடிய தனங்களின்மேல், முகம் அழுத்தும் பாவியை = முகத்தையும் பார்வையையும் வைத்து அழுத்திக் களிக்கின்ற பாவியும், ஆவி இடேறிட நெறிபாரா = ஆன்மாவானது உய்யும் நெறி இன்னதென்று ஆராய்ந்தறியாத, வினை சண்டாளனை = தீய காரியங்களைப் புரியும் சண்டாளனும், வீணனை = வீண் காரியங்களைப் புரிவோனும், நீள் நிதி தனைக்கண்டு = பெரிய செல்வமுடைமையைக் கண்டு (அதன் பெருக்கத்தை நினைத்து), ஆணவமான நிர்மூடனை = அகங்காரத்தைக் கொண்ட முழு மூடனும், விடக்கு அன்

பாய் நுகர் பாழனை=மாமிசத்தை அன்பாக உண்ணுகின்ற பாழனும், ஓர் மொழி பகராதே=ஒப்பற்ற மொழியான தேவரீரது சடக்கர மந்திரத்தை உச்சரிக்காமல், விகற்பம் கூறிடு=சாஸ்திர விரோதமான வார்த்தைகளையே பேசுகின்ற, மோக விகாரனை=மோகவிகாரத்தையுடையவனும், அறத்தின்பால் ஒழுகாத மூதேவியை=தரும நெறியில் நின்று ஒழுகாத மூதேவியுமாகிய அடியேனை, விளித்து உன் பாதுகை நீ தர=தேவரீர் கருணையால் அழைத்து தங்களுடைய திருவடி ரட்சையை என் முடிமேல் சூட்ட, நான் அருள் பெறுவேனோ=அடியேன் அந்த அனுக்கிரகத்தைப் பெற மாட்டேனோ?

## பொழிப்புரை

போருக்குரிய சங்குகள் ஓவென்று ஒலித்துக்கொண்டிருக்கும் நீல நிறம் பொருந்திய பெரிய சமுத்திரத்தில் அணை கட்டி பகைவர்களுக்கு அஞ்சாத இராவணனது மணிமகுடந் தரித்துள்ள பல தலைகளும் அற்றுவிழ ஒரே ஒரு கணையை ஏவிய ரகுவீரராகிய ஸ்ரீராமபிரானது மருமகராக எழுந்தருளியிருப்பவரே! பாற்கடலில் தோன்றிய குளிர்ந்த பிறைச் சந்திரனையும், பாம்பையும், விசாலமானதும் அலைகளையுடையதுமாகிய கங்கா நதியையும், ஆத்தி மலரையும், வில்வத்தையும் தரித்துக் கொண்டுள்ள சடாமகுடத்தையுடைய சிவபெருமானது பெருங் கருணையால் (உலகம் உய்யும் பொருட்டு) அவதரித்த முருகப் பெருமானே! தினைப்பயிர் விளையும் செழுமையான கானகத்தில் வசிக்கும் (நம்பி முதலிய) வேடுவர்கள் (புதிதாகத் தோன்றியதால்) "இது ஏது" என்று திகைப்புற்று "ஐயோ! இதற்கு என் செய்வோம்" என்று கூறும்படி வேங்கை மரமாகி நின்ற வல்லபமுடைய கந்தமூர்த்தியே! வள்ளி நாயகியார் அன்புறும் கட்டழகிற் சிறந்த வேலாயுதப் பெருமானே! மலர்களுக்குள் சிறந்த தாமரை ஓடைகளிலும் உப்பரிகைகளிலும் நல்ல நிறம் பொருந்திய சினைச்சங்குகள் பால்போன்ற வெண்ணிற முத்துக்களைக் கொழிக்கும் கடற்கரையில் விளங்கும் திருச்செந்தூர் என்னுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள வீரரே! தேவர்களுக்குள் பெருமையிற் சிறந்தவரே! (மிகவும் மெல்லியதாகிய) அனிச்ச மலரும், பஞ்சடிக்கும் வில்லாலடிக்க கடின பொருள்களாகிய குற்றம் நீங்கிய மெல்லிய பஞ்சும், அன்புடையதான தடாகத்தை நீங்காத அழகிய அன்னப் பறவையின் மெல்லிய இறகும், தமது மென்மையிலும் மிருதுவாக இருப்பதால் கொண்டாடுகின்ற சிறிய பாதங்களையுடைய அழகிய மானைப்போன்ற மகளிரது சூரியனைப்போல் பிரகாசிக்கின்ற சிறந்த மரகத மணிகளிழைத்த பசுமை நிறம் பொருந்திய பொன்னாபரணங்களை யணிந்துள்ள இரவிக்கையோடு கூடிய தனபாரங்களின்மீது முகத்தையும் (பார்வையையும்) ஆசைப் பெருக்கத்தால் அழுத்துகின்ற பாவியும்,

ஆன்மா ஈடேறுகின்ற நன்னெறியை ஆராய்ந்து பார்க்காது தீய காரியங்களைப் புரியும் சண்டாளனும், வீண் காரியங்களைப் புரிவோனும், பெரிய செல்வமுடைமையைக் கண்டு அகங்கரிக்கும் நிர்மூடனும், மாமிசத்தை அன்பாக உண்ணுகின்ற பாழனும், தேவரீரது ஒப்பற்ற மொழியாகிய சடக்கர மந்திரத்தை அன்புடன் உச்சரிக்காமல் சாஸ்திர விரோதமான குதர்க்க வார்த்தைகளைப் பேசுகின்ற மோகவிகாரனும், தரும நெறியில் நின்று ஒழுகாத மூதேவியுமாகிய அடியேனைத் தேவரீர் திருவருட் பெருக்கமுடையவராதலால் வலிந்து அழைத்து தமது திருவடியிலணிந்துள்ள பாதுகைகளை என் முடிமீது சூட்ட அடியேன் அந்த அனுக்கிரகத்தைப் பெறுவேனோ?

## விரிவுரை

**அனிச்சம் :—**

அனிச்சமலர் என்பது மிகவும் மென்மையுடைத்து; அது மோந்தால் வாடும். அத்துணை மெல்லியது. இம்மலரின் மென்மையைப் பற்றி தெய்வப் புலவர்.

"மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து"

என்றதனால் நன்கு புலனாகின்றது. இத்துணை மெல்லிய அனிச்சப் பூவைக் காட்டிலும், மெல்லிய பஞ்சு, அன்னப்பறவையின் மெல்லிய இறகு இவைகளைக் காட்டிலும் மாதரடி மென்மையுடைத்து.

அனிச்சமு மன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். —திருக்குறள்.

**ஆவி ஈடேறிட நெறிபாரா :—**

"ஆன்மா ஈடேறும் நெறி எது? என்று ஆராய்ந்து பார்த்தல் அவசியம். அந்நெறி பக்தி நெறியே யாகும். அந்நெறியே சென்றால் பழவினைகள் கெட்டு மலநீக்கமுற்று சிவமாந்தன்மையை எளிதில் பெறலாம்.

"பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"
—மணிவாசகனார்.

**வினைச் சண்டாளனை :—**

சண்டாளர் என்பது ஒரு தனிப்பட்ட குலமன்று; பிறப்பினாலே சண்டாள குலம் என்பது இல்லை; சண்டாளத்துவம் எவ

ரிடத்தில் இருக்கிறதோ அவரெல்லாம் சண்டாளரே. பிறப்பிலேயே உயர்வு தாழ்வைக் குறித்துப் பேசுவதை அறிஞர் வெறுக்கின்றனர்.

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால். —திருக்குறள்.

தொழிலின் உயர்வு தாழ்வாலேயே குலமும் உண்டாகிறது. பிராம்மண உடம்பு, க்ஷத்திரியர் உடம்பு, என்பது இல்லையாதலால் குலம் உடம்பைப் பற்றியதல்ல; பிராம்மண உயிர், க்ஷத்திரிய உயிர் என்பதும் இல்லையாதலால் குலம் உயிரைப் பற்றியதுமல்ல; ஆதலால் தொழிலைப் பற்றியே ஏற்படுகிறது. மேற்குலத்திற் பிறந்தான் ஒருவன் இழி தொலைப் புரிந்தால் மேற்குலத்தான் என்று கூறலாமா? சகல ஒழுக்கங்களும் பொருந்தியுள்ளவனை இழிகுலத்தான் என்று கூறலாமா?

நாஹம் மநுஷ்யோ நசதேவ யக்ஷோ
நப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்ய சூத்ரா : |
நப்ரஹ்மசாரீ நக்ருஹீ வநஸ்தே
பிக்ஷுர்நசாஹம் நிஜபோத ரூபம் || —நிர்வாணஷ்டகம்.

(இதன் பொருள்) "நான் மனிதனல்ல; தேவனல்ல; யக்ஷனுமல்ல! பிராம்மணனல்ல; க்ஷத்திரியனல்ல; வைசியனல்ல; சூத்திரனல்ல; பிரமசாரியல்ல; கிருகஸ்தனல்ல; வானப்ரஸ்தனல்ல; சந்நியாசியுமல்ல; ஆகையால் சத்திய ஞானாநந்த சொரூபன் நான்."

மேற்போந்த திருப்புகழின் கருத்தை நீதி நூலும் வலியுறுத்துமாறு காண்க.

தூஷகஸ்ச க்ரியா சூந்யோ நிக்ருஷ்டோ தீர்ககோபந; |
சத்வார : கர்மசண்டாளோ ஜாதிசண்டாள உத்தம : ||

பிறரைத் தூஷிப்பவன், நித்தியகருமானுஷ்டானத்தை விட்டவன், அதிக லோபமுள்ளவன், தீர்க்க கோபமுள்ளவன், இந் நால்வரும் கர்ம (வினைச்) சண்டாளர்கள்; இவர்களைக் காட்டிலும் ஜாதி சண்டாளன் என்பவன் உத்தமன்.

பிரம ஞானமுணர்ந்தவன் பிராமணன்; அழகிய தணிந்த சிந்தையுடையவன் அந்தணன்; வேதமோதுபவன் வேதியன்; இந்திரியங்களுடன் போராடி அவற்றை வென்று பொறிபுலன்களை அடக்கியாள்பவன் அரசன்; புண்ணியபாவங்களை நிறுத்து வாணிபஞ் செய்பவன் வைசியன்; புலன்களுக்கு அடிமைப்பட்டவன் சூத்திரன்; பறை வாத்தியத்தை வாசிப்பவன் பறையன்; புலாலுண்பவன் புலையன்; சண்டாளத்துவமுடையவன் சண்டாளன் எனப் பிரித்துணர்தல் வேண்டும்.

**வீணை :—**

கிடைத்தற்கரிய வாழ்நாளை அவமாயை கொண்டு விருதாவாகக் கழிப்பவர் வீணர் எனப்படுவர். நம்முடைய வாழ்நாளில் ஒவ்வொரு கணமும் மிகவும் விலையுயர்ந்த மாணிக்கத்திற்கு நிகரானது. அதனை வீண் களியாடல்களில் கழித்துவிட்டால் யாக்கையும் அழிகிறது. ஆதலால் நம்முடைய காலங்களைச் சிவநெறியில் கழிக்கவேண்டும்.

நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய அன்புசெய்வோம் மடநெஞ்சே அரன்நாமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளி
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே.
—திருஞானசம்பந்தர்.

**நிதிதனைக்கண்டு ஆணவமான நிர்மூடனை :—**

அழிகின்ற செல்வத்தைக் கண்டு அதன் நிலையாமையை யுணராது, செருக்குற்று மூடனாக இருத்தல்.

சிறியரே மதிக்குமிந்தச் செல்வம்வந் துற்றஞான்று
வறியபுன் செருக்குமுடி வாயுளோர் மூகராவர்
பறியணி செவியுளாரும் பயிறரு செவிடராவர்
குறிபெறு கண்ணுளாருங் குருடராய் முடிவரன்றே.
—குசேலோபாக்கியானம்.

**விடக்கன்பாய் நுகர் பாழனை :—**

விடக்கு—மாமிசம். மோக்ஷ உலகத்திற்கு முதற்படி ஜீவ காருண்யமேயாம். சகல யாகங்களிலும் செய்யுந் தானமும், சகல தீர்த்தங்களிலுஞ் செய்யும் ஸ்நானமும், சகல தானங்களின் புண்ணியமும் அஹிம்சா தருமத்திற்குச் சமம் ஆகமாட்டாது. அஹிம்சா தருமத்தை அனுசரித்து நடக்கிறவனுடைய தவம் குறைவற்றது. அஹிம்சா தருமத்தை அனுசரித்து நடக்கிறவன் எப்பொழுதும் யக்ஞம் செய்பவனாக எண்ணப்படுகிறான்.

ஸர்வ யஜ்ஞேஷு வாதானம் ஸர்வ தீர்த்தேஷு சாப்லுதம்
ஸர்வதான பலம் வாபி நைதத் துல்யமஹிம்ஸயா |
அஹிம்ஸ்ரஸ்ய தபோ (அ)க்ஷயம்
அஹிம்ஸ்ரோ ஜயதே ஸதா ||
—மஹாபாரதம், அநுசாஸன பர்வம்.

**ஓர் மொழி :—**

பிரணவ மந்திரம் என்றும் சடக்கர மந்திரம் என்றும் பொருள் கொள்ளலாம்.

**விளித்துன் பாதுகை நீ தர :—**

பாவியும், சண்டாளனும், வீணனும், மூடனும், பாழனும், மோகனும், மூதேவியுமாகிய அடியேனை குற்றம் நோக்கிக் கைவிடாமல் தேவரீரது திருவருட்பெருக்கால் வலிந்து அழைத்து பாதுகையைச் சென்னிமேல் வைத்துத் திருவருள் புரிய வேண்டும்.

**தினைச்செங்கானகவேடுவர்......கணியாகிய :—**

மூவர் தேவாதிகள் தம்பிரானாகிய முருகப் பெருமான், மாமுனிவன் புணர் மானுதவுந் தனிமானாகிய வள்ளிபிராட்டியாரைத் திருமணஞ் செய்துகொள்ள வேட வடிவங்கொண்டு, அப் பிராட்டியார் காக்குந் தினைவனம் போந்து, வேடர்குலக் கொடியுடன் உரை நிகழ்த்திக் கொண்டிருக்குங்காலை, வேடர்கள் சூழ நம்பிராஜன் அங்கு வந்தான். அது கண்ட ஆறுமுகப் பெருமான் பயந்தவரைப் போல வேங்கை மரமாக நின்றார். வேதங்கள் வேர்களும் அடியுமாக, சிவாகமங்கள் நடுப் பாகமும், பலவித கலைகள் கவடுகளுமாக மந்திர வடிவான மரமாயினார்.

ஆங்கது காலைதன்னி லடிமுதன் மறைகளாக
வோங்கிய நடுவணெல்லா முயர்சிவ நூலதாகப்
பாங்கமர் கவடுமுற்றும் பல்கலையாகத் தானோர்
வேங்கையி னுருவமாகி வேற்படை வீரன்நின்றான்.

—கந்தபுராணம்.

பெண்களை நேசிப்பவன் எத்துணை வலியுடையோனாயினும் மரம்போல் அசைவற்றுச் செயலற்று நிற்பான் என்பது அதனுடைய தத்துவம்.

குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருட
கரடிபுலி திரிகடிய வாரான கானில்மிகு
குளிர்கணியி னிளமரம தேயாகி நீடியுயர் குன்றுலாவி

—(உறவின்முறை) திருப்புகழ்.

## கருத்துரை

சேதுபந்தனம் புரிந்து இராவண வதஞ்செய்த இரகு வீரரது மருகரே! மதி, நதி, பாம்பு, ஆத்தி, வில்வம் இவைகளை முடிக்குஞ் சிவமூர்த்தியின் புதல்வரே! வேடுவரஞ்ச வேங்கை மரமாகிய கந்தப் பெருமானே! வள்ளிநாயகி அன்பு கொள்ளும் வேலாயுதரே! செந்திலம்பதியில் வாழும் பெருமாளே! மாதராசையால் மயங்கும் பாவியும், வினைச் சண்டாளனும், செல்வச் செருக்கு மூடிய மூடனும், புலாலுண்ணும் பாழனும், மோகவிகாரனும், அறநெறியில் ஒழுகாத மூதேவியுமாகிய அடியேனை அழைத்து உமது பாதுகையைத் தர அடியேன் அருள் பெறுவேனோ?

## 71

உருக்கம் பேசிய நீலியர் காசுகள்
பறிக்குந் தோஷிகள் மோகவி காரிகள்
உருட்டும் பார்வையர் மாபழி காரிகள் மதியாதே
உரைக்கும் பீரிகள் கோளர வர்மென
உடற்றுந் தாதியர் காசள வேமனம்
உறைக்குந் தூரிகள் மீதினிலாசைகள் புரிவேனோ

அருக்கன் போலொளி வீசிய மாமுடி
யனைத்துந் தான்ழ காய்நல மேதர
அருட்கண் பார்வையி னுலடி யார்தமை மகிழ்வோடே
அழைத்துஞ் சேதிகள் பேசிய காரண
வடிப்பந் தானென வேயெனை நாடொறும்
அதிக்கஞ் சேர்தர வேயருளாலுட னினிதாள்வாய்

இருக்குங் காரண மீறிய வேதமும்
இசைக்குஞ் சாரமு மேதொழு தேவர்கள்
இடுக்கண் தீர்கன னேயடி யார்தவ முடன்மேவி
இலக்கந் தானென வேதொழ வேமகிழ்
விருப்பங் கூர்தரு மாதியு மாயுல
கிறுக்குந் தாதகி சூடிய வேணிய னருள்பாலா

திருக்குந் தாபதர் வேதிய ராதியர்
துதிக்குந் தாளுடை நாயக னாகிய
செகச்செஞ் சோதியு மாகிய மாதவன் மருகோனே
செழிக்குஞ் சாலியு மேகம ளாவிய
கருப்பஞ் சோலையும் வாழையு மேதிகழ்
திருச்செந் தூர்தனில் மேவிய தேவர்கள் பெருமாளே.

### பதவுரை

இருக்கும் = இருக்குவேதமும், காரணம் மீறிய வேதமும் = காரணங்களைக் கடந்து நிற்கும் (தனிப் பெருஞ்சிறப்புடைய) தமிழ் வேதமும், இசைக்குஞ் சாரமும் = அவ்வேதங்களில் மறைந்துள்ள உட்கருத்துக்களைத் தெளிவாக விளக்கிக் கூறும் வேதசாரமாகிய ஆகமங்களும், (ஏ—பிரிநிலை) தொழு = தொழுதுவழிபட நின்றவரும், தேவர்கள் இடுக்

கண் தீர் = தேவர்களுடைய துன்பத்தைத் தீர்த்தருளியவருமாகிய, கன்னே = கண்ணியமுள்ளவரே!', தவமுடன் மேவி = தவவொழுக்கத் துடன் வந்து, இலக்கந்தான் என = இலட்சக்கணக்கான, (ஏ = அசை) அடியார் தொழ = அடியார்கள் தொழுது வழிபட, மகிழ் விருப்பம் கூர்தரு = மகிழ்ந்து அவ்வடியார்மீது அன்புகொள்ளும், ஆதியு மாய் = முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளுமாய், உலகு இறுக்கும் = உலகங்களை எல்லாம் (சர்வசங்காரகாலத்தில்) சங் கரிக்கும் தனிப் பெருந்தலைவராய், தாதகி சூடிய வேணியர் = ஆத்தி மலரையணிந்து கொண்டுள்ள சடைமுடியுடையவராய் எழுந்தருளி யுள்ள சிவபெருமான், அருள்பாலா = அருளிய திருக்குமாரரே! திருக் கும் தாபதர் = அறிவுக் கண்ணுடன் விளங்கும் முனிவர்களும், வேதியர் ஆதியர் = வேதங்களையுணர்ந்த அந்தணர் முதலியோர்களும், துதிக் குந் தாளுடை நாயகன் ஆகிய = தோத்திரம் புரியும் திருவடிகளை யுடைய தேவர்களுக்குத் தலைவரும், செகச் செஞ்சோதியும் ஆகிய மாதவன் = செவ்விய செகச்சோதியாய் விளங்குபவருமாகிய திருமாலி னது, மருகோனே = மருகரே! செழிக்கும் சாலியும் = செழிப்புடன் வளர்ந்துள்ள நெற்பயிரும், மேகம் அளாவிய கருப்பஞ் சோலையும் = மேகமண்டலத்தை அளாவிவளர்ந்துள்ள கருப்பஞ்சோலையும், வாழை யும் = வாழை மரங்களும், (ஏ = அசை) திகழ் = எங்கும் விளங்கப்பெற் றுள்ள, திருச்செந்தூர்தனில் மேவிய = திருச்செந்தூர் எனும் திருத் தலத்தில் எழுந்தருளியுள்ள, தேவர்கள் பெருமாளே = தேவர்களுக்குத் தேவராக விளங்குபவரே! உருக்கம் பேசிய நீலியர் = மனம் உருகும் படி நயமாகப் பேசுகின்ற கொடியவரும், காசுகள் பறிக்கும் தோஷிகள் = பணத்தைப் பிடுங்கும் பாவிகளும், மோகவிகாரி கள் = மோகத்தால் மனோவிகார முள்ளவர்களும், உருட்டும் பார் வையர் = சமயத்திற்குத் தக்கபடி கீழும் மேலும் பக்கமுமாகக் கண்களை உருட்டிப் பார்க்கும் தன்மையுடையவர்களும், மாபழிகாரி கள் = பெரிய பழிகளைக் கூறுபவர்களும், மதியாதே உரைக்கும் பீரிகள் = ஒருவரையும் மதியாமற்படி அலறிச்சத்தமிட்டுப் பேசுகின்ற வர்களும், கோள் அரவாம் என = விடத்தையுடைய பாம்பைப் போல், உடற்றும் தாதியர் = வருத்துகின்ற தாசிகளும், காசு அளவே மனம் உறைக்கும் தூரிகள் மீதினில் = அவரவர்கள் தரும் பணத்திற் குத்தக்க அளவிலேயே மனத்தை வைக்கும் துன்மார்க்கருமாகிய விலை மகளிர்மேல், ஆசைகள் புரிவேனோ = இனி அன்பு கொள்வேனோ? (கொள்ளேன்) அருக்கன் போல் = சூரிய பகவானைப் போல், ஒளி வீசிய = பிரகாசிக்கின்ற, மாமுடி அனைத்தும் தான் = பெருமைமிக்க இரத்தின கிரீடங்கள் யாவும், அழகாய் நலமேதர = காண்பவர்களுக்கு அழகாக விளங்கி நன்மையே வழங்க, அருள்கண் பார்வையினால் = கருணை பொழியும் திருக்கண் பார்வையால், அடியார் தமை மகிழ்

வோடே அழைத்தும் = அடியார் தமை மகிழ்ச்சியுடன் வலிய அழைத்தும், சேதிகள் பேசிய காரண = ஞானச் செய்திகளைப் பேசுகின்ற காரணப்பொருளே !, வடிப்பம் தான் என (ஏ = அசை) = செப்பம் என்று சொல்லும்படி, நாள்தொறும் அதிக்கம் சேர்தர = (அடியேன்) தினந்தோறும் மென்மேலும் மேன்மையடையும் வண்ணம், அருளால் உடன் = தமது திருவருளால் இக்கணத்திலேயே, எனை இனிது ஆள்வாய் = அடியேனை இனிது ஆட்கொண்டருள்வீர்.

## பொழிப்புரை

இருக்குவேதமும், காரணங்களைக் கடந்து நிற்கும் பெருஞ் சிறப்புடைய தமிழ் வேதமும், அவ்வேதங்களில் மயங்கக் கூறிய உண்மைப் பொருள்களைத் தெளிவுறக் கூறும் வேத சாரமாகிய ஆகமங்களும் தொழுது வழிபாடு செய்ய நின்ற வரும், தேவர்களது துன்பத்தை நீக்கி யருள்பவருமாகிய கண்ணியமுள்ளவரே! தவ வொழுக்கத்துடனடைந்து இலட் சக்கணக்கான அடியார்கள் வணங்க மகிழ்ந்து, அவர்கள் மீது அன்பு கொள்ளும் ஆதி பராபரவஸ்துவாக விளங்குபவரும், சர்வ சங்கார காலத்தில் உலகத்தைச் சங்கரிப்பவரும், ஆத்தி மலரைச் சூடிய சடாமுடியை யுடையவருமாகிய சிவபெருமா னருளிய திருக்குமாரரே! அறிவுக் கண்கள் விளங்கப் பெற்ற முனிவர்களும் வேதியர் முதலியவரும் துதிக்கும் திருவடிக் கமலங்களையுடைய தேவ சிரேட்டரும், செகச்செஞ் சோதியு மாகிய நாராயணரது மருகரே! செழிப்புடன் வளர்ந்துள்ள செந்நெற் பயிரும் மேகமண்டலம் வரை வளம் பெற்றோங் கிய கருப்பஞ் சோலையும் வாழையும் நெருங்கி விளங்கிக் கொண்டிருக்கும் திருச்செந்தூர் என்னும் திவ்ய க்ஷேத்திரத் தில் எழுந்தருளிய தேவர்களுக்குத் தேவரே! உருக்கமாகப் பேசி மனத்தைக் கவரும் நீலிகளும், பணத்தைப் பறிக்கும் தோஷிகளும், மோகத்தால் விகாரத் தன்மையுற்றவர்களும், மேலும் கீழும் பக்கமுமாக விழிகளை உருட்டிப் பார்க்கும் பார்வையுடையவர்களும், பெரிய பழியைச் சுமத்தும் பழிகாரி களும், ஒருவரையும் மதியாமற்படி வேகமாகப் பேசுபவர் களும், நச்சுப்பற்களையுடைய அரவத்தைப்போல் பிறரைத் துன்புறுத்தும் தாசிகளும், அவரவர்கள் தரும் பணத்தின் அளவாகவே மனத்தைச் செலுத்தும் துன்மார்க்கிகளுமாகிய பொருட் பெண்டிர்மீது அடியேன் இனி ஆசை வைப்பேனோ? (ஒரு போதும் வையேன்) சூரியனைப்போல் ஒளி வீசுகின்ற பெருமைமிக்க மணி மகுடங்கள் அனைத்துமே அழகாகப் பார்ப் பவர்களுக்கு நன்மையே வழங்க, திருவருள் பொழியும் திருக் கண் பார்வையால் அடியார்களைச் சந்தோஷத்துடன் வலிய அழைத்தும் ஞானவுரைகளைப் பேசுகின்ற காரண வஸ்துவே நடுநிலைமை என்று சொல்லும்படி தினந்தோறும் மென்

மேலும் மேன்மையை அடையுமாறு தமது திருவருளால் உடனே அடியேனை இனிது ஆட்கொண்டருள்வீர்.

## விரிவுரை

**அருக்கன்போல்...நலமேதர :—**

முருகப் பெருமானுடைய ஆறு திருமுகங்களிலுமுள்ள எல்லா மணிமகுடங்களும் மிக்க ஒளியுடன் ஆறு இளங் கதிர் களைப் போல் பிரகாசித்துக் கொண்டு தெரிசிப்போர்களுக்கு நலன்களையே வழங்கிக் கொண்டிருக்கின்றன.

**அருட்கண் பார்வை :—**

குமாரக் கடவுளது பன்னிரண்டு விழிகளிலும் கடலைப் போல் அருள் வெள்ளம் வழிந்து கொண்டே யிருக்கிறது.

"மறுவறு கடலென மருவுப னிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்" —கொலுவகுப்பு.

"துங்கநீள் பன்னிரு கருணை விழிமலரும்"
—(விழையுமனி) திருப்புகழ்.

அக் கருணையொழுகுங் கடைக்கண் பார்வை நமது மேல் சற்று பட்டவுடனே மும்மலங்களும் வெந்து நீருகி விடுகின்றன; மெய்ஞ்ஞானம் மிளிர்கின்றது; அப்பார்வையின் பெருமைதான் என்னே! என்னே! அதனைப் பெற்ற பரம குரு மூர்த்தியாகிய அருணகிரியடிகளின் பாக்கியந்தான் என்னே!

"ஆணவ அழுக்கடையும் ஆவியை விளக்கியநு
பூதியடை விததொரு பார்வைக்காரனும்" —திருவகுப்பு. (4)

"கனகத்தினு நோக்கினி தாயடி
யவர்முத்தமி ழாற்புக வேபர
கதிபெற்றிட நோக்கிய பார்வையு மறவேனே"
—(சதுரத்தரை) திருப்புகழ்.

கந்தப் பெருமானுடைய அக் கடைக்கண் அருட்பார்வை யால் இவை இவையுண்டாகுமென கடைக்கணியல் வகுப்பில் கூறியதைக் கண்டு மகிழ்க.

"அலைகடல் வளைந்துடுத்த எழுபுவி புரந்திருக்கும்
அரசென நிரந் தரிக்க வாழலாம்
அளகையர சன்றனக்கும் அமரரர சன்றனக்கும்
அரசென அறஞ்செலுத்தி யாளலாம்

அடைபெறுவ தென்றுமுத்தி அதிமதுர செந்தமிழ்க்கும் அருள்பெற நினைந்து சித்தி யாகலாம்
அதிரவரு மென்று முட்ட அலகில்வினை சண்டைநிற்க அடலெதிர் புரிந்து வெற்றி யாகலாம்
இலகியந லஞ்செய்புட்ப கமுமுடனிறம் வெளுத்த இபவர செனும் பொருப்பு மேறலாம்
இருவரவர் நின்றிடத்து மெவரெவ ரிருந்திடத்தும் ஒருவனிவ னென்றுணர்ச்சி கூடலாம்
எமபடர்தொ டர்ந்தழைக்கில் அவருட னெதிர்ந்துளுட்க இடியென முழங்கி வெற்றி பேசலாம்
.........................
பாருளீர்......வேலினன்......கடைக்கணியலையும் நினைந்திருக்க வாருமே"

அடிமையார்தமை மகிழ்வோடே அழைத்தும் :—

கருணைக் கடவுளாதலால் கந்தப்பெருமான் அடியார்களை மகிழ்ந்து வலிய அழைத்து நல்லுரைகளை உபதேசித்து அருள் புரிகிறார்.

"அடியவ ரிச்சையில் எவைஎவை யுற்றன அவைதரு வித்தருள் பெருமாளே"
—(கலகலெனச்சில) திருப்புகழ்.

காரண :—

உலகங்களுக்கும், சிருட்டியாதி ஐந்தொழில்களுக்கும், பிறவற்றிற்கும் காரணமாய் நின்ற முழுமுதற் கடவுள் முருகப் பெருமானேயாவர். இதனை, அப்பெருமானது திருவருட்டுணை கொண்டு ஞான விழியால் நோக்கிய சூரபன்மன் வாயார வாழ்த்தி வழுத்துதலைக் கண்டு தெளிக.

கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாட் பரிசிவை யுணர்ந்தி லேன்யான்
மாலயன் றனக்கு மேனை வானவர் தமக்கும் யார்க்கு
மூலகா ரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றோ:

இருக்கும்...தொழு :—

குகமூர்த்தி வேதாகமங்களால் தொழப்பட்டவர்.

"ஆலமுண்ட கோன் அகண்ட லோகமுண்ட மால்விரிஞ்சன் ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்தாளும்"
—(தோலெலும்பு) திருப்புகழ்.

**தேவர்கள் இடுக்கண் தீர்கனனே:—**

சூராதியவுணர்களால் நூற்றெட்டு யுகங்களாக தேவர்கள் துன்புற்று இனி இன்புறுங்காலமும் எய்துமோ? என்று ஏங்கி இளம் பூரணனாகிய எம்பெருமானிடம் தமது குறைகளை முறையிட, அறுமுகக் கடவுள் போந்து அவுணர்களது மறச்செயலையழித்து அறநெறியை வளர்த்து அமரர்கள் அல்லலை நீக்கி என்றுமழியா இன்பத்தை வழங்கினர்.

"அடியவர் வினையும் அமரர்கள் துயரும்
அறஅரு ளுதவு பெருமாளே."
—(திரிபுரமதனை திருப்புகழ்)

"வானுடரசாளும்படிக்கு வாவா வெனவா வென்றழைத்து
வானோர் பரிதாபந் தவிர்த்த பெருமாளே"
—(ஆராதன) திருப்புகழ்.

## கருத்துரை

வேதாகமங்களால் தொழப்பட்டவரே! தேவர் துயர்தீர்த்து கனம் பொருந்தியவரே! ஆதிபராபர முதல்வரும் சர்வ சங்கார கர்த்தரும் ஆத்திமலரணிந்த வேணியருமாகிய சிவ குமாரரே! முனிவர் மறையோர் முதலியோர் துதிக்கும் செகச்சோதியாகிய திருமகள் கொழுநர் மருகரே! திருச்செந்திலாதிப! தேவ தேவரே! பொருள் பறிக்கும் இருமனப் பெண்டிராகிய விலைமகளிர் மீது அன்பு கொள்வேனோ? (கொள்ளேன்) மென்மேலும் நன்மையடையுமாறு அடியேனை உடனே யாட்கொள்வீர்.

## 72

நிறுக்குஞ் சூதன மெய்த்தன முண்டைகள்
கருப்பஞ் சாறொடு ரைத்துள உண்டைகள்
நிழற்கண் காணவு ணக்கிம ணம்பல தடவாமேல்
நெருக்கும் பாயலில் வெற்றிலை யின்புறம்
ஒளித்தன் பாகஅளித்தபி னிங்கெனை
நினைக்கின் றீரிலைமெச்சலி தஞ்சொலி யெனவோதி
உறக்கண் டாசைவ லைக்குள ழுந்திட
விடுக்கும் பாவிகள் பொட்டிகள் சிந்தனை
உருக்குந் தூவைகள் செட்டைகு ணந்தனி லுழலாமே

உலப்பின் றுறெனு மக்கர முங்கமழ்
கடப்பந் தாருமு கப்ரபை யுந்தினம்
உளத்தின் பார்வையி டத்தினி னைந்திட அருள்வாயே

கறுக்குந் தூயமி டற்றன ருஞ்சிலை
யெடுக்குந் தோளனி றத்தமரெண்கரி
கடக்குந்தானவனைக்கொலரும்புயன் மருகோனே
கனத்தஞ் சாபுரி சிக்கல்வ லஞ்சுழி
திருச்செங் கோடு இடைக்கழி தண்டலை
களர்ச் செங் காடுகு றுக்கைபு றம்பயம் அமர்வோனே

சிறுக்கண் கூர்மத அத்திச யிந்தவ
நடக்குந் தேரனி கப்படை கொண்டமர்
செலுத்தும் பாதகன் அக்ரமன் வஞ்சனை யுருவானோன்

செருக்குஞ் சூரக லத்தையி டந்துயிர்
குடிக்குங் கூரிய சத்திய மர்ந்தருள்
திருச்செந்தூர் நகரிக்குள் விளங்கிய பெருமாளே.

## பதவுரை

கறுக்கும் தூய மிடற்றன் = கரிய நிறம் பொருந்திய தூய்மை மிக்க கழுத்தையுடைய சிவபெருமானுடைய, அரும் சிலை = அருமை யான மலையை, எடுக்கும் தோளன் = எடுத்த (வலிமையுடைய) தோள் களை யுடையவனும், நிறத்து அமர் = மார்பில் பொருந்திக் குத்திய, எண்கரி = எட்டுத் திசையிலுள்ள யானைகளை, கடக்குந் தானவனை = வென்ற அசுரனும் ஆகிய இராவணனைக் கொன்ற, அரும் கொல் = வென்ற அசுரனும் ஆகிய இராவணனைக் கொன்ற, அரும் புயல் மருகோனே = அருமை மிக்க மேகம்போன்ற திருமாலின் திரு மருகரே! கன தஞ்சாபுரி = பெருமை மிக்க தஞ்சாவூர், சிக்கல் = சிக்கல், வலஞ்சுழி = திருவலஞ்சுழி, திருச்செங்கோடு = திருச்செங்கோடு, இடைக்கழி = திருவிடைக்கழி, தண்டலை = திருத்தண்டலை நீணெறி, களர் = திருக்களர், செங்காடு = திருச்செங்காடு, குறுக்கை = திருக் குறுக்கை, புறம்பயம் = திருப்புறம்பயம் என்ற திருத்தலங்களில், அமர்வோனே = எழுந்தருளி யிருப்பவரே! சிறுகண் கூர்மத அத்தி = சிறிய கண்களையும் மிகுந்த மதத்தையும் உடைய யானைகளும், சயிந் தவம் = குதிரைகளும், நடக்குந்தேர் = ஓட்டப்படுகின்ற தேர்களும்,

அனிகபடை கொண்டு=காலாள்களும் அடங்கிய நால்வகைச் சேனை கனைக்கொண்டு, அமர் செலுத்தும் பாதகன்=போர்புரிகின்றபாவியும், அக்ரமன்=அநீதியுடையவனும், வஞ்சனை உருவு ஆனோன்=வஞ்சனையே ஒரு வடிவமானவனும், செருக்கும் சூர்=அகங்காரங் கொண்டவனுமாகிய சூரபன்மனுடைய, அகலத்தை இடந்து=மார்பைப் பிளந்து, உயிர் குடிக்கும்=உயிரைப் பருகிய, கூரிய சக்தி அமர்ந்து அருள்=கூர்மை பொருந்திய வேலாயுதம் தங்கி யருள்கின்ற, திருச் செந்தூர் நகரிக்குள் விளங்கிய=திருச்செந்தூர் என்ற திருத்தலத் துள் விளங்குகின்ற, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! நிறுக் கும் சூது அ(ன்)ன மெய்தன முண்டைகள்=செல்வத்தை நிறுத் துக் கொடுக்க வைக்கும் சூதுக்கருவி போன்ற கொங்கைகளை உடம்பில் உடைய தீயவர்களாகிய பொதுமகளிர், கருப்பம் சாறொடு அரைத்து உள உண்டைகள்=கரும்புச் சாறுடன் சேர்த்து அரைத்த மருந்து உருண்டைகளை, நிழல் கண்காண உணக்கி=நிழலிலேயே வைத்து உலர்த்தி, மணம்பல மேல்தடவா=அவ்வுருண்டைகளின் மேல் நல்ல வாசனைகள் பலவற்றைத் தடவி, நெருக்கும் பாயலில்=நெருக்குகின்ற படுக்கையில், வெற்றிலையின் புறம் ஒளித்து=அம்மாத்திரைகளை வெற் றிலைச் சுருளில் ஒளியவைத்து, அன்பாக அளித்தபின்=அன்புடன் கொடுத்து அதன் பின்னர், இங்கு எனை நினைக்கின்றீர் இலை=இங்கு என்னை நீர் நினைப்பதே இல்லை, மெச்சல் இதம் சொலி என ஓதி= மெச்சி மகிழ்ந்து இனிய சொற்களையும் சொல்கின்றீரில்லை என்று சொல்லி, உற கண்டு=அவன் தன் மையலில் விழுந்ததைக் கண்டு, ஆசை வலைக்குள் அழுந்திட விடுக்கும் பாவிகள்=ஆசை வலைக்குள் அவன் விழுந்திடுமாறு செய்கின்ற பாவிகள், பொட்டிகள்=வேசிகள், சிந்தனை உருக்கும் தூவைகள்=எண்ணங்களை உருக்குகின்ற புலால் உணவை யுண்பவர்கள் ஆகிய விலைமகளிருடைய, செட்டை குணந் தனில் உழலாமே=உலோப குணத்தில் அடியேன் சிக்குண்டு அலையா மற்படிக்கு, உலப்பு இன்று=அழிவு இல்லாத, ஆறெனும் அக்கரமும்= சடக்கர மந்திரத்தையும், கமழ கடப்பம் தாரும்=மணம் நிறைந்த கடப்ப மலர் மாலையையும், முகப்ரபையும்=திருமுக ஒளியையும், தினம்=நாள்தோறும், உளத்தின் பார்வை இடத்தில் நினைந்திட= அடியேன் உள்ளக்கண்ணில் கண்டு அவற்றையே தியானிக்குமாறு, அருள்வாயே=திருவருள்புரிவீர்.

## பொழிப்புரை

நீலகண்டத்தை யுடைய தூய சிவபெருமானுடைய அரிய திருக்கயிலாய மலையை எடுத்த (வலிமையுடைய) தோள்களை யுடையவனும், மார்பில் கொம்புகளால் குத்திய எட்டுத் திசை யானைகளை வென்றவனும் ஆகிய இராவணனைக் கொன்ற அரிய நீலமேக வண்ணராகிய திருமாலின் திருமரு

கரே! பெருமை பொருந்திய தஞ்சாவூர், சிக்கல், திருவலஞ் சுழி, திருச்செங்கோடு, திருவிடைக்கழி, திருத்தண்டலை நீணெறி, திருக்களர், திருச்செங்காடு, திருக்குறுக்கை, திருப் புறம்பயம் என்ற திருத்தலங்களில் உறைபவரே! சிறிய கண் களும் மிகுந்த மதமும் உடைய யானைகள், குதிரைகள், செலுத்துகின்ற தேர்கள், காலாட்கள் என்ற நாற்படைகளைக் கொண்டு போர் புரிகின்ற பாதகனும், அநீதியுடையவனும், வஞ்சனையின் வடிவமானவனும் அலங்காரமுடையவனு மாகிய சூரபன்மனுடைய மார்பைப் பிளந்து உயிரைப் பருகிய கூரிய வேலாயுதம் தங்கியிருக்கின்ற திருச்செந்தூர் என்ற திருநகரில் எழுந்தருளிய பெருமிதம் உடையவரே! ஆளையே நிறுக்கவல்ல சூதாட்டத்திற்குரிய கருவியை யொத்த தன பாரங்களை உடம்பில் உடைய மௌடிகள், கரும்புச் சாறுடன் சேர்த்து அரைத்து நிழலில் உலர்த்திய மருந்து உண்டை களின்மீது நறுமணங்களைப் பூசி அதனை நெருங்கிப் படுக் கின்ற படுக்கையில் வெற்றிலைச் சுருளில் மறைத்துக் கொடுத்து, அதனை அவன் உண்டபின், "என்னை நீர் நினைப் பதே இல்லை; மெச்சுகின்ற இனிய சொற்களைச் சொல்லுவது மில்லை" என்று கூறி, அவன் மையல் கடலில் விழுந்தது கண்டு ஆசைவலை வீசி அதில் அழுந்தும்படிச் செய்கின்ற பாவிகள், வேசிகள், எண்ணங்களை எண்ணுகின்ற உள்ளத்தை உருக்குகின்றவர்கள்; புலாலுண்ணுபவர்களாகிய விலைமகளி ரது உலோப குணத்திற் சிக்கி அடியேன் உழலாமல், அழி வில்லாத ஆறெழுத்தாகிய சடக்கர மந்திரத்தையும், மணங் கமழ்கின்ற கடப்பமலர் மாலையையும், திருமுக ஒளியையும், நாள்தோறும் அகக்கண் கொண்டு கண்டு தியானிக்கத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**நிறுக்குஞ் சூதன மெய்த்தன முண்டைகள் :—**

ஆளை நிறுத்து அதற்கிடைப் பொன் தந்து ஆடச் செய் யும் வல்லப முள்ளது சூது. நாடு நகரங்கள் அத்தனையும் இழந்து நளனைக் காடு போக வைத்தது இச் சூது. பாண்டவர் கள் தம்மையும் மனைவியையும் பணயமாக வைத்து ஆடி நாடிழந்து நலிந்தார்கள். இத்தகைய சூது விளையாடுகின்ற கருவி தனத்திற்கு உவமையாக நிற்பது.

**கருப்பஞ்சாறெ டரைத்துள உண்டைகள் :—**

தம்பால் வரும் ஆடவரை மயக்கும் பொருட்டு மாத் திரைகளை விலைமகளிர் தயாரிப்பார்கள். சில மருந்துப் பொருள்களைக் கரும்புச் சாறு விட்டு அரைத்து உருண்டை செய்வார்கள்.

**நிழற்கண் காண வுணக்கி :—**

உணக்குதல்—உலர்த்துதல். மருந்து உருண்டைகளை வெய்யிலில் உலர்த்திஞல் அதன் சத்துப் போய்விடும். அதனுல் உயர்ந்த மருந்து உருண்டைகளையும் மூலிகைகளையும் நிழலிலே உலர்த்த வேண்டும் என்பது மருத்துவ முறை.

**மணம்பல தடவா மேல் :—**

அம் மருந்து உருண்டைகளின்மீது குங்குமப்பூ, ஏலரிசி, பச்சைக் கறபூரம் முதலிய வாசனைப் பொருள்களை அரைத்து அவற்றைத் தடவி தாம்பூல மாத்திரையாகச் செய்வர்.

தடவாமேல் என்பதனை மேல் தடவா என்று சொல் மாற்றிப் பொருள் செய்யப்பட்டது. செய்யா என்ற வாய்ப்பாட்டின் படி தடவா என வந்தது.

**நெருக்கும் பாயலில் :—**

நெருங்கிச் சயனிக்குஞ் சயனமெத்தையில் தம்பால் வரும் ஆடவருடன் இருந்து மயக்குவர்.

**வெற்றிலையின்புறம் ஒளித்து அன்பாக அளித்து :—**

தாம்பூலச் சுருளில் அம்மாத்திரையை மறைத்து அன்புடன கொடுத்து தம்மைவிட்டு என்றும் அகலாவண்ணம் மையல் புரிவார்கள்.

**இங்கெனை நினைக்கின்றீரிலை; மெச்சலிதஞ் சொலி எனவோதி :—**

அவ்விலை மகளிர் முன் கூறியபடி அம்மருந்தினை யளித்த பின் "மெச்சிப் பேசி இனிது உரையாடுகின்றீர் இல்லை ;எம்மை நினைக்கின்றீர் இல்லை" என்று பசப்புரை பகர்வர். மருந்துண்டு மயங்கிய அவர்கள் இனி அவளை நினைக்காது கடவுளையா நினைக்கப் போகின்ருர்கள் ?

**ஆசை வலைக்கு ளழுந்திட விடுக்கும் பாவிகள் :—**

ஆடவரைத் தமது ஆசையாகிய வலையிற் சிக்கி உய்வு பெருவண்ணம் அதிலேயே அழுந்தியலையுமாறு புரிவர்.

**பொட்டிகள் :—**பொட்டி—வேசை.

**சிந்தனை உருக்குந் தூவைகள்:—**சிந்தனை—எண்ணம். இங்கு ஆகுபெயராக மனததைக் குறிப்பிடுகின்றது. பற்பல சிந்தனை செய்கின்ற மனதை உருக்குவர்.

தூ—இறைச்சி. இறைச்சியுண்போர் ஆதலின் தூவையர் என்றார்.

"தூப்போலுஞ் சுவையுடைய கனிபலவுந் தரவல்லேன்"
—கம்பராமாயணம்.

**செட்டை குணம் :—**

செட்டு—உலோபம். விலைமகளிர் பொருள்களைப் பிறரிட மிருந்து நிரம்பவும் பறிப்பர். தாம் அப்பொருளைச் செல விடாது செட்டாக இருப்பர்.

**உலப்பின்றுறெனு மக்கரம் :—**

அழிவின்றி விளங்குவது சடக்கரமந்திரம். அழிவற்ற தன்மையையும் அருளவல்ல மந்திர வேந்து.

இத் திருவாறெழுத்தைச் செபம் புரிவோர் பிறவிப் பெருங் கடலி னின்றுங் கரையேறுவர்; ஆபத்து விபத்து என்ற இடங்களை யெய்தமாட்டார்.

**கறுக்குந் தூய மிடற்றனருஞ்சிலை எடுக்குந் தோளன் :—**

ஆலகால விடத்தை யுண்டு சிவபெருமானுடைய கண்டங் கருமையாக ஆயிற்று. ஆயினும் அது தூயது.

திருக்கயிலாய மலையைப் பெயர்த்து எறிய வேண்டும் என்று கருதிய இராவணன் அம்மலையைத் தோள்மீது எடுத்து ஆர்த்தனன். பின்னர் அப் பரமபதி திருவிரல் நகநுனியால் சிறிது அழுத்திய மாத்திரத்தில் பாறையின் கீழ் அகப்பட்ட எலிபோல் நலிவுற்றுக் கதறினான். அதற்குப்பின் பாடி உய்வு பெற்றனன்.

**நிறத்தமர் எண்கரி கடக்குந் தானவன் :—**

நிறம்—மார்பு. இராவணன் திக்குவிஜயம் புரிந்து வந்த போது திக்கஜங்கள் எட்டும் வந்து தோமீது அமர்ந்துள்ள இராவணன் மார்பில் குத்தின. ஒவ்வொரு யானைக்கும் நான்கு கொம்புகள். முப்பத்திரண்டு தந்தங்களும் அவன் மார்பில் பதிந்தன. அவன் எழுந்து நின்றான். எட்டு யானைகளும் மறுவட்டைகள் போல் தொங்கின. வாளாயுதத்தினால் கொம்பு களை வெட்டினான். யானைகள் அஞ்சி அகன்று ஓடின. மார்பில் பதிந்த கொம்புகள் மார் பதக்கம் போல் அழகு செய்தன.

"வாரணம் பொருத மார்பும்"
—கம்பராமாயணம்.

**அரும்புளன் மருகோனே :—**

அரும்புயல் எனக்கொண்டு உரை கூறப்பட்டது. புயல்—'மேகம். உவம ஆகு பெயராகத் திருமாலைக் குறிக்கின்றது. இனி புயன் என்றே கொண்டு அருமையான தோளையுடைய வர் என்றும் பொருள் கொள்ளலாம்.

**கன தஞ்சாபுரி...புறம்பயம் :—**

இந்த அடியில் பத்து தலங்களைக் கூறுகின்றார். அடை யில்லாமலேயே இத்தலங்களின் பெயர்கள் சந்தத்திற்கு ஏற்ப அமைந்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது.

**சிறு கண் கூர்மத அத்தி :—கூர்—மிகுதி.**

யானைக்குச் சிறிய கண்களும் மிகுந்த மதமும் இருக்கும். யானை நால்வகைப் படையில் சிறந்தது.

'வேழ நெடும்படை கண்டு விலங்கிடு வில்லாளோ ?' —கம்பர்.

**செருக்கும் சூர் :—**சூரபன்மன் பற்பல மாயங்கள் புரிந்தும் வஞ்சனையாகவும் போர் புரிந்தனன். அதனால் "அக்ரமன்" "வஞ்சனை யுருவானோன்" என்றெல்லாம் அடிகளார் கூறு கின்றார். செருக்குதல்—அகங்கரித்தல். ஆயிரத்தெட்டு அண் டங்களுக்கும் அரசன் தான் என்று அகங்கரித்தான். "கோலமா மஞ்ஞைதன்னில் குலவிய குமரன் தன்னைப் பாலன் என்று" எண்ணினான். "கோலவாலெயிறு இன்னமுந் தோன்றி லாக் குதலைப் பாலன் மேலையாயிரத் தெட்டெனும் அண்டமும் வென்றே ஏலுகின்றதோர் நல்லிறையாகிய என்னை வெல்ல வல்லனோ" என்று கூறி இறுமாந்தான்; முடிவில் பெருமானால் அடக்கி யாளப் பெற்றான்.

## கருத்துரை

திருமால் மருகரே! சூரனை வதைத்த செந்திலாண்டவரே! மாதர் மயல் தீர்ந்து, ஆறெழுத்தோதி தேவரீரை அகக்கண் கொண்டு காண அருள் புரிவீர்.

## 73

கரிக்கொம்பந் தனித்தங்கங்
குடத்தின்பந் தனத்தின்கண்
கறுப்புந்தன் சிவப்புஞ்செம் பொறிதோள்சேர்
கணைக்கும்பண் டுழைக்கும்பங்
களிக்கும்பண் பொழிக்குங்கண்
கழுத்துஞ்சங் கொளிக்கும்பொன் குழையாடச்

சரக்குஞ்சம் புடைக்கும்பொன்
றுகிற்றந் தரிக்குந்தன் பளமாதர்
சடத்தும்பண் பிலுக்குஞ்சம்
சலித்தும்பின் சிரித்துங்கொண்
டழைத்துஞ்சண் பசப்பும்பெண் குழல்வேணு
தனத்துன்பந் தவிப்புண்டிங்

சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ்
செழுத்தின்பங் களித்துண்பண் கசுராரைத்
சுகத்துய்ந்தின் பலர்ச்சிந்தங்
துவைத்தும்பந் தடித்துஞ்சங்
கொலித்துங்குன் றிடித்தும்பண் டிடும்வேலா
சுகித்துங்கண் களிப்புங்கொண்

சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந்தொங் கலிற்பண்புஞ் தருவோனே
சிவப்பண்புந் தவப்பண்புந்
திணைத்தொந்தங் குறப்பெண்பண்
சசிப்பெண்கொங் கையிற்றுஞ்சுஞ் பெருமாளே.
செழிக்குஞ்செந் திலிற்றங்கும்

## பதவுரை

சுரர் சங்கம் = தேவர்களின் கூட்டம், துதித்து = துதி செய்து, அந்த அஞ்செழுத்து இன்பம் களித்து = அந்த திருவைந்தெழுத்தால் வரும் இன்பத்தில் மகிழ்ந்து, உண் பண் சுகத்து இன்பு அலர் = அமிர்தத்தை யுண்டும் இசை பாடியும் சுகத்தில் திளைத்து இன்புறுதலை, அங்கு சிந்து அசுரரை = அவ்விடத்தில் சிந்தும்படிச் செய்து துன்புறுத்திய அசுரர் களை, துவைத்தும் = கசக்கியும், பந்து அடித்தும் = பந்தாடுவதுபோல் தூக்கி எறிந்தும், சங்கு ஒலித்தும் = வெற்றிச் சங்கத்தை ஊதியும், குன்று இடித்தும் = கிரவுஞ்சமலையைப் பிளந்தும், பண் சுகித்தும் = துதிப்பாடலைக் கேட்டும், கண்களிப்புங் கொண்டிடு வேலா = கண்கள் களிக்கின்ற வேலாயுதக் கடவுளே! சிரப்பண்பும் = தலையினுடைய நலனையும், கரப்பண்பும் = கரங்களின் நலனையும், கடப்பம் தொங்கலின் பண்பும் = கடப்ப மலர் மாலையின் நலத்தையும், சிவப் பண்பும் = சிவமாந் தன்மையையும், தவப்பண்பும் = தவநிலையையும், தரு வோனே = தந்தருள்பவரே! தினை தொந்தம் = தினைப்புனத்தில் தொடர்புடைய, குறப்பெண் = வள்ளியம்மை, பண் சசிப்பெண் =

இசை நிறைந்த இந்திராணியின் மகளாகிய தெய்வயானை என்ற இரு தேவிகளின், கொங்கையில் துஞ்சும் = தனங்களில் துயில்கின்ற, செழிக்கும் செந்திலில் தங்கும் = வளமை மிக்க திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! கரி கொம்பு (அம்சாரியை) யானையின் கொம்பைப் போலவும், தனி தங்க குடத்து = ஒப்பற்ற பொற்குடம் போலவும் திகழ்கின்ற, இன்பத்தனத்தின்கண் = இன்பத்தைத் தருகின்ற கொங்கைகளையும், கறுப்பும் தன் சிவப்பும் செம்பொறி = கருநிறமும் செந்நிறமும் உடைய செவ்வரிகள் படர்ந்ததும், தோள் சேர் = தோள்வரை சேர்வதும், கணைக்கும் = அம்புக்கும், பண்டு உழைக்கும் = பழைமையான மானுக்கும், பங்கு அளிக்கும் = தனது தன்மையில் பங்கு தருவதும், பண்பு ஒழிக்கும் = குணத்தை யழிக்கவல்லதும் ஆகிய, கண் = விழிகளையும், சங்கு ஒளிக்கும் கழுத்து = சங்கு நாணி ஒளிக்குமாறு அழகுடைய கழுத்தையும், பொன்குழை = பொன்னாலாகிய குழைகளையும், ஆடு அசர குஞ்சம் புடைக்கும் பொன் துகில் = அசைந்து சரம்போல் பக்கத்தில் தொங்கவிட்டுள்ள அந்த கொய்சகத்துடன் கூடிய பொன்னுடையையும், தந்தம் தரிக்கும் தன் சடத்தும் = தந்த மணிகளை யணிந்துள்ள சரீரத்தையும் கொண்டு, பண் பிலுக்கும் = நன்கு பகட்டு செய்யும், சம்பளமாதர் = பொருள் பெறும் விலைமாதர்கள், சலித்தும் = பொருள் தராது ஒழியில் சலிப்புற்றும், பின் சிரித்தும் = பிறகு பொருள் தந்தால் புன்னகைபுரிந்தும், கொண்டு அழைத்தும் = பொருள்கொண்டு அழைத்தும், சண்பசப்பும் பெண் = சார்ந்து பசப்புகின்ற அப் பெண்களின், தன துன்பம் = தனபாரங்களால் வருந்துன்பத்தை யடைந்து, தவிப்பு உண்டு = தவிப்பை யடைந்து, இங்கு உழல்வேனோ = இங்கு அடியேன் அலைவேனோ?

## பொழிப்புரை

இறைவனைத் துதித்தும் பஞ்சாக்கரத்தை நினைந்து இன்புற்றும் அமிர்தத்தையுண்டும் கீதத்தைப் பாடியும்மகிழ்கின்ற தேவர் குழாங்கள் துன்புறுமாறு செய்த அசுரர்களைக் கசக்கியும் பந்துபோல் எடுத்து எறிந்தும், வெற்றிச் சங்கை ஒலித்தும் கிரவுஞ்ச மலையைப் பிளந்தும் துதிப் பாடலைக் கேட்டருளியும் கண் களித்த வேலாயுதக் கடவுளே! சென்னியினுடைய நலனையும், கரங்களின் நலனையும், கடப்ப மலர்மாலையின் நலனையும், சிவமாந் தன்மையையும், தவநிலையையும் தந்து அருள் புரிபவரே! தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளியம்மையார், இனிய இந்திராணியின் புதல்வியாகிய தெய்வயானை என்ற இரு அம்மையார்களின் தனங்களில் துயில்கின்றவரும், செழுமை நிறைந்த செந்திலம்பதியில் எழுந்தருளியிருப்பவரும் ஆகிய பெருமிதமுடையவரே! யானையின்

கொம்பையும் ஒப்பற்ற பொற்குடத்தையும் ஒத்து இன்பத்தைத் தருகின்ற தனங்களையும், கருமை செம்மை நிறமுள்ள வரிகளையுடையதாய், தோள்களில் சேர்வதாய், அம்பையும் மானையும் ஒத்ததாய், குணங்களை யழிப்பதாயுள்ள கண்களையும், சங்கு நாணும்படி யழகுசெய்யுங் கழுத்தையும், பொன்னாலாகிய குழையையும், அசைகின்ற சரம்போல் தொங்கி அழகுற்று விளங்கும் அந்த கொய்சகத்துடன்கூடிய பொன்னுடையையும், தந்த மணிகளையணிந்த சரீரத்தையும் கொண்டு பகட்டிப் பொருள்பறிக்கும் விலைமாதர், பணத்தை நோக்கிச் சலித்தும், பணம் பெற்றவுடன் புன்னகை புரிந்தும், வீட்டிற்குள் அழைத்துச் சென்றும் சார்ந்து பசப்புவர். அவர்களுடைய தனபாரங்களினால் துன்புற்றுத் தவித்து வீணில் அலையலாமோ?

## விரிவுரை

**கரிக்கொம்பு......தனம் :—**

தனபாரத்திற்கு யானையின் கொம்பும், பொற்குடமும் உவமைகளாகும். விலைமகளிர் தனத்தால் தனத்தைக் கவர்வர்.

**கறுப்புந்தன் சிவப்பும் செம்பொறி :—**

கண்களில் கருநிற ரேகையும் செந்நிற ரேகையும் படர்ந்திருக்கும். பொறி—வரி. அழகிய வரிகள்.

**கணைக்கும் பண்டுழைக்கும் பங்களிக்கும் பண்பொழிக்குங்கண் :—**

பெண்களின் கண்கள் அம்புபோல் கூர்மையாகவும், மான் விழி போலவும் இருக்கும். ஆடவர்களுடைய பண்பை யழிக்கும் தன்மையுடையது அக்கண்.

**கழுத்துஞ் சங்கொளிக்கும் :—**

கழுத்து சங்கைப்போல் அழகாக இருக்கும். கழுத்தின் அழகை நோக்கி நாணத்தினால் சங்கு தண்ணீரில் ஒளிக்கின்றது என்று தற்குறிப்பேற்றணியினால் கூறுகின்றனர்.

**ஆடச் சரக்குஞ் சம்புடைக்கும் பொன் துகில் :—**

ஆடு அச்சரக் குஞ்சம் எனப் பிரித்துக் கொள்க. விலைமகளிர் புடவையில் ஒரு பகுதியை நன்கு மடித்து ஒரு புறத்தில் தொங்க விடுவர். அது அசைந்து அசைந்து ஆடும். அதற்கு கொய்சகம் என்று பேர். விலைமகளிர் நல்ல பொன்னுடைகளை யுடுத்து அதனைப் பற்பலவாறு திருத்தி ஆடவரை மயக்குவர்.

**பண்பிலுக்கும் :—**

உயர்ந்த ஆடை அணிகலங்களால் ஆடம்பரமாக அலங்கரித்துக் கொள்வர்.

**சம்பள மாதர் :—**சமபளம்—கூலி. கைப்பொருள் பெற்று பொருளுக்குத் தக்கபடி அன்பைக் காட்டுவர்

**சலித்தும் :—**

பணம் தராவிடில் சலித்துக் கொள்வர்.

**பின் சிரித்தும் :—**

பணந் தந்தபின் புன்முறுவல் காட்டுவர்.

**கொண்டு அழைத்தும் :—**

பணத்தைப் பெற்றுக்கொண்டு தங்கள் இல்லத்திற்கு அழைத்துச் செல்வர்.

**சண் பசப்பும் பெண் :—**

சண்—சண்ணித்தல் (சார்ந்திருத்தல்). தம்பால் வந்து பொருள் தந்தவரைச் சார்ந்திருப்பர்.

**சுரர்ச்சங்கம்... அசுரரரை :—**

தேவர்கள் எப்போதும் இறைவனைத் துதி செய்தும், திருஐந்தெழுத்தை யோதியும் இன்புறுவர். அவர்களை சூராதி யவுணர்கள் இடர்ப்படுத்தி சிறையில் அடைத்து உண்ணல், இசை கேட்டல் முதலிய சுகங்களின்றி வருத்தினார்கள். அதனால் சுரர் அசுரர் என்ற இருதிறத்தினருக்கும் பொதுவாகிய இறைவன் அசுரரை அடக்கிச் சுரரை வாழ்வித்தனர்.

**சிரப்பண்பு :—**

சிரப்பண்பாவது இறைவனுடைய திருவடிகளை வணங்குவதாகும். வணங்காத தலை உயர்வில்லாதது. பயனற்றதுமாகும். காணாத கண்ணும், கேளாத காதும், பேசாத வாயும் இருந்தும் பயனின்றி இழிவு பெறுமாறு போல் இறைவனை வணங்காத தலையும் இகழத்தக்கதாம்.

> கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை. —திருக்குறள்.

அன்றியும் இறைவனை வணங்காத தலை மறுபிறப்பில் நன்றி மறந்த வினைப் பயத்தால் விறகு சுமந்து வேதனையுறும்.

சும்மாடு கட்டிச் சுமந்துழலு வார்சிலரை
இம்மா நிலத்தில் எண்ணுங்கால்—அம்மாநின்
பொன்னு ரடிமுடியைப் போற்றாத பேரன்றோ
மன்னு சிதம்பரதே வா. —குருநமசிவாயர்.

"எங்கள் பெருமான் உன்னை வணங்காத முடர்தலை
இகழ் விறகு எடுக்குந்தலை"

வீட்டுத் தலைவநின் றுன்வணங்கார்தம் விரிதலைசும்
மாட்டுத்தலைபட்டி மாட்டுத் தலைபுன் வராகத்தலை
ஆட்டுத் தலைவெறி நாய்த்தலை பாம்பின் அருந்தலைகற்
பூட்டுத்தலை வெம்புலைத்தலை நாற்றப் புழுத்தலையே.
—இராமலிங்கர்.

இனி அருணகிரிநாதருடைய சிரத்தில் முருகப்பெருமான் வேதாகமங்களின் சிரத்தில் விளங்கும் தனது திருவடி மலரைச் சூட்டினுர்.

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும்படி தந்தது சொல்லுமதோ
வீடுஞ் சுரர் மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே. —அநுபூதி. (44)

"எனது தலையிற் பதங்கள் அருள்வோனே" —(களபமு) திருப்புகழ்.

**கரப்பண்பும் :—**

கரத்தின் பண்பாவது கரத்தைத் தந்தஇறைவனைக்கடிமா மலர் தூவி அர்ச்சித்து கைகூப்பித் தொழுவதேயாகும். அவ் வண்ணம் தொழுத கரங்கள் மறுபிறப்பில் நன்றி பாராட்டிய புண்ணியத்தால பொன் வழங்கும் புனிதக் கரங்களாகத் திகழும். தொழாத கரங்கள் பிச்சையேற்க நீட்டும் துன்பத்தை யநுபவிக்கும்.

"தோன்றலுன் திருமுன் குவித்த பெரியோர் கைகள்
சுவர்ன மிடுகின்ற கைகள்"

"பரம நின் திருமுன்னர் குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள் கொடுங்கை" —இராமலிங்கர்.

ஆடு மாடுகட்குக் கரங்கள் இல்லை. மனிதனுக்குக் கடவுள் கரங்களைத் தந்தனர். அவர் தந்த கரத்தால் அவரைத் தொழு தும், அவருடைய ஆலயங்களாகிய வறியவர்கட்கு இயன் றதை வழங்கியும் உய்தல் வேண்டும். ஆகவே கரப் பண்பு வணங்குதலும் வழங்குதலும் ஆகும்.

**கடப்பந் தொங்கலிற் பண்பு :—**

முருகவேளுக்கு உவந்த கடப்பமலர்களைத் தொடுத்து மாலையாக்கி அவருடைய அடிமலரில் புனையவேண்டும்.

**சிவப்பண்பும் :—**

சிவமாகுந் தன்மையை சீவர்கள் பெறுவதே முடிந்த முடிபு ஆகும். "சீவன் சிவச்சொரூப மென தேறி" என்கின்றார் பிறிதொரு திருப்புகழில். "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி" என்கின்றார் மணிவாசகர். சீவன் சிவனாகும் இயல்புடையது. சிவம் சாராதது சவம்தானே.

**தவப்பண்பு:—**

சிவத்தைத் தவத்தால் அடைய முடியும். தவம் என்றால் சிந்தையை யடக்கிச் செந்நெறி நிற்றல் ஆகும்.

## கருத்துரை

அசுரகுலகாலரே! சிவானுபவத்தைத் தருகின்றவரே! செந்திலாண்டவரே! மாதர் வயப்படாது உய்யுமாறு அருள் புரிவீர்.

## 74

கருப்பந்தங் கிரத்தம் பொங்
கரைப்புண் கொண் டுருக்கும் பெண்
களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே

கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்
துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறிச்

செருத்தண்டந் தரித்தண்டம்
புகத்தண்டந் தகற் கென்றுந்
திகைத்தந்திண் செகத்தஞ்சுங் கொடுமாயும்

தியக்கங்கண் டுயக் கொண்டென்
பிறப்பங்கஞ் சிறைப்பங்கஞ்
சிதைத்துன்றன் பதத் தின்பந் தருவாயே

அருக்கன்சஞ் சரிக்குந்தெண்
டிரைக்கண்சென் றரக்கன்பண்
பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா

அணிச்சங்கங் கொழிக்குந்தண்
டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
தளிக்குஞ்செந் திலிற்றங்கும் குமரேசா

புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
கரர்க்குஞ்சங் கரர்க்கின்பம்
புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனாய்

புனக்குன் றந் திளைக்குஞ்செந்
தினைப்பைம்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே.

## பதவுரை

அருக்கன் சஞ்சரிக்கும்=சூரியன் உலாவுகின்ற, தெண்திரை கண் சென்று=அலைகள் வீசுகின்ற தெளிந்த கடலிடத்தில் சென்று, அரக்கன் பண்பு அனைத்தும் பொன்றிட கன்றும்=சூரபன்மனது பெருமைகள் யாவும் அழியுமாறு சினந்த, கதிர்வேலா=ஒளிமிகுந்த வேலாயுதத்தை யுடைய கடவுளே! அணிசங்கம் கொழிக்கும்=அழகிய சங்குகளைக் கொழிக்கின்றதும், தண்டு அலை=சேனைகள்போல் எழுகின்ற அலைகள், பண்பு எண்திசைக்கும் கொந்தளிக்கும்=பண்புடைய எட்டுத் திசைகளிலும் கேட்குமாறு கொந்தளிப்பதுமாகிய கடல் சூழ்ந்த, செந்திலில் தங்கும்=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, குமரேசா=குமாரக் கடவுளே! புரக்கும் சங்கரிக்கும்=உலகங்களை யெல்லாங் காத்தருள் புரிகின்ற உமாதேவிக்கும், சங்கரர்க்கும்=சுகத்தைச் செய்கின்ற சிவ பெருமானுக்கும், சங்கரர்க்கு இன்பம் புதுக்கும் கங்கையட்கும்= சிவமூர்த்திக்கு இன்பத்தைத் தரும் கங்காதேவிக்கும், சுதன் ஆனாய்= புதல்வராக ஆனவரே! புன குன்றம் திளைக்கும்=கொல்லைகளுடன் கூடிய மலையில் மகிழ்ச்சியுறுகின்ற, செம்தினை பைம்பொன்=செம்மையாகிய தினைப்பயிரைக் காத்த பசும்பொன் சிலை போன்ற, குற கொம்பின்=குறமகளாகிய வள்ளியம்மையின், தண் கொங்கை புறத்தில் துஞ்சும்=குளிர்ந்த தனபாரங்களின் அருகில் துயில்கின்ற, பெருமாளே=பெருமிதமுடையவரே! கருப்பம் தங்கு இரத்தம் பொங்கு=கருத் தங்குதற்கு ஏற்றதாய் உதிரம் நிறைந்த, அரை புண் கொண்டு=அரையில் இருக்கும் அல்குலைக் கொண்டு, உருக்கும் பெண்களை கண்டு=உள்ளத்தை உருக்குகின்ற விலைமாதரைக் கண்டு, அவர் பின் சென்று=அம்மாதர்களின் பின்னே சென்று, அவரோடே கலப்

புண்டும் = அவரைக் கூடியும், சிலுப்புண்டும் = ஊடியும், துவக்குண்டும் = மீண்டும் அவர்களைக் கலந்தும், பிணக்குண்டும் = மறுபடியும் வேற்றுமை யடைந்தும், கலிப்புண்டும் = இன்பமுற்றும், சலிப்புண்டும் = துன்பமுற்றும், தடுமாறி = தடுமாற்றத்தையடைந்து, செருதண்டம் தரித்து = போருக்கு உரிய தண்டாயுதத்தைத் தாங்கி, அண்டம் புக தண்டு = வேறு உலகம் புகுமாறு உயிர்களைத் துன்புறுத்துகின்ற, அந்தகற்கு என்றும் திகைத்து = இயமனுக்கு என்றும் அஞ்சி, அம் திண் செகத்து = அழகிய திண்ணிய பூமியில், அஞ்சும் கொடுமாயும் = ஐம்புலன்களால் அலைந்து அழிகின்ற அடியேனுடைய, தியக்கம் கண்டு = கலக்கத்தைக் கண்டு, உயக் கொண்டு = உய்யுமாறு ஆட்கொண்டு, என் பிறப்பு அங்கம் சிறைபங்கம் சிதைத்து = அடியேன் பிறந்து வந்த உடம்பாகிய சிறையில் கிடந்து வருந்துந் துயரத்தைப் போக்கி, உன்றன் பதத்து இன்பம் தருவாயே = தேவரீருடைய திருவடி யின்பத்தைத் தந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

சூரியன் உலவுகின்றதும், தெளிந்த அலைகள் வீசுகின்றது மாகிய கடலின்கண் சென்று சூரபன்மனுடைய பெருமை யாவும் அழியுமாறு சினந்த ஒளி மிகுந்த வேலாயுதத்தை யுடையவரே! அழகிய சங்குகளைக் கொழித்து, சேனை எழுவது போல அலைகள் எழுந்து எண்திசையும் கேட்குமாறு ஆரவாரிக்கின்ற கடற்ரையில் விளங்கும் செந்திமாநகரில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! உலகங்களை யெல்லாம் காத்தருளுகின்ற பார்வதியம்மையாருக்கும், உயிர்களுக்குச் சுகத்தைச் செய்கின்ற சிவ மூர்த்திக்கும், அவருக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற கங்காதேவிக்கும் புதல்வராக விளங்குபவரே! புன் செய்ப் பயிர்களுடன் கூடிய மலையில் தினைக் கொல்லையில் மகிழ்ச்சியுடன் வாழ்ந்த பொற்சிலை போன்ற வள்ளி பிராட்டியின் குளிர்ந்த தனபாரத்தினிடம் துயில்கின்ற பெருமிதமுடையவரே! கருத்தங்குதற்கு ஏற்றதாய் உதிரம் நிறைந்த அரையில் அல்குலைக் கொண்டு ஆடவர் உள்ளத்தை உருக்கும் விலைமகளிரைக் கண்டு, அவர் பிறகே சென்று அவர்களைக் கலந்தும், பிரிந்தும், மறுபடியும் ஒற்றுமைப்பட்டும் வேற்றுமைப்பட்டும், இன்புற்றும், துன்புற்றும், தடுமாற்றமடைந்து வருய், போருக்கு உரிய தண்டாயுதத்தை ஏந்திக்கொண்டு வேறு உலகம் புகுமாறு உயிர்களை வருத்துகின்ற கூற்றுவனுக்கு அஞ்சி, அழகும், திட்பமும் உடைய பூமியில் ஐம்புலன்களால் அலைந்து அழிகின்ற அடியேனுடைய கலக்கத்தைக் கண்டு உய்வித்து, பிறந்து வர்த உடலாகிய சிறையில் கிடந்து வருந்தும் இடரை நீக்கி உமது திருவடி யின்பத்தை வழங்கி யருள்புரிவீர்.

## விரிவுரை

**கருப்பந்தங் கிரத்தம் பொங்கு........அவரோடே :—**

ஆடவர்களைத் தங்கள் அங்கங்களைக் கொண்டு மயக்கும் விலைமகளிரைக் கண்டு உள்ளம் உருகி அவர் சென்ற பக்க மெல்லாம் சென்று அவர் பின்னே திரிவர்.

**கலப்புண்டும் சிலுப்புண்டும் :—**

கலத்தல்—கூடல்; சிலுத்தல்—ஊடல்.

காதன் மிகுதியால் கூடுவதும், இன்பம் மிகும் பொருட்டு ஊடுவதும் காதலர் இயல்பு.

> உணலினும் உண்ட தறலினிது காமம்
> புணர்தலின் ஊடல் இனிது.
>
> ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
> கூடிமுயங்கப் பெறின்.
>
> —திருக்குறள்.

**துவக்குண்டும் பிணக்குண்டும் :—**

பொருள் தந்து அவருடன் கூடியும், பொருள்தர இயலாமையால் பிணங்கியும் ஆடவர் துன்புறுவர். விலைமகளிர் பொன்னையே நோக்குபவர் ஆதலின் அடிக்கடி பிணங்குவர். நிரம்பவும் பொருள்தரின் இணங்குவர்.

> "பொன்னேக்கியர் இல்வழி நோக்கிய புன்கணேரும்" —கம்பர்.

**கலிப்புண்டும் சலிப்புண்டும் :—**

விலைமகளிர் உறவால் மகிழ்ச்சியுற்றும், பிணி வறுமை முதலிய எய்தி துன்புற்றும் தடுமாறுவர். விலைமகளிர் உறவு மிக்க இன்பம்போல் தோன்றி துன்பத்தில் முடியும் என்பதனை இந்த அடியால் அடிகளார் அறிவுறுத்தினர்.

**அஞ்சும் கொடு மாயும் :—**

ஐந்து புலன்கள் நம்மை ஒரு வழிப்பட விடாமல் அலக்கழிக்கின்றன. 'ஓரவொட்டார்; ஒன்றை யுன்ன வொட்டார்; மலர் இட்டு உனதாள் சேர வொட்டார் ஐவர்; செய்வதென் யான்?' என்று அடிகளாரே கூறி வருந்துகின்றார்.

> "அரிச்சிராப்பகல் ஐவராலாட்டுண்டு
> சுரிச்சிராது நெஞ்சே ஒன்று சொல்லக்கேள்"

என்கின்றார் அப்பர் அடிகள்.

இவ்வாறு நம்மைப் பன்னெடுங்காலமாக அலைத்து வருத்தும் ஐம்புலன்களை ஒரு வழிப்படுத்தி அவற்றை வெல்லுதல் வேண்டும்.

உரன்என்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து. —திருக்குறள்.

ஐம்புலவேடரை அடக்காது அவர் வழி சென்றோர் விரைவில் கெடுவர். ஆகவே ஐவரை அறுவராக்கி வென்று உயர்வு பெறுவதே உய்யு நெறியாகும்.

**பிறப்பங்கஞ் சிறைப்பங்கம் :—**

இந்த உடம்பு ஒரு சிறைக் கூடம். நல்வினை தீவினை என்ற இரு விலங்குகளாற் கட்டி நியாயாதிபதியாகிய இறைவன் ஆன்மாவை இதற்குள் அடைத்து வைத்திருக்கின்றனர். தண்டனை முடிந்தவுடன் மீளவும் இப்பிறப்பில் செய்த வினைகளை ஆய்ந்து அதற்குரிய தீர்ப்பு கூறப்படுகின்றது.

"அறம்பாவ மென்னும் அருங்கயிற்றால் கட்டி
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி"

என்கின்றார் மணிவாசகர்.

"ஏழையி னிரட்டைவினை யாயதொ ருடற்சிறையி
ராமல் விடுவித்தருள் நியாயக்காரனும்" —திருவகுப்பு. (4)

பிறப்புடன் கூடிய இடமாகிய உடம்பு ஒரு சிறை யென்பதனை இதில் விளக்கி, அச்சிறையாகிய துன்பத்தை முருகன் தனக்கு அகற்றியருளினார் என்று அடிகளார் கூறுகின்றனர்.

இருவினை யொப்பு என்ற தன்மையை யெய்தி மலபரிபாக முற்றோர் அருள்பதிந்து மீட்டிங்கு வாரா நெறியடைவர்.

**புரக்குஞ் சங்கரி :—**

சம்—சுகம்; கரம்—செய்வது. சங்கரன்—சுகத்தைச் செய்பவன். சுகத்தை ஆன்மாக்களுக்குச் செய்யும் அம்பிகை சங்கரி யெனப் பெற்றனர்.

எல்லாவுலகங்களையும் இறைவன் திருவருள் கொண்டே காத்தருளுகின்றனன். அவ்வருளே அம்பிகையாகும். இறைவனும் திருவருளும் ஒன்றே.

அன்றியும் இறைவனிடத்தில் பிரியாதுறையும் நீர்மைக் குணமே கங்காதேவி யென வுணர்க.

ஆகவே சிவம் அம்பிகை கங்கை யென்ற சொற்கள் வேறு வேறாயினும் மூர்த்தி ஒன்றே யெனத் தெளிக. சிவத்தினிட

மிருந்து வெளிப்பட்ட ஆனந்தமே முருகன். ஆகவே சிவமூர்த்தி வேறு முருகன் வேறு அன்று.

## கருத்துரை

சூரசங்கார மூர்த்தியே! செந்திற்குமாரரே! சிவகுமாரரே! வள்ளி நாயகமே! பிறப்பாகிய சிறைத்துயரை யகற்றி திருவடியின்பமருள்வீர்.

## 75

குழைக்குஞ்சந் தனச்செங்குங்
குமத்தின்சந் தநற்றுன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே
குழைக்குங்குண் குமிழ்க்குஞ்சென்
றுரைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்குமபண் தழைக்குஞ்சிங் கியராலே

உழைக்குஞ்சங் கடத்துன்பன்
சுகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டுடற்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே
உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
ப்ரபைக் கொன்றுஞ் சிவக்குந்தண்
டுயர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் சடிசேராய்

தழைக்குங்கொன் றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தரத்தஞ்செம் புயத்தொன்றும் பெருமானார்
தனிப்பங்கின் புறத்தின்செம்
பரத்தின்பங் கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக்கென்றும் பெருவாழ்வே

கழைக்குங்குஞ் சரக்கொம்புங்
கலைக்கொம்புங் கதித்தென்றுங்
கயற்கண்பண் பளிக்குந்திண் புயவேளே
கறுக்குங் கொண் டலிறபொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ்செந்
திலிற்கொண்டன் பினிற்றங்கும் பெருமாளே.

## பதவுரை

தழைக்கும் கொன்றையை = தழைத்துள்ள கொன்றை மலரை, செம்பொன் சடை கண்டு = சிவந்த பொன் போன்ற சடாமுடியில் சேர்த்தும், அங்கியை = நெருப்பை, தங்கும் தரத்து = தங்கும்படியாக, அம் செம்புயத்து ஒன்றும் பெருமானுர் = அழகிய சிவந்த திருக்கரத்திலே சேர்த்தும் உள்ள சிவபெருமானுடைய, தனிபங்கின் புறத்தின் = ஒப்பற்ற ஒரு பாகத்திலும், செம்பரத்தின் = செவ்விய பரமண்டலத்திலும், பங்கயத்தின் = இதய தாமரையிலும், சஞ்சரிக்கும் = உலாவி நலம்புரிகின்ற, சங்கரிக்கு = உமாதேவிக்கு, என்றும் பெருவாழ்வே = எந்நாளும் பெருவாழ்வாக விளங்கும் புதல்வரே! கழைக்கும் = மூங்கில் போன்ற திரண்ட தோள்களையுடைய, குஞ்சர கொம்பும் = யானையின் மகளாகிய தெய்வயானை யம்மையும், கலை கொம்பும் = மான் மகளாகிய வள்ளியம்மையும், என்றும் கதித்து = எந்நாளும் எழுச்சியுற, கயல் கண் பண்பு அளிக்கும் = மீன் போன்ற அவர்களுடைய கண்களுக்கு இன்பந் தருகின்ற, திண்புயவேளே = வலிய தோள்களையுடையவரே! கறுக்கும் கொண்டலில் பொங்கும் கடல் = கருமையாய மேகம்போல் பொங்கி யெழும் கடலானது, சங்கம் கொழிக்கும் = சங்குகளைக் கொழிக்கும்படியான, செந்திலில் கொண்டு அன்பினில் தங்கும் = திருச்செந்தூரில் அன்புகொண்டு எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! குழைக்கும் சந்தனம் = குழைத்துக் கலந்த சந்தனம், செம் குங்குமத்தின் = சிவந்த குங்குமப் பூ முதலிய வாசனைப் பண்டங்கள் பூசப்பட்டுள்ள, சந்த நல் குன்றம் குலுக்கும் = அழகிய நல்ல மலை போன்ற கொங்கைகளைக் குலுக்குகின்ற, பைங்கொடிக்கு என்று இங்கு இயலாலே = பசுங் கொடிபோல் விளங்கி இவ்விடத்தில் தகுதியினுல், குழைக்கும் = குழையணிந்துள்ள காதினிடத்து, குண் குமிழ்க்கும் = நிறமுள்ள குமிழம் பூவைப் போன்ற மூக்கினிடத்தும், சென்று உரைக்கும் = சென்று பேசுவது போன்ற, செம் கயல் கண் கொண்டு அழைக்கும் = சிவந்த மீனை யொத்த கண்களைக் கொண்டு அழைக்கின்ற, பண்தழைக்கும் சிங்கியராலே = மனத்தில் விஷத்தையும் நாவில் இனிய சொல்லையும் கொண்ட விஷமிகளாகிய விலை மகளிர் பொருட்டு, உழைக்கும் சங்கட துன்பன் = உழைக்கின்றதால் வரும் வேதனையாகிய துன்பத்தில் உழல்கின்ற அடியேன், சுகபண்டம் சுகித்து உண்டு உண்டு = சுகமான பண்டங்களை இனிமையுடன் உண்டு உண்டு, உடல் பிண்டம் பருத்து = உடலாகிய பிண்டம் மிகவும் பருமையடைந்து, இன்று இங்கு உழலாதே = இந்நாள் இப்பூமியில் அலையாமல், உதிக்கும் செம்கதிர் சிந்தும் = உதிக்கின்ற சிவந்த சூரியன் சிந்துகின்ற, ப்ரபைக்கு ஒன்றும் சிவக்கும் தண்டு = ஒளிக்கு ஒப்பான சிவந்த தண்டையும், உயர்க்கும் கிண்கிணி = உயர்ந்த கிண்கிணி

யும் அமைந்த, செம்பஞ்சு அடிசேராய்=சிவந்த பஞ்சு போன்ற மெல்லிய திருவடியிலே அடியேனைச் சேர்த்து அருள்வீர்.

## பொழிப்புரை

தழைத்துள்ள கொன்றை மலரைச் சிவந்த பொன் போன்ற சடையில் தரித்து, அழகிய கரத்தில் மழுவை ஏந்தும் சிவபெருமானுடைய ஒருபுறத்திலும், பரமண்டலத்திலும், ஆன்மாக்களின் இதய தாமரையிலும் உலவுகின்ற பார்வதி யம்மையின் பாலரே! மூங்கில்போல் திரண்ட தோள்களை யுடைய தெய்வயானை யம்மை வள்ளியம்மை என்ற இருவரும் எப்போதும் செழிப்புற அவர்களுடைய திருக்கண்களுக்கும் இன்பத்தை யளிக்கின்ற திருத் தோள்களையுடைய உப காரியே! கருத்த மேகம்போல் எழுந்து அலைகள் சங்குகளைக் கொழிக்கின்ற கடலின் கரையில விளங்கும் செந்திமாநகரை இடமாகக் கொண்டு அன்புடன் வசிக்கின்ற பெருமிதம் உடை யவரே! வாசனைப் பண்டங்களுடன் குழைத்த சந்தனத்தை யும், சிவந்த குங்குமப் பூவையும் பூசப்பட்டுள்ள, அழகிய நல்ல மலை போன்ற தனங்களைக் குலுக்கும் பசிய கொடிபோல் தோன்றி தகுதியோடு குழையணிந்த செவியிடத்தும், சிவந்த குமிழம் பூப் போன்ற நாசியிடத்தும் சென்று பேசுவதுபோல் புரண்டு புரண்டு அழகு செய்கின்ற, செம் மீன் போன்ற கண் களைக் காட்டி இளைஞர்களை இசையால் அழைக்கின்ற நஞ்சு போன்றபொருட் பெண்டிர் பொருட்டு, உழைத்து துன்பப் படுகின்ற நாயேன், இனிய உணவுப் பொருகளை சுவை பார்த்து உண்டு உண்டு உடம்பைப் பருக்கவைத்து இந்த நாளில் இத் தலத்தில் வீணே உழலாமற்படிக்கு, உதயசூரியன் சிந்துகின்ற செவ்வொளிபோன்ற சிவந்த தண்டையையும் உயர்ந்த கிண்கிணியையும் அணிந்த செம்பஞ்சு போன்ற மெல்லிய திருவடிக் கமலத்தில் சேர அருள்புரிவீர்.

## விரிவுரை

**குழைக்குஞ் சந்தனம் :—**

சந்தனத்தில் புனுகு சவ்வாது பன்னீர் முதலிய வாசனைப் பொருள்களைச் சேர்த்துக் குழைப்பர்.

**செங்குங்குமம் :—**

சிவந்த குங்குமப் பூவை அரைத்து, சந்தனம் குங்குமப் பூ முதலிய கலவைகளை விலைமகளிர் தனங்களின்மீது அழகுறப் பூசி இளைஞரை மயக்குவர்.

## பதவுரை

தழைக்கும் கொன்றையை = தழைத்துள்ள கொன்றை மலரை, செம்பொன் சடை கண்டு = சிவந்த பொன் போன்ற சடாமுடியில் சேர்த்தும், அங்கியை = நெருப்பை, தங்கும் தரத்து = தங்கும்படியாக, அம் செம்புயத்து ஒன்றும் பெருமானுர் = அழகிய சிவந்த திருக்கரத்திலே சேர்த்தும் உள்ள சிவபெருமானுடைய, தனிபங்கின் புறத்தின் = ஒப்பற்ற ஒரு பாகத்திலும், செம்பரத்தின் = செவ்விய பரமண்டலத்திலும், பங்கயத்தின் = இதய தாமரையிலும், சஞ்சரிக்கும் = உலாவி நலம்புரிகின்ற, சங்கரிக்கு = உமாதேவிக்கு, என்றும் பெருவாழ்வே = எந்நாளும் பெருவாழ்வாக விளங்கும் புதல்வரே! கழைக்கும் = மூங்கில் போன்ற திரண்ட தோள்களையுடைய, குஞ்சர கொம்பும் = யானையின் மகளாகிய தெய்வயானை யம்மையும், கலை கொம்பும் = மான் மகளாகிய வள்ளியம்மையும், என்றும் கதித்து = எந்நாளும் எழுச்சியுற, கயல் கண் பண்பு அளிக்கும் = மீன் போன்ற அவர்களுடைய கண்களுக்கு இன்பந் தருகின்ற, திண்புயவேளே = வலிய தோள்களையுடையவரே! கறுக்கும் கொண்டலில் பொங்கும் கடல் = கருமையாய மேகம்போல் பொங்கி யெழும் கடலானது, சங்கம் கொழிக்கும் = சங்குகளைக் கொழிக்கும்படியான, செந்திலில் கொண்டு அன்பினில் தங்கும் = திருச்செந்தூரில் அன்புகொண்டு எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! குழைக்கும் சந்தனம் = குழைத்துக் கலந்த சந்தனம், செம் குங்குமத்தின் = சிவந்த குங்குமப் பூ முதலிய வாசனைப் பண்டங்கள் பூசப்பட்டுள்ள, சந்த நல் குன்றம் குலுக்கும் = அழகிய நல்ல மலை போன்ற கொங்கைகளைக் குலுக்குகின்ற, பைங்கொடிக்கு என்று இங்கு இயலாலே = பசுங் கொடிபோல் விளங்கி இவ்விடத்தில் தகுதியினால், குழைக்கும் = குழையணிந்துள்ள காதினிடத்து, குண் குமிழ்க்கும் = நிறமுள்ள குமிழம் பூவைப் போன்ற மூக்கினிடத்தும், சென்று உரைக்கும் = சென்று பேசுவது போன்ற, செம் கயல் கண் கொண்டு அழைக்கும் = சிவந்த மீனை யொத்த கண்களைக் கொண்டு அழைக்கின்ற, பண் தழைக்கும் சிங்கியராலே = மனத்தில் விஷத்தையும் நாவில் இனிய சொல்லையும் கொண்ட விஷமிகளாகிய விலை மகளிர் பொருட்டு, உழைக்கும் சங்கட துன்பன் = உழைக்கின்றதால் வரும் வேதனையாகிய துன்பத்தில் உழல்கின்ற அடியேன், சுகபண்டம் சுகித்து உண்டு உண்டு = சுகமான பண்டங்களை இனிமையுடன் உண்டு உண்டு, உடல் பிண்டம் பருத்து = உடலாகிய பிண்டம் மிகவும் பருமையடைந்து, இன்று இங்கு உழலாதே = இந்நாள் இப்பூமியில் அலையாமல், உதிக்கும் செம்கதிர் சிந்தும் = உதிக்கின்ற சிவந்த சூரியன் சிந்துகின்ற, ப்ரபைக்கு ஒன்றும் சிவக்கும் தண்டு = ஒளிக்கு ஒப்பான சிவந்த தண்டையும், உயர்க்கும் கிண்கிணி = உயர்ந்த கிண்கிணி

யும் அமைந்த, செம்பஞ்சு அடிசேராய்=சிவந்த பஞ்சு போன்ற மெல்லிய திருவடியிலே அடியேனைச் சேர்த்து அருள்வீர்.

## பொழிப்புரை

தழைத்துள்ள கொன்றை மலரைச் சிவந்த பொன் போன்ற சடையில் தரித்து, அழகிய கரத்தில் மழுவை ஏந்தும் சிவபெருமானுடைய ஒருபுறத்திலும், பரமண்டலத்திலும், ஆன்மாக்களின் இதய தாமரையிலும் உலவுகின்ற பார்வதி யம்மையின் பாலரே! மூங்கில்போல் திரண்ட தோள்களை யுடைய தெய்வயானை யம்மை வள்ளியம்மை என்ற இருவரும் எப்போதும் செழிப்புற அவர்களுடைய திருக்கண்களுக்கும் இன்பத்தை யளிக்கின்ற திருத் தோள்களையுடைய உப காரியே! கருத்த மேகம்போல் எழுந்து அலைகள் சங்குகளைக் கொழிக்கின்ற கடலின் கரையில விளங்கும் செந்திமாநகரை இடமாகக் கொண்டு அன்புடன் வசிக்கின்ற பெருமிதம் உடை யவரே! வாசனைப் பண்டங்களுடன் குழைத்த சந்தனத்தை யும், சிவந்த குங்குமப் பூவையும் பூசப்பட்டுள்ள, அழகிய நல்ல மலை போன்ற தனங்களைக் குலுக்கும் பசிய கொடிபோல் தோன்றி தகுதியோடு குழையணிந்த செவியிடத்தும், சிவந்த குமிழம் பூப் போன்ற நாசியிடத்தும் சென்று பேசுவதுபோல் புரண்டு புரண்டு அழகு செய்கின்ற, செம் மீன் போன்ற கண் களைக் காட்டி இளைஞர்களை இசையால் அழைக்கின்ற நஞ்சு போன்றபொருட் பெண்டிர் பொருட்டு, உழைத்து துன்பப் படுகின்ற நாயேன், இனிய உணவுப் பொருகளை சுவை பார்த்து உண்டு உண்டு உடம்பைப் பருக்கவைத்து இந்த நாளில் இத் தலத்தில் வீணே உழலாமற்படிக்கு, உதயசூரியன் சிந்துகின்ற செவ்வொளிபோன்ற சிவந்த தண்டையையும் உயர்ந்த கிண்கிணியையும் அணிந்த செம்பஞ்சு போன்ற மெல்லிய திருவடிக் கமலத்தில் சேர அருள்புரிவீர்.

## விரிவுரை

**குழைக்குஞ் சந்தனம் :—**

சந்தனத்தில் புனுகு சவ்வாது பன்னீர் முதலிய வாசனைப் பொருள்களைச் சேர்த்துக் குழைப்பர்.

**செங்குங்குமம் :—**

சிவந்த குங்குமப் பூவை அரைத்து, சந்தனம் குங்குமப் பூ முதலிய கலவைகளை விலைமகளிர் தனங்களின்மீது அழ குறப் பூசி இளைஞரை மயக்குவர்.

**குன்றங் குலுக்கும் பைங்கொடி :—**

கொடி போன்ற விலைமகளிர் தனங்களாகிய மலைகளைத் தாங்கி நிற்கின்றனர். கொடி மலையைத் தாங்குகின்றது. என்ற நயம் சுவையுடையது. மலையின் மீது கொடி படர்வது இயல்பு. இங்கே கொடியின் மீது மலைகள் நிற்கின்றன என்று அழகுறக் கூறுகின்றனர் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் குமரகுருபரர் "மதுகரம்வாய் மடுக்கும் குழற்காடேந்தும் இளவஞ்சிக்கொடியே வருக" என்று கூறும் அழகிய நயமும் ஈண்டு சிந்தித்தற்குரியது. காட்டிலே கொடியிருப்பது இயல்பு. இங்கே "கொடியின் மீது ஒரு காடு விளங்குகின்றது" என்று கூறிய அழகு எத்துணை அரிய சுவை தருகின்றது என்பதைச் சிந்தித்து மகிழ்க.

**குழைக்குங்குண் குமிழ்க்குஞ் சென்றுரைக்குஞ் செங்கயற்கண் :—**

பெண்மணிகளுடைய கண்கள் மீன் போலே புரண்டு புரண்டு அழகு செய்யும். அதனால் கயற்கண் என்றார். அக் கண்கள் நீண்டு இருக்கும். அக் கண்ணிலுள்ள கருமணி காதுவரை நீண்டுள்ள கண்களில் இப்படியும் அப்படியும் ஓடுவது நாசியிடமும் காதினிடம் ஏதோ ஒரு செய்தியை யுரைப்பதன் பொருட்டுப் போவதுபோல் இருக்கின்றது என்று அழகாகச் சுவாமிகள் கூறுகின்றார்கள்.

**பண்தழைக்கும் :—**

அப் பெண்கள் நல்ல பண்களைப் பாடுவார்கள். இனிய பண்கள் அவர்கள்பால் செழிப்புற்றிருக்கின்றன.

**சிங்கியர் :—**

சிங்கி - குளிர்ந்து கொல்லும் பாஷாணம். குளிர்ச்சியாகப் பேசி உறவாடி வதைக்கும் தன்மையுடையவர். ஆதலால் சிங்கியர் என்றனர்.

**உழைக்குஞ் சங்கடத் துன்பன் :—**

மேலே கூறிய விலைமகளிருக்கு நிரம்பவும் பொருள் தரும் பொருட்டு மோகாந்தகாரமுற்று இடையறாது உழைத்து அதனால் அளவற்ற துன்பத்தை யடைவர். ஆன்ம ஈடேற்றத்திற்கு என்று உழைக்காமல் விழலுக்கு மூத்துலையிட்டு இறைக்கும் மூடரைப் போல் வறிதே உழைத்து அரிய மானுடப் பிறப்பை அழிப்பர்.

> அழலுக்குள் வெண்ணெய் எனவே உருகிப்பொன் அம்பலத்தார்
> நிழலுக்குள் நின்றுதவ முஞற்றாமல் நிட்டூரமின்னார்

குழலுக் கிசைந்த வகைமாலை கொண்டு குற்றேவல் செய்து
விழலுக்கு முத்துலை யிட்டிறைத்தேன் என்விதிவசமே.
—பட்டினத்துப்பிள்ளையார்.

சுகப்பண்டஞ் சுகித்துண்டுண்டு :—

இனிய உணவுகளை நாடி நாடி அவற்றிலேயே அதிக விருப்பமுற்று உண்டு உண்டு உவப்பர். அதைத் தவிர அருள் விருப்பமுறுது கெடுவர். உணவு நசையே ஆன்ம ஈடேற்றத்திற்குத் தடை. உணவு நசை கொண்டு சதா நீரில் உழலும் மீன் தூண்டிலில் அகப்பட்டு மடிவதையுங் காண்க. தண்ணீரில் வாழும் ஏனைய பிராணிகள் தூண்டிலில் அகப்படுவதில்லை.

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடில் ஒருவன்
துன்னு நற்றவமெலாஞ் சுருங்கி
ஆற்றிலே கரைத்த புளியெனப் போமென்
றறிஞர்கள் உரைத்திடல் சிறிதும்
போற்றிலேன் உன்னைப் போற்றிலேன் சுவையில்
பொருந்திய காரசாரஞ்சேர்
சாற்றிலே கலந்த சோற்றிலே ஆசை
தங்கினேன் என்செய்வேன் எந்தாய். —திருவருட்பா.

நாவினுக்கு அடிமையாகி நலனழியக்கூடாது. நாவை வென்றவர் நானிலத்தை வென்றவராவார்.

ஆகவே முத்திநலம் பெற விழைவோர் உணவாசையை ஒழித்து ஒருமை நலம் பெறக்கடவர்.

உட்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே :—

நன்கு வயிறுபுடைக்க உண்டு உண்டு உடம்பைப் பருக்க வைப்பர் சிறியோர். ஊன் சுருங்கினுல்தான் உள்ளொளி பெருகும். "ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த செல்வமே" என்பார் மணிவாசகப் பெருந்தகையார்.

உடம்பைப் பருக்க வைத்து அவ்வுடம்பைக் கண்டு கண்டு மகிழ்வர். சற்று இளைத்தால 'அந்தோ! இளைத்துவிட்டோமே' என்று கவல்வர். என்னே மதியுடைமை? உடமபு பருத்தால் மாண்ட பிறகும் நால்வருக்கு வருத்தம் தருமே என்று கருதிறை றில்லை. இந்தவுடம்பினைச் சிலர் அடிக்கடி நிறுத்து நிறை பார்த்துக்கொள்வர். நிலைக்கண்ணுடியில் கண்டு இன்புறுவர்.

புன்புலால் உடம்பின் அசுத்தமும் இதனில்
புகுந்து நான் இருக்கின்ற புணர்ப்பும்
என்பொலா மணியே எண்ணிநான் எண்ணி
ஏங்கிய ஏக்கநீ யறிவாய்
வன்புலால் உண்ணு மனிதரைக்கண்டு
மயங்கியுள் நடுங்கியாற்ருமல்
என்பெலாம் கருக இளைத்தனன் அந்த
இளைப்பையும் ஐயநீ யறிவாய். —திருவருட்பா.

எனவே இந்த உடம்பின்பால் இச்சை வையாது அருள் நாட்டம் அடைதல் வேண்டும். பற்றற்றவர்க்கு உடம்பு மிகை யாகத் தோன்றும்.

மற்றுந் தொடர்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்ருர்க்கு உடம்பு மிகை. —குறள்.

நித்திரையிற் செத்தபிணம் நேரும்உடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே. —தாயுமாஞர்.

**உதிக்குஞ் செங்கதிர்ச்சிந்தும் ப்ரபைக் கொன்றும் :—**

முருகப்பெருமானுடைய திருவடியிலிருந்தும் அருள் ஞான ஒளி இடையருது வீசும். "ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிரொளி" என்பார் நக்கீரர்.

"உததியிடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
உகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்"
—சீர்பாதவகுப்பு.

**உயர்க்குங்கிண்கிணி :—**

பெருமானுடைய திருவடியில் விளங்குங் கிண்கிணி வேத நாதத்தைத் தரும் இனிமையுடையது. அதனுல் உயர்வு பெறு கின்ற கிண்கிணி என்றனர்.

**செம்பஞ்சடி சேராய் :—**

சிவந்த பஞ்சினைப் போன்று மென்மையானது இறைவ னுடைய திருவடி. வன்மை மனமுடைய நாயேனை மென்மை யான திருவடியிற் சேர்த்து அருள்புரிவீர், என்று குறிப்பிடு கின்ருர்.

நாம் நடந்து சென்ருல் நமது நிழல் நம்முடன் தொடர்ந்து வந்துகொண்டே யிருக்கும். அந்த நிழல் நம்மை விட்டக

லாது. ஆனால் நாம் நிழலில் சென்றால் உடல் நிழல் அகலும். அதுபோல பிறவி நிழல் நெடுங்காலமாக நம்மைத் தொடர்ந்து வந்துகொண்டே யிருக்கின்றது. முருகவேளுடைய திருவடி நிழலை நாம் அடைந்தால், பிறவிநிழல் நிச்சயமாக நீங்கிவிடும். தவநிலையில் நின்று. திருவடி நிழலை ஒவ்வொருவரும் பெறுமாறு முயலுக.

தழைக்கும் கொன்றையைச் செம்பொன் சடைக்கண்டு :—

சிவபெருமானுக்கு உவந்த மலர் கொன்றை. "நறுங் கொன்றைப் போதினுள்ளான்" என்பது அப்பர் திருவாக்கு. கொன்றை மலரின் ஐந்து இதழ்களும் திருஐந்தெழுத்தைக் குறிக்கும். கொன்றைமலரின் நடுவில வளைந்துள்ள தோடுகள் ஓங்காரத்தைக் குறிக்கும். ஓம் சிவயநம என்ற பஞ்சாக்கர சொரூபமானது கொன்றை மலர். சிவபெருமான் அதனால் அம்மலரை அன்புடன் திருமுடியிற் சூடியுள்ளார். கொன்றை மலரால் பரசிவத்தை அருச்சிப்பார் அருள் நலம் பெறுவர்.

கொன்றை மலர்மாலையை சயத்ரதன் வளைத்து இட்டபடியால் அதனைத் தாண்டுதற்கு அஞ்சிய அபிமன்யு மீண்டுஞ் செருக்களம் புகுந்து உயிர் துறந்தனன். சிவபெருமானுடைய கொன்றை மாலையைத் தாண்டுவது பெரும்பாவம் என்று அஞ்சியே அவன் இறந்தனன்.

"மறந்தனையோ எங்களையும் மாலையினால் வளைப்புண்டு மருவார்போரில் இறந்தனையோ என்கண்ணே என்னுயிரே அபிமா இன்றென் செய்தாயால்"

என்று புலம்புகின்றார் தருமர்.

அங்கியைத்தங்குந் தரத்தஞ்செம்புயத் தொன்றும் பெருமானார் :—

'அங்கியை தங்குந்தரத்து அம்செம்புயத்து ஒன்றும்' எனப் பதப் பிரிவு செய்க. இங்கு புயம் என்பது கரம் என்ற பொருளில் வந்தது. திருக்கரத்தில அக்கினியை ஏந்தியவர் சிவபெருமான்.

தனிப்பங்கின் :—

இறைவனுடைய இடப்பாகத்தைப் பெற்று உமாதேவியார் பிரியாதிருப்பார். பாகம் பிரியாள் என்று அம்மைக்கு ஒருபேருண்டு.

செம்பரத்தின் :—

செவ்விய பரமண்டலத்தில் விளங்குபவர். சிவஞான வெளியென வுணர்க.

**பங்கயத்தின் :—**

ஆன்மாக்களின் இதய தாமரையில் இருப்பவர்.

**சங்கரி :—**

சம் - சுகம்; கரி - செய்பவர். உயிர்கட்குச் சுகத்தைச் செய்பவர். ஆதலின் சங்கரி எனப் பேர் பெற்றனர்.

**கழைக்கும் :—**

கழை - மூங்கில். மூங்கில் போன்ற தோள் என்று தோள் வருவித்துப் பொருள் செய்யப்பெற்றது.

**குஞ்சரங்கொம்பு :—**

குஞ்சரம் - ஐராவதம். வெள்ளை யானையால் வளர்க்கப் பெற்ற தெய்வயானை.

**தலைக்கொம்பு :—**

கலைமானால் பெறப்பட்ட வள்ளியம்மை.

**கயற்கண் பண்பளிக்கும் திண்புய வேளே :—**

வள்ளி தெய்வயானை யம்மையார்களின் கண்களுக்கு எந்நாளும் இன்பத்தை வழங்கி வீறுபெற்று விளங்குவது வேலவனுடைய தோள்.

**கருத்துரை**

உமை மைந்தரே! வள்ளிதேவசேனையின் காதலரே! செந்திலாண்டவரே! மாதராசையைத் தவிர்த்து அடியேன் உமது திருவடி சேர அருளுவீர்.

## 76

மனத்தின்பங் கெனத்தங்கைம்
புலத்தென்றன் குணத்தஞ்சிந்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்
மலர்ச் செங்கண் கனற்பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத்தங்கும் பலவோரும்
எனக்கென்றிங் குனக்கென்றங்
கினத்தினகண் கணக்கென்றென்
றிளைத்தன்புங் கெடுத்தங்கங் கழிவாமுன்

இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் றொழிற்பங்கங்
கெடத்துன்பங் கழித்தின்பந் தருவாயே

கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித்தெங்குங்
கலக்கஞ்சிந் திடக் கண்டுஞ் சிடுமாலும்

கதித்தொண்பங் கயத்தன்பண்
பனைத்துங்குன் றிடச்சந்தங்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளீவாய்

திணைக்குன்றந் தனிற்றங்குஞ்
சிறுப்பெண்குங் குமக்கும்பந்
திருச்செம்பொன் புயத்தென்றும் புனைவோனே

செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும் பெருமாளே.

## பதவுரை

கனைக்கும்=ஒலி செய்கின்ற, தண் கடல் சங்கம்=குளிர்ந்த கடலிற் பிறந்த பாஞ்சஜன்யம் என்ற சங்கத்தை. கரத்தின்கண் தரித்து=திருக்கரத்திலே தரித்துக்கொண்டு, எங்கும் கலக்கம் சிந்திட=உலகமெங்கும் ஆன்மாக்களின் துயரம் நீங்கும் பொருட்டு, கண் துஞ்சிடு மாலும்=அறிதுயில் கொள்ளுகின்ற திருமாலும், கதித்த ஒண்பங்கயத்தன்=(அத்திருமாலின் உந்திக் கமலத்தில்) தோன்றிய ஒளியுடைய பிரமனும், பண்பு அனைத்தும் குன்றிட=அவர்களுடைய பெருமை யாவும் குறைவுபடுமாறு, சந்தங் களிக்கும் சம்புவுக்கும்=சந்தப்பாடலைக் கேட்டு மகிழும் சிவபெருமானுக்கு, செம்பொருள் ஈவாய்=செம்மைப் பொருளாகிய ஓமென்னும் உட்பொருளை உபதேசித்தவரே! திணை குன்றம் தனில் தங்கும்=திணைப் பயிர் விளையும் மலையிலே வசிக்கின்ற சிறு பெண் குங்கும கும்பம்=இளமையான வள்ளியம்மையின் குங்குமம் பூசியுள்ள குடம்போன்ற தனங்களை, திருசெம்பொன்புயத்து என்றும் புனைவோனே=அழகிய சிவந்த பொன் போன்ற புயாசலங்களில் எக்காலத்தும் தரிப்பவரே! செழிக்கும் குண்டு அகழ்=செழித்து ஆழ்ந்துள்ள கடல், சங்கம் கொழிக்கும்=சங்கங்களைக் கொழிக்கின்றதும், சந்தனத்தின் பைம் பொழில் தண்=சந்தனமரங்களாலாகிய பசுஞ் சோலைகளால் குளிர்ச்சியை உடையதும் ஆகிய, செந்திலில் தங்கும்=திருச்செந்தூரில்

எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையின் மிக்கவரே! மனத்தின் பங்கு என தங்கு = மனமானது செல்வதற்கு வேறு வேறு வாயிலாகத் தங்கியுள்ள, ஐம்புலத்து என்றன் குணம் = ஐம்புலன் தொடர்பு கொண்டுள்ள அடியேனுடைய குணமும், அஞ்சு இந்த்ரிய தம் பந்தனை = ஐந்து இந்திரியங்களைக் கட்டியுள்ள தூணாகிய இவ்வுடம்பும், சிந்தும்படி = சிதறிப் போகுமாறு, காலன் = இயமனுடைய அமைச்சன், மலர் செங்கண் கனல் பொங்கும் திறத்தின் = மலர் போன்ற கண்களில் நெருப்புப் பொறி பொங்கி எழு வலிமையுடன், தண்டு எடுத்து = தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு, அண்டம் கிழித்து இன்று இங்கு உற = அண்டத்தைக் கிழித்துக்கொண்டு, இந்நாள் இங்கு வர, தங்கும் பலவோரும் = குடும்பத்தில் தங்கியுள்ள சுற்றத்தார் பலரும், இங்கு எனக்கு என்று = இது எனக்கு என்றும், அங்கு உனக்கு என்றும் = அந்த இடத்தில் உள்ளது உனக்கு என்றும், இனத்தின் கண் கணக்கு என்று என்று இளைத்து = அந்த இனத்தவர்களுக்குள் கணக்கு என்று பல முறை கூறி இளைத்தும், அன்பும் கெடுத்தும் = அவர்களுக்கு அன்பைக் கெடுத்தும், அங்கம் கழிவு ஆம் முன் = எனது உடம்பு அழிந்துபோகாமுன், இசைக்கும் செந்தமிழ் கொண்டு = புகழ் நிறைந்த செந்தமிழ் மொழியைக் கொண்டு, அங்கு இரக்கும் புன் தொழில் = பொருள் உள்ள இடந்தொறும்போய் யாசிக்கும் இழிந்த தொழிலானது, பங்கம் கெட = மிகவும் கேவலமானது; அது நீங்க, துன்பம் கழித்து = துன்பத்தை நீக்கி, இன்பம் தருவாயே = பேரின்பத்தைத் தந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

ஒலி செய்கின்ற கடலிற் பிறந்த சங்கத்தைத் திருக்கரத்தில் தரித்து உலகமெல்லாம் உயிர்கள் இடர் நீங்கி உய்யும் பொருட்டு அறிதுயில் புரியும் நாராயணரும், அவருடைய நாபிக்கமலத்தில் பிறந்த பிரமனும் பெருமை யாவும் குறையுமாறு, சந்தப் பாடலைக் கேட்டு மகிழ்கின்ற சிவபெருமானுடைய செவியில் செம்பொருளை உபதேசித்தவரே! தினைப் பயிர் விளையும் மலையில் வாழ்ந்த இளமையுடைய வள்ளி நாயகியின் குங்குமம் அணிந்த தனங்களைச் சிவந்த பொன் போன்ற திருத்தோள்களில் எந்நாளும் தரித்துக்கொளபவரே! செழிப்புள்ள ஆழ்ந்த கடற் சங்குகளைக் கடல் கொழிக்கவும், சந்தனப் பசுஞ்சோலை குளிர்ச்சி செய்யவும் விளங்குகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! மனஞ் செல்வதற்கு வேறு வேறு வழிகளாகவுள்ள ஐம்புலன்களுடன் சேர்ந்துள்ள என்னுடைய குணமும், ஐம்பொறிகள் உள்ள உடம்பாகிய தூணும் அழியுமாறு, காலன் என்பவன், மலர் போன்ற கண்களில் நெருப்புப் பொறி சிதற, தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு அண்டங் கிழியும்படி இந் நாள்

இவ்விடத்தில் வந்தவுடன், என் குடும்பத்தில் தங்கும் உறவினர் பலரும் இது எனக்கு, அது உனக்கு என்று என் சொத்துக்களைப் பங்கு வைத்து அதில் தகராறுபட்டு கணக்கு வழக்குகளைப் பார்த்து உடம்பு இளைத்து அன்பையுங் கெடுத்து இடர்ப்பட, என் உடம்பு அழிவடையாமுன், புகழ் மிக்க செந்தமிழைக் கொண்டு, பொருளாளர்பால் சென்று யாசிக்கும் இழி தொழிலாகிய துன்பம் தொலைய இன்பத்தை அருள்புரிவீர்.

## விரிவுரை

**மனத்தின்பங் கெனத்தங் கைம்புலம் :—**

ஐம்புலன்களின் வழியே மனஞ்சென்று சென்று அலைந்து அழியும். ஐம்புலன்களால் வரும் அல்லலுக்கு அளவில்லை. "ஐம்புலவேடரின் அயர்ந்தனை" என்பது சிவஞானபோதம். இப்படியும் அப்படியுமாக புலன்கள் ஆன்மாவை அலைக்கழிக்கின்றன. மனம் புலன்வழி சென்று நினைப்பு மறப்புடன் கூடி பிறப்பிறப்பை யுண்டுபண்ணுகின்றது.

"ஐங்கரனை யொத்தமனம் ஐம்புலம கற்றிவளர்
அந்தி பகலற்ற நினை வருள்வாயே" —திருப்புகழ்.

அதனால் குணம் மாறுபடுகின்றது. ஐம்புலன்கள் : சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

**அஞ்சிந்த்ரியத் தம்பம் —**

தம்பம்-தூண். ஐந்து இந்திரியம்: மெய், வாய், கண், நாசி, செவி. இவைகளுடன் கூடிய தூண் போன்றது இவ்வுடம்பு. ஞானம் என்னும் அங்குசத்தால் ஐம்புலன்களாகிய ஆனைகளை அடக்கினவன் முத்தி வீட்டினைப் பெறுவான்.

உரன் என்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன் என்னும் வைப்புக்கோர் வித்து. —குறள்.

**காலன் மலர்ச் செங்கண் கனற் பொங்குந் திறத்தின் :—**

காலன் என்பவன் இயமனுடைய அமைச்சன்; காலத்தின் நுணுக்கத்தை யுணர்ந்தபடியால் அவன் இப்பேர் பெற்றனன். ஆன்மாக்கள் சிறந்த மானுட உடம்பைப் பெற்று, அதன் பயனைப் பெறாது அவத் தொழில் மேற்கொண்டு மறம் பல புரிவதால் காலன் சினத்துடன் கதையேந்தி வருகின்றான்.

**பலவோரும் எனக் கென்றிங் குனக்கென்றங்கு :—**

உயிர் பிரியும்போது உறவினர் பலரும் சேர்ந்து மாள்கின்றவனைக் குறித்து வருந்தாமல், பொன் பொருள் வீடு நிலம்

இவைகளைத் தத்தமக்கு என்று பங்கு வைத்துப் பிரிக்க முயல்வர். அதில் கூடுதல் குறைவு என்று மனம் வேற்றுமைப்பட்டு கலகம் புரிவர். கணக்கு என்ன என்று வாதித்துப் பேதித்து இடர்ப்படுவர். அதனால் கலகஞ் செய்து உடல் இளைப்பர். ஒருவர் மீது ஒருவர் வைத்திருந்த அன்பையும் விடுவர்.

**இசைக்குஞ் செந்தமிழ்க் கொண்டங் கிரக்கும் புன்றொழில் :—**

சிறந்த புகழுடைய தமிழ்மொழியைக் கொண்டு இறைவனைப் பாடி நலனுறவேண்டும். அங்ஙனம் உய்வு பெறாது, பொருளை நாடி மனிதர் மீது செஞ்சொல் கொண்டு கவி பாடி காமதேனுவின் பாலைக் கமரில் சொரிவது போல் தமிழை வறிதே கெடுக்கின்றனர். அதனை அடிகளார் வெறுத்து அகற்றுதல் வேண்டும் என வேண்டுகின்றனர்.

**எங்குங் கலக்கஞ் சிந்திடக் கண் துஞ்சிடு மால் :—**

திருமால் அரவணை மீது அறிதுயில் புரிகின்றனர். அந்த யோக நித்திரையால் உலகமெல்லாம் உயிர்கள் இன்புறுகின்றன. ஆகவே அது மற்றவர் உறங்கும் உறக்கமன்று. அவருடைய உலக உபகாரமான துயிலைக் குறித்துச் சுவாமிகள் இந்த அடியில் அழகாக விளக்கம் புரிகின்றார்.

**சந்தங் களிக்கும் :—**

சந்தப் பாடல்களைக் கேட்பதில் சிவபெருமான் விருப்பமுடையவர். அதனாலன்றோ சுந்தரரைப் 'பாடுக' என்றார்.

**செம்பொருள் :—**

சிவபெருமானுக்கு முருகவேள் பிரணவமாகிய செம்பொருளை உபதேசித்தனர். அப்பொருளை தாம் அறியவில்லையே யென மாலும் அயனும் நாணி பெருமிதம்குன்றினர்.

"சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு" —குறள்.

**குங்குமக்கும்பம்......புனைவோனே :—**

ஞானாம்பாளாகிய வள்ளியின் பரஞானம் அபரஞானம் என்ற தனங்களை ஞானபண்டிதன் புணகின்றான் என வுணர்க.

## கருத்துரை

சிவகுருவே! வள்ளிநாயகரே! செந்திற் குமாரரே! வீணே இறக்காமலும், தமிழால் பிறரைப் புகழ்ந்து பாடாமலும் உம்மைப் பாடி உய்ய அருள்புரிவீர்.

## 77

பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்துந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக் குன்றத் தனமானார்

பரிக்குந்துற் சரக் கொன்றத்
திளைத்தங்குற் பலப்பண்டைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்

துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்புற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனைத்

துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தந்திப் படியாள்வாய்

தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரர்க்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்

சமர்க்கெஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே

திருக்கஞ்சத் தனைக்கண்டித்
துறக்கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன்றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே

செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே.

### பதவுரை

தரு தங்கு அ பொலத்து அண்டத்தினை கொண்டு=கற்பக மரந் தங்கியுள்ள அந்த அழகிய பொன்னுலகத்தைக் கவர்ந்துகொண்டு, அசுரர்க்கு=அத்தேவர்கட்கு, அஞ்ச=அஞ்சுமாறு, தட துன்பத்தினை தந்திட்டு எதிர்=பெரிய துன்பத்தைத் தந்து எதிர்த்துப் போர் செய்த சூரன்=சூரபன்மன், சமர்க்கு எஞ்சி=போரில் வலிமை குன்றி, படி துஞ்ச=இப்பூமியில் மடியுமாறு, கதிர் துங்கத்து அயில்கொண்டு=

ஒளியும் தூய்மையும் உடைய வேலாயுதத்தைக் கொண்டு போர் புரிந்து, அ தலத்து உம்பர்பதிக்கு அன்பு உற்று அருள்வோனே=அந்த மேலுலகத்தில் தேவர் கோமானுக்கு அன்பு செய்து அருள் செய்த வரே! திருகஞ்சத்தனை கண்டித்து=அழகிய தாமரையில் வாழ்கின்ற பிரம்ம தேவனைக் கண்டனஞ் செய்து, உற=நன்மையுறுமாறு, கம் குட்டி விட்டும்=தலையில் குட்டிச் சிறையில் விடுத்து, சத் சிவர்க்கு அன்று அப்பொருள் கொஞ்சி பகர்வோனே=உத்தமமான சிவமூர்த் திக்கு அந்நாள் அந்தப் பிரணவத்தின் பொருளை மழலை மொழியுடன் கொஞ்சி உபதேசித்தவரே! செயதுங்க=வெற்றித் தூய்மையும், கொடைதுங்க=கொடை தூய்மையும், திரு=தெய்வீகமும், தங்கி தரிக்கும் பொன்=நிலைபெற்று விளங்கும் அழகிய, திருச்செந்தில்பதி= திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, கந்த=கந்தக் கடவுளே! பெருமாளே=பெருமையின் மிக்கவரே! பரு தந்தத்தின தந்திட்டு= பெரிய யானைக் கொம்பு போல் இருந்து கொண்டு, இருக்கும் கச்சு அடர்த்து=தரித்துக்கொண்டுள்ள கச்சைக் கிழித்து, உந்திப் பருக்கும் பொன் ப்ரபை குன்ற தனமானார்=உயர்ந்து பருத்துள்ள பொன் மய மான மலை போன்ற தனங்களையுடைய விலைமகளிர், பரிக்கும் துற்சரக்கு ஒன்ற திளைத்து=கொடுமையைத் தாங்கும் கணைக்கு நிகராக விளங்கி, அங்கு உற்பல பண்பை பரக்கும்=அங்கே நீலோற் பலத் தன்மையையும் தோற்க வைத்து, சக்கரத்தின் சக்தியை நேரும்=சக்ராயுதம் வேலாயுதம் என்ற இரு ஆயுதங்களை யொத்து, துரை செங்கண் கடைக்கு ஒன்றி=வேகமாகப் பாயுந் தன்மையுள்ள சிவந்த கடைக்கண்களுக்கு இலக்காகி மயங்கி, பெருத்த அன்பு உற்று=பெரிய ஆசை வைத்து, இளைத்து=அதனால் இளைப்புண்டு, அங்கு துணிக்கும் புத்தியை சங்கித்து அறியேனை=அவ்விடத்தில் துண்டிக்கப்பட்ட புத்தியைப் பெற்று பலரையும் ஐயங்கொண்டு அறியாமையால் மூடிய நாயேனை, துணை செம்பொன் பதத்து இன் புற்று=தேவரீருடைய சிவந்த பொன்போன்ற இரண்டு திருவடிகளில் இன்பமெய்தி, எனக்கு என்று அ பொருள் தங்க=அடியேனுக்கு என்று தனிப்பட்ட முறையில் உண்மைப் பொருள் தங்க, தொடுக்குஞ் சொல் தமிழ் தந்து=நல்ல பதங்களை வைத்துத் தொடுக்கும் தமிழ்த் தனி மொழியை எனக்கு வழங்கி, இப்படி ஆள்வாய்=இப்பொழுதே ஆட்கொள்வீர்.

## பொழிப்புரை

கற்பகத்தரு தங்கியுள்ள அந்தப் பொன்னுலகத்தைக் கவர்ந்துகொண்டு தேவர்களுக்கு அச்சத்தை விளைவித்து, பெரிய துன்பத்தைத் தந்து எதிர்ந்த சூரபன்மன், போரில் வலிமை குன்றி யொழியுமாறு, ஒளியும் தூய்மையும் உடைய வேற்படையைக் கொண்டு போர்புரிந்து, அந்த சுவர்க்க

லோகத்தில் இந்திரனிடம் அன்புவைத்து அவனுக்கு அருள் புரிந்தவரே! அழகிய தாமரையில் வீற்றிருக்கின்ற பிரமதேவனைக் கண்டித்து அவன் நன்மையடையும் பொருட்டு அவன் தலையில் குட்டிச் சிறையில் விடுத்து, என்றுமுள்ள பொருளாகிய சிவ மூர்த்திக்கு அன்று அத்தனி மொழிப் பொருளை மழலை மொழியுடன் கொஞ்சி உபதேசித்தவரே! வெற்றித் தூய்மையும் கொடைத் தூய்மையும் தெய்வீகமும் பொருந்தி அழகு நிறைந்த திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் கந்தப் பெருமானே! பெருமையின் மிக்கவரே! பெரிய யானைக் கொம்புபோல் விளங்கி, தரித்துள்ள கச்சினைக் கிழித்துக் கொண்டு உயர்ந்து பருத்து பொன்மலை போல் உள்ள தன பாரங்களை யுடைய விலைமாதர்களின், கொடுமையைத் தாங்கியுள்ள கணைக்கு நிகராக நின்று, நீலோற்பல மலரை வென்று, சக்கரத்தையும் வேலையும் போல் வேகமாகச் சென்று வாட்டுகின்ற கடைக்கண் பார்வையால் மருட்சி கொண்டு, பெரிய அவாவுற்று, அதனால் இளைத்து பிளவுபட்ட புத்தியையுடைய வனைப் பலரையும் சந்தேகங்கொண்டு, அறியாமையோடு கூடிய சிறியேனை, தேவரீருடைய சிவந்த பொன்போன்ற இரு திருவடிக் கமலங்களில் இன்புறச் செய்து, எவருக்கு மில்லாத ஒரு சிறப்புடன் எனக்கென்றே அமைந்துள்ள உயர் பொருள் அமைத்துத் தொடுக்கும் இன் சொற்களுடன் கூடிய செந்தமிழை யீந்து இக்கணத்திலேயே ஆட்கொள்வீர்.

## விரிவுரை

**பருத்தந்தத்தினை......தனமானூர் :—**

யானைத் தந்தம் போல் உயர்ந்து பருத்துக் கச்சினைக் கிழித்துச் சிறந்துள்ள தனங்களையுடைய விலைமகளிர் தம்மை இச்சிப்பவருக்கு அத் தனங்களைத் தந்து தனங்களைப் பெறுவர். மலை போன்ற தனத்தால் மலைபோன்ற தனத்தை யீட்டுவர்.

**பறிக்கும் துற்சரக்கொன்ற :—**

துன்பத்தைத் தாங்கியுள்ள கணைக்கு நிகரானது அவர் கண்கள். "சரத்துக்கு ஒன்ற" என்ற சொல், அத்துச்சாரியை கெட்டு "சரக் கொன்ற" என வந்தது.

**உற்பலப் பண்பைப் பரக்கும் :—**

உற்பலம் - நீலோற்பலம். கண்கள் நீலோற்பல மலரினும் அழகாக இருப்பதனால் அதன் பண்பைப் பரந்துபோமாறு செய்தது என்றனர்.

**சக்கரத்தின் சக்தியை நேரும் :—**

மேலும் அக் கண்கள் சக்ராயுதம்போல் வட்டமாகவும் வேலாயுதம்போல் கூர்மையாகவும் இருக்கின்றன. ஆடவர் உள்ளத்தை வெட்டிப் பிளந்து புண்படுத்த வல்லது அக்கண்.

**துரை செங்கட் கடை :—**

துரை - விரைவு. வேகமாகச் சென்று பாயும் இயல் புடையது அவ் விழி. துரை என்ற சொல் விரைவு என்ற பொருளில் வரும் திருவாசகத்தையுங் காண்க.

உரைமாண்ட வுள்ளொளி உத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப்பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை யிரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோணோக்கம் ஆடாமோ.

துரை என்ற சொல்லுக்குப் பகுதி "துரு", என்பதாகும். துரு துரு என்று என்னைத் தொளைக்கிறான் என்பது பழமொழி. துருவுதல் - தேடுதல். விலைமகளிர் இளைஞரைக் கடைக்கண்ணால் மயக்கி வருத்துவர்.

**துணிக்கும் புத்தியை சங்கித்தறியேனை :—**

துணிக்கும் புத்தி - வெட்டுப்பட்டுப் பிளப்புண்ட அறிவு. அதாவது பகுப்புண்ட பகுத்தறிவு. அறிவின் முழு உருவம் போய் துணிப்புண்டு அதன் தன்னிலை கெட்டு மயக்கமுறும். அதனால் எல்லாவற்றையும் சந்தேகிப்பான். தொட்டதற் கெல்லாம் சந்தேகம். பெரியவர்கள் தேர்ந்து தெளிந்து முடிவு கட்டி நிச்சயஞ் செய்யப்பட்ட பொருளிலேயே சந்தேகம். அப்படிச் சந்தேகிப்பதன் காரணம் அறிவு பகுக்கப் பெற்றதுவே; அதனால் அங்ஙனம் அல்லலுறுகின்றனர்;பாவம் அந்தோ! இத்தகைய அறிவீனரைக் கண்டு, நெஞ்சம் இரக்க முற்று ஏங்குகின்றது. இவர்கட்கு உய்வு எந்தக் காலமோ? என்று உள்ளம் உருகின்றது.

பல பிறவிகளில் செய்த தவத்தினால் மெய்யுணர்வு பெற்ற திருவள்ளுவர், சமய குரவர் முதலிய ஆன்றோர் கூறி யருளிய அறவுரைகளில் ஐயுறுவாருக்குக் கதியுண்டோ? இத் தகைய ஆன்றோரைக் காட்டிலும் நான் அறிவுடையேன் என்று எண்ணுவோரும் உளர்? அவர் 'என் தாயினும் எனக்கு வயது அதிகம்' என்னும் அறிஞர் திலகத்திற்கு நிகராவர்.

**துணைச் செம்பொற்பதத்தின்புற்று :—**

துன்பங்களுக்கெல்லாம் மூல காரணம் பற்றுவிடாமையே எனவுணர்க. அப்பற்று, எனது, யான் என்ற இரு வகைத்து.

புறப்பற்று அகப்பற்று என்ற இந்த இரண்டும் அற்ற இடமே இறைவனுடைய திருவடிகளாகும். ஆகவே அப் பதமலர் களைப் பற்றிப் பற்றற்றுப் பரம சுகத்தைப் பெறவேண்டும்.

**எனக்கென்றுசொற்றமிழ்த்......தந்திப் படியாள்வாய் :—**

"தமிழ்க் கடவுளே! இதுவரை யாரும் பெறாத அளவில் எனக்குத் தமிழ்த் திருவினைத் தந்து, உயர்ந்த பொருளை இனிய தனி நடையிலே தேனிகர் செஞ்சொற்களை அடுக்கித் தொடுத்துத் தமிழ்பாட அருள் புரிவீர்" என்று அருணகிரி நாதர் இப் பாடலில் வேண்டுகின்றார். வேண்டுவார் வேண்டு வதே வழங்குகின்ற வேலாயுதப் பெருமான், அருணகிரி யார்க்கு அப் பெற்றியை அவ்வாறே அருளினான். தமிழ் தோன்றிய காலந்தொட்டு அருணகிரிநாதர் பாடிய திருப் புகழ், திருவகுப்பு போன்ற உயர்ந்த தமிழ்ச் சந்த ஞானப் பாடல்கள் தோன்றவில்லை. அவ்வளவும் வேதாகமசாரமாக அமைந்தவை, அதில் சொல்லழகு, பொருளழகு, நடையழகு, தொடையழகு, கருத்தழகு முதலிய எல்லா நலன்களையும் ஒருங்கே காணலாம். அதனால் தமிழ்த் தெய்வமாகிய முருகன் தனது புயமலையில் அருணகிரியாருடைய சொல் மலரையே புனைந்தான்.

"மல்லேபுரி பன்னிரு வாகுவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வேலவனே" —அநுபூதி. (29)

**தருத்தங்கப் பொலத்தண்டத்தினை :—**

தருதங்கு அ பொலத்து அண்டம் எனப் பதப் பிரிவு செய்க. கற்பகம், பாரிசாதம், அரிசந்தனம், மந்தாரம், சந்தானம் என்ற ஐந்து மரங்களுடன் கூடியது பொன்னுலகம். இவைகள் பாற்கடலில் அமுதத்துடன் தோன்றினவை. இத் தகைய சிறந்த மரங்களும், ஐராவதமும், உச்சைஸ்ரவமும், சிந்தாமணியும், காமதேனுவும் பொருந்திய உயர்ந்த உலகம் தேவலோகம். அதனால் அமரரை வாட்டிச் சிறையில் வைத்து அமரவுலகைச் சூரபன்மன் கவர்ந்து கொண்டனன்

சிறையில் கிடந்து வாடிய இந்திரன் மகன் சயந்தன் கூறுகின்றான். "சாமானியமான ஒரு மரத்தின் கீழ் நான் வாழ்ந்திருந்தால் இத் துன்பம் நேர்ந்திராது. கற்பக மரத்தின் கீழ் வாழ்கின்ற பெருவாழ்வை விரும்பியபடியால் கவல்கின் றேன்" என்கின்றான்.

தண்டேன் துளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே
கண்டேன் பிறர்தம் பதத்தொலைவுங் கண்டனனால்
தொண்டேன் சிவனே! நின் தொல்பதமே வேண்டுவனே.

**திருக்கஞ்சத் தனைக்கண்டித் துறக்கங்குட்டி :—**

அழகிய தாமரைக் கோயிலில் வாழும் பிரம்ம தேவனைத் தண்டித்து அவன் ஆணவமகன்று நல்லறிவு பெற்று, உய்யும் பொருட்டே முருகவேள் அயனைச் சிறையிலிருத்தினார்.

**செயத்துங்கம் :—**

பகைவரை வெற்றி பெறுவதும் நியாயமான முறையில் அமையவேண்டும். அப்படியமையுமாயின் அது தூய வெற்றியாகும். அபிமன்யுவைத் துரியோதனாதியர் வென்றது அநியாயமான முறையிலாகும். ஒருவனைப் பலர் சூழ்ந்து போர் செய்வதும், ஆயுதம் இல்லாதவனை ஆயுதம்உடையவன் எதிர்த்துப் போர் செய்வதும், பாரில் நின்றான் ஒருவனைத் தேரில் நின்று போர் செய்வதும், இளைத்த ஒருவனை வளைத்து நின்று போரிடுவதும் குற்றமாகும்.

அதனாலன்றோ வலிமை குன்றி நின்ற இராவணனை இராமர் கருணையுடன் நோக்கி, "இன்றுபோய் போருக்கு நாளை வா" என்று உயிர்ப் பிச்சை நல்கியனுப்பினார்.

**கொடைத்துங்கம் :—**

பயன் கருதாமல் தருவதும், வறியார்க்கு வழங்குவதும், கடமையுணர்ச்சியுடன் தருவதும் அன்போடும் அருளோடும் உதவுவதும் தூய கொடையாகும். அல்லாத கொடை விழுமியதாகாது.

## கருத்துரை

சூரசங்கார மூர்த்தியே! சிவ குருவே! செந்திற் கந்த வேளே! அவாவுற்று அடியேன் அவலமுறாது, சிறந்த தமிழால் நின்னைப் பாடி உய்ய அருள்புரிவீர்.

## 78

பெருக்கச்சஞ் சலித்துக்கந்
தலுற்றுப்புந் தியற்றுப்பின்
பிழைப்பற்றுங் குறைப்புற்றும் — பொதுமாதர்

ப்ரியப்பட்டங் கழைத்துத்தங்
கலைக்குட்டங் கிடப்பட்சம்
பிணித்துத்தந் தனத்தைத்தந் — தணையாதே

புரக்கைக்குன் பதத்தைத்தந்
தெனக்குத்தொண் டுறப்பற்றும்
புலத் துக்கண் செழிக்கச்செந் தமிழ்பாடும்

புலப்பட்டங் கொடுத்தற்கும்
கருத்திற்கண் படக்கிட்டும்
புகழ்ச்சிக்குங் க்ருபைச்சித்தம் புரிவாயே

தருக்கிக்கண் களிக்கத் தெண்
டனிட்டுத்தண் புனத்திற்செங்
குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே

சலிப்புற்றங் குரத்திற்சம்
ப்ரமித்துக்கொண் டலைத்துத்தன்
சமர்த்திற்சங் கரிக்கத்தண் டியசூரன்

சிரத்தைச்சென் றறுத்துப்பந்
தடித்துத்திண் குவட்டைக்கண்
டிடித்துச்செந் திலிற்புக்கங் குறைவோனே

சிறக்கற்கஞ் செழுத்தத்தந்
திருச்சிற்றம் பலத்தத்தன்
செவிக்குப்பண் புறச்செப்பும் பெருமாளே.

## பதவுரை

தருக்கி = மகிழ்ச்சி யடைந்து, கண் களிக்க = அம்மையின் கண்கள் களிக்குமாறு, தெண்டனிட்டு = வணங்கி, தண் புனத்தில் = குளிர்ந்த தினைப்புனத்தில், செம் குறத்திக்கு அன்பு உற = செவ்வையான வள்ளி பிராட்டியாரிடம் அன்பு வளர, சித்தம் தளர்வோனே = உள்ளந் தளர்ந்தவரே! சலிப்பு உற்று = தேவர்கள் சோர்வடையுமாறு, அங்கு உரத்தில் = அவ்விடத்தில் தனது வலிமையால், சம்ப்ரமித்து = பெருமையுடன் சென்று, கொண்டு அலைத்து = அந்த அமரர்களைப் பிடித்து வருத்தி, தன் சமர்த்தில் சங்கரிக்க தண்டிய சூரன் = தனது ஆற்றலால் அவர்களின் வாழ்வை யழித்துத் தண்டித்த சூரபன்மனுடைய, சிரத்தை சென்று அறுத்து பந்து அடித்து = தலையைப் போர்க்களம் போய் அறுத்து அத்தலையைப் பந்துபோல் அடித்து, திண்குவட்டை கண்டு இடித்து = வலிமையுடைய கிரவுஞ்ச மலையைப் பார்த்து அம் மலையைப் பொடிபடுத்தி, செந்திலில் புக்கு அங்கு உறைவோனே = திருச்செந்தூரில் சென்று அத்திருத்தலத்தில் எழுந்

தருளி யிருப்பவரே! சிறக்கற்கு=மேன்மை யடையும் பொருட்டு, அஞ்சு எழுத்து அத்தம்=திருஐந்தெழுத்தின் பொருளை, திருச் சிற்றம் பலத்து அத்தன் செவிக்கு=திருச்சிற்றம்பலத்தில் திருநடம்புரியும் தந்தையாகிய சிவபெருமானுடைய திருச்செவியில், பண்பு உற செப்பும்=முறையுடன் உபதேசித்த, பெருமாளே=பெருமையின் மிக்கவரே! பெருக்க சஞ்சலித்து=மிகுந்த துன்பத்தை யடைந்து, கந்தல் உற்று=ஒழுக்கக் கேட்டை யுற்று, புந்தி அற்று=அறிவையும் இழந்து, பின் பிழைப்பு அற்றும்=பின்னர் உய்யும் நெறியும் நீங்கியும், குறைப்பு உற்றும்=குறைவை யடைந்தும், பொது மாதர் ப்ரியப் பட்டு=பொது மகளிர் என்னைக் கண்டு ஆசை கொண்டு, அங்கு அழைத்து=அவர்கள் தங்குமிடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், தம் கலைக்குள் தங்கிட பட்சம் பிணித்து=தமது காமசாத்திரத்திற் குள் என்னைத் தங்கும்படிச் செய்து ஆசைகாட்டிக் கட்டிப் பிடித்து, தம் தனத்தை தந்து அணையாதே=தங்கள் தனபாரங்களைத் தந்து என்னைத் தழுவா வண்ணம், புரக்கைக்கு=அடியேனைக் காத்தற் பொருட்டு, உன் பதத்தை தந்து=தேவரீருடைய திருவடியைத் தந் தருளி, எனக்கு தொண்டுஉற=அடியேன் திருத்தொண்டு நெறியில் நின்று, பற்றும் புலத்துக்கண் செழிக்க=ஆன்றோர்கள் பற்றும் அறிவு நிலையில் அடிமையேன் தழைக்கவும், செந்தமிழ் பாடும் புல பட்டம் கொடுத்தற்கும்=செம்மைப் பண்புடைய தமிழ்பாடும் புலவன் என் னும் பட்டத்தைத் தக்கவர்கள் கொடுப்பதற்கும், கருத்தில் கண்பட கிட்டும் புகழ்ச்சிக்கும்=கருத்திலே அறிவுக்கண் விளங்கும்படியான புகழைப் பெறுவதற்கும், க்ருபை சித்தம் புரிவாயே=கருணைத் திரு வுளஞ் செய்து அருள் புரிவீர்.

## பொழிப்புரை

வள்ளி நாயகி மகிழ்ந்து கண்களிக்குமாறு வணக்கஞ் செய்து குளிர்ந்த தினைப்புனத்தில் செவ்விய அக்குறமகளின் பால் அன்பு கொண்டு உள்ளந் தளர்ச்சியுற்றவரே! தேவர் கள் துன்புறுமாறு வலிமையுடன் வீறு பெற்று அவர்களைச் சிறைபிடித்து அலைத்து அவர்களது வலிமையை அழித்துத் தண்டித்த சூரபன்மனது தலையை யுத்தகளம் போய் அறுத் துப் பந்தாடி, கிரவுஞ்சமலையைப் பார்த்து இடித்து, திருச் செந்தூரின் கண் எழுந்தருளியிருப்பவரே! சிறப்புறுமாறு திருச்சிற்றம்பலத்திலே திருநடம்புரியும் தந்தையாருக்கு திரு ஐந்தெழுத்தின் பொருளை முறைப்படி உபதேசித்த பெருமிதம் உடையவரே! மிகவும் துன்புற்று, ஒழுக்கக்கேட்டை யடைந்து நல்லறிவை யிழந்து பின்னர் உய்யும் தன்மையும் இன்றி குறைவுபட்டழியுமாறு, பொதுமகளிர் என்பால் ஆசை வைத்து அவர் உறைவிடத்திற்கு அழைத்துச் சென்று, அவர்

கள் கற்ற காமநூலில் தங்கும்படி அன்புசெய்து என்னைக் கட்டுப்படுத்தி கொங்கைகளைத் தந்து தழுவி மயக்காவண்ணம், சிறியேனை இரட்சித்து உமது திருவடியைத் தந்தருளி என்னைத் தொண்டு நெறியிற் செலுத்தி, ஆன்றோர்கள் பற்றும் அறிவு நிலையில் தழைக்குமாறு செந்தமிழ் பாடும் புலவன் என்று தக்கவர்கள் பட்டந்தரவும்; கருத்தில் ஞானக்கண் விளங்கும் புகழுக்கு உரியவனுகுமாறும் செய்து உமது கருணை நிறைந்த திருவுள்ளம் இரங்கி அருள்புரிவீர்.

## விரிவுரை

**பெருக்கச் சஞ்சலித்து :—**

துன்பம் ஆசையினுல் விளைகின்றது; ஆசை மண்ணிலும் பொன்னிலும் பெண்ணிலும் விரைந்து செல்கின்றது மண்ணுசையும், பொன்னுசையும் மனிதப் பிறப்பில் மட்டுந்தான் விளையும். பெண்ணுசை பிறவிகள் தோறும் தொடர்ந்து வந்தது. புழுவுக்கும் பெண்ணுசையுண்டு.

ஆகவே பெண்ணுசை மேலிட்டு அதனுல் பெருந்துன்புறுவர் பலர். பெண்ணுசையால் தனது அளவற்ற செல்வத்துடனும் குலத்துடனும் அழிந்தான் இராவணன். உண்டால் மட்டுங் கொல்லும் நஞ்சு; கண்டாலுங் கொல்லும் வலிமையுள்ளது காமம். இராவணன் மாண்டபின் வீடணன் இரங்கியதாக வரும் கம்பர் கவியும் ஈண்டு நினைவு கூரற்பாலது.

> "உண்ணுதே யுயிருண்ணு தொருநஞ்சு
> சனகியெனும் பெருநஞ் சுன்னைக்
> கண்ணுலே நோக்கவே போக்கியதே
> உயிர் நீயுங் களப்பட்டாயே"

எனவே, பெண்ணுசையை விட்டவன் பெருந் துன்பமடையான். அதனுல்தான் இராமலிங்க அடிகளாரும், 'மருவு பெண்ணுசையை மறக்கவே வேண்டும்" என்ருர்.

**கந்தலுற்று :—**

கந்தல்—ஒழுக்கக்கேடு. உள்ளத்தில் பல ஓட்டையுற்று தீமைகளை நினைந்து, கொடுஞ் செயல்கள் புரிந்து கெடுவது.

**புந்தியற்று :—**

புத்தியற்று மடமையுறுதல். காமங் கதுவப் பெற்ருர்க்கு அறிவு தொழிற்படாது. அறிவின் மயக்கத்தால் நன்மை தீமைகளை யுணராது கெடுவர். நூறு அசுவமேத யாகம்புரிந்து

இந்திரபதம் பெற்ற நகுஷன் காமத்தால் அறிவிழந்து, எழு முனிபுங்கவர்கள் பல்லக்குச் சுமக்கச் சென்று அகத்திய முனிவர் சாபத்தால் மலைப்பாம்பாக விழுந்தான்.

**பின் பிழைப்பற்று :—**

அறிவு மயஙகியபடியால் உய்யுநெறி யறியாது உழலும் தன்மை யடைவர்.

**குறைப்புற்றும் :—**

குறையுற்று என்பது சந்தத்தை நோக்கி வல்லின மெய் பெற்று வந்தது. ஆசையால் அறிவு பொருள் பெருமை முதலிய பல நலங்கள் குறைந்துபோகும்.

**பொதுமாதர் ப்ரியப்பட்டங்கழைத்து :—**

பொதுமகளிர் நடுவீதியில் நின்று, வீதியிற் செல்லும் இளைஞரை வலிதில் அழைத்து நகைத்து இங்கிதமாகப் பேசி, "ஏன் இங்கு நின்று பேசவேணும், இதோ இருக்கின்ற என் வீட்டிற்கு வாருங்கள்" என்று கூறி மாயம் புரிவர்.

**தங்கலைக்குட் டங்கிட :—**

தமது கலையாகிய இன்ப நூலின் திறத்தால் மயங்கப் புரிவர். கலை என்ற சொல்லுக்கு ஆடையெனப் பொருள் கொண்டு, தமது ஆடைக்குள் அணைத்து மயக்குவர் எனவும் கொள்ளலாம்.

**பட்சம் பிணித்துத் தந்தனத்தைத் தந்து :—**

பட்சம்—அன்பு. அன்பு காட்டி ஆடவரை வசஞ் செய்து தனமளித்துத் தனம் பெறுவர். "இவ்வாறு மயக்கும் பொது மகளிர் வசப்படாவண்ணம் தடுத்து ஆட்கொள்ள வேண்டும்" என்று பின்னுள்ள இரண்டடிகளில் தெரிவிக்கின்றார்.

**புரக்கைக்குன் பதத்தைத் தந்து :—**

"முருகா! அடியேனை ரட்சிக்கும் பொருட்டு உமது கிரியாஞான வடிவாகிய திருவடிகளைத் தந்து உபகரிக்க வேணும்.

**தொண்டுற :—**

உலகில் தொண்டு புரிவதே சாலவும் சிறந்ததாகும். தொண்டுபுரிவதனால் தொண்டர் எனப் பெறுவர். நாயன்

மார்கள் அனைவரும் தொண்டர்களே. அதனால் அவர்களு டைய புராணம் திருத்தொண்டர் புராணம் எனப்பட்டது, "தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்றனர் ஔவையார்.

ஆதலால் அன்பர்கள் அனைவரும் தத்தம் தகுதிக்கு ஏற்ப மனவாக்கு காயங்களாலே ஏதாவது திருத் தொண்டு புரிய வேண்டும்.

**பற்றும் புலத்துக்கண் செழிக்க :—**

புலம்—ஞானம். ஞானமுள்ளவர் புலவர். அறிவு நிலை யில் செழிக்கவேணும்.

**செந்தமிழ்பாடும் புலப்பட்டங்கொடுத்தற்கும் :—**

முருகப்பெருமானையே இனிய செந்தமிழ் மொழியால் கவி மாலை பாடி அதனால் புலவர் மணி என்று தக்கவர்கள் பட்டங் கொடுக்கப் பெறவேணும் என்கின்றார் அடிகளார்.

**கருத்திற்கண்படக் கிட்டும் புகழ்ச்சி :—**

உள்ளத்தில் ஞானக்கண் திறக்கப்பெற்று அதனால் எல்லாவற்றையும் அறிந்து புகழ் பெறுதல். அது உணர்வு விழி என்று பேர் பெறும்.

"உடலுமுட லுயிருநிலை பெறுதல் பொருளெனவுலக
மொருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபரவசமழிய விழிசெருகி
உணர்வுவிழி கொடு நியதி தமதூடு நாடுவதும்"
—திருவகுப்பு. (1)

யுகஇறுதிகளிலும் இறுதியில் ஒரு பொருள்
உள்ளக்கணுக்கும் அறிவூறி
ஒளிதிக ழுருவுரு வெனுமறை யிறுதியில்
உள்ளத்தை நோக்க அருள்வாயே.
—(ககனமு)திருப்புகழ்.

**க்ருபைச் சித்தம் புரிவாயே :—**

"கருணை நிறைந்த கடவுளே! அடியனேன் உய்யும் பொருட்டு கிருபைச் சித்தம் என்பால் திரும்பி அருள்புரிவீர்" என்று சுவாமிகள் உளங் கனிந்து வேண்டி நிற்கின்றனர்.

"அரியபெண்கள் நட்பைப் புணர்ந்து
பிணியுழன்று சுற்றித்திரிந்த
தமையுமுன் க்ருபைச் சித்தமென்று பெறுவேனோ"
—(கருவடைந்து) திருப்புகழ்.

**தருக்கிக் கண்களிக்கத் தெண்டனிட்டு :—**

வள்ளியம்மையார் மகிழ முருகவேள் வேடவடிவிற் சென்று வணங்கினார் என்ற குறிப்பு, ஆன்மாக்களை இறைவன் எளிமையாகச் சென்று ஆட்கொள்கின்றான் என்பதனை உணர்த்துகின்றது.

**குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே :—**

வள்ளி பிராட்டி உய்வு பெற வேண்டும் என்று பெருமான் அவர் விஷயத்தில் எல்லையற்ற கருணையால் உள்ளம் இரங்கு கின்றான். காரணம் வள்ளியம்மை புரிந்த தவமேயாகும்.

**சிறக்கற்கு :—**

உலகமெல்லாம் குரு நெறியையுணர்ந்து மேன்மையடையும் பொருட்டு முருகன் உபதேசம் புரிந்து அருளினார்.

**அஞ்செழுத்தத்தம் :—**

திரு ஐந்தெழுத்தின் பொருள் பிரணவத்தின் உட்பொருளே யாகும்.

**திருச்சிற்றம்பலத்தத்தன் :—**

சிறு அம்பலம் சிற்றம்பலம். அது ஆன்மாக்களின் இதய புண்டரீகத்துக்குள் விளங்கும் சிறு வெளி. அது ஞானமய மானது. அந்த வெளிக்கு தகராகாசம் எனவும் பேருண்டு. தகரம்—நுட்பம். "இதனையே மலர்மிசை யேகினான்" என்பர் திருவள்ளுவ தேவர்.

## கருத்துரை

வள்ளி கணவரே! சூரனாகிய ஆணவத்தையழித்த செந்திற் குமாரமூர்த்தியே! சிவகுருவே! மாதர் மயக்கிற் படாது, தேவரீரைத் தமிழ்பாடி உய்ய அருள்புரிவீர்.

## 79

காலனார் வெங்கொடுந் தூதர்பா சங்கொடென்
காலினார் தந்துடன் கொடுபோகக்

காதலார் மைந்தருந் தாயரா ருஞ்சுடுங்
கானமே பின்தொடர்ந் தலறாமுன்

சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ தண்டமுஞ்
சூடுதோ ளுந்தடந் திருமார்பும்

தூயதாள் தண்டையுங் காணஆர் வஞ்செயுந்
தோகைமேல் கொண்டு முன் வரவேணும்

ஆலகா லம்பரன் பாலதா கஞ்சிடுந்
தேவர்வா ழன்றுகந் தமுதீயும்
ஆரவா ரஞ்செயும் வேலைமேல் கண்வளர்ந்
தாதிமா யன்றனன் மருகோனே!

சாலிசேர் சங்கினம் வாவி சூழ் பங்கயஞ்
சாரலார் செந்திலம் பதிவாழ்வே!
தாவுசூ ரஞ்சிமுன் சாயவே கம்பெறுந்
தாரைவே லுந்திடும் பெருமாளே.

## பதவுரை

ஆலகாலம்=ஆலகால விடமானது, பரன்பாலது ஆக=பரம்
பொருளான சிவபெருமானிடம் போய்ச் சேர்ந்தபின், அஞ்சிடும்
தேவர் வாழ=அவ்விடத்தைக் கண்டு பயந்தோடிய தேவர்கள்
உய்ந்து இன்புற்று வாழுமாறு, அன்று=பாற்கடலைக் கடைந்த அந்த
நாளில், உகந்து=மகிழ்ச்சியுடன். அமுது ஈயும்=அத்தேவர்களுக்கு
அமுதத்தைக் கொடுத்தருளியவரும், ஆரவாரஞ்செயும்=பெரிய
ஒலியைச் செய்யும், வேலைமேல்=திருப்பாற்கடலின்மிசை, கண்
வளர்ந்த=யோக நித்திரை செய்பவரும், ஆதிமாயன் தன்=சிவ
பெருமானது ஆதிசக்தியாக விளங்குபவரும் ஆகிய நாராயண மூர்த்
தியின், மருகோனே=மருமகனாக எழுந்தருளியவரே! சாலிசேர்
சங்கினம்=நெல்வயல்களில் சேர்ந்துள்ள சங்கினங்களும், பங்கயஞ்சூழ்
வாவி=தாமரைகள் சூழ்ந்து நிறைந்துள்ள தடாகங்களும், சாரல்
ஆர்=அருகே யமைந்துள்ள அருமையான, செந்தில் அம்பதி
வாழ்வே=அழகிய திருச்செந்தூர் என்னும் செழும்பதியில் வாழ்கின்
றவரே! தாவுசூர்=போர்க்களத்தில் தாவிவந்த சூரபன்மன், அஞ்சி
முன்சாய=முன்னுளில் பயந்து பின்னிட்டு இரியுமாறு, வேகம்
பெறு=வேகம் பொருந்திய, தாரை வேல் உந்திடும்=கூர்மையான
வேலாயுதத்தைச் செலுத்திய, பெருமாளே=பெருமையிற் சிறந்த
வரே!, காலனூர்=இயமனது, வெம்கொடும் தூதர்=வெப்பமும்
கொடுமையுமுடைய தூதர்கள், பாசம் கொடு=பாசக்கயிற்றைக்
கொண்டு வந்து, காலின்=எனது பிராண வாயுவுடன் சேர்த்து,
ஆர்தந்து=கட்டி, உடன்கொடு போக=தம்முடன் அடியேனுடைய
உயிரைக் கொண்டுபோக, காதல் ஆர் மைந்தரும்=மிகுந்த அன்பு
டைய பிள்ளைகளும், தாயர் ஆரும்=தாயார் முதலிய அனைவரும்
(ஏ-அசை) பின்தொடர்ந்து=சுடுகாடு வரை அடியே
சுடுகானம்

னுடைய உடலைப் பின்தொடர்ந்துவந்து அலறுமுன்=வாய்விட்டு கதறியழும் மரணாவஸ்தை யடையுமுன்னர், சூலம்வாள் தண்டு செம் சேவல் கோதண்டமும்=சூலாயுதம் வாளாயுதம் தண்டாயுதம் அழகிய சேவற்கொடி வில் இவைகளை, சூடுதோளும்=அணிந்து கொண்டுள்ள தோள்களையும், தடம் திரு மார்பும்=விசாலமான அழகிய மார்பையும், தூய தாள் தண்டையும்=பரிசுத்தமான பாதங்களையும் அவைகளிலணிந்துள்ள தண்டையையும், காண=அடியேன் தரிசிக்கும் வண்ணம், ஆர்வஞ் செயும் தோகை மேல் கொண்டு=அன்பு செய்கின்ற மயில்வாகனத்தின்மிசை ஊர்ந்து, முன் வரவேணும்=அடியேன் முன்னே வந்து திருவருள் புரியவேண்டும்.

## பொழிப்புரை

ஆலகால விடமானது பரம்பொருளாகிய சிவ பெருமானிடஞ் சேர்ந்தபின், அவ் விடத்தைக் கண்டு அஞ்சி ஓடிய தேவர்கள் வாழுமாறு திருப்பாற் கடலைக் கடைந்த அந் நாளில் மகிழ்ச்சியுடன் அத் தேவர்களுக்கு அமிர்தத்தை நல்கியவரும், ஆரவாரிக்கும் பாற்கடலில் பள்ளிகொண்டு அறிதுயில் புரியும் சிவபெருமானது ஆதிசக்தியும் ஆகிய நாராயணரது மருகரே! செந்நெல் வயல்களில் சேர்ந்துள்ள சங்கினங்களும், தாமரைகள் நிறைந்துள்ள தடாகங்களும் சேர்ந்துள்ளதும் அருமையும் அழகியதுமாகிய திருச்செந்தூர் என்னுந் தலத்தில் வாழ்கின்றவரே! போருக்குத் தாவி வந்த சூரபன்மன் எதிர் நிற்க முடியாது அஞ்சி பிறகிட்டு இரியுமாறு வேகம் பெற்ற கூரிய வேலாயுதத்தைச் செலுத்திய பெருமையிற் சிறந்தவரே! வெப்பமுங் கொடுமையுங் கோபமும் உடைய காலதூதர்கள் பாசக் கயிற்றைக் கொண்டுவந்து என்னுடைய பிராண வாயுவுடன் சேர்த்துக்கட்டி தங்களுடன் என்னைக் கொண்டு போக, என்னிடத்தன்புள்ள மைந்தரும் தாயாரும் ஏனைய உறவினரும் என் சடலத்துடன் தொடர்ந்து சுடுகாடு மட்டும் வந்து வாய்விட்டுக் கதறி அலறி அழுகின்ற அந்த மரணாவஸ்தை யடையாமுன், அடியேனைக் காப்பாற்றுவதற்காக சூலம், வாள், தண்டு, செஞ் சேவற்கொடி, வில் இந்த ஆயுதங்களைச் சூடுகின்ற பன்னிரு தோள்களையும் விசாலமான அழகிய மார்பையும், தூய்மையான திருவடிகளையும் திருவடியிலணிந்துள்ள தண்டையினையும் அடியேன் தெரிசிக்குமாறு தம்மிடத்தில் அன்பு புரியும் தோகைமயிலின் மீது ஊர்ந்து அடியேன் முன்வந்து அருள்புரிய வேண்டும்.

## விரிவுரை

"காலனார்......அலறுமுன்" :—

இயம தூதர்கள் பாசக் கயிற்றால் கட்டி உயிரைப் பற்றிச் செல்லுங்கால் உடலுக்குத் துணைவர்களாகிய உறவினரால்

காத்தற்கு இயலாது சுடுகாடு மட்டும் தொடர்ந்து வந்து கதறி யழுவார்கள். உயிர்த்துணைவராகிய முருகப் பெருமான் திருவருள் ஒன்றே துணை செய்து காப்பாற்றும். எனவே இயம தூர்துவர் பற்றிக்கொண்டு போய் நரகத்திலிட்டு வருத்துவர். அவ் விபத்து வருமுன் ஆண்டவனுடைய தெரிசனத்தை விரும்புகிருர்.

**சூலம்வாள்......வரவேணும் :—**

காலதூதர்கள் வெருவிப் பிறகிட்டு ஓடுதற்பொருட்டு சூலம் முதலிய ஆயுதங்களுடன் வரவேணுமென்றனர்.

**ஆலகாலம் பரன் பாலதாக :—**

தேவர்கள் நரை திரை மூப்பு மரணம் என்னுந் துன்பங்களால் வருந்தியதால் திருமாலிடம் அத் துன்ப நீக்கத்திற்கு வழி யாதென வினவ, திருமால் பாற்கடலைக் கடைந்து அமிர்த முண்டால் அத் துன்பங்கள் அணுகாவென, அமரருடன் பாற் கடலைக் கடைந்த காலத்தில் விநாயக வழிபாடு செய்யாமை யால் ஆலகால விடந்தோன்ற, அவ் விடத் தீயைக் கண்டு நாரணுதி தேவர் வெருவி யோடி முக்கட் பெருமான்பால் முறையிட, சிவபெருமான் தேவர்களைக் காப்பாற்றும் பொருட்டு ஒருவரும் அணுக முடியாத விடத்தை எடுத்து, அகத்தேயுள்ள ஆன்மாக்களும் புறத்தேயுள்ள ஆன்மாக்களும் உய்தற்பொருட்டு புறத்திலும் வைக்காமல் அகத்திலும் வைக் காமல் இரண்டிற்கும் மத்தியமாகிய கண்டத்தில் வைத்து அகத்தும் புறத்தும் உள்ள ஆன்ம கோடிகளைக் காப்பாற்றித் திருநீலகண்டராகத் திகழ்ந்தனர்.

**தேவர் வாழ......அமுதீயும் :—**

பின்னர் விநாயக வழிபாடு புரிந்து பாற்கடலைக் கடைய அமிர்தந்தோன்றியது. திருமால் ஜகன்மோகினி வடிவந் தாங்கி அமரர்கள் இன்புற்று வாழுமாறு அமிர்தத்தை அவர்களுக்கு நல்கினர்.

**தாவுசூர் அஞ்சி......தாரைவேல் :—**

ஒருவராலும் வெல்லுதற்கு முடியாத சூரபன்மன் அஞ்சி ஓடுமாறு கூரிய வேலைச் செலுத்தினர். அதன் தத்துவமா வது : சூரபன்மன் என்பது ஆணவமலம். அது மிகவும் வலி யுடையது ; இறைவன் திருவருள் ஞானத்தாலன்றி வெல்லு தற்கு முடியாதது. ஆணவமலம் நான் எனது என்ற பற்றை விளைவிக்கும். அதனுல் சூரபன்மனை இருபிளவாக வேலாயுதம் பிளந்தது. வேல் என்பது ஞானம். அந்த ஞானம் ஆழ்ந்தும் அகன்றும் கூர்மையாகவும் இருத்தல் வேண்டும். வேற்படை

யானது அடித்தண்டு நீண்டு இலையின் நடுப்பாகம் விசாலித்தும் முனை மிகவும் கூர்மையாகவும் இருப்பதை நுனித்துணர்க."ஆழ்ந்தகன்ற நுண்ணியனே"என்பது திருவாசகம். ஞானபண்டிதராம் குமாரக்கடவுள் கரத்திலே ஞானசக்தியாம் கூரிய வேலாயுதம் விளங்குவதை உன்னுக. வேற்படையின் வடிவ அமைப்பை கூர்த்தமதியால் நுனித்துணர்க.

## கருத்துரை

தேவர்களுக்கு அமிர்தத்தை நல்கிய அறிதுயி லமர்ந்தோனது மருகரே! செந்திலம்பதியில் வாழ்பவரே! சூரனை வென்ற வேற்படையை யுடையவரே! கால தூதர்கள் வந்து உயிரைப் பற்றிச் செல்லுமுன் சூலம் முதலிய ஆயுதங்களுடன் மயில் மிசை வந்து அருள்புரிய வேண்டும்.

## 80

சங்குபோல் மென்கழுத் தந்தவாய் தந்தபற்
சந்தமோ கின்பமுத் தெனவானில்
தங்குகார் பைங்குழற் கொங்கைநீள் தண்பொருப்
பென்றுதாழ் வொன்றறுத் துலகோரைத்
துங்கவேள் செங்கைபொற் கொண்டல்நீ யென்றுசொற்
கொண்டுதாய் நின்றுரைத் துழலாதே
துன்பநோய் சிந்தநற் கந்தவே ளென்றுனைத்
தொண்டினு லொன்றுரைக் கருள்வாயே
வெங்கண்வ்யா ளங்கொதித் தெங்கும்வே மென்றெடுத்
துண்டுமே லண்டருக் கமுதாக
விண்டநா தன்திருக் கொண்டல்பா கன்செருக்
குண்டு பேரம்பலத் தினிலாடி
செங்கண்மால் பங்கயக் கண்பெரு தந்தரத்
தின்கணு டுந்திறற் கதிராழித்
திங்கள்வா முஞ்சடைத் தம்பிரா னன்புறச்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

## பதவுரை

வெம் கண் வ்யாளம்=வெப்பமான கண்களையுடைய பாம்பினின்றும், வந்த ஆலகால விஷத்தை, கொதித்து எங்கும் வேம் என்று எடுத்து உண்டு=எங்கும் சூடாகி வேகச் செய்யும் என்று கருதி அதனை

எடுத்து உண்டு, மேல் அண்டருக்கு அமுது ஆக்=மேன்மையுடைய தேவர்கட்கு அமிர்தம் ஆகுமாறு, விண்ட நாதன்=வெளிவரச் செய்த தலைவரும், திருக்கொண்டல் பாகன்=அழகிய மேகவண்ணராகிய திருமாலைத் தமது வலப்பாகத்தில் கொண்டவரும், செருக்கு உண்டு பேரம்பலத்தினில் ஆடி=மகிழ்ச்சியுடன் பெரிய வெளியினில் திருநடனம் புரிபவரும், செம் கண் மால்=சிவந்த கண்களையுடைய திருமால், பங்கயக் கண் பெறுது=தாமரை போன்ற கண்களால் காணமுடியாத நிலையில், அந்தரத்தின்கண் ஆடும் திறல்=அருள்வெட்ட வெளியில் ஆடும் பேராற்றல் படைத்தவரும், கதிர் ஆழி திங்கள்வாழும் சடை தம்பிரான் அன்பு உற=ஒளிபெற்ற கடலில் பிறந்த சந்திரன் உறையும் சடையை உடைய தனிப்பெருந் தலைவரும் ஆகிய சிவபெருமான் அன்பு கொள்ள, செந்தில்வாழ் செந்தமிழ்=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள செந்தமிழுக்கே உரிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! சங்கு போல் மென்கழுத்து=மெல்லிய கழுத்து சங்கு போன்றது என்றும், அந்த வாய் தந்த பல்=அழகிய வாயில் உள்ள பற்கள், சந்த மோக இன்ப முத்து என=இனிய மோகத்தைத் தரும் முத்துக்கள் என்றும், வானில் தங்கு கார் பை குழல் என்றும்=விண்ணில் தங்குகின்ற கரிய பசிய மேகம் போன்றது கூந்தல் என்றும், கொங்கை=தனமானது, நீள் தண்பொருப்பு என்றும்=நீண்ட குளிர்ந்த மலை போன்றது என்றும் கூறி, தாழ் வொன்று அறுத்து=தாழ்வு என்பதை விடுத்து, உலகோரை=உலகிலுள்ள செல்வரைப் பார்த்து, துங்கவேள்=அழகில் உயர்ந்த மன்மதனே! செங்கை பொன் கொண்டல் நீ என்று=சிவந்த கரத்தால் பொன் தருவதில் நீ மேகமேயாகும் என்று புகழ்ந்து, சொல்கொண்டு=தமிழ்ச் சொற்களைக் கொண்டு, தாய் நின்று உரைத்து உழலாதே=அவர்கள்பால் தாவிச் சென்று நின்று கவிபாடி இங்கும் அங்குமாக உழன்று திரியாமல், துன்பநோய் சிந்த=பிறவித் துன்பநோய் அழியுமாறு, நல் கந்த வேள் என்று உனைத் தொண்டிஞல்=நல்ல கந்தக் கடவுளே! என்று உம்மைத் துதித்து தொண்டு நெறியில், ஒன்று உரைக்க அருள் வாயே=ஒன்று கூற அருள்புரிவீர்.

## பொழிப்புரை

வெவ்விய கண்களையுடைய பாம்பினிடம் தோன்றிய ஆலகால விடத்தை எங்கும் கொளுத்தி யழிக்கும் என்று கருதி எடுத்து உண்டு, மேன்மை பெற்ற அமரர்களுக்கு அமுதம் ஆகுமாறு வெளிப்படுத்தியருளிய நாதரும், அழகிய திருமாலைத் தமது வலப் பாகத்தில் கொண்டவரும், ஆனந்தத்துடன் பேரம்பலத்தில் நடனம் புரிபவரும், சிவந்த கண்களையுடைய நாராயணர் கண்கொண்டு காணக் கூடாத நிலையில் அருள் வெளியில் ஆடுகின்ற சமர்த்தரும், கடலில் தோன்றிய

ஒளிபெற்ற சந்திரன் உறைகின்ற சடை முடியையுடையவரும் ஆகிய தனிப்பெருந் தலைவர் சிவபெருமான் விரும்புகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள செந்தமிழ்க் கடவுளாகிய பெருமிதம் உடையவரே! மெல்லிய கழுத்து சங்குபோன்றது, அழகிய வாயிலுள்ள பல் இனிய மோகத்தைத் தரும் முத்துப் போன்றது, பசிய கூந்தல் வானில் தங்கும் கரியமேகம், தனங்கள் நீண்டு குளிர்ந்துள்ள மலைகள் என்று வியந்து கூறி குறைவு என்பதை நீக்கி, செல்வரை நாடிச் சென்று மன்மதனே! உன் கை மேகம் போன்றது என்று புகழுரை கூறி அவரிடம் தாவி நின்று பாடி (வீணில்) அழியாமல் பிறவித் துன்பமாகிய நோய் விலக நலம் பொருந்திய கந்தவேளே என்று உம்மைத் துதித்து தொண்டு புரிந்து ஒரு மொழியாகிய தனிமந்திரத்தைச் செபிக்கத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

விடபுருடர்கள் அழிந்துபோகும் மாதர் அவயவங்களை அழகின் கருவூலமாகக் கருதி அவைகட்கு உவமைகள் தேடி நாடிப் பாடி அவமே யழிவர். காலையிலே கவின்பெற இலகும் மலர், மாலையிலே வாடியுதிர்வதும், செவசெவ என்று மின்னி பட்டுத் துணிபோல் விளங்கும் மாந்தளிர், பின்னர் முதிர்ந்து உலர்ந்து உதிர்ந்து காலில் மிதிபட்டு அழிவதும் கண்கூடு. பவுர்ணமியன்று அழகாகத் தோன்றிய முழு நிலா தேய்ந்து போவதும், முத்துபோல் இருந்த நீர்த்துளிகள் சிறிதுநேரத்தில் வற்றியுலர்ந்து போவதையும் பார்க்கின்றோம். ஆகவே இந்த அழகு அனைத்தும் நிலையில்லாதவை. நிலைபேறான அழகு இறைவனிடமே அமைந்திருக்கின்றது. ஆயிரங்கோடி மன்மதர்களுடைய அழகுகள் அனைத்தும் ஒன்று கூடினாலும் முருகவேள் தூய திருவடியின் ஒருபுறத்தில் உள்ள அழகுக்கு இணை வராது என்று நேரிற் கண்ட சூரபன்மன் கூறுகின்றான்.

> ஆயிர கோடி காமர் அழகெலாந் திரண்டொன்றாகி
> மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந்தன்னில்
> தூயநல் எழிலுக் காற்ரு தென்றிடில் இனைய தொல்லோன்
> மாயிரு வடிவுக் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.

ஆகவே இத்தகைய அழகின் பிறப்பிடமும் அழகின் சொருபமும் ஆகிய அழகனைக் கண்டு களிக்காமலும் அவனைக் கை கூப்பித் தொழாமலும், அவனைச் சிந்திக்காமலும் மனிதர் அழகில்லாத மலக் கூட்டை - மலஞ் சோரும் ஒன்பது வாயிற் குடிலை - நாறுகின்ற தசைப் பொதியைக் கண்டு அதுவே அழகின் இருப்பிடமென்று, விளக்கில் வீழும் விட்டிற் பூச்சியைப்போலே, மலத்தை யுருட்டும் கருவண்டைப் போலே, மல வுடம்பை வருணனை செய்து பாடி மாய்வர். அந்தோ!

என்னே அறியாமை? எங்ஙனம் உய்வர்? காமதேனுவின் பாலைக் கமரில் கொட்டுவதுபோல் ஆண்டவனைப் பாடுவதற்கு என்று அமைந்த அரிய தமிழைப் புன்புலால் உடம்பைப் பாடுவதற்குப் பயன்படுத்திப் பரகதி காணாது பரதவிப்பர். அத்தகைய புன்னெறியை விலக்க எழுந்தது இத் திருப்புகழ்.

**சங்குபோல் மென்கழுத்து :—**

கழுத்து சங்குபோல் படிப்படியாக அழகாக இருக்க வேண்டும். உடலின் சாமுத்ரிகா இலக்கணங்களில் அது ஒன்று. மகளிர் கழுத்து சங்குபோல் அழகியது என்று புகழ்வது மரபு. சிலருடைய கழுத்து குடத்தின்மீது சொம்பு வைத்தது போல் விகாரமாக இருக்கும். அப்படிக்கின்றி அழகாக அமைந்த கழுத்து வலம்புரிபோல் நலம்பெற விளங்கும்.

**அந்த வாய் தந்தப்ற் சந்த மோகின்ப முத்தென :—**

அழகிய மகளிர் வாயிலுள்ள பல் முத்துப் போன்றது என்று உவமித்து மகிழ்வர். அவர்கள் புன்னகை புரிந்தால், அப் காணிக்கையாகப் பொன்னகை தந்து பணிவர் காமுகர். பல் ஒரு காலம் உதிர்ந்து போவதுதான்; உதிர்ந்த பல் முத்து போலவா இருக்கும்?

**வானில் தங்கு கார் பைங்குழல் :—**

உதிர்ந்து போவதும், பஞ்சுபோல் நரைத்துப் போவதும், கசக்கவில்லையானால் அழுக்குப் பிடித்து நாறுவதும், சிக்குப் பிடித்துச் சீரழிவதும் ஆகிய கூந்தலை வானில் தங்கும் கரிய மேகம் என்று வியந்து கூறுவர். இன்னும் என்ன என்னவோ உவமை கூறி யுழல்வர்.

**கொங்கை நீள் தண்பொருப்பென்று :—**

ஒருகாலம் திரைத்துத் தொங்கி யொழியுந் தனத்தினை நீண்ட மலையென்று மதித்து மதிமயங்குவர். இவையனைத்துங் கானலை நீரெனக் கருதுவது போலாகும்.

"வனமழியு மங்கை மாதர்களின்
நிலைதனை யுணர்ந்து தாளிலுறு
வழியடிமை அன்பு கூருமது சிந்தியாதோ"
—(உததியறல்) திருப்புகழ்.

**உலகோரை......கொண்டல் நீ யென்று சொற்கொண்டு :—**

மகளிரைப் புகழ்ந்து மதிமயங்கி மோகாந்தகாரம் மூடி, அவர்கட்கு அள்ளி வழங்குதற்கெனப் பொருளை நாடி, செல்வ

ரைத் தேடிச் சென்று, அழகில்லாதவரை அநங்கனே என்றும், கொடாத லோபியைக் கொண்டலே யென்றும் பொய்மை யாகப் புகழ்ந்து பாடி தலைமை சான்ற புலமையை அவமாக்குவர்.

**தாய் நின்றுரைத் துழலாதே:—**

தாய் - தாவி. அங்குமிங்குமாகத் தாவிச் சென்று உழல்வர். இங்ஙனம் உலகிலுள்ள புலவருட் பலர் வீணில் உழல்வதை அருணகிரிநாதர் தம்மீது ஏறறிக்கொண்டு, அவர்கள் பொருட்டு இறைவனிடத்தில் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, அங்ஙனம் அவநெறி நிற்கும் புலவர் சிவநெறி நின்று உய்யும் பொருட்டு இதனைப் பாடியருளினூர் என வுணர்க.

**துன்ப நோய் சிந்த :—**

இங்கு நோய் என்பது பிறவிநோய் என வுணர்க. அந்த நோயை மாற்றும் மருத்துவன் முருகனேயாகும். அது நெடிது காலமாகத் தொடர்ந்து வருகின்ற நோய். அதனை அந்நோய் இல்லாத ஒருவனே மாற்றமுடியும். பெம்மான் முருகன் பிறவான் இறவான். ஏனைய தேவதைகள் செத்துப் பிறப்பவை.

> "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
> செங்கீரை யாடி யருளே" —குமரகுருபரர்.

முருகன் அருணகிரியாருக்கு அந்த அருள் நலத்தை யருளினுன் என்பதனை அடியில் வரும் அடியால் அறிக.

> "அநுபவ சித்த பவக் கடலிற் புகா தெனை
> வினவி யெடுத்தருள் வைத்த கழற் க்ருபாகரன்"
> —திருவகுப்பு. (6)

**தொண்டினுல் ஒன்றுரைக்கருள்வாயே :—**

முருகனுக்கே தொண்டுபட்டு மறுமொழி புகலாது ஒருமொழி புகன்று உய்யவேண்டும். அந்த வரத்தை இதன் மூலம் சுவாமிகள் வேண்டுகின்றனர்.

**வெங்கண் வ்யாளம் :—**

வியாளம் - பாம்பு. தேவர்கள் பாற்கடல் கடைந்த போது, மந்தரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற அரவரசனைத் தாம்பாகவும் பிணித்தனர். பலநாள் கடைந்தபோது அத் துன்பத்தைத் தாங்கமாட்டாத வாசுகி ஆலாகல விடத்தைக் கக்கினன். இங்கே பாம்பினிடந் தோன்றிய நஞ்சு என்பதை வருவித்துப் பொருள்கொள்ள வேண்டும். அந்த

விடத்தால் உலகமெல்லாம் கொதித்து அல்லலுற்றன. அமரர் ஆற்ருது அஞ்சி அலமரலுற்றனர்.

எடுத்துண்டு :—

இறைவன் அமரரை யாட்கொள்ளும் பொருட்டு ஆலகால விடத்தை யெடுத்து உண்டு அமரர்க்கு அமுதத்தை வர வழைத்து அளித்து அருள்புரிந்தனர். இல்லையேல் வானவர் யாவரும் அன்றே மாண்டிருப்பார்கள்.

மாலெங்கே வேதனுயர் வாழ்வெங்கே இந்திரன்செங்
கோலெங்கே வானோர் குடியெங்கே—கோலஞ்செய்
அண்டங்கள் எங்கே அவனியெங்கே எந்தைபிரான்
கண்டமங்கே நீலமுருக் கால். —வள்ளலார்.

இறைவனுடைய எல்லையில்லாத பெருங் கருணையை விளக்குவது அவருடைய நீலகண்டம்.

திருக்கொண்டல் பாகன் :—

உமையம்மையாரை இடப்பாகத்தும் திருமாலை வலப் பாகத்தும் சிவபெருமான் வைத்திருப்பர். திருமால் புருஷ சக்தி யென அறிக. கூர்ம புராணம் முதலிய நூல்களில் விளக்கமாக இது பற்றிக் கூறியுளது. இத் திருமால் சம்பு பட்சத்தில் உள்ள நவந்தருபேதத்தில் உள்ள மூர்த்தியென வுணர்க.

இறந்து பிறந்து உழலும் மூவரில் ஒருவராகிய திருமால் என மயங்கற்க. அடிமலர் தேடியறியாது அல்லலுற்ற திரு மால் அணுபட்சத்தில் உள்ளவர் எனவும் அறிக. இந்த விளக் கத்தை வெகுபேர் அறியாது இரண்டும் ஒன்றென எண்ணி இடர்ப்படுவர்.

“ பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து ” என்று திருமங்கையாழ்வாருங் கூறுகின்ருர் இதுதான் சிவமூர்த் தம் இருபத்தைந்தில கேசவார்த்த மூர்த்தம் என உணர்க.

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னுணுந் தோன்றுமால்—வீழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்ருய் இசைந்து. —ஆழ்வார்.

செருக்குண்டு பேரம்பலத்தினிலாடி :—

செருக்கு – மகிழ்ச்சி. இறைவனுடைய நடனம் ஆனந்த நடனம். சிற்றம்பலம் - ஆன்மாக்களின் இதயதாமரையி

லுள்ள சிறுமையான நுட்பமான தகராகாசம் ஆகும். பேரம்பலம் உலகங் கடந்த பெருவெளியாகும்.

**செங்கண்மால் பங்கயக் கண்பெருது :—**

புண்டரீகக் கண்ணுடைய திருமால் ஆயிரம் ஆண்டு தேடியும் அரனார் அடிமலர் காணப் பெற்ருரில்லை.

> "மண்வைத்த குக்கி மணிவண்ணன்—அன்றெருநாள்
> கண்வைத்துங் காணுக் கழலிணையான்"

என்ற அமுத வாக்காலும் அறிக.

**அந்தரத்தின் கண் ஆடும் :—**

இங்கே அந்தரம் என்பது பகிரண்ட வெளியை யுணர்த்தியது. ஆண்டவனுடைய அசைவே அகிலவுலகங்களின் அசைவுக்குங் காரணமாகும்.

**செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே :—**

சிவபெருமானும் அன்பு கொள்ளும் திருத்தலமாகிய திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூரில் தமிழில் தவழ்ந்து வரும் தென்றல் காற்றுடன் செந்தமிழ்த் தெய்வமாகத் திருவேலிறைவன் வீற்றிருக்கின்ருன்.

## கருத்துரை

சிவபெருமான் மகிழும் செந்தில் மேய திருமுருகவேளே! அவ்லர்களைப் பாடாமல் உம்மையே பாடி ஒருமொழி புகன்றுய்ய அருளுவீர்.

## 81

பங்கமேவும்பிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறிப்
பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்
தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கை மால் கொண்டிளைத் தயராதே
தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ அன்புவைத் தருள்வாயே
அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவேதான்

அஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே
திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ்சடா பஞ்சரத் துறுதோகை
சிந்தையே தென்றிசைத் தென்றல் வீசும் பொழிற்
செந்தில் வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

## பதவுரை

அம்கைவேல் கொண்டு = அழகிய திருக்கரத்திலே வேலாயுதத்தை எடுத்துக்கொண்டு, அரக்கன் ப்ரதாபம் கெடுத்து = சூரபன்மனுடைய பெருமையை அழித்து, அண்டவே தண்டம் உள்படவே தான் = அண்டங்களும் மலைகளும் உள்பட யாவும், அஞ்சவே = அஞ்சும்படி, திண்திறல் = திண்ணிய வலிமையுடைய, கொண்டல் ஆகண்டலற்கு = மேகத்தை வாகனமாகவுடைய இந்திரனுக்கு, அண்டலோகம் கொடுத்து அருள்வோனே = தேவலோகத்தைத் தந்து அருள்புரிந்தவரே! திங்கள் = சந்திரனையும், ஆர் = ஆத்திமலரையும், கொன்றை = கொன்றைமலரையும், மத்தம் = ஊமத்தம் பூவையும், துழாய் = துளசியையும், துன்று = நெருக்கமாக அணிந்து, பொன் = அழகுடன் விளங்கும், செம்சடா பஞ்சரத்து உறு தோகை = சிவந்த சடையாகிய கூட்டில் வாழ்கின்ற மயில் போன்ற கங்காதேவியின், சிந்தையே = சிந்தைக்கு உகந்தவரே! தென்திசை தென்றல் வீசும் பொழில் = தென் திசையிலிருந்து வரும் தென்றல் காற்று வீசுகின்ற மலர்ச் சோலைகளையுடைய, செந்தில்வாழ் = திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, செந்தமிழ்ப் பெருமாளே = செம்மைப் பண்புடைய தமிழ்க் கடவுளாகிய பெருமையின் மிகுந்தவரே! பங்கமேவும் பிறப்பு = குற்றம் நிறைந்த பிறவியாகிய, அந்தகாரந்தனில் = இருளிலும், பந்த பாசந்தனில் = கட்டுப்படுத்துகின்ற பாசத்திலும், தடுமாறி = தடுமாற்றமடைந்து, பஞ்சபாணம் பட = ஐந்து கணைகளும் பட்டதனால், புண்பட = மனம் புண்பட்டு, வஞ்சக பண்பு இல் ஆடம்பர பொது மாதர் தங்கள் = வஞ்சனையுடையவரும், நல்ல பண்பு இல்லாதவரும், ஆடம்பரம் புரிபவருமாகிய பொதுமகளிருடைய, ஆலிங்கன கொங்கை = தழுவுவதனால் தனங்கள், ஆகம்பட = என் உடம்பில் பொருந்த, சங்கைமால் கொண்டு இளைத்து அயராது = ஐயமும் மயக்கமும் அடைந்து அதனால் இளைப்புற்று அடியேன் அயர்ச்சியடையா வண்ணம், தண்டை சூழ் கிண்கிணி = தண்டையையும் சூழ்ந்துள்ள கிண்கிணியையும் அணிந்துள்ள, புண்டரீகந்தனை தந்து = தாமரை யனைய திருவடியைத் தந்து, நீ அன்பு வைத்து அருள்வாயே = தேவரீர் அடியவன் மீது கருணை வைத்துத் திருவருள் புரிவீர்.

## பொழிப்புரை

வேற்படையை அழகிய கரத்தில் கொண்டு சூரபன்மனுடைய பெருமையை அழித்து, அண்டங்கள் மலைகள் முதலிய யாவும் அஞ்சுமாறு செய்து, திண்ணிய வலிமையுடைய மேகத்தை வாகனமாகக் கொண்ட இந்திரனுக்கு தேவலோகத்தைக் கொடுத்து அருள்புரிந்தவரே! சந்திரன், ஆத்திமலர், கொன்றைப் பூ, ஊமத்தம் பூ, துளசி இவைகள் நெருங்கியுள்ள அழகிய சிவந்த சடையாகிய கூட்டின் கண் இருக்கின்ற கங்கா தேவியின் திருவுள்ளத்தில் விளங்கும் பாலகரே! தென் திசையிலிருந்து தவழுகின்ற தென்றல் காற்று வீசுகின்ற பூம் பொழில்கள் சூழும் திருச்செந்தூர் என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள செந்தமிழ்க் கடவுளாக விளங்கும் பெருமிதம் உடையவரே! குற்றம் நிறைந்தபிறவியாகியஇருளிலும்கட்டுப்படுத்தும் ஆசையாகிய சுழலிலும் தடுமாற்றமுற்று, மன்மதனுடைய ஐந்து மலர்க்கணைகளும் பட்டு அதனால் நெஞ்சு புண்பட்டு, வஞ்சனையைச் செய்பவரும், நற்பண்பு இல்லாதவரும், ஆடம்பரமாக வாழ்பவரும் ஆகிய பொது மாதர்களுடைய தனங்கள் தழுவிக்கொள்வதனால் என் உடம்பில்பட, அதனால் ஐயமும் மயக்கமும் அடைந்து இளைப்புற்று அயர்ந்து போகா வண்ணம், தண்டையும் கிண்கிணியும் சூழ்ந்துள்ள திருவடிக் கமலங்களை அடியேனுக்கு அளித்து எளியேன்மீது தேவரீர் கருணைவைத்துத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**பங்கமேவும் பிறப்பந்தகாரம் :—**

பங்கம் - குறைவு. பிறப்பு பலப்பல குறைவுகளுடன் கூடியது. குறைவு இன்றி நிறைவுடன் கூடியவர் இறைவர் ஒருவரே. நாம் அனைவரும் குறைவுடன் கூடியே பிறந்திருக்கின்றோம். அறிவிருந்தால் அழகிராது; அழகிருந்தால் அறிவிராது; இரண்டும் இருந்தால் அடக்கம் இராது; அடக்கம் இருந்தால் அன்பிராது; அன்பிருந்தால் செல்வம் இராது; செல்வமிருந்தால் கருணையிராது; சிலருக்கு உடல் நலமிராது; மக்களிருந்தால் செல்வம் இராது; தனமிருந்தால் மனமிராது; மக்களிராது. இப்படியாக ஏதாவது குறைவு இருக்கும்.

இருள், பொருள்களை மறைக்கும். ஆணவ இருள் இருளினும் வலிமையுடையது. இருள் எல்லாவற்றையும் மறைக்குமேயன்றி தன்னை மறைக்காது; ஆணவம் தன்னையுங் காட்டாது மறைத்து, மற்றவற்றையும் மறைத்துக் கொடுமை புரியும். எல்லா வகையான தீமைகட்கும் மூலகாரணம் ஆணவமலமேயாகும். அது ஆன்மாவுக்கு செம்புக்குக் களிம்புபோல்

அநாதியே உண்டு. அதன் வலிமையைக் கெடுப்பதுவே பதிஞானமாகும்.

**பந்த பாசம் :—**

பந்தம் - கட்டு. மக்கள் மனைவி உறவு முதலியவர்கள்மீது ஆசை வைத்து அவர்கள் நலத்திற்காகவே பலப்பல முயற்சி செய்து மாந்தர் உழல்வர். மனைவி மீதுள்ள பாசத்தை விடுத்தவர் இயற்பகை முதலியோர். மக்கட் பாசத்தை விடுத்து வீடுபெற்றவர் சிறுத்தொண்டர். பாச நாசம் ஈசன் நேசத்தால் வரும்.

**பஞ்சபாணம் :—**

மன்மதன் ஆன்மாக்களை மயக்கி வேட்கைத் தீ மூளுமாறு ஐந்து பூங்கணைகளை விடுவான். அக் கணைகளால் அல்லல் படுவோர் பலர். முருகன் அருள் பெற்றார் அக் கணைகளை வெல்வர்.

"மாரன் வெற்றிகொள் பூமுடிக் குழ
லார் வியப்புற நீடு மெய்த்தவர்
வாழ் திருத்தணி மாமலைப்பதி தம்பிரானே"
—(ஏதுபுத்தி) திருப்புகழ்.

**வஞ்சகப் பண்பி லாடம்பரப் பொது மாதர் :—**

பண்பு என்பது ஒரு உயர்ந்த குணம். அறிவு மனிதனை உயர்த்தும்; அந்த அறிவினும் பல்லாயிரம் மடங்கு உயர்ந்தது பண்பு. அறிவு மூளையை உறைவிடமாகக் கொண்டது. பண்பு உள்ளத்தை உறைவிடமாகக் கொண்டது. பண்பில்லாத அறிவுடைய மனிதனை மரத்திற்கு நிகராகக்கூறுகின்றார் திருவள்ளுவர்.

அரம்போலுங் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்,

இத்தகைய பண்பு பொதுமாதர் பலரிடம் இல்லை. ஆடம்பரமும் அதிகம் புரிவர்.

**சங்கைமால் கொண்டு இளைத் தயராதே :—**

சங்கை - சந்தேகம். பொது மகளிர்பால் நட்பு கொள்வோர் அவள் வேறு ஒருவனைக் காதலிக்கின்றாளோ? என்று அடிக்கடி ஐயுறுவர்.

மாதவி என்றகணிகை சிறந்த நெறியும் பண்பும் உடையவள். அவள் கலையில் ஈடுபட்ட கோவலன் அவளுடன் ஒன்றி

வாழ்ந்தான். இந்திர விழா நிகழ்ந்தபோது கடற்கரையில் படாம்மனையில் இருவரும் இனிது இன்புற்று உறைந்தார்கள். கானல்வரி என்ற பண்ணை அவள் வீணையில் இசைத்துப் பாடினாள். அவள் உள்ளம் வேறு பட்டனள் போலும் என்று ஐயுற்ற கோவலன் அவளை விட்டு அகன்றனன். எனவே நல்லொழுக்கம்பூண்ட மாதவியையே கோவலன் ஐயுற்றனன் என்றால், ஒழுக்கமில்லாத கணிகையரைக் காமுகர் ஐயுறுவதில் வியப்பு ஒன்றும் இல்லை தானே?

இனி ஐயத்துடன் மயக்கமும் அடைவர். காமத்தால் வெகுளியும், வெகுளியால் மயக்கமும் தோன்றும். முருகனுடைய திருவடித் தியானத்தால் இவைகள் நீங்கும்.

> காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
> நாமங் கெடக்கெடும் நோய். —திருக்குறள்

**தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீகம் :—**

முருகன் என்றும் மாறாத இளமை நலம் உடையவர். தன்னை வழிபடும் அடியார்க்கு "மணங்கமழ் தெய்வத்து இளநலங்காட்டி; அருள்புரிவார். இளம்பூரணன் ஆதலின் அவர் திருவடியில் தண்டையும் கிண்கிணியும இலகுகின்றன.

**அரக்கன் ப்ரதாபங் கெடுத்து :—**

சூரபன்மன் ஆணவமலம். ஆணவமலம் ஒருபோதும் அழியாது. "உள்ளது சிதையாது; இல்லது தோன்றாது" என்பது சற்காரிய வாதம். ஆணவமலம் வலிகுன்றி அடங்கி நிற்கும். ஆகவே ஆணவமலமாகிய சூரன், தனது வலிமை குன்றி மயிலும் சேவலுமாகி நன்னெறி நின்றான். எனவே முருகன் சூரனைக் கொல்லவில்லை.

> "அந்தமில் அவுணர் தங்கள் அடல்கெட முனிந்த செவ்வேற்
> கந்தவேள்" —கந்தபுராணம்.

**செஞ்சடா பஞ்சரத்துறுதோகை :—**

சிவந்த சடையாகிய கூட்டினுள் உறைகின்ற கங்கை. பஞ்சரம்-கூடு. 'எண்குணபஞ்சரனே' என்று கந்தரநுபூதி (15) யிலும் கூறியிருக்கின்றார்.

**சிந்தையே :—**

கங்கையின் திருவுள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்றவரே! என்பது பொருள். 'சிந்தையாய் நின்ற சிவனே போற்றி' என அப்பரும், "தெருளிடத் தடியார் சிந்தையுள்

புகுந்த செல்வமே சிவபெருமானே" என்று மணிவாசகரும் துதிக்கிருர்கள்.

### கருத்துரை

இந்திரனுக்கு அருளிய செந்திற் கடவுளே! பிறவிச் சுழலில் புகாவண்ணம் எளியேனுக்கு திருவடியைத் தருவீர்.

## 82

சத்தமிகு மேழுகட லைத்தேனை
உற்றமது தோடுகணை யைப்போர்கொள்
சத்திதனை மாவின்வடு வைக்காவி தனைமீறு
தக்கமணம் வீசுகம லப்பூவை
மிக்கவிளை வானகடு வைச்சீறு
தத்துகளும் வாளையடு மைப்பாவு விழிமாதர்
மத்தகிரி போலுமொளிர் வித்தார
முத்துவட மேவுமெழில் மிக்கான
வச்சிரகி ரீடங்கிர் செப்பான தனமீதே
வைத்தகொடி தானமயல் விட்டான
பத்திசெய ஏழையடி மைக்காக
வஜ்ரமயில் மீதிலினி யெப்போது வருவாயே
சித்ரவடி வேல்பனிரு கைக்கார
பத்திபுரி வோர்கள்பனு வற்கார
திக்கினு நடாவுபுர விக்கார குறமாது
சித்தஅநு ராககல விக்கார
துட்டஅசு ரேசர்கல கக்கார
சிட்டர்பரி பாலலளி தக்கார அடியார்கள்
முத்திபெற வேசொல்வச னக்கார
தத்தைநிகர் தூயவனி தைக்கார
முச்சகர்ப ராவுசர ணக்கார இனிதான
முத்தமிழை யாயும்வரி சைக்கார
பச்சைமுகில் தாவுபுரி சைக்கார
முத்துலவு வேலைநகர் முத்தேவர் பெருமாளே.

## பதவுரை

சித்ர வடிவேல் பனிரு கைக் கார=அழகிய கூர்மையான வேலாயுதத்தை ஏந்திய பன்னிரண்டு கரங்களை யுடையவரே! பத்திபுரிவோர்கள் பனுவல்கார=அன்பு செய்வோர்களுடைய நூலில் விளங்குபவரே! திக்கினு நடாவு புரவிக்கார=திசைகள் தோறும் நடாத்துகின்ற (மயிலாகிய) குதிரையையுடையவரே! குறமாது சித்த அநுராக கலவிக்கார=வள்ளியம்மையார் உள்ளன்போடு மருவுகின்ற மணவாளரே! துட்ட அசுர ஈசர் கலகக்கார=கொடிய அசுரர் தலைவர்களுடன் போர் புரிந்தவரே! சிட்டர் பரிபால லளிதக்கார=உத்தமர்களைக் காத்தலையே திருவிளையாட்டாகக் கொண்டவரே! அடியார்கள் முத்திபெற சொல் வசனக்கார=திருத்தொண்டர்கள் முத்திபெறுமாறு உபதேசிக்கின்ற சொற்களை யுடையவரே! தத்தை நிகர் தூய வநிதைக்கார=கிளியைப் போன்ற தூய்மை பொருந்திய தெய்வயானையின் கணவரே! முச்சகர் பராவு சரணக்கார=மூன்று உலகங்களும் துதிக்கின்ற திருவடியை யுடையவரே! இனிது ஆன=இனிமையமான, முத்தமிழை ஆயும் வரிசைக்கார=மூன்று தமிழையும் ஆராய்கின்ற சிறப்புடையவரே! பச்சை முகில் தாவு புரிசைக்கார=பச்சை நிறமான மேகங்கள் தவழுகின்ற உயர்ந்த திருமதிலைக் கொண்ட திருக்கோயில்களை யுடையவரே, முத்துலவு வேலை நகர்=முத்துக்கள் கரையில் உருளுகின்ற கடற்கரையில் உள்ள செந்திமாநகரில் எழுந்தருளியுள்ள, மூவர்தேவர்=மூன்று மூர்த்திகளும் தொழுகின்ற, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! சத்தமிகும் ஏழு கடலை=ஓசை மிகுந்த ஏழு சமுத்திரங்களையும், தேனை=வண்டையும், மது உற்ற தோடு=தேன் நிறைந்த மலரையும், கணையை=அம்பையும், போர் கொள் சத்தி தனை=போர் புரிகின்ற வேலையும், மாவின் வடுவை=மாவடுவையும், காவி தனை=கருங்குவளையையும், மீறு தக்க மணம் வீசு கமலப்பூவை=மிகுந்த இனிய வாசனையை வீசும் தாமரை மலரையும், மிக்க விளைவான கடுவை=நன்கு முதிர்ந்த நஞ்சையும், சீறு உதத்து உகளும் வாளை=சினத்துடன் நீரில் பாய்ந்து விளையாடும் வாளை மீனையும் நிகர்த்து, அடு=கொல்லுந் தொழிலைக் கொண்டு, மை பாவும் விழி மாதர்=மைதீட்டிய கண்களையுடைய பொதுமகளிரினது, மத்தகிரி போலும்=மதம் பொழிகின்ற (யானை) மலை போல பருத்து, ஒளிர் வித்தார=ஆபரணங்களுடன் கூடி ஒளி செய்து விசாலமுள்ளதாய்! முத்து வடமேவும்=முத்துமாலையுடையதாய், எழில் மிக்கான வச்சிர கிரீட நிகர்=அழகு மிகுந்த வஜ்ரமணி மகுடத்திற்குச் சமான முள்ளதாய், செப்பு ஆன=சிமிழ் போன்றதாய் விளங்கும், தனமீதே=தனங்களின் மீது, வைத்த கொடிது ஆன மயல் விட்டு=மனம் வைத்துள்ள தீய மயக்கத்தை விடுத்து, ஆன பத்தி செய=ஆன்மாவுக்கே உரியதான அன்பு செய்யுமாறு, ஏழை

அடிமைக்காக = அறிவில்லாத இந்த அடியேன் பொருட்டு, இனி வஜ்ர மயில் மீதில் = இனியாவது வஜ்ரம் போல் ஒளி செய்கின்ற மயிலின் மீது, எப்போது வருவாயே = எந்தக் காலம் வந்து ஆட்கொள்வீர் ?

## பொழிப்புரை

அழகிய கூரிய வேலையேந்திய பன்னிருகைப் பரமனே! அன்பு புரிவோர்கள் பாடிய நூல்களை யுடையவரே! திசைகள் தோறும் நடாத்துகின்ற மயிலாகிய குதிரையை யுடையவரே! வள்ளிநாயகி உள்ளம் உவந்து மருவும் மணவாளரே! தீய அசுர வேந்தருடன் போர்புரிந்தவரே! நல்லவர்களைக் காத்து அவர்களுடன் ஆடல் புரிபவரே! அடியவர்கள் முத்திபெறுமாறு உபதேசிக்கின்ற சொற்களை யுடையவரே! கிளிபோன்ற தூய தெய்வயானை யம்மையின் கணவரே! மூன்று உலகங்களும் துதி செய்கின்ற திருவடியை யுடையவரே! இனிமை நிறைந்த முத்தமிழை ஆராய்கின்ற மேன்மையினரே! பசிய மேகந் தவழ்கின்ற மதிலையுடைய கோயிலில் விளங்குபவரே! முத்துக்கள் உலாவுகின்ற கடற்கரையுடன் கூடிய செந்திலம் பதியில் எழுந்தருளியுள்ள மும்மூர்த்திகள் போற்றும் பெருமிதமுடையவரே! ஓசை மிகுந்த ஏழுகடல், வண்டு, தேன் மிகுந்த மலர்க்கணை, போர்புரிகின்ற வாள், மாவடு, கருங்குவளை, சிறந்த மணம் வீசுகின்ற தாமரை மலர், நன்கு முதிர்ந்த நஞ்சு, சிறு நீரில் விளையாடுகின்ற வாளை மீன் இவைகளை நிகர்த்து, கொல்லும் தன்மையுடன் மை தீட்டிய கண்களையுடைய பொதுமகளிரது மதம் பொழிகின்ற மலைபோல் பருத்து ஆபரணங்களுடன் கூடி ஒளிசெய்து, விரிந்து முத்துமாலை புனைந்து, அழகிய வஜ்ரமுடி போலவும் சிமிழ் போலவும் திகழ்கின்ற தனபாரங்களின்மீது மனம் வைத்து, அதனால் வந்த கொடிய மயக்கத்தை விடுத்து உமது திருவடியில் அன்பு செய்யுமாறு அடியேன் பொருட்டு வஜ்ரம்போல் ஒளி செய்யும் மயில் வாகனத்தின்மீது வந்து எந்நாள் காட்சி தருவீரோ ?

## விரிவுரை

**சத்தமிகு மேழுகடலை :—**

மகளிரது கண்களுக்கு உவமை பல வுள. அவற்றில் சில இந்தப் பாடலில் வருகின்றன. கடல் அகலமும் ஆழமும் கருமையும் உள்ளது. அதுபோல் மகளிரது கண்களும் அகலமும் ஆழமும் கருமையும் பொருந்தியவை.

**தேனை :—**

தேன் — வண்டு; தேனை யுண்பதனால் வண்டு இப்பேர் பெற்றது. இது உயர்ந்த வண்டு; இது பசித்தாலும் தேனையன்றி

வேறு ஒன்றை யுண்ணாது. அதுபோல் ஆன்றோர் என்ன இடர் நேர்ந்தாலும் அறத்தை யன்றி மறத்தைச் செய்யார். தூய கேள்வி யன்றி தீய சொற்களைக் கேளார். நற்சிந்தனையன்றி துர்ச்சிந்தனை எண்ணார்.

மற்றொரு கருவண்டுளது. அது மலத்தையன்றி வேறு ஒன்றையும் உண்ணாது. அதனையே உருட்டி உருட்டியுழலும். அதுபோல் சில கீழ்மக்கள் தீமையே நினைத்து தீமையே பேசி தீமையே செய்வர். இவர்களாலும் உலகிற்கு அதிக ஆபத்திராது.

இனி அதிகக் கேடு செய்கின்ற பிராணி மற்றொன்றுண்டு. அதுதான் ஈ. அது சந்தனத்திலும் அமரும்; சாணத்திலும் மற்றொன்றிலும் அமரும்; அதுதான் கேடுவிளைவிக்கும் பிராணி; அதுபோல் சிலர் நல்ல திருக்கூட்டங்களிலும் கலந்து கொள்வர். தெய்வநிந்தனை, குருநிந்தனை, அடியவர் நிந்தனை புரிகின்ற தெருக்கூட்டத்திலும் கலந்துகொள்வர். அவரால் உலகுக்குத் தீமை விளையும். அவர்கள் மிகக் கேடு புரிகின்றவர் ஆவார்கள்.

ஆகவே, தேனை உண்ணுகின்ற வண்டு உயர்ந்தது. அதில் அரச வண்டும் உண்டு. "கோத்தும்பீ!" என்பார் மணிவாசகர். அந்த வண்டுக்கு நிகரானது மகளிரது கண்கள்.

**உற்ற மது தோடு :—**

தோடு—மலர். தேன் துளிக்கின்ற மலர். அம் மலர்போல் விரிந்த கண்கள்.

**கணையை :—**

கணை உடம்பைப் பிளக்கும் ஆற்றல் படைத்தது. அது போல் மகளிரது கண்களும் உயிரைப் பிளக்கும் ஆற்றல் படைத்தது.

**போர்கொள் சத்தி :—**

போருக்குரிய வேலைப் போலவும் அக் கண்கள் கூர்மையும் கொடுமையும் படைத்தவை.

**மாவின் வடுவை :—**

மாம்பிஞ்சைப் பிளந்தால் அதன் இடையில் உள்ள விதையின் பிளப்பு கருமணி போலவும், சூழ்ந்துள்ள பகுதி வெண்மையான விழிபோலவும், காட்சி தரும். ஆகவே மாதர் விழிக்கு மாவடுவை உவமை கூறுவது மரபு.

**காவி :—**

காவி—குவளை. பெண்களின் கண்கள் குவளை மலர்போல் அழகாக இருக்கும்.

**மீறு தக்க மணம் வீசு கமலப்பூவை :—**

மலர்களில் தலைமையாயது தாமரைப்பூ. அதுவே இலக்குமியின் கோயில்; வாணியும் வேதனும் எழுந்தருளி யிருப்பதும் தாமரையே; இனி வள்ளியம்மையாரது திருக் கரத்தில் தாமரைப்பூ விளங்கும். கண்கள் தாமரைப் பூவைப் போல் திகழும்.

**மிக்க வினைவான கடுவை :—**

விலைமகளிரது கண்கள் நஞ்சுபோல் தன்னை விரும்பின வர்க்கு அச்சத்தைச் செய்யும். அந்நஞ்சும் நன்ருக முதிர்ந்தது என்கின்ருர்.

**சீறு தத்துகளும் வாளை :—**

சீறு—சினங்கொண்டு; உதத்து உகளும்—தண்ணீரில் புரளுகின்ற; வாளை—வாளை மீன் போன்றது. சினந்து ஓடு கின்ற தண்ணீரில் எதிர்த்துப் போகும் தன்மை உடையது வாளை மீன்.

இனி உதத்து—என்பதற்கு யுத்தத்து என்று பொருள் செய்தால் சீறுகின்ற போரில் புரளுகின்ற வாளாயுதம் போன்ற கண் எனினும் பொருந்தும்.

**அடு.மைப்பாவு விழிமாதர் :—**

அடுதல்—கொல்லுதல்; கொல்லும் தன்மையும், மைப் படிந்தும் இருப்பவை மகளிர் விழிகள். கண்களைப் பற்றி இப்படி இத்தனை வர்ணனை செய்கின்ருர் அடிகளார்.

**மத்தகிரி போலும் :—**

இனி அவர்களது தனபாரங்களின் தன்மையைக் கூறு கின்ருர். மத்தகிரி—மதம் பொழிகின்ற மலை. மலையில் ஒரு விதமான சத்து வெளிப்படும். அதற்குச் சிலா சத்து என்று பேர். அன்றியும் "மதம் பொழிகின்ற யானை" என்றும் கூறலாம். (உவம ஆகு பெயர்.)

**வைத்த கொடிதான மயல் விட்டு :—**

விலைமகளிரது புலால் உடம்பின் மீது வைத்த மயக்கம் மிகவும் கொடியது. அது சகல பாவங்களையும் செய்யத் தூண்

டும். அறிவை மயக்குவது கள். அந்தக் கள்ளினும் கொடியது காமம். ஏன்? கள்ளை நினைத்தாலும் கரத்தால் தொட்டாலும் கண்ணால் கண்டாலும் மயக்கந் தராது. உண்டால்தான் அறிவை மயக்கும். காமம் உள்ளத்தால் நினைத்தாலும் அறிவை மயக்கும்; கண்ணால் கண்டாலும் கைகளால் தொட்டாலும் அறிவை மயக்கும்.

உள்ளக் களித்தலும் காண உவத்தலும்
கள்ளுக்கில் காமத்துக் குண்டு. —திருக்குறள்.

இத்தகைய கொடிய காம மயக்கத்தை, காமனை எரித்த கனற் கண்ணினின்றும் அருட் பெருஞ் சோதியாய் வந்த அறுமுகப் பரமன் அருளால் அகற்றுதல் எளிது; பிறர்க்கு அரிது.

**ஆனபத்தி செய :—**

பக்தி—அன்பு. முருகனுடைய அன்பினால் எல்லா நலன்களும் உண்டாகும். முருகன் திருவடியில் பக்தி ஏற்பட்டு விட்டால் அதுவே முத்தியாகும்.

"ஆன பயபக்தி வழிபாடு பெறு முக்தி அதுவாக நிகழ்
பக்தஜன வாரக் காரனும்" —திருவகுப்பு. (4)

**ஏழை அடிமைக்காக வஜ்ரமயில் மீதிலே எப்போது வருவாயே :—**

ஏழை—அறிவில்லாதவன். "அறிவிலியாகிய அடியேன் பொருட்டு தேவரீர் வஜ்ரமயில் மீதிலே வந்து ஆட்கொள்ள வேண்டும்" என்று சுவாமிகள் வேண்டுகின்றனர். வஜ்ரம் போன்ற வலிமையுடையது மயில்.

**சித்ர வடிவேல் பனிருகைக்கார :—**

சித்ர—அழகு; வடி—கூர்மை. அடியார்கட்கு எம்பெருமான் பன்னிரு கரங்களாலும் வாரி வழங்குவான். மேகம் போன்ற கொடையுடைய கரங்கள் என்று திருவகுப்பில் கூறுகின்றார்.

"எழிலியை யனைய பனிருகையி லயின்முதல்
இலங்கு படையே துலங்க ஒரு பால்" —கொலுவகுப்பு.

**பத்தி புரிவோர்கள் பனுவற்கார :—**

பனுவல்—நூல். கல்வி கற்று அக்கல்வி யறிவால் செய்த நூல்களை முருகன் ஏற்கமாட்டான். அன்பு நெறிநின்ற பக்தர்கள் அருள் வேட்கையுடன் பாடிய பனுவல்களைப் பரமன்

ஏற்று மகிழ்வான். பகழிக்கூத்தர், சிதம்பர சுவாமிகள், குமரகுருபரர் முதலியோர் இந்த பக்த வரிசையில் நிற்பவர்கள்.

**திக்கினு நடாவு புரவிக்கார :—**

புரவி—குதிரை. வாகனத்தில் சிறந்தது குதிரை. அதனுல் அருணகிரிநாதர் பல இடங்களில் மயிலைக் குதிரை யென்றே உருவகம் புரிகின்ருர்.

**குற மாது சித்த அநுராக கலவிக்கார :—**

இச்சா சக்தியை இறைவன் மருவுவதால் உலகின் உயிர்கள் உய்வுபெறுகின்றன.

**துட்ட அசுரேசர் கலகக்கார :—**

தீமைக்கு மூலகாரணமாகிய ஆணவமலம் முதலிய அசுரர் தலைவர்களை இறைவன் ஞானவேலால் அழித்தனர்.

**சிட்டர் பரிபால லளிதக்கார :—**

சிட்டர்—நல்லவர்கள். அடியார்களைக் காப்பாற்று வதையே திருவிளையாடலாகக் கொண்டவர் முருகர். முருகவேள் அடியார்களிடம் பல ஆடல்கள் புரிந்து ஆட்கொள்வர்.

**அடியார்கள் முத்திபெறவேசொல் வசனக்கார :—**

முருகன் அடியார்கட்குக் குருவாகத் தோன்றி உபதேசம் புரிவர். அருணகிரிநாதர்க்கு முருகன் தோன்றி உபதேசித்தனர்.

செம்மான் மகளைத் திருடுந்திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மாவிரு சொல்லற என்றலுமே
அம்மாபொருள் ஒன்றும் அறிந்திலனே. —அநுபூதி. (12)

ஒருபூதருமறியாத் தனிவீட்டில் உரை யுணர்வற்று
இரு பூத வீட்டில் இராமல் என்ருன் இருகோட்டொருகைப்
பொருபூதர முரித்தேகாச மிட்ட, புராந்தகற்குக்
குருபூதவேலவனிட்டூர சூர குலாந்தகனே.
—அலங்காரம். (45)

**தத்தை நிகர் தூய வனிதைக்கார :—**

தத்தை—கிளி. தூய வனிதை—தெய்வயானை.

**முச்சகர் பராவு சரணக்கார :—**

மூன்று உலகங்களும் முருகனுடைய திருவடியைத் துதி செய்கின்றன. அப்பரமனே பரம்பொருள். வேதாகமங்களால் விதந்து ஓதப்பெற்ற விமலன்.

**இனிதான முத்தமிழை யாயும் வரிசைக்கார :—**

தமிழ் மிகவும் இனிமையான மொழி. இயல் இசை நாடகம் என மூன்று பிரிவுகள் உடைய மொழி தமிழ் ஒன்றேயாகும். இயல்—சத்து; இசை—சித்து; நாடகம்—ஆனந்தம். சத்து சித்து ஆனந்தம்—சச்சிதானந்தம்—தமிழ்.

**பச்சை முகில் தாவு புரிசைக்கார :—**

இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயில்களின் திருமதில்கள் உயர்ந்தவை. அதனால் அதன்மீது மேகந் தவழ்கின்றது.

**முத்துலவு வேலை நகர் :—**

திருச்செந்தூர்; கீழ்க் கடற்கரையில் விளங்குகின்றது. தென்கடல்தான் முத்தங் கொழிப்பது; இன்றும் தூத்துக்குடிக் கடலில்தான் முத்துக்களை எடுக்கின்றனர்.

"..............ஒருகோடி முத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற் செந்தில் மேவிய சேவகனே"
—அலங்காரம். (106)

**முத்தேவர் பெருமாளே :—**

ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற முத்தொழில்களைப் புரியும் அயன், அரி, அரன் என்ற மும்மூர்த்திகட்கும் தலைவன் முருகன்.

## கருத்துரை

செந்தில் மேவிய கந்த நாயகனே! மாதர் மயக்கத்தை விட்டு பக்தி செய்யுமாறு மயிலின் மீது வந்து அடியேனை ஆட்கொள்ள வேண்டும்.

## 83

சந்தனச வாதுநிறை கற்பூர
குங்குமப டீரவிரை கத்தூரி
தண்புழுக ளாவுகள பச்சீத வெகுவாச

சண்பகக லாரவகு ளத்தாம
வம்புதுகி லாரவயி ரக்கோவை
தங்கியக டோரதர வித்தார பரிதான

மந்தரம தானதன மிக்காசை
கொண்டுபொருள் தேடுமதி நிட்டூர
வஞ்சகவி சாரஇத யப்பூவை யினையார்கள்

வந்தியிடு மாயவிர கப்பார்வை
அம்பிலுளம் வாடுமறி வற்றேனை
வந்தடிமை யாளஇனி எப்போது நினைவாயே

இந்த்ரபுரி காவல்முதன் மைக்கார
சம்ப்ரமம யூரதுர கக்கார
என்றுமக லாதஇள மைக்கார குறமாதின்

இன்பஅநு போகசர சக்கார
வந்தஅசு ரேசர்கல கக்கார
எங்களுமை சேயெனரு மைக்கார மிகுபாவின்

செந்தமிழ்சொல் நாலுகவி தைக்கார
குன்றெறியும் வேலின்வலி மைக்கார
செஞ்சொலடி யார்களெளி மைக்கார எழில்மேவும்

திங்கள்முடி நாதர்சம யக்கார
மந்த்ரவுப தேசமகி மைக்கார
செந்திநகர் வாழுமரு மைத்தேவர் பெருமாளே.

### பதவுரை

இந்த்ர புரி காவல்=தேவேந்திரனுடைய நகரமாகிய அமராவதியைக் காத்தருளுகின்ற, முதன்மைக்கார=தலைமையுடையவரே! சம்ப்ரம மயூர=மிகவும் சிறந்த மயிலை, துரகக்கார=குதிரை போல் வாகனமாகக் கொண்டவரே! என்றும் அகலாத இளமைக்கார=எக்காலத்தும் நீங்காத இளமையுடையவரே! குறமாதின் இன்ப அநு

போக=வள்ளியம்மையாருடைய இன்ப நுகர்ச்சியில், சரசக்கார= திருவிளையாடல் புரிபவரே! வந்த அசுர ஈசர் கலகக்கார=போருக்கு வந்த அசுரர் தலைவர்களுடன் போர்புரிந்தவரே! எங்கள் உமைசேய் என்=எங்களுடைய உமாதேவியின் குழந்தை யென்று கூறப்பெறு கின்ற, அருமைக்கார=அருமை வாய்ந்தவரே! மிகுபாவின்=மிகுந்த இனங்களையுடைய பாடல்களினால், செந்தமிழ் சொல்=செந்தமிழ் மொழியில் புலவர்கள் கூறிய, நாலு கவிதைக்கார=நான்கு கவிகளை யுடையவரே! குன்று எறியும் வேலின் வலிமைக்கார=கிரவுஞ்ச மலை யைப் பிளந்த வேலினுடைய ஆற்றலையுடையவரே! செஞ்சொல் அடியார்கள் எளிமைக்கார=இனிய சொற்களையுடைய அடியவர் களுக்கு எளிமையானவரே! எழில் மேவும் திங்கள் முடிநாதர்=அழகு மிகுந்த சந்திரனை முடிமேல் புனைந்த சிவ மூர்த்தியினுடைய, சமயக் கார=சைவசமயத்தை வளர்ப்பவரே! மந்த்ர உபதேச மகிமைக்கார= மந்திரத்தை உபதேசிக்கிற மகிமையை யுடையவரே! செந்தில் நகர் வாழும்=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, அருமைத்தேவர்= அருமையான தேவர்கள் போற்றும், பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! சந்தன=சந்தனம், சவாது=சவ்வாது, நிறை கற்பூர= நிறைந்த பச்சைக் கர்ப்பூரம், குங்கும படீர=குங்குமப் பூவுடன் சேர்ந்த சந்தனம், விரை கத்தூரி=மணமுள்ள கஸ்தூரி, தண்புழுகு= குளிர்ந்த புனுகுச் சட்டம், அளாவு களப=இவைகளின் கலவை பூசப்பட்டதாய், சீத வெகு வாச சண்பக=குளிர்ந்து மிகுந்த வாசனையையுடைய சண்பக மலரும், கலார=செங்கழுநீர் மலரும், வகுளத்தாம=மகிழம் பூக்களும் அணிந்துள்ளதாய், வம்பு=கச்சும், துகில்=ஆடையும், ஆர=முத்துமாலையும், வயிர கோவை=வயிர மணிமாலையும், தங்கிய=பொருந்தியுள்ளதாய், கடோர=கடினமும், தர=உயரமும், வித்தார=அகலமும், பரிதான=பருமையும் உடைய தாய், மந்தரம் அது ஆன தன=மந்தர மலை போன்ற கொங்கைகளை யுடையவராய், மிக்க ஆசை கொண்டு பொருள் தேடு=மிகுந்த ஆசை கொண்டு பணம் தேடுகின்றவராய், அதிநிட்டூர=மிகவும் கொடுமையுடைய, வஞ்சக விசார இதய=வஞ்சனைச் செயல்களை ஆராய்கின்ற மனத்தையுடைய, பூவை அனையார்கள்=நாகணை வாய்ப் பறவை போன்ற பொதுமகளிருடைய, வந்தி இடு= துன்பத்தைத் தருகின்ற, மாய விரக பார்வை அம்பில் உளம் வாடும்=மாயமும் காமமும் நிறைந்த, பார்வையாகிய அம்பினால் உள்ளம் வாடுகின்ற, அறிவு அற்றேனை=அறிவு அற்றுப்போன அடி யேனிடம், வந்து அடிமை ஆள இனி எப்போது நினைவாயே=எழுந் தருளி வந்து அடிமையாகக் கொண்டு ஆட்கொள்ள இனி எப்போது தேவரீர் நினைப்பீரோ?

## பொழிப்புரை

இந்திரனது நகரமாகிய அமராவதியைக் காத்தருளும் முதல்வரே! மிக்க பெருமையுடைய மயிலைக் குதிரை வாகனம் போல் செலுத்துபவரே! எந்நாளும் அகலாத இளமையுடையவரே! வள்ளிநாயகியை (ஆன்மாக்களின் பொருட்டு) மணந்து வாழ்பவரே! போருக்கு வந்த அசுர வேந்தர்களையழித்தவரே! எங்கள் உமாதேவியின் புதல்வர் என்னும் அருமையுடையவரே! மிகுந்த பாவினங்களையுடைய செந்தமிழ் மொழியால் அடியார்கள் பாடும் நான்கு கவிகளையுடையவரே! கிரவுஞ்ச மலையைப் பிளந்த வேலாயுதத்தின் ஆற்றலையுடையவரே! இனிய சொற்களையுடைய அடியார்களிடம் எளிமை பூண்டவரே! அழகிய சந்திரனைச் சூடிய சிவமூர்த்தியின் சமயத்தைப் பரப்புகின்றவரே! மந்திர உபதேசத்தின் மகிமையையுடையவரே! திருச்செந்தூரில் வாழுந் தேவர்கள் போற்றும் பெருமிதம் உடையவரே! சந்தனம், சவ்வாது, நிறைந்த பச்சைக் கர்ப்பூரம். குங்குமப்பூ கலந்த சந்தனம், கஸ்தூரி, குளிர்ந்த புனுகு இவைகள் கலந்த கலவைக் குழம்பு பூசப்பட்டதாய், குளிர்ச்சியும் மிகுந்த மணமும் உடைய சண்பக மலர் செங்கழுநீர் மலர், மகிழ மலர் மாலைகளையுடையதாய், இரவிக்கை ஆடையுடன் கூடியதாய், முத்துமாலை வைரமாலை பூண்டதாய், கடினமும் உயர்வும் விசாலமும் பருமையும் உடையதாய், மந்தரமலை போல் உள்ள தனங்களை உடையவராய், மிக்க ஆசைகொண்டு பணத்தைத் தேடுகின்ற மிகுந்த கொடியவர்களாய், வஞ்சனையான ஆராய்ச்சியுடைய மனமுடையவர்களாய், நாகணவாய்ப் பறவை போன்றவர்களாயுள்ள பொது மாதர்களுடைய, துன்பத்தைத் தருகின்ற மாயமும் காமமும் உடைய கண் பார்வையாகிய அம்பினால் மனம் வாடுகின்ற அறிவற்ற வனுகிய அடியேன் முன் வந்து என்னை ஆட்கொள்ளுமாறு இனி எப்போது நினைப்பீரோ?

## விரிவுரை

**இந்த்ரபுரி காவல் முதன்மைக்கார :—**

இந்திரனுடைய நகரமாகிய அமராவதியை சூரபன்மனுடைய மகன் பானுகோபன் இடித்துத் தீக்கு இரையாக்கிப் பொடி செய்து அழித்துவிட்டனன். முருகப் பெருமான் சூராதியவுணரை யழித்து, இடிந்த அமராவதியைப் புதுப்பித்து, இந்திரனுக்கு முடிசூட்டி, அவனை ஐராவத முதுகில் ஏற்றி பவனிவரச் செய்து மீளவும் அந்நகருக்கு இடர் வராவண்ணம் பாதுகாவல் புரிந்தனர்.

> தேரணியிட்டுப் புரமெரித்தான் மகன் செங்கையில் வேல்
> கூரணியிட்டணு வாகிக் கிரௌஞ்சம் குலைந்தரக்கர்

நேரணியிட்டு வளைந்த கடகநெளிந்தது சூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.

—அலங்காரம். (3)

என்று அருணகிரிநாதர் பிற இடங்களிலும் முருகன் இந்திர புரியைக் காத்தருளிய கருணைத் திறத்தை வியந்து கூறுகின்றார்.

இந்திராதி தேவர்கள் இளம் பூரணனைச் சரணமடைந்து தொழுது வழிபட்டதனால், இமையவர்கள் நகரை எம்பெருமான் காவல் புரிந்தனர். "தொழுது வழிபடு மடியர் காவல் காரப் பெருமாளே" என வரும் பழநிமலைத் திருப்புகழாலும் அறிக.

**சம்ப்ரம மயூர துரகக்கார :—**

மயில் மிகவும் பெருமையுடையது. ஓங்கார வடிவமானது. அது வாகனத்திற்குரிய குதிரைபோல் பெருமானை என்றும் தாங்கி நிற்பது. அதனால் அருணகிரிநாதர் பல இடங்களில் மயிலைக் குதிரையென்றே உருவகம் புரிகின்றனர்.

**என்றுமகலாத இளமைக்கார :—**

முருகமூர்த்திக்கு உரிய அநேக சிறப்புக்களுள் முதன்மையும் வேறு எத்தேவுக்குமில்லாத தனிமையும் இந்த மாறாத இளமையேயாகும். அதனால் பாம்பன் அடிகள் அடிக்கடி "இளம் பூரணன்" என்று எம்பெருமானைக் குறிப்பிடுவார்கள். என்றும் குழந்தை வடிவில் நின்று அடியவர்கட்கு இன்ப அருள் பாலிக்கின்ற தெய்வம் இது. தன்பால் காதலித்து வந்த அடியவர்க்கு முருகன் இள நலங் காட்டி முன்னின்று வேண்டியாங்கு வேண்டிய வரங் கொடுத்து அருள் புரிவன்.

"மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல் நின்வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவு இன்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீயாகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்கும்."

—திருமுருகாற்றுப் படை.

குமாரசுவாமி என்ற திருப்பெயராலும், பாலசுப்ரமண்யம் என்ற திருப்பெயராலும் அறிக.

**குறமாதின் இன்ப அநுபோக சரசக்கார :—**

இறைவன் திருவருளாகிய அம்பிகையுடன் கூடியிருக்கின்றான் என்பதன் உட்பொருள் உயிர்களை உய்விக்கும் பொருட்டு என்பது ஆகும்.

தென்பா லுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேல் பேதா யிருநிலமும்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ. —திருவாசகம்.

இங்கே வள்ளியம்மை இச்சா சக்தி. இச்சா சக்தியுடன் முருகன் கலந்திருப்பது உயிர்கள் இச்சை யமைந்து கன்மங்களைத் துய்த்து, கன்ம நீக்கம் பெற்று மலபரி பாகமுற்று, வீடு பேறு பெறும் பொருட்டே என வுணர்க.

**வந்த அசுரேசர் கலகக்கார :—**

அசுரர் தலைவர்களாகிய சூராதி யவுணர், அமரர்களைச் சிறைவிடுமாறு ஆறுமுகப் பெருமான் கூறிய அறவுரையைக் கேட்டு உய்யாமல், மூர்க்கத்தன மேற்கொண்டு போர்க் களத்தில் எதிர்த்து வந்தார்கள். பலப் பல மாயப் போர் புரிந்தார்கள். இறைவன் அவர்களைத் தண்டித்தது மறக் கருணையாம் என்க. குற்றஞ் செய்கின்ற புதல்வனை அவன் திருந்தி உய்தல் வேண்டும் என்ற கருணையால் தந்தை தண்டிக்கின்றார். இதே நியாயந்தான் முருகவேள் அசுரேசரைத் தண்டித்தது என்பதை யுணர்க.

**எங்களுமை சேயெனருமைக்கார :—**

உமா—உ ம அ என்ற மூன்று மந்திரங்களின் சேர்க்கையே உமா என்ற மந்திரம் என வுணர்க. உ—காத்தல், ம—ஒடுக்கல், அ—ஆக்கல். முத்தொழில்களையும் தனது சந்நிதியில் தனது ஆற்றலைக் கொண்டு செய்விக்கும் முதல்வி உமாதேவியார். அவளின்றி ஓர் அணுவும் அசையாது. ஞானத்தின் சொரூபம்; சகல லோக ஏக நாயகி. அப்பரம நாயகியின் அன்பு நிறைந்த இளங் குழவி முருகவேள். "பார்வதீ ப்ரிய நந்தநாய நம:" என்பது முருகனுடைய நூற்றெட்டு மந்திரங்களுள் ஒன்று. ஆகவே பார்வதி பாலன் என்ற அருமைக்கும் பெருமைக்கும் உரியவர் முருகர்.

இனி உமை என்பது சித்து; முருகர் என்பது ஆனந்தம். அறிவிலிருந்து ஆனந்தம் தோன்றும். "ஞானானந்தம்" "அறிவானந்தம்," "சிதானந்தம்" என்று வரும் சொற்களை உன்னுக. அஞ்ஞானத்திலிருந்து துன்பம் தோன்றும். ஞானத்திலிருந்து இன்பந் தோன்றும். ஆகவே அருணகிரிநாதருக்கு அம்பிகையின் பரிபூரண அருள் உண்டு. அவர் பல இடங்களில் அம்பிகையை வாயார வாழ்த்துகின்றார். "எங்கள் தாய்" என்று அவர் கூறும் உரிமையை நோக்குக.

"நாளுமினிய கனி எங்களம்பிகை" —(ஓலமறை) திருப்புகழ்.

"அமுதமதையருளி எமையாளு மெந்தைதன்
திருவுருவின் மகிழெனது தாய்பயந்திடும் புதல்வோனே"
—(ஒருவரையும்) திருப்புகழ்.

**மிகுபாவின் செந்தமிழ் சொல் நாலு கவிதைக்கார :—**

தமிழில் பாவினங்கள் நான்கு; வெண்பா, வஞ்சிப்பா, கலிப்பா, ஆசிரியப்பா என்பன. இனி வெண்பாவில் நேரிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, ஒருவிகற்ப வெண்பா, இரு விகற்ப வெண்பா, குறள் வெண்பா இப்படிப் பல உட் பிரிவு கள் உண்டு. இவ்வாறே வஞ்சிப்பாவிலும், கலிப்பாவிலும், ஆசிரியப்பாவிலும் பல பேதங்கள் இருக்கின்றன. இவற்றின் விவரங்களை யாப்பிலக்கணத்தில் அறிக.

இனி நாலு கவிகள் :—ஆசுகவி, மதுர கவி, சித்திர கவி, வித்தார கவி என்பவை; ஆசுகவி; விரைந்து உடனுக்குடன் பாடுவது. மதுர கவி இனிமையாகப் பாடுவது. சித்திர கவி, ஏகபாதம், நாகபந்தம், தேர்ப்பந்தம், மயூரபந்தம், கோமூத்திரி முதலியவை. வித்தார கவி பலவித சாங்கோபாங்கமாகப் பாடுவது. இந்த நாலு கவிகளையும் பாடும் திறத்தைத் தன்னை வழிபட்ட அடியவர்கட்கு அள்ளித் தரும் வள்ளல் முருகன்.

'நாகாசல வேலவ நாலுகவி
த்யாகா சுரலோக சிகா மணியே!' —அநுபூதி. (11)

இந்த நாற் கவிகளிலும் வல்லவர் நம் அருணகிரிநாதர். இதனை அவரே சீர்பாத வகுப்பில் கூறுகின்றார்.

"முடிய வழிவழியடிமை யெனுமுரிமை அடிமைமுழு
துலகறிய மழலை மொழி கொடுபாடும் ஆசுகவி
முதல மொழிவன நிபுண மதுப முகரித மவுன
முகுள பரிமள நிகில கவிமாலை சூடுவதும்"

**குன்றெறியும் வேலின் வலிமைக்கார :—**

தாரகனுக்குத் தோழனும் மாயத்தில் வல்லவனுமாகிய கொடிய அசுரன் தேவர்களையும் முனிவர்களையும் வருத்துவதே தொழிலாக வுடையவன். பரம சாதுவாகிய பறவை அன்றில். அதற்குக் கிரவுஞ்சம் என்று மற்றொரு பேருமுண்டு. அந்த கிரவுஞ்சப் பறவை உருவில் மலைபோல் நின்று வஞ்சனை செய் வான். அதனால் அந்த அசுரன் கிரவுஞ்சாசுரன் எனப்படுவான். அகத்தியர் சாபத்தினால் மலை உருவாகவே நின்று கொடுமை பல செய்து வந்தான். முருகனுடைய வேல் அக்கிரவுஞ்ச மலை யைப் பிளந்து அக் கொடுமைக்கு முற்றுப்புள்ளி வைத்தது. அது முதல் அமரரும் இருடியரும் இடர் தீர்ந்தனர்.

**செஞ்சொ லடியார்க ளெளிமைக்கார :—**

செவ்விய இனிய சொற்களை மொழியும் அடியார்களிடம், மூவருந் தேவருங் காணாத முருகன் மிக எளியனாக நின்று அருள் புரிவான்.

> "மாலயனுக் கரியானே மாதவரைப் பிரியானே"
> —(காலனிடத்) திருப்புகழ்.

> "அபிநவ துங்க கங்கா நதிக்கு மைந்த
> அடியவர்க் கெளியோனே" —(தமரகுரங்) திருப்புகழ்.

**திங்கள் முடிநாதர் சமயக்கார :—**

திங்கள் முடிநாதர் சமயம் சிவசமயம். சிவசமயத்திற்குரிய மூர்த்தி குமாரமூர்த்தி. குமாரக்கடவுள் திருஞானசம்பந்தரை அதிஷ்டித்து சிவசமயத்தைப் பாதுகாத்தருளினார்.

முருக வழிபாடு வேறு, சிவ வழிபாடு வேறு என எண்ணிச் சிலர் மலைவர். சிவமூர்த்தமே முருக மூர்த்தம். நடராஜவடிவம் தட்சிணாமூர்த்தி வடிவம் என சிவமூர்த்தங்களில் பல காணப்படுவது போல் முருகமூர்த்தமும் ஒன்று என வுணர்க. இதனை யறியாது அழிந்தவன் சூரபன்மன். எனவே சூரபன்மன் செய்த பிழையை மற்றவர்கள் மேற்கொள்ளக் கூடாது. சிவமூர்த்தமே குமார மூர்த்தம். குமார மூர்த்தியை வழிபடுவோர் தாம் ஒழுகுவது கௌமார சமயம் எனவும் அது சைவத்திற்கு வேறானது எனவும் கூறி இடர்ப்படுவர். இடத்தகைய இடர்களை நீக்கவே அருணகிரிநாதர் முருகனைச் சிவசமய என மூர்த்தி விளக்கமாக விளம்புகின்றார்.

> "திருமருவு புயனயனொ டயிராவ தக்குரிசில்
> அடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர்
> சிவசமய அறுமுகவ திருவேர கத்திலுறை பெருமாளே"
> —(குமரகுருபர முருககுக) திருப்புகழ்.

**மந்த்ர வுபதேச மகிமைக்கார :—**

மந்திரங்களை அவரவர் பரிபக்குவத்துக்கு ஏற்ப குருவாக நின்று உபதேசிக்கின்ற மூர்த்தி முருக மூர்த்தியாகும். அவரைக் குருவாகக் கொண்டு வழிபட்டால் அவர் நிச்சயமாக ஒரு சமயம் குருவாய் வெளிப்பட்டு அருள்புரிவார்.

அகத்தியருக்கும் அருணகிரிநாதருக்கும் குருமூர்த்தியாக வந்து மந்த்ரோபதேசம் புரிந்தருளினார். உண்மைத் துறவியாக அண்மையில் வாழ்ந்த பாம்பன் சுவாமிகட்குக் குருமூர்த்தியாக வந்து அருள் புரிந்தனர்.

"முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள் கொண்டறியார் அறியுந்தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின்றதுவே" —அநுபூதி. (13)

என்ற அநுபூதியை ஊன்றிப் படித்து உணர்க. மேலும் இறுதியாகிய அநுபூதியிலும் உறுதியுடன் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்று சுவாமிகள் பாடி முடிக்கின்றனர். எல்லோருக்கும் அவனே குரு. "ஆதி குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்" அவனேயாகும். உப—சமீபம்; தேசம்—இடம். இறைவனுடைய அருகில் ஆன்மாவைச் சேர்ப்பது உபதேசம்.

**செந்திநகர்வாழும் அருமைத் தேவர் பெருமாளே :—**

திருச்செந்தூரில் நினைவுகளாகிய அலைகள் வந்து இறைவன் திருவடியிலே ஓய்ந்து ஒடுங்கிவிடுகின்றன. அதனால் 'அலைவாய்' என்று அப்பதிக்கு மற்றொரு பேருமுண்டு. பிறவிப் பெருங்கடலின் துறைமுகப்பட்டினம். அங்கு சென்றோர் பிறவிக் கடலினின்று உய்வுபெற்று முத்திக்கரை சேர்வர். அதனால் அங்கு வந்து தேவர்கள் வழிபடுகிறார்கள். அந்த அருமையுடையவர்கள் என்று குறிப்பிடுகின்றார்.

## கருத்துரை

செந்திமாநகரம் மேவிய கந்த நாயகனே! பந்தபாசத்தைத் தரும் மாதர் மயலில் அகப்படா வண்ணம் அடியேனை ஆண்டருளுவீர்!

திருச்செந்தூர்த் திருப்புகழ் விரிவுரை முற்றுப் பெற்றது.

